# புறநானூறு

## செய்யுளும் செய்திகளும்

*பேராசிரியர்*

**டாக்டர் ரா. சீனிவாசன்**

எம்.ஏ., எம்.லிட்., பி.எச்.டி.,

அணியகம்
சென்னை-30

# நூல் விளக்கம்


| | | |
|---|---|---|
| முதல் பதிப்பு | : | நவம்பர் 2000 |
| நூல் தலைப்பு | : | புறநானூறு செய்யுளும் செய்திகளும் |
| ஆசிரியர் | : | ரா. சீனிவாசன் |
| பொருள் | : | இலக்கியம் |
| தாள் | : | 18 kg. J.K. மாப்லித்தோ |
| அளவு | : | டபுள் டெம்மி |
| அச்சு | : | 10 புள்ளி |
| பக்கம் | : | 416 |
| பதிப்பகம் | : | அணியகம்<br>5, செல்லம்மாள் தெரு,<br>செனாய் நகர்,<br>சென்னை - 600 030.<br>*தொலைபேசி :* 647 9772<br>*தொலைநகல் :* 644 9630<br>*இ-மெயில் :* **aniyakam@usa.net** |
| விலை | : | ரூ.120.00 |
| ஒளிஅச்சு | : | லேசர் இம்ப்ரெஷன்<br>சென்னை - 600 030.<br>*தொலைபேசி/நகல் :* 646 0021 |
| அச்சகம் | : | மைக்ரோ பிரிண்ட்ஸ் (பி) லிட்.,<br>சென்னை - 600 029. |

# ஆசிரியர் பிற நூல்கள்

| | | |
|---|---|---|
| கம்பராமாயணம் | உரை நடை | ரூ. 90.00 |
| மாபாரதம் | ,, | ரூ. 50.00 |
| சீவக சிந்தாமணி | ,, | ரூ. 50.00 |
| திருவிளையாடற் புராணம் | ,, | ரூ. 40.00 |
| சிலம்பின் கதை | ,, | ரூ. 50.00 |
| புகழேந்தி நளன் கதை | ,, | ரூ. 50.00 |
| கண்ணன் திருக்கதை | ,, | ரூ. 25.00 |
| திருக்குறள் செய்திகள் | தொகுப்புரை | ரூ. 50.00 |
| நாலடியார் செய்யுளும் செய்திகளும் | ,, | ரூ.50.00 |
| சங்க இலக்கியத்தில் உவமைகள் | ஆய்வு | ரூ. 50.00 |
| சிலப்பதிகாரம் மூலமும் திறனாய்வும் | ,, | ரூ. 100.00 |
| மொழியியல் | இலக்கணம் | ரூ. 50.00 |
| மொழி ஒப்பியலும் வரலாறும் | ,, | ரூ. 50.00 |
| தொல்காப்பியமும் நன்னூலும் | ,, | ரூ. 80.00 |
| திருப்பாவை விளக்கவுரை | ஆன்மீகம் | ரூ. 20.00 |
| அணியும் மணியும் | கட்டுரை | ரூ. 30.00 |

# முன்னுரை

திருக்குறளுக்குத் தெளிவுரைகள் பல வந்துள்ளன. புதிதாகத் தோன்றிக் கொண்டே உள்ளன.

பரிமேலழகர் உரை புலவர்க்கு உதவியது. அது திருக்குறளை அறிய அறிவிக்க முழுமையாக உதவியது.

செய்திகளை அறிய வேண்டும் என்ற ஆர்வமும், மிக்க முயற்சியின்றிக் குறட்பாக்களுக்கு உரை காண வேண்டும் என்ற வேட்கையும் தெளிவுரைகள் தோன்றக் காரணம் ஆயின.

புறநானூறு பழைய உரை பெற்றுள்ளது; செய்யுள் களை அறிய அது மிகவும் உதவுகிறது; என்றாலும் அவற்றின் செய்திகளை அறிவதற்கு அவை போதுவது இல்லை. அவற்றை அறிவதற்கு ஆர்வம் இன்று எழுந்துள்ளது.

சங்க இலக்கியம் தமிழரின் உயர்ந்த குறிக்கோள் களையும், வாழ்வியலையும் அறிவிக்கின்றது. 'இயற்கை யோடு இயைந்த இன்ப அன்பு வாழ்க்கை' என்பார் தமிழறிஞர் திரு.வி.க. அதனோடு அவர்கள் வீரமும் கொடையும் அவர்கள்பால் அமைந்த சிறந்த செயற்பாடுகள். 'புகழ்' அவர்கள் வாழ்வில் உயர் நோக்கமாக இருந்தது.

பேரரசர் முதல் படைத் தலைவர்கள் வரை அவர்கள் வீரச்சிறப்பு இதில் போற்றப்படுகிறது. மக்கள் வாழ்வியல் இது சித்திரிக்கிறது. பண்பாட்டுக் கருத்துக்களை இவை அள்ளித் தருகின்றன.

'வீரம்' அவர்கள் உயிர்நாடியாக விளங்குகிறது. 'மகளிர் மறம்'எண்ணிப்பார்த்துப் பெருமிதம் அடையும் நிலையில் தெரிவிக்கப்பட்டுள்ளது.

இலக்கியம் என்பது உள்ளவற்றை உள்ளவாறு கூறும்போது அது உயர்வு பெறுகிறது.

சங்க காலத்தில் அவர்கள் கதைகளை நாடிச் செல்ல வில்லை; நிகழ்ச்சிகளைத் தெரிவித்தார்கள். அவை சித்திரங்கள் ஆயின; கவிதைகள் அவற்றுக்கு அழகு தந்தன.

வாழ்க்கை அவர்களுக்கு மூலப்பொருள்; அதிலிருந்து அறியப்பட்ட செய்திகள், கருத்துகள், சிந்தனைகள் அவர்கள் தெரிவித்தவை.

'இலக்கியம்' என்பது எப்படி இருக்க வேண்டும் என்பதற்கு வழிகாட்டியாக விளங்குகின்றது. உண்மை அதன் உயிர்நாடி; மெய்ம்மை அறிதல் அதன் நாட்டம்; உணர்வு களை மதித்தல் அதன் ஓட்டம் என்பதைக் காட்டுகிறது.

பாடு பொருள் இலக்கியத்துக்கு எதுவாக வேண்டு மானாலும் இருக்கலாம். அவரவர் நேரில் கண்டது, அறிந்தது, உணர்ந்தது இவற்றைக் கூறுவதே உயரிய படைப்பு என்பதற்குப் புறநானூறு சான்று பகருகின்றது.

இதன் செய்திகளை அறிவிப்பதில் அரிய பண்பாட்டுச் செய்திகளை அறிவிக்க முடிகிறது.

திருக்குறளைப்போல வாழ்க்கை விளக்கமாக உள்ள நூல் இது. இதனை அறிவதற்கு இச்செய்திகள் பயன்படும். இச் சிறு முயற்சி மேற்கொள்ளப்பட்டது.

**- ரா. சீனிவாசன்**

# புறநானூறு - ஓர் அறிமுகம்

இப்பாடல்கள் பல அரிய செய்திகள் கொண்டு விளங்குகின்றன.

தமிழர் போற்றிய உயர் கோட்பாடுகள், சிந்தனைகள் இதில் தலைமை இடம் பெறுகின்றன. உயர்ந்த கருத்துகள், அவர்கள் வாழ்க்கை அணுகுமுறைகள் இவற்றைக் காட்டுகின்றன. இவ்வகையில் ஒளிகாட்டும் நூல் இது என்று கூறலாம்.

கவிதைக்கு உண்மைதான் உயிர் நாடி என்பதைக் காட்டுவது புறநானூறு. வாழ்க்கையில் அவர்கள் கண்டது; அறிந்தது; தெளிந்தது இவற்றையே கூறுகின்றது.

வீரம்; கொடை இவற்றை மிகுதியாகக் காட்டுகின்றது. அறவாழ்வை அறிவிப்பதில் இது ஒரு திருக்குறளாக விளங்குகிறது. அறம், பொருள், இன்பம் இம்மூன்று பற்றிய கருத்துகளைத் தருகிறது.

கவிதைக்கு உள்ளடக்கம் அடிப்படை; இவ்வகையில் இது உயர்ந்து விளங்குகிறது. தமிழர் வாழ்வியல் இதன் உள்ளடக்க மாகும். இப்பாடல்கள் இன்றும் வழிகாட்டுவனவாக விளங்கு கின்றன. வாழ்க்கையில் போராடும் திறன் அடிப்படை. புற நானூறு அஞ்சி ஒதுங்குவதை அறவே ஒதுக்குகிறது. 'துறவு' என்பது தப்பித்துக் கொள்வது; அதற்குப் புறநானூறு மிக்கு இடம் தரவில்லை; துறவு பற்றிக் கூறுவது மிகவும் குறைவு; இது இதன் தனிச் சிறப்பு ஆகும்.

வாழ்க்கையை அவர்கள் சந்தித்தனர்; வீரத்தோடு வாழ்ந் தனர். போராட்டம் கண்டு அஞ்சியது இல்லை; பொருள் ஈட்டுதல் பிறருக்கும் பயன்படுவதற்கே என்ற கோட்பாட்டை இந்நூல் முழுவதும் வற்புறுத்துகிறது.

'மகிழ்வுடன் வாழ்க; புகழொடு வாழ்க' என்பது இது அறிவிக்கும் கோட்பாடு.

உயர்ந்த கருத்துகளைக் கொண்டது; வாழ்க்கைக்கு வழிகாட்டி உயர் சிந்தனைகளை வெளிப்படுத்துவது.

இப் பாடல்கள் கவிதை நலன்கள் மிக்குப் பெற்றுள்ளன. சொல்லோவியங்கள் பெற்றிருப்பது இவற்றின் தனிச்சிறப்பு; மற்றும் அணி நலன்களுள் உவமைகள் தனிச் சிறப்புக் கொண்டவை; அவை கவிதைக்கு அழகு தருகின்றன.

வாழ்க்கைச் சித்திரங்கள், நிகழ்ச்சிகளை அறிவித்தல், சிந்தனை வெளிப்பாடுகள் இவற்றிற்குச் சிறப்புத் தருகின்றன.

## வருணனைச் சிறப்புகள்

### காட்டுவழி

பாலை வழியை அகப்பாடல்கள் சித்திரிக்கின்றன; கடுவழி; அதனைக் கூறுவன பாலைத் திணைப்பாடல்கள் என்பர்; அவையே அகப் பாடல்களுள் மிகுதி என்பது அறிந்த ஒன்று. புறப்பாடல்களிலும் இப்பாலை வருணனைகள் ஒரு சில இடம் பெற்றுள்ளன.

புலவர்கள் வரும் வழிகள், அவற்றின் அழிவுகள் அழகிய சித்திரங்களாகத் தீட்டப்படுகின்றன; அவற்றுள் ஒன்று இது.

''அரசனே! புலவர்கள் தம் வறுமையைத் தீர்ப்பாய் நீ என்பதை அறிந்து அவர்கள் இவ் அரிய வழிகளைக் கடந்து வருகிறார்கள்'' என்கிறார் புலவர்.

> '' உன்ன மரத்த துன்னருங் கவலை
> நின்னசை வேட்கையின் இரவலர் வருவர்''

''அவரது இன்மை தீர்க்க'' என்று கூறுகிறார் கவிஞர்.

அவர்கள் வரும் வழி அவர்கள் உயிர் தப்பி வருவது அருமை என்கிறார்.

அவர்கள் வரும் வழி எத்தகையது? சிறு சிறு சொற்கள்; ''ஊர் இல்ல' - வழியில் ஊர்களே இல்லையாம். நடப்பது அரிது; களைப்புத் தருவது என்பார் ''உயவு'' என்ற ஒரே சொல்லால் குறிப்பிடுவார். மற்றும் கல்லும் முள்ளும் மிக்க வழி என்பார். 'அரிய' என்கிறார். குடிக்கவாவது நீர் கிடைக்கிறதா என்றால் அதுவும் இல்லை; நீண்டவழி அது என்கிறார். 'நீர் இல்ல; நீள் இடைய'' சேர்த்துப் பார்ப்போம்.

" ஊரில்ல; உயவு; அரிய;
நீர் இல்ல; நீள் இடைய"

நீண்ட தூரத்தில் வழிப்பறிக் கொள்ளையர், வழி மேல் விழி வைத்துப் பார்த்து இருக்கின்றனராம். அவர்கள் பதுங்கி இருந்து பார்ப்பதற்கே தனி இடம் அமைத்துக் கொண்டு உள்ளனராம். 'பார்வல் இருக்கை'; அவர்கள் எப்படிப் பார்க்கின்றனர்? 'கவி கண் நோக்கு' என்கிறார். கண்ணைக் கவித்துப் பார்க்கின்றனர். மேலே கையை அமர்த்திச் சூரிய வெளிச்சம் கண்ணில் படாது இருக்கவும், பார்வையை ஒருமுகப்படுத்தவும் அவர்கள் பார்க்கின்ற பார்வை இது. "கவி கண் நோக்கு" என்கிறார்.

' பார்வல் இருக்கைக் கவிகண் நோக்கின்
செந்தொடை பிழையா வன்கண் ஆடவர்'

என்று குறிப்பிடுகின்றார்.

அம்பு குறிபார்த்து விடுவதில் தேர்ச்சி பெற்றவர் என்பார். 'செந்தொடை பிழையா வன்கண் ஆடவர்' என்கிறார்.

அவர்கள் அம்பு பட்டுத் தரையில் விழுகிறார்கள். அவர்கள் பொருள்களைக் கவர்ந்து கொண்டு செத்தவர்களைத் தூக்கி எறிந்து விடுகிறார்களாம். அவர்கள் பிணங்கள் கற்குவியல்களில் தூக்கி எறியப்படுகின்றன. அவை புதிது புதிதாகக் கிடக்கின்றன என்பார். 'வம்பப் பதுக்கை' என்று குறிப்பிடுகிறார்.

அந்தப் பிணங்களை நம்பி நிணம் 'கவரும் பருந்துகள் காத்துக் கிடக்கின்றன. அங்கே பிணம் விழவில்லை; எப்பொழுது விழுமோ என்று காத்துக் கிடக்கின்றன. அதனால் அவை சிறகுகள் குவித்து உட்கார்ந்து கொண்டு இருக்கின்றன என்பார். 'திருந்து சிறை வளைவாய்ப் பருந்து' என்கிறார். குத்தித் தின்னப் பயன்படுவது 'வளைந்தவாய்'என்பதைக் குறிப்பிடுகின்றார்.

அப் பருந்துகள் உன்ன மரத்துக் கிளையில் அமர்ந்திருக் கின்றனவாம். அத்தகைய கவர்த்த வழிகளில் புலவர்கள் வருகிறார்கள் என்கிறார்.

வழியின் கடுமை இதைவிட வேறு எப்படிச் சித்திரிக்க முடியும்! வருணனைச் சிறப்புக்குச் சிறந்த எடுத்துக் காட்டாக அமைந்துள்ளது.

இதோ அந்த வரிகள்;

"ஊர் இல்ல; உயவு; அரிய;
நீர் இல்ல; நீள் இடைய;
பார்வல் இருக்கைக் கவிகண் நோக்கின்
செந்தொடை பிழையா வன்கண் ஆடவர்
அம்புவிட வீழ்ந்தோர் வம்பப் பதுக்கைத்
திருந்துசிறை வளைவாய்ப் பருந்து இருந்து உயவும்
உன்ன மரத்த துன்னருங் கவலை" -17-23/3

**ஆளில் அத்தம்**

*புலவர் வரும் வழி பருந்து இருந்து வருந்தும் அரிய வழி என்றார் ஒரு கவிஞர். அதேபோல மற்றொரு காட்சியைத் தருகிறார் மற்றொரு கவிஞர்.*

*புலவர் வரும் வழி ஆட்கள் நடமாட்டமே இல்லாத வழியாம். அங்கே அவர் காண்பது யாது?*

*'அறு மறுப்பு எழிற்கலை' என்கிறார். ஆண்மான் அதன் கொம்பு முறிந்து விட்டது; அழகிய கலைமான் அது; அது புலியின் பால் பட்டு விட்டது; புலி அடித்துக் கொன்று விட்டது.*

*அதன் துணை மான் உடனே என்ன செய்கிறது? தன் குட்டி மானை இழுத்துக் கொண்டு ஓடிவிட முயல்கிறது.*

*"சிறு மறி தழீஇய தெறி நடை மடப்பிணை"*

*தெறித்த நடையுடையது பெண்மான் என்கிறார். உயிர் தப்புவதற்காக அது உயர எழுந்து தெறித்து ஓடுகிறது; அழகான சொற்சித்திரம்.*

*அது பூளைச் செடிகள் மிக்க கடுமையான வெற்றிடம்; அங்கே வேள்ளையின் வெண் பூவைக் கறிக்கிறது என்கிறார். கடிக்கிறது என்று கூறவில்லை. அது கறித்துத் தின்கிறது என்கிறார். புல்மேய்ந்த பெண்மான் வேளை வெண்பூவைக். கறிக்கிறது என்கிறார். பூளைச் செடி மிக்க பாழ் இடம் அது என்கிறார். வற்றிய கட்டாந்தரை அது. புல்லே கிடைக்காமல் வேளைப் பூவைக் கறிக்கிறது என்கிறார்.*

தன் துணை மான் இறந்து விட்டது; அதன் மருப்பு ஏற்கெனவே அறுந்து விட்டது. உயிர் தப்பி ஓட எங்கோ சிக்கி அதன் கொம்பு உடைபட்டு விட்டது.

ஆண் திக்கு இல்லை; இனி என்ன செய்வது? ஓடிப் பிழைக்கச் செல்கிறது.

ஆட்களே நடமாடாத அரிய வழி என்று கூறுகிறார்.

" அறுமருப்பு எழிற்கலை புலிப்பால் பட்டெனச்
சிறு மறி தழீஇய தெறி நடை மடப்பிணை
பூளை நீடிய வெருவரு பறந்தலை
வேளை வெண்பூக் கறிக்கும்
ஆளில் அத்தம் ஆகிய காடே" 18-22/23

**பாழ்பட்ட பறந்தலை**

பாழ்பட்ட இடம்; அங்குக் கோயில் சிலைகள் தூண்களில் இருந்து சாய்ந்து கீழே விழுந்து படிந்து கிடக்கின்றன. வழிபாடு இல்லாத அழிபாடு உடைய மன்றம் அது.

அங்கு நரை மூதாளர்கள் வந்து குழுமுகின்றனர். பொழுது போக்குக்காகச் சூது ஆடுகிறார்கள். கவறு உருட்டுகிறார்கள். அதனால் தரையில் குழிகள் அமைகின்றன.

அந்தக் குழிகளில் காட்டுக் கோழிகள் வந்து முட்டை இட்டு நிரப்புகின்றன என்கிறார். அப்படி முட்டை இடப் பகைவர் நாடு காடாகி அழிகிறது என்கிறார்.

முதியவர்கள் நரை கண்டவர்கள் சூது ஆடும் வட்டுக்கள் அவை பட்டுக் குழிகள் ஏற்பட்டு விட்டன. அந்தக் குழிகளில் வந்து காட்டுக் கோழிகள் முட்டை இடுகின்றனவாம். ஏதோ எங்கோ கண்ட காட்சி அதை மறக்காமல் கொண்டு வந்து வைக்கிறார். இங்கு இந்த வருணனையை எண்ணுந்தோறும் வியப்பை அளிக்கிறது.

" பலிகண் மாறிய பாழ்படு பொதியில்,
நரைமூ தாளர் நாயிடக் குழிந்த
வல்லின் நல்லகம் நிறையப், பல்பொறிக்
கான வாரணம் ஈனும்
காடாகி விளியும் நாடுடையோரே" 13- 17/52

# அரிய உவமைகள்

## குழி அகப்பட்ட யானை

அரசன் ஒருவன் பகைவர் சிறை அகப்படுகிறான். அவர்களிடமிருந்து தப்பி வெளியேறுகிறான். அதற்குத் தீட்டும் உவமை அருமையானதாக உள்ளது.

யானை ஒன்று குழியில் அகப்பட்டுக் கொள்கிறது. அதிலிருந்து அது தப்பி வெளியேறுகிறது. பிறகு தன் கூட்டத்தோடு சேர்கிறது.

அதுபோல இவன் பகைவர் பிடியிலிருந்து தப்பிச் செல் கிறான்; தம்மவருடன் கூடுகிறான். அதற்கு இவ் உவமையைக் கூறுவது சிறப்பாக உள்ளது.

> " நீடுகுழி அகப்பட்ட
> பீடு உடைய எறுழ்முன்பின்
> கோடு முற்றிய கொல்களிறு
> நிலை கலங்கக் குழி கொன்று
> கிளை புகலத் தலைக் கூடியாங்கு" 15 - 19/17

என்பது உவமை.

## இரும்பு உண்ட நீர்

கானப் பேர் எயில் என்னும் ஊரை இழந்து விட்டான் வேங்கை மார்பன் என்பான்; அது மீட்டற்கு அரிது என்று கூற வருகிறார் கவிஞர். அதற்கு அவர் கூறும் உவமை அரியது ஆக உள்ளது.

> " கருங்கைக் கொல்லன் செந் தீ மாட்டிய
> இரும்பு உண் நீரினும் மீட்டற்கு அரிது" 7 - 8/21

கொல்லன் செந்தீயில் காய்ச்சிய இரும்பு; அதில் தெறிக்கின்ற நீர் சுவறி விடுகிறது. மறுபடியும் அதனை எடுக்க இயலாது. அதுபோல் அந்த எயிலை மீட்க முடியாது என்கிறார். அரிய உவமை; இந்தக் காட்சியைப் புலவர் பலமுறை பார்த்திருக்க வேண்டும் என்பது தெரிகிறது.

**கவுளில் மறைத்து வைத்த கல்**

அரசனிடத்து உள்ள ஆற்றல் வெளிப்படாது அடங்கிக் கிடப்பது; வேண்டும் போது வெளிப்படுவது என்று கூற வருகின்றார்.

''அறிவு நூல் வல்லார்க்கும் அறிய முடியாத வலிமை உன்பால் உள்ளது'' என்கிறார். அதற்கு அவர் தரும் உவமை அரிய செய்தியாக உள்ளது.

யானை தன் கவுளில் கல்லை மறைத்து வைக்கிறது. அது வேண்டும்போது எடுத்து எறிந்து வீசும் என்கிறார்.

இதை அவர் எப்படிக் கூர்ந்து பார்த்து இருக்கிறார் என்பது வியப்பைத் தருகிறது.

'' களிறு கவுள் அடுத்த எறிகற்போல
ஒளித்த துப்பினை'' 9-10/30

என்கிறார். அரிதில் எங்கோ காண்கின்ற ஒரு நிகழ்ச்சியை உவமையாகக் கூறும்போது அது தனிச் சிறப்பைப் பெறுகிறது.

சொல்ல வந்த பொருளை மிகப் பொருத்தமாக உணர்த்துகின்றார். அரிய உவமை இது.

**குயவர் வனையும் மட்பாண்டம்**

சோழன் கரிகால் பெருவளத்தான் எதை விரும்பினாலும் தரக் கூடியவன். அவன் நாட்டு வளம் அத்தகையது என்று கூறுகிறார். அவன் வளம் மிக்க நாடு எதையும் படைத்துத் தரக்கூடியது என்கிறார். அதற்கு அவர் தரும் உவமை அரிய செய்தியாகிறது.

குயவர் சிறுவர்கள் தம் திகிரியில் மண்ணை வைத்துச் சுழற்றி அவர்கள் விரும்பும் மட்பாண்டத்தை வனை கின்றனர். அதுபோன்றது அவன் நாட்டு வளம் என்கிறார் கவிஞர்.

அரிய செய்தி; அழகிய உவமை;

'' வேட்கோச் சிறாஅர் தேர்க்கால் வைத்த
பசுமண் குரூஉத்திரள் போல, அவன்
கொண்ட குடுமித்து, இத் தண்பணை நாடே'' 8 - 10/32

என்கிறார். எதையும் அவன் தரக் கூடியவன்.

### கட்டில் நிணப்பவன் கை ஊசி

''ஆர்புனைத் தெரியல் நெடுந்தகை செய்யும் போர் இழிசினன் கை ஊசி போன்றது'' என்கிறார்.

ஊரிலே திருவிழா. மனைவிக்குக் குழந்தைப் பேறு; மழை வேறு பெய்கிறது. இந்தச் சூழ்நிலையில் அவன் கட்டில் பின்னுகிறான். அந்தக் கீழ் மகன் கையில் உள்ள பின்னும் ஊசிபோல விறுவிறுப்பும், சுறுசுறுப்பும், வேகமும் அவன் செய்யும் போரில் உள்ளன என்கிறார்.

இந்தக் கட்டில் பின்னுபவனை எப்பொழுதோ கண்டிருக்கிறார். அவன் செய்கையோடு உவமிப்பது அரிய உவமையாக உள்ளது.

'' சாறுதலைக் கொண்டெனப், பெண்ணீற் றுற்றெனப்,
பட்டமாரி ஞான்ற ஞாயிற்றுக்,
கட்டில் நிணக்கும் இழிசினன் கையது
போழ்தூண்டு ஊசியின் விரைந்தன்று மாதோ;
ஊர்கொள வந்த பொருநனொடு
ஆர்புனை தெரியல் நெடுந்தகை போரே!'' 1 - 6/82

### தச்சன் செய்யும் தேர்க் கால்

ஒரு நாளில் எட்டுத் தேர்கள் செய்யக்கூடிய தச்சன் ஒரு மாதம் எடுத்துக் கொள்கிறான். ஒரு சக்கரம் செய்ய ஒரு மாதம் ஆகின்றது. அதன் வலிமைக்கு நெடுமான் அஞ்சியின் வலிமை உவமிக்கப்படுகிறது.

'' களம்புகல் ஓம்புமின், தெவ்விர்! போர் எதிர்ந்து,
எம்முளும் உளன் ஒரு பொருநன், வைகல்
எண்தேர் செய்யும் தச்சன்
திங்கள் வலித்த கால்அன் னோனே!'' - 87

### களிறு அதன் இருவேறு இயல்புகள்

நெடுமான் அஞ்சி பாடுவார்க்கு எளியன்; சாட வருவார்க்கு அரியன் என்ற கருத்தை அழகிய உவமையால் கூறுகின்றார்.

களிறு கயம் படிகிறது; அதனைக் கழுவும் சிறுவர்பால் அது இனிதாக நடந்து கொள்கிறது,

அதே யானை மதம் கொண்டுவிட்டால் யாரும் நெருங்க முடியாது; இன்னாதது ஆகிறது.

இவை அவனால் புரக்கப்படும் புலவர்களுக்கும் அவன் காட்டும் ஆதரவுக்கும், பகைவர்கள் அவனால் தாக்கப் படுவதற்கும் உவமைகள் ஆகின்றன. யானையின் இருவேறு நிலைகள் அவன் தனிவேறு செயல்களுக்கு உவமப்படுத்தப் படுகின்றன.

" ஊர்க்குறு மாக்கள் வெண்கோடு கழாஅலின்,
நீர்த்துறை படியும் பெருங்களிறு போல
இனியை, பெரும, எமக்கே; மற்றதன்
துன்னருங் கடாஅம் போல
இன்னாய், பெரும, நின் ஒன்னா தோர்க்கே!" - 94

## அவல உணர்வு

பாரி மகளிர் தம் தந்தையோடு இருந்த மகிழ்வும், அவர் இறந்தபின் அடைந்த தாழ்வும் அழகிய சித்திரமாகத் தீட்டப்பட்டுள்ளன. அவலத்தின் எல்லையை இது தொடுகிறது. முரண்பட்ட நிலையைச் சித்திரிக்கின்றது.

" அற்றைத் திங்கள் அவ்வெண் நிலவில்.
எந்தையும் உடையேம்; எம் குன்றும் பிறர் கொளார்;
இற்றைத் திங்கள் இவ் வெண்நிலவில்
வென்று எறிமுரசின் வேந்தர் எம்
குன்றும் கொண்டார்; யாம் எந்தையும் இலமே!" - 112

மகிழ்வும் இழப்பும் சித்திரிக்கப்படுகின்றன; முரண்பட்ட காட்சிகள் முன் நிறுத்தப்படுகின்றன.

## அங்கதத்துக்கு ஒரு செய்யுள்

அங்கதம் பிறரைத் திருத்துவதற்குப் பயன்படுவது. அவ்வையார் தொண்டமானைப் புகழ்வது போலக் கூறி அதியனின் படைப் பெருமையை உணர்த்துகிறார்.

இவன் போர்க் கருவிகள் கொலுப் பொம்மைகள்; அவன் கருவிகள் கொல்லன் உலைக் களம் சென்றுள்ளன. இவற்றைக் கூறும்போது அங்கதம் அதில் அமைந்து அவனைத் திருத்துகிறது.

" இவ்வே, பீலி அணிந்து, மாலை சூட்டிக்
கண்திரள் நோன்காழ் திருத்தி, நெய் அணிந்து,
கடியுடைவியன் நக ரவ்வே; அவ்வே,
பகைவர்க் குத்திக், கோடு நுதி சிதைந்து.
கொல்துறைக் குற்றில மாதோ, என்றும்
உண்டாயின் பதம் கொடுத்து
இல்லாயின் உடன் உண்ணும்
இல்லோர் ஒக்கல் தலைவன்,
அண்ணல்எம் கோமான், வைந்நுதி வேலே" 95

## இளமை நினைவுகள்

*முதியவர் அவர் நினைத்துப் பார்க்கிறார். கழிந்துவிட்ட இளமை; அது தன்னைவிட்டு ஒழிந்துவிட்டது.*

*விழுத்தண்டு ஊன்றி இருமல் இடையே சில சொற்கள் பேசும் நிலை; அதில் எழுகின்றது பழைய அலை.*

*மணல் பாவைக்குப் பூப்புனைந்து பின் நீராடச் செல்லும் சிறுமியர் அவர்களோடு ஆடிப்பாடிப் பின் அவர்கள் வியக்கும்படி குளத்தில் பாய்ந்து மணல் கொண்ட அந்தப் பழைய கல்லா இளமை அது எங்கே சென்றது என்று நினைத்துப் பார்க்கின்றார். அவர் பெயரே 'தொடித்தலை விழுத்தண்டினார்' என்பது ஆகும்.*

*அருமையான வாழ்க்கை நினைவுச் சித்திரம்; மறக்கமுடியாத விசித்திரம்; இலக்கியத்தில் அது பெற்றுவிட்டது நிரந்தரம்.*

" இனிநினைந்து இரக்கம் ஆகின்று; திணிமணல்
செய்வுறு பாவைக்குக் கொய்பூத் தைஇத்,
தண்கயம் ஆடும் மகளிரொடு கைபிணைந்து,
தழுவுவழித் தழீஇத், தூங்குவழித் தூங்கி,
மறைஎனல் அறியா மாயமில் ஆயமொடு,
உயர்சினை மருதத் துறையுறத் தாழ்ந்து,
நீர்நணிப் படிகோடு ஏறிச், சீர்மிகக்,
கரையவர் மருளத், திரையகம் பிதிர,
நெடுநீர்க் குட்டத்துத் துடுமெனப் பாய்ந்து,
குளித்துமணற் கொண்ட கல்லா இளமை
அளிதோ தானே! யாண்டுண்டு கொல்லோ-
"தொடித்தலை விழுத்தண்டு ஊன்றி, நடுக்குற்று,

இருமிடை மிடைந்த சிலசொல்
பெருமூ தாளரேம் ஆகிய எமக்கே?" - 243

**மக்கட்பேறு**

மக்கள்பேறு அதன் சிறப்பைப் பாண்டியன் அறிவுடைநம்பி அழகாகச் சித்திரிக்கிறார். ஒரே கவிதைதான். அதுவே அவரைக் கவிஞன் என்ற சிறப்புக்குத் தள்ளி இருக்கிறது. குழந்தையின் துறுதுறுப்பு; சிறு கை அளாவி உணவு உண்பது; அது மெய்பட விதிர்ப்பது; அதனால் உண்டாகும் இன்பம் அவற்றைச் சித்திரிக்கிறார்.

" படைப்புப்பல படைத்துப் பலரோடு உண்ணும்
உடைப் பெருஞ் செல்வர் ஆயினும், இடைப்படக்
குறுகுறு நடந்து, சிறுகை நீட்டி,
இட்டும் தொட்டும், கவ்வியும், துழந்தும்
நெய்யுடை அடிசில் மெய்பட விதிர்த்தும்,
மயக்குறு மக்களை இல்லோர்க்குப்
பயக்குறை இல்லைத் தாம் வாழும் நாளே" 188

வள்ளுவர் குறளுக்கு இது விளக்கமாக அமைந்துள்ளது.

" அமிழ்தினும் ஆற்ற இனிதேதம் மக்கள்
சிறுகை அளாவிய கூழ்" - 64.

**மகளிர் மறம்**

'மூதில் மகளிர்' என்று இவர்கள் போற்றப்படுகின்றனர். பண்டைத் தமிழரின் மறம், அழியாத சித்திரங்களாகத் தீட்டப்பட்டுள்ளது.

ஒருத்தி, "உன் மகன் எங்கே இருப்பான்?" என்று வாய் தவறிக் கேட்டு விட்டாள். அதற்கு மற்றவள் தரும் விடை இது:

"ஈன்ற வயிறு இது; அவன் தோன்றும் இடம் போர்க்களம்" என்று கூறுகிறாள். புலி தங்கிய குகை தன் வயிறு என்று கூறுவது ஒரு தாயின் மறத்தைச் சித்திரிக்கின்றது. உருவகம் இதற்குஅழகு தருகிறது.

"சிற்றில் நற்றூண் பற்றி, 'நின்மகன்
யாண்டுளனோ?' என வினவுதி; என்மகன்

யாண்டு உளன் ஆயினும் அறியேன்; ஓரும்
புலிசேர்ந்து போகிய கல் அளை போல
ஈன்ற வயிறோ இதுவே;
தோன்றுவன் மாதோ, போர்க்களத் தானே!'' - 1-6/86

மற்றொரு தாய் தன் மகன் போருக்கு அஞ்சி ஓடி விட்டான் என்று யாரோ சொல்லக் கேட்டு வீரம் கொண்டு களம் நோக்கிச் செல்கிறாள். பால் ஈந்த தன் முலையை அறுத்து எறிவேன் என்று வீர மொழி பேசிச் செல்கிறாள். சிதைந்து வேறு ஆகிய அவன் உடலைக் கண்டு அவள் உவகை கொள்கிறாள். ஈன்ற ஞான்றினும் அவள் பெரிது உவந்தனள் என்கிறார் கவிஞர்.

மற்றொரு வீர மகள் முதல் நாட் போரில் தன் கணவனை இழந்தாள். அடுத்த நாள் தன் உடன் பிறந்தவனை இழந்தாள். மூன்றாவது நாள் தன் ஒரே மகன் சிறுவன் அவனுக்குச் சீருடை தந்து போர் உடைவாள் தந்து செருக்களம் நோக்கிச் செல்க என அனுப்புகிறாள்.

இதைப் போன்ற வீரம் மிக்க மக்களைப் பெறுவதில் அவர்கள் வீறு கொண்டு வாழ்ந்தனர் என்று கூறப்படுகிறது. மகளிர் மறம் அவர்கள் வாழ்க்கை அறமாகக் கொள்ளப்பட்டது என்பது அறிவிக்கப்படுகிறது. ஈன்று புறந்தருதல் தாயின் கடமை; களிறு எறிந்து பெயர்தல் காளைக்குக் கடன் என்று தெரிவித்தனர்.

**வீரச் சிறப்பு**

வேழத்தை வீழ்த்திப், புலியை மடிவித்து, மானைக் கொன்று, பன்றியைச் சாய்த்துப், பின் புற்றில் இருந்த உடும்பில் சென்று அம்பு பதிந்தது என்று கூறப்படுகின்றது. அரசனின் வில் அம்பு அதன் ஆற்றலைச் சொல் அம்பில் தருகிறார். சொற்கள் அடுக்கி அம்புபோல் வெளிப்படுகின்றன. அழகான சொல் லோட்டம் அமைந்துள்ளது.

''வேழம் வீழ்த்த விழுத் தொடைப் பகழி
பேழ்வாய் உழுவையைப் பெரும் பிறிது உறீஇப்
புழல்தலைப் புகர்க்கலை உருட்டி, உரல்தலைக்
கேழல் பன்றி வீழ, அயலது
ஆழற் புற்றத்து உடும்பில் செற்றும்
வல்வில் வேட்டம் வலம்படுத் திருந்தோன்'' 1-6/152

வீரன் அவன் விடும் அம்பு எங்கெங்கோ பாய்கிறது என்று கூறுவது அவன் செயலாற்றலை எடுத்து உரைக்கிறது. வில்லாற்றலைத் தன் சொல்லாற்றலால் கவிஞர் புலப்படுத்துகிறார்.

## மற்றும் ஒரு செய்தி

யானையை எறிந்துவிட்டான்; அதனால் முறிந்தது அவன் கைவேல். அதன் மழுங்கலை நிமிர்த்திக் கொள்கிறான். விழுந்து பட்ட யானையின் மருப்பைக் கொண்டு அதில் பொருத்தி நிமிர்த்துகிறான். அவ் வேலினை மீண்டும் கையில் ஏந்துகிறான். பகைவர் அஞ்சி நடுங்குகின்றனர். அதனைக் கண்டு நகைக்கிறான் வீரன்.

> "கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்
> மெய்வேல் பறியா நகும்" - குறள் 774

இதே கருத்தை இப் புறப்பாடல் கூறுகிறது.

> "வருகதில் வல்லே; வருகதில் வல்' என,
> வேந்துவிடு விழுத்தூது ஆங்காங்கு இசைப்ப,
> நூலரி மாலை சூடிக், காலின்,
> தமியன் வந்த மூதிலாளன்
> அருஞ்சமம் தாங்கி, முன்னின்று எறிந்த
> ஒருகை இரும்பிணத்து எயிறு மிறையாகத்
> திரிந்த வாய்வாள் திருத்தாத்,
> தனக்கு இரிந்தானைப் பெயர்புறம் நகுமே" -284

அஞ்சிப் பெயர்கிறவனைக் கண்டு இவன் சிரித்து நகைக்கிறான் என்கிறார். நகும் என்பதை வள்ளுவரும் கூறக் காண்கிறோம். செய்தி ஒன்றாக இருக்கிறது.

## சீரிய கருத்துகள்

திருக்குறளைப் போல உயரிய கருத்துகளைத் தருவதில் புறநானூறு தலைசிறந்து விளங்குகிறது.

## தனக்கென வாழாத தகைமையோர்

"அமுதமேயாயினும் அதனைப் பிறர்க்கும் ஈந்து உண்பதில் மகிழ்வு கொள்வர்.

புகழ் என்றால் உயிரையும் தருவர்; இகழ் என்றால் உலகமே கிடைப்பதாயினும் உதறித் தள்ளுவர்.

தனக்கு என்று வாழாத செம்மை உடையவர். பிறர்க்கு என வாழும் உயர்ந்தவர்கள் இவர்கள்.

இவர்கள் ஒரு சிலர் உலகில் இருப்பதால்தான் நன்னெறிகள் நிலைக்கின்றன; உயர்வுகள் தழைக்கின்றன; உலகம் வாழத் தகுதியாக உள்ளது'' என்று கூறுகிறார்.

''உண்டால்அம்ம, இவ்வுலகம்; இந்திரர்
அமிழ்தம் இயைவதாயினும், இனிது எனத்
தமியர் உண்டலும் இலரே; முனிவிலர்;
துஞ்சலும் இலர்; பிறர் அஞ்சுவது அஞ்சிப்
புகழ்எனின், உயிருங்கொடுக்குவர்; பழியெனின்
உலகுடன் பெறினும், கொள்ளலர்; அயர்விலர்;
அன்ன மாட்சி அனைய ராகித்
தமக்கென முயலா நோன்தாள்
பிறர்க்கென முயலுநர் உண்மை யானே'' - 182

## நாடு எது?

நாடு என்பது யாது? மேடு பள்ளங்கள் கொண்ட நிலப்பரப்பு அன்று; மக்கள் வாழ்வியலை ஒட்டியே நாடு மதிக்கப்படுகிறது. அவல் (பள்ளம்) மிசை (மேடு) அவற்றை ஒட்டி அது நாடு என்று கூறப்படுவது இல்லை. நாடோ காடோ அதனை ஒட்டிச் சிறப்புகள் அமைவதில்லை. மக்கள் அவர்களை ஒட்டித்தான் மிக்க சிறப்புகள் உள்ளன என்ற கருத்து போற்றத்தக்கது.

''நாடாகு ஒன்றோ; காடாகு ஒன்றோ;
அவலாகு ஒன்றோ; மிசையாகு ஒன்றோ;
எவ்வழி நல்லவர் ஆடவர்,
அவ்வழி நல்லை; வாழிய நிலனே!'' - 187

## சான்றோர்கள் அவர்கள் சிறப்பு

கவலையற்று வாழ்வதற்கு வீடும் நாடும் சீர்மை உடையதாக இருக்க வேண்டும். அதைவிடச் சான்றோர்கள் இருந்தால்தான் வாழ்க்கை முழுமை பெறுகிறது. கவலை நீங்கி வாழ அவர்கள்

தொடர்பு, அறிவுரைகள் தேவை என்பதை வற்புறுத்துகிறது ஒரு பாடல்.

''யாண்டுபலவாக, நரையில ஆகுதல்
யாங்கு ஆகியர்? என வினவுதிர் 'ஆயின்,
மாண்ட என் மனைவியொடு மக்களும் நிரம்பினர்;
யான் கண்டனையர் என் இளையரும்; வேந்தனும்
அல்லவை செய்யான், காக்கும்; அதன்தலை
ஆன்று அவிந்து அடங்கிய கொள்கைச்
சான்றோர் பலர்யான் வாழும் ஊரே'' - 191

## அல்லது செய்தல் தவிர்க்க

நல்லது செய்யாவிட்டாலும் தீயது செய்யாமல் இருப்பது மிகவும் தேவை; 'அழிவுக்காகவே அழிவு' என்று தவறாகச் செல்லும் உலகுக்குத் தரப்படும் அறிவுரை இது; நரை மிக்க மூதாளர்க்குச் சொல்லப்படும் அறிவுரை இது; மூத்தவர்கள் செய்யும் தவறுகள் நாட்டைப் பெரிதும் நலிவுறச் செய்யும். ஆற்றல் இல்லை என்றாலும் அடங்கிக் கிடப்பது அவர்களிடம் எதிர்பார்க்கப்படுவது; ''நாட்டைக் கெடுக்காதீர்'' என்று முதியவருக்குச் சொல்லும் அறிவுரை இது.

''பல்சான்றீரே! பல்சான் றீரே!
கயல்முள் அன்ன நரைமுதிர் திரைகவுள்,
பயனில்மூப்பின், பல்சான்றீரே!
கணிச்சிக் கூர்ம்படைக் கடுந்திறல் ஒருவன்
பிணிக்கும் காலை, இரங்குவிர் மாதோ
நல்லது செய்தல் ஆற்றீர் ஆயினும்,
அல்லது செய்தல் ஓம்புமின்; அதுதான்
எல்லாரும் உவப்பது; அன்றியும்,
நல்லாற்றுப் படூஉம் நெறியுமார் அதுவே'' - 195

## யாதும் ஊரே யாவரும் கேளிர்

புறநானூற்றிலேயே உச்சநிலை இதுதான். சிகரத்தை எட்டிப் பிடித்து இருக்கிறார்கள். இன்று போற்றப்படுவது; பேசப்படுவது 'மனிதநேயம்'; எல்லை கடந்து வாழும் நாள் இது; உலகம் ஒன்று, அனைவரும் நேசிக்கத் தக்கவர்கள் என்ற கருத்தை இது தருகிறது.

*அதுமட்டும் அன்று தனி மனிதன் அவன் உயர்வுக்கும் தாழ்வுக்கும் வாழ்க்கை இயக்கம் பொறுப்பு என்ற அழகான கருத்தையும் தருகிறது இந்தப் பாடல்.*

''யாதும் ஊரே; யாவரும் கேளிர்;
தீதும் நன்றும் பிறர்தர வாரா;
நோதலும் தணிதலும் அவற்றோர் அன்ன;
சாதலும் புதுவது அன்றே; வாழ்தல்
இனிது என மகிழ்ந்தன்றும் இலமே; முனிவின்.
இன்னா தென்றலும் இலமே; 'மின்னொடு
வானம் தண்துளி தலைஇ, ஆனாது
கல்பொருது இரங்கும் மல்லற் பேர்யாற்று
நீர்வழிப் படூஉம் புணைபோல், ஆருயிர்
முறைவழிப் படூஉம்' என்பது திறவோர்
காட்சியின் தெளிந்தனம் ஆகலின், மாட்சியின்
பெரியோரை வியத்தலும் இலமே;
சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே'' - 192

**புகழ் பட வாழ்க**

*உன் சுற்றத்தவரை மகிழ்விக்க; நீ இசையுடன் வாழ்க என்று அறிவிக்கிறது ஒரு பாடல். பிறரை வாழ்விக்க உதவுக; நீயும் இசையுடன் வாழ்க என்பது புறநானூறு தரும் செய்தியாகும்.*

''நகைப்புறன் ஆகநின் சுற்றம்;
இசைப்புற னாகநீ ஓம்பிய பொருளே'' 25-26/29

*புகழ்பட வாழ்க; ஈதல்; இசைபட வாழ்தல்; இதுதான் வாழ்க்கையின் குறிக்கோள் என்பதை இது அறிவுறுத்துகிறது.*

''தோன்றின் புகழொடு தோன்றுக; அஃதிலார்
தோன்றலின் தோன்றாமை நன்று''

*என்பது புறம் கூறும் வாழ்க்கை அறம்; உயர் குறிக்கோளும் ஆகும். தமிழர்தம் கோட்பாடு வாழ்வதன் நோக்கம் பிறருக்குப் பயன்படுதல் என்பதை வற்புறுத்துகிறது.*

# புறநானூறு செய்யுளும் செய்திகளும்

## 1. கடவுள் வாழ்த்து

*கங்கையைச் சடைமுடியில் தரித்தவன்; அரிய தவத்தினன்.*

*அவன் சூடி இருக்கும் தலைமாலை கொன்றைப் பூ. அது கார் காலத்தில் மலர்வது; நறுமணம் மிக்கது. அதனையே அவன் மார்பிலும் அணிந்துள்ளான்.*

*அவன் ஊர்தி வெள்ளை நிறத்து எருது; அதுவே அவன் தாங்கிய கொடியும் ஆகும்.*

*நீல நிறத்துக் கறை அவன் கழுத்துக்கு அழகு தருகிறது. மறையவர்கள் அதனைப் போற்றிப் புகழ்கின்றனர்.*

*பெண் அவன்பால் ஒரு கூறு ஆகும்; அதனை மறைத்து முழுவடிவிலும் அவன் விளங்குகிறான்.*

*பிறையை அவன் முடியில் தரித்து உள்ளான். அது அவன் நெற்றிக்கு அழகு தருகிறது. அதனைப் பதினெட்டுக் கணத்தவர் ஏத்திப் புகழ்வர்.*

பாடல்

**கண்ணி கார் நறுங் கொன்றை; காமர்**
**வண்ண மார்பின் தாரும் கொன்றை;**
**ஊர்தி வால்வெள் ஏறே; சிறந்த**
**சீர்கெழு கொடியும் அவ் ஏறு என்ப;**
**கறை மிடறு அணியலும் அணிந்தன்று; அக் கறை,**
**மறை நவில் அந்தணர் நுவலவும் படுமே:**
**பெண் உரு ஒரு திறன் ஆகின்று; அவ் உருத்**
**தன்னுள் அடக்கிக் கரக்கினும் கரக்கும்:**
**பிறை,நுதல் வண்ணம் ஆகின்று; அப் பிறை**
**பதினெண் கணனும் ஏத்தவும் படுமே-**
**எல்லா உயிர்க்கும் ஏமம் ஆகிய,**
**நீர் அறவு அறியாக் கரகத்துத்**
**தாழ்சடைப் பொலிந்த, அருந் தவத்தோற்கே.**

**பாரதம் பாடிய பெருந்தேவனார் பாடியது.**

# 2. சேரமான் பெருஞ்சோற்று உதியஞ்சேரலாதன்

நிலத்தைப் போல் பொறுமையும், ஆகாயத்தைப் போல் விரிந்த அறிவும், காற்றைப் போல் வலிமையும், நெருப்பைப் போல் அழிக்கும் திறனும், நீரைப்போல் அருள் செய்தலும் உன்பால் உள்ள அரிய பண்புகளாகும்.

கிழக்கிலும் மேற்கிலும் நீள் கடல்கள் உன்நாட்டு எல்லைகள். பரப்புமிக்க நாடு உனது; 'வானவரம்பன்' என்று உன்னைச் சிறப்பிப்பர்.

பாரதப் போரில் பாண்டவர் சேனைக்குப் பெருஞ்சோறு வரையாது அளித்தாய். உன் கொடைச் சிறப்புப் போற்றத் தக்கதாகும்.

பால் புளித்தாலும், பகலில் இருள்தோன்றினாலும், வேதங்கள் நான்கு இவற்றின் நெறி மாறுபட்டாலும் நிலைதிரியாத நல் அமைச்சர்கள் அவர்களைத் துணையாகக் கொண்டு ஆட்சி செய்க! மலை அடுக்குகளில் பெண்மான் தன் குட்டியுடன் அந்திப்பொழுதில் அந்தணர் செந்தீ வளர்க்கும் ஒளியில் துயில் கொள்ளும் இமயம் போலவும் மற்றும் பொதிகை போலவும் நிலைத்து வாழ்க! புகழோடு விளங்கி நீ நீடுழி வாழ்க.

மண் திணிந்த நிலனும்,
நிலன் ஏந்திய விசும்பும்,
விசும்பு தைவரு வளியும்,
வளித் தலைஇய தீயும்,
தீ முரணிய நீரும், என்றாங்கு
ஐம் பெரும் பூதத்து இயற்கை போலப்
போற்றார்ப் பொறுத்தலும், சூழ்ச்சியது அகலமும்,
வலியும், தெறலும், அளியும், உடையோய்!
நின் கடற் பிறந்த ஞாயிறு பெயர்த்தும் நின்
வெண் தலைப் புணரிக் குட கடற் குளிக்கும்,
யாணர் வைப்பின், நல் நாட்டுப் பொருந!
வான வரம்பனை! நீயோ, பெரும!
அலங்கு உளைப் புரவி ஐவரொடு சினைஇ,

நிலம் தலைக்கொண்ட பொலம் பூந் தும்பை
ஈர்-ஐம்பதின்மரும் பொருது, களத்து ஒழியப்
பெருஞ் சோற்று மிகு பதம் வரையாது கொடுத்தோய்!
பாஅல் புளிப்பினும், பகல் இருளினும்,
நாஅல் வேத நெறி திரியினும்,
திரியாச் சுற்றமொடு முழுது சேண் விளங்கி,
நடுக்கின்றி நிலியரோ அத்தை - அடுக்கத்துச்
சிறு தலை நவ்விப் பெருங் கண் மாப் பிணை,
அந்தி, அந்தணர் அருங் கடன் இறுக்கும்
முத் தீ விளக்கின், துஞ்சும்
பொற் கோட்டு இமயமும், பொதியமும், போன்றே!

திணை - பாடாண் திணை : துறை - செவியறிவுறூஉ; வாழ்த்தியலும் ஆம்.

சேரமான் பெருஞ் சோற்று உதியஞ் சேரலாதனை முரஞ்சியூர் முடிநாகராயர் பாடியது.

## 3. பாண்டியன் கருங்கை ஒள்வாள் பெரும் பெயர் வழுதி

*உன் முன்னோர்கள் புகழ்மிக்கவர்கள்; செங்கோன்மையும் கொடைச் சிறப்பும் உடையவர்கள்; அவர்கள் வழிவந்தவன் நீ!*

*கற்பிற் சிறந்த மனைவி உனக்கு வாய்த்தவள். இல்லற வாழ்வு பெருமையுடன் விளங்குகிறது; பெருங்கை யானையின் பிடரியில் இருந்து கூற்றுவனைப் போல் பகைவர்களைச் சாய்க்கும் திறன் படைத்தவன் நீ; கருங்கையில் ஒள்வாள் ஏந்திய புகழ்மிக்க பேரரசன் நீ.*

*நிலம் பெயர்ந்தாலும் நின்சொல் பெயராது வாழ்க! உறுதியுடன் வாழ்வது உயர்வு அளிக்கும்.*

*மற்றும் வழிபறிக் கொள்ளையர் அம்பு கொண்டு வீழ்த்த அவர்கள் தசையைத் தின்னப் பருந்துகள் உன்ன மரத்துக் கிளையில் காத்துக் கிடக்கின்றன; அத்தகைய அரிய நீண்ட வழிகளைக் கடந்து உன்னை இரவலர் காண வருவர். குறிப்பறிந்து அவர் இன்மை தீர்த்து உதவுக; இதுவே யான் வேண்டுவது.*

உவவு மதி உருவின் ஓங்கல் வெண் குடை
நிலவுக் கடல் வரைப்பின் மண்ணகம் நிழற்ற,
ஏம முரசம் இழுமென முழங்க,
நேமி உய்த்த நேஎ நெஞ்சின்,
தவிரா ஈகைக், கவுரியர் மருக!
செயிர் தீர் கற்பின் சேயிழை கணவ!
பொன் ஓடைப் புகர் அணி நுதல்,
துன் அருந் திறல், கமழ் கடாஅத்து,
எயிறு படையாக எயிற் கதவு இடாஅக்
கயிறு பிணிக்கொண்ட கவிழ் மணி மருங்கின்,
பெருங் கை, யானை இரும் பிடர்த் தலை இருந்து,
மருந்து இல் கூற்றுத்து அருந் தொழில் சாயாக்
கருங் கை ஒள் வாட் பெரும்பெயர் வழுதி!
நிலம் பெயரினும், நின் சொல் பெயரல்;
பொலங் கழற் கால், புலர் சாந்தின்
விலங்கு அகன்ற வியல் மார்ப!
ஊர் இல்ல, உயவு, அரிய,
நீர் இல்ல, நீள் இடைய,
பார்வல் இருக்கைக், கவி கண் நோக்கின்,
செந் தொடை பிழையா வன்கண் ஆடவர்
அம்பு விட, வீழ்ந்தோர் வம்பப் பதுக்கைத்,
திருந்து சிறை வளை வாய்ப் பருந்து இருந்து உயவும்
உன்ன மரத்த துன் அருங் கவலை,
நின் நசை வேட்கையின் இரவலர் வருவர் - அது
முன்னம் முகத்தின் உணர்ந்து, அவர்
இன்மை தீர்த்தல் வன்மையானே

திணையும் துறையும் அவை.

பாண்டியன் கருங்கை ஒள் வாள் பெரும்பெயர் வழுதியை இரும்பிடர்த்தலையார் பாடியது.

## 4. சோழன் உருவப்பல்தேர் இளஞ்சேட் சென்னி

*குருதி படிந்ததால் உன்வாள் செக்கர் வானத்தைப் போல் வனப்புப் பெற்று உள்ளது.*

*உன் காலில் உள்ள கழல் எருதின் கொம்புகள் போல் பிளவுபட்டு உள்ளது.*

*நின்தோல் (கேடயம்) துளைபட்டுப் பயிற்சியாளர் அம்பு எய்து பழகும் இலக்குப் பலகை போல் காட்சி அளிக்கிறது.*

*குதிரையின் திறந்தவாய் சிவந்து காணப்படுவது எருதினை வவ்விய புலியின் வாய்போல் உள்ளது.*

*உன்யானைகள் அவற்றின் கொம்புகள் மழுங்கி எதிரி களுக்குக் கூற்றுவனைப் போல் அச்சம் ஊட்டுகின்றன.*

*நீ குதிரை பூட்டிய தேரில் வந்து காட்சி அளிப்பது காலைக் கதிரவன்போல் அழகு தருவதாக உள்ளது.*

*உன்னை எதிர்த்தவர் நாட்டில் வாழ்வோர் தாயற்ற குழந்தைகள் பால் இல்லாமல் வருந்துவது போலக் கூவி அரற்றுவர்.*

வாள், வலம் தர, மறுப் பட்டன
செவ் வானத்து வனப்புப்போன்றன;
தாள், களம் கொளக் கழல் பறைந்தன
கொல் ஏற்றின் மருப்புப் போன்றன;
தோல், துவைத்து அம்பின் துளை தோன்றுவ,
நிலைக்கு ஒராஅ இலக்கம் போன்றன;
மாவே, எறி பதத்தான் இடம் காட்டக்
கறுழ் பொருத செவ் வாயான்,
எருத்து வவ்விய புலி போன்றன;
களிறு, கதவு எறியாச் சிவந்து, உராஅய்,
நுதி மழுங்கிய வெண் கோட்டான்,
உயிர் உண்ணும் கூற்றுப் போன்றன;
நீயே, அலங்குஉளைப் பரீஇ இவுளிப்
பொலந் தேர்மிசைப் பொலிவு தோன்றி,
மாக் கடல் நிவந்து எழுதரும்
செஞ் ஞாயிற்றுக் கவினை மாதோ-
அனையை ஆகன்மாறே,
தாய் இல் தூவாக் குழவி போல,
ஓவாது கூஉம், நின் உடற்றியோர் நாடே.

திணை - வஞ்சி; துறை - கொற்றவள்ளை.
சோழன் உருவப் பல் தேர் இளஞ் சேட்சென்னியைப் பரணர் பாடியது.

# 5. கோப்பெருஞ்சேரல் இரும்பொறை

எருமைபோல் கற்கள் தோற்றம் அளிக்கும் மலைநாட்டை உடையவன் நீ; மற்றும் யானைகள் பசுநிரைகளைப் போல் பரவி உன் காட்டில் மிக்கு உள்ளன. 'கானக நாடன்' என்று உன்னைப் பாராட்டுவர்.

ஈவு இரக்கமற்றுக் கொடுமை செய்யும் கீழ் மக்களது தொடர்பு கொள்ளற்க; அவர்கள் நிரயத்துக்கு வழிகாட்டுவர்.

உன் நாட்டு மக்களைக் குழந்தைகளைப் போற்றுவது போல் காத்து உதவுக. இவையே யான் வேண்டுபவை.

எருமை அன்ன கருங் கல் இடை தோறு,
ஆனின் பரக்கும் யானைய, முன்பின்,
கானக நாடனை! நீயோ, பெரும!
நீ ஓர் ஆகலின், நின் ஒன்று மொழிவல்:
அருளும் அன்பும் நீக்கி, நீங்கா
நிரயம் கொள்பவரோடு ஒன்றாது, காவல்,
குழவி கொள்பவரின், ஓம்புமதி!
அளிதோ தானே; அது பெறல் அருங்குரைத்தே.

திணை - பாடாண்திணை; துறை - செவியறிவுறூஉ; பொருண்மொழிக் காஞ்சியும் ஆம்.

சேரமான் கருவூர் ஏறிய ஒள் வாட் கோப் பெருஞ்சேரல் இரும்பொறையைக் கண்ட ஞான்று, நின் உடம்பு பெறுவாயாக! என, அவனைச் சென்று கண்டு; தம் உடம்பு பெற்று நின்ற நரிவெரூஉத்தலையார் பாடியது.

# 6. பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி

வடக்கே இமயம்; தெற்கே குமரிமுனை; கிழக்கும் மேற்கும் கடல்கள். இவற்றை எல்லையாகக் கொண்ட நிலம் முழுவதும், மேல்நிலை உலகத்தும், கீழ்நிலை உலகத்தும் எங்கும் உன்புகழ் பரவி உள்ளது.

சமன் செய்து சீர்தூக்கும் கோல் போல் நடுவு நிலையில் நின்று நீதி வழங்குக; செங்கோன்மை நிலவுவதாக.

*படை வீரர்களைக் கொண்டும், யானைகளை ஏவியும் நீ எதிர்க்கும் பகைவர்தம் மதிலைக் கடந்து வெற்றிகள் கொண்டு அவ்வூர்களில் இருந்து கொணரும் நல் ஆபரணங்களைப் பரிசிலர்க்குத் தந்து சிறப்புச் செய்க.*

*நின் குடை கோயில் வலம் வரும் சிவனுக்குத் தாழ்வதாக; ஆசி கூறும் அந்தணரை வணங்குக; நாடு சுடு புகையால் நின் தலைமாலை வாடுவதாக; ஊடற்கண் மகளிர்பால் உன் வெகுளி அடங்குவதாக.*

*வெற்றி பெற்று உயர்வுடன் விளங்கும் நீ தண்கதிர் மதியம் போலவும், ஒண் சுடர் ஞாயிறு போலவும் நிலமிசை நீடுவாழ்க.*

வடாஅது பனி படு நெடு வரை வடக்கும்,
தெனாஅது உரு கெழு குமரியின் தெற்கும்,
குணாஅது கரை பொரு தொடு கடற் குணக்கும்,
குடாஅது தொன்று முதிர் பௌவத்தின் குடக்கும்,
கீழது முப் புணர் அடுக்கிய முறை முதற் கட்டின்
நீர் நிலை நிவப்பின் கீழும், மேலது
ஆனிலை உலகத்தானும், ஆனாது,
உருவும் புகழும் ஆகி, விரி சீர்த்
தெரிகோல் ஞமன்ன் போல, ஒரு திறம்
பற்றல் இலியரோ! நின் திறம் சிறக்க!
செய் வினைக்கு எதிர்ந்த தெவ்வர் தேஎத்துக்
கடல் படை குளிப்ப மண்டி, அடர்ப் புகர்ச்
சிறு கண் யானை செவ்விதின் ஏவிப்
பாசவல் படப்பை ஆர் எயில் பல தந்து,
அவ் எயில் கொண்ட செய்வுறு நன் கலம்
பரிசில் மாக்கட்கு வரிசையின் நல்கிப்
பணியியர் அத்தை, நின் குடையே - முனிவர்
முக் கட் செல்வர் நகர் வலம் செயற்கே!
இறைஞ்சுக, பெரும! நின் சென்னி - சிறந்த
நான்மறை முனிவர் ஏந்து கை எதிரே!
வாடுக, இறைவ! நின் கண்ணி - ஒன்னார்
நாடு சுடு கமழ் புகை எறித்தலானே!
செலியர் அத்தை, நின் வெகுளி - வால் இழை
மங்கையர் துனித்த வாள் முகத்து எதிரே!

ஆங்க, வென்றி எல்லாம் வென்று அகத்து அடங்கிய
தண்டா ஈகைத் தகை மாண் குடுமி!
தண் கதிர் மதியம் போலவும் தெறு சுடர்
ஒண் கதிர் ஞாயிறு போலவும்,
மன்னிய, பெரும! நீ நிலமிசையானே!

திணையும் துறையும் அவை; துறை வாழ்த்தியலும் ஆம்.
பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியைக் காரி கிழார் பாடியது.

## 7. சோழன் கரிகால் பெருவளத்தான்

*நீ படை எடுத்துப் பகைவர்தம் நாடுகளை அழிக்கிறாய்; உன் யானைகளும் போர் வீரர்களும் திறமையாகப் போர் செய் கின்றனர். பகைவர்தம் ஊர்கள் கொளுத்தப்படுகின்றன. அங்கு உள்ள பொருள்களைக் கொணர்ந்து குவிக்கிறாய்.*

*மீனைக் கொண்டே வெள்ளத்தை அடைக்கும் சிறப்பு உடைய நீர்வளம் மிக்க நாடுகள் அவை, நீ போர் செய்து தாக்கு வதால் அவை அழிவு பெறுகின்றன; நன்மைகளை இழக்கின்றன!*

களிறு கடைஇய தாள்,
கழல் உரீஇய திருந்து அடி,
கணை பொருது கவி வண் கையால்,
கண் ஒளிர்வரூஉம் கவின் சாபத்து,
மா மறுத்த மலர் மார்பின்,
தோல் பெயரிய எறுழ் முன்பின்,
எல்லையும் இரவும் எண்ணாய், பகைவர்
ஊர் சுடு விளக்கத்து அழு விளிக் கம்பலைக்
கொள்ளை மேவலை; ஆகலின், நல்ல
இல்ல ஆகுபவால் - இயல் தேர் வளவ!
தண் புனல் பரந்த பூசல் மண் மறுத்து
மீனின் செறுக்கும் யாணர்ப்
பயன் திகழ் வைப்பின் பிறர் அகன் தலை நாடே.

திணை - வஞ்சி; துறை - கொற்றவள்ளை; மழபுல வஞ்சியும் ஆம்.
சோழன் கரிகாற் பெருவளத்தானைக் கருங்குழலாதனார் பாடியது.

## 8. சேரமான் கடுங்கோ வாழியாதன்

பரப்புமிக்க ஆட்சியும், ஈகையும், பேரரசும், ஊக்கமும் மிக்கவன் எம் அரசன் சேரலாதன். அரசர்கள் அவனைப் பணிந்து வழிமொழிகின்றனர். சிறப்பு மிக்க இவனுக்குச் சூரியனே! நீ நிகர் ஆகமாட்டாய்!

பொழுது என்ற வரையறை உனக்கு உள்ளது; நிலை யில்லாமல் ஓடிக் கொண்டே இருக்கிறாய்; தெற்கும் வடக்குமாக இடம் மாறுகிறாய்; மலையில் மறைந்து ஒளிகிறாய்; அகன்ற ஆகாயம் உன்இடம்; அது பெருமைக்கு உரியது என்றாலும் நீ பகலில் மட்டும்தான் வெளிவர முடிகிறது.

வையம் காவலர் வழி மொழிந்து ஒழுகப்
போகம் வேண்டிப் பொதுச் சொல் பொறாஅது,
இடம் சிறிது என்னும் ஊக்கம் துரப்ப,
ஒடுங்கா உள்ளத்து, ஓம்பா ஈகைக்,
கடந்து அடு தானைச் சேரலாதனை
யாங்கனம் ஒத்தியோ? - வீங்கு செலல் மண்டிலம்!
பொழுது என வரைதி; புறக்கொடுத்து இறத்தி;
மாறி வருதி; மலை மறைந்து ஒளித்தி;
அகல் இரு விசும்பினானும்
பகல் விளங்குதியால், பல் கதிர் விரித்தே.

திணை - பாடாண் திணை; துறை - இயன்மொழி; பூவை நிலையும் ஆம்.
சேரமான் கடுங்கோ வாழியாதனைக் கபிலர் பாடியது.

## 9. பாண்டியன் பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதி

''பசு, பார்ப்பனர், பெண்கள், பிணியாளர், மகவு பெறாதவர் ஆகிய நீவிர் பாதுகாப்பைத் தேடிக் கொள்ளுங்கள். விரைவில் எம் அம்பை விடப்போகிறோம்'' என்று முன் அறிவிப்புச் செய்துவிட்டுப் போர் தொடுக்கும் அறக்கோட்பாடு உன்பால் உள்ளது.

மறத்திலும் அறம் பிழையாமல் நடத்து கொள்ளும் சிறப்பு உன்பால் உள்ளது.

பசும்பொன் கூத்தர்க்கு வழங்கி விழா எடுத்த நெடியோன் என்பான் உன் முன்னோன். அவன் தோற்றுவித்த பஃறுளி ஆற்று மணலினும் பல ஆண்டுகள் வாழ்வாயாக.

'ஆவும், ஆன் இயற் பார்ப்பன மாக்களும்,
பெண்டிரும், பிணியுடையீரும், பேணித்
தென் புல வாழ்நர்க்கு அருங் கடன் இறுக்கும்
பொன் போல் புதல்வர்ப் பெறாஅதீரும்,
எம் அம்பு கடி விடுதும், நும் அரண் சேர்மின்' என,
அறத்து ஆறு நுவலும் பூட்கை, மறத்தின்
கொல் களிற்று மீமிசைக் கொடி விசும்பு நிழற்றும்
எம் கோ, வாழிய, குடுமி - தம் கோச்
செந் நீர்ப் பசும் பொன் வயிரியர்க்கு ஈத்த,
முந்நீர் விழவின், நெடியோன்
நல் நீர்ப் பஃறுளி மணலினும் பலவே!

திணையும் துறையும் அவை.

பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியை நெட்டிமையார் பாடியது.

## 10. சோழன் நெய்தலங்கானல் இளஞ்சேட்சென்னி

நீ வழக்குகளை விசாரிக்கும்போது வேண்டியவர்கள் கூறுகிறார்கள் என்பதால் நல்லவர்கள் என்று யாரையும் தீர் மானித்து விடுவது இல்லை. அதேபோல ஒருவரைப் பழித்துக் கூறுவதால் அவர்கள் குற்றவாளிகள் என்று முடிவு செய்வதில்லை.

குற்றவாளிகளா இல்லையா என்பதை நீயே நன்கு ஆராய்ந்து தெளிகிறாய்.

அவர்கள் குற்றம் செய்தவர்கள் என்றுபட்டால் அதற்கு உரிய தண்டனையைத் தயங்காமல் வழங்குகிறாய்.

குற்றம் செய்தவர்கள் தவறுகளை உணர்ந்து பொறுத்துக் கொள்ள வேண்டினால் உரிய தண்டனையைச் சற்றுக் குறைத்துக் கொள்ளவும் செய்கிறாய்.

உன்னை நாடி வருகின்றவர்க்கு வயிறு ஆரச் சுவைமிக்க உணவைத் தந்து அவர்களை மகிழ வைக்கும் கொடைப் பண்பு உன்பால் உள்ளது.

மகளிர் தழுவ உன் மார்பு இடம் கொடுக்கும்; பகைவர் தாக்க நீ இடம் தரமாட்டாய். தவறு செய்துவிட்டுப் பின் வருத்தப் பட்டுப் பயனில்லை. எதையும் தீர ஆராய்ந்து செயல்படும் திறன் உன்பால் உள்ளது.

நெய்தலங்கானல் என்னும் ஊருக்கு உரிய தலைவனே! உன்னைப் பல படி ஏத்துவோம் யாம்.

வழிபடுவோரை வல் அறிதீயே;
பிறர் பழி கூறுவோர் மொழி தேறலையே;
நீ மெய் கண்ட தீமை காணின்,
ஒப்ப நாடி, அத் தக ஒறுத்தி;
வந்து, அடி பொருந்தி, முந்தை நிற்பின்,
தண்டமும் தணிதி, நீ பண்டையின் பெரிதே-
அமிழ்து அட்டு ஆனாக் கமழ் குய் அடிசில்
வருநர்க்கு வரையா வசை இல் வாழ்க்கை
மகளிர் மலைத்தல் அல்லது, மள்ளர்
மலைத்தல் போகிய, சிலைத் தார் மார்ப!
செய்து இரங்கா வினைச், சேண் விளங்கும் புகழ்,
நெய்தலங்கானல் நெடியோய்!-
எய்த வந்தனம் யாம்; ஏத்துகம் பலவே!

திணையும் துறையும் அவை.

சோழன் நெய்தலங்கானல் இளஞ் சேட்சென்னியை ஊன்பொதி பசுங்குடையார் பாடியது.

## 11. சேரமான் பாலைபாடிய பெருங்கடுங்கோ

இள மங்கையர்கள் மணல் பாவைக்குப் பூச்சூட்டி விளை யாடி அதன்பின் பொருநை நதியில் பாய்ந்து நீராடி மகிழ்வர். அத்தகைய பொருநை நதி பாயும் வஞ்சிக்குப் பேரரசன் நீ!

பகைவர்தம் அரண் கடந்து அவர்களைப் புறம் கண்டு வெற்றிகள் பல பெற்றுப் புகழ்படைக்கிறாய்.

*உன் வெற்றிகளைச் சிறப்பித்துப் பாடும் பாடினி பொன் ஆபரணம் பெறுகிறாள்.*

*அப்பாடினி பாடும் பாடலுக்கு இசை கூட்டி யாழ் வாசிக்கும் பாண்மகனும் வெள்ளி நார் தொடுத்த பொற்றாமரை பெறுகிறான்.*

அரி மயிர்த் திரள் முன்கை,
வால் இழை, மட மங்கையர்
வரி மணல் புனை பாவைக்குக்
குலவுச் சினைப் பூக் கொய்து,
தண் பொருநைப் புனல் பாயும்
விண்பொரு புகழ் விறல் வஞ்சிப்
பாடல் சான்ற விறல் வேந்தனும்மே,
வெப்பு உடைய அரண் கடந்து,
துப்பு உறுவர் புறம் பெற்றிசினே;
புறம் பெற்ற வய வேந்தன்
மறம் பாடிய பாடினியும்மே,
ஏர் உடைய விழுக் கழஞ்சின்,
சீர் உடைய இழை பெற்றிசினே;
இழை பெற்ற பாடினிக்குக்
குரல் புணர் சீர்க்கொளை வல் பாண் மகனும்மே,
என ஆங்கு,
ஒள் அழல் புரிந்த தாமரை
வெள்ளி நாரால் பூப் பெற்றிசினே.

திணை - பாடாண் திணை; துறை - பரிசில் கடா நிலை.

சேரமான் பாலை பாடிய பெருங்கடுங்கோவைப் பேய்மகள் இளவெயினி பாடியது.

## 12. பாண்டியன் பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதி

*பாணர்கள் பொற்றாமரையைப் பரிசிலாகப் பெறுகின்றனர். புலவர்கள் தேர்களைப் பெறுகின்றனர். உன் புகழ்பாடுவார் சிறப்புப் பெறுகின்றனர்.*

*நீ பிறர் மண் கொண்டு அங்குள்ள பொருள்களைக் கொள்ளை இடுகிறாய். அவற்றைக் கொண்டு உன்னை நாடி வருபவர்க்கு இனியவை செய்கிறாய்.*

பிறர் மண் கொள்ளும் நிலையில் அவர்களுக்குக் கெடுதி செய்கிறாய். இரவலர்க்குப் பொருள் தந்து நன்மை செய்கிறாய்.

ஒருவர் துன்பப்பட மற்றொருவர் சிறப்புடன் வாழ உதவுவது அறம் ஆகுமா?

பாணர் தாமரை மலையவும், புலவர்
பூ நுதல் யானையொடு புனை தேர் பண்ணவும்,
அறனோ மற்று இது - விறல் மாண் குடுமி!
இன்னா ஆகப் பிறர் மண் கொண்டு,
இனிய செய்தி, நின் ஆர்வலர் முகத்தே?

திணை - அது; துறை - இயன்மொழி.
பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியை நெட்டிமையார் பாடியது.

## 13. சோழன் முடித்தலைக் கோப்பெருநற்கிள்ளி

இவன் யார் என்று வினவுகின்றாய்?

சோழ நாட்டு அரசன் இவன்.

களம்பல கண்டவன்; புலித்தோலைக் கவசமாகக் கொண்டு உள்ளான். எதிரிகள் அம்புபட்டு அது கிழிபட்டு உள்ளது.

அவன் தற்போது யானை மீது செல்கிறான். அது மதம் பட்டு உள்ளது. பாகனின் கட்டுக்கு அடங்காமல் அது வெறி கொண்டு உள்ளது. வீரர்கள் சுறாமீன்கள் இனம்போல இரு பக்கமும் மொய்த்துக் காக்கின்றனர்.

கடலில் சூறைக் காற்றில் நிலைதடுமாறிய மரக்கலம் போல் இவ்யானை செல்கிறது; அது நட்சத்திரக் கூட்டத்தின் நடுவில் இயங்கும் திங்களைப் போன்று உள்ளது. இவன் ஊறு இன்றிப் பெயர்வானாக!

வயலில் திரியும் மயில் உகுக்கும் பீலியைக் கழனி உழவர் நெற்கதிரோடு சேர்த்துத் தொகுக்கும் சிறப்புப் பெற்றது; கொழு மீனும் கள்ளும் மிக்கது; காவிரி பாயும் நாடு அவனது.

'இவன் யார்?' என்குவைஆயின், இவனே
புலி நிறக் கவசம் பூம் பொறி சிதைய,

எய் கணை கிழித்த பகட்டு எழில் மார்பின்,
மறலி அன்ன களிற்று மிசையோனே;
களிறே, முந்நீர் வழங்கு நாவாய் போலவும்,
பல் மீன் நாப்பண் திங்கள் போலவும்,
சுறவினத்து அன்ன வாளோர் மொய்ப்ப,
மரீஇயோர் அறியாது, மைந்து பட்டன்றே;
நோய் இலன் ஆகிப் பெயர்கதில் அம்ம!
பழன மஞ்ஞை உகுத்த பீலி
கழனி உழவர் சூட்டொடு தொகுக்கும்,
கொழு மீன், விளைந்த கள்ளின்,
விழு நீர் வேலி நாடு கிழவோனே.

திணை - பாடாண் திணை; துறை - வாழ்த்தியல்.

சோழன் முடித் தலைக் கோப்பெருநற்கிள்ளி கருவூரிடம் செல்வானைக் கண்டு, சேரமான் அந்துவஞ் சேரல் இரும்பொறையோடு வேண்மாடத்து மேல் இருந்து உறையூர் ஏணிச்சேரி முட மோசியார் பாடியது.

## 14. சேரமான் செல்வக் கடுங்கோ வாழியாதன்

*யானைகளைப் போர்க்களத்தில் இழுத்துப் பிடித்து அவற்றை அடக்கிச் செலுத்தவும், குதிரைகள் குழிகளில் விழுந்து சறுக்காமல் சமப்படுத்தவும், அம்புகளை ஏவிப் பகைவர்கள் மீது செலுத்தவும், பரிசிலர்க்கு அரிய ஆபரணங்களைத் தரவும் உன் கைகள் வலிமை கொள்ள வேண்டி உள்ளது. காய்ப்புப் பெறு கின்றன. அதனால் வலிய ஆகின்றன.*

*யாம் நீ தரும் ஊனும், கறியும், துவையலும் கலந்த சோறு உண்பதல்லது வேறு பிறதொழில் செய்வது அறியோம். இதுவே யாம் செய்யும் கடின உழைப்பு; அதனால் எம் கைகள் மெலிந்து உள்ளன. பாடுவார் கை மென்மை உடையது; அதற்குக் காரணம் இது.*

கடுங் கண்ண கொல் களிற்றால்
காப்பு உடைய எழு முருக்கிப்
பொன் இயல் புனை தோட்டியால்
முன்பு துரந்து, சமம் தாங்கவும்;

பார் உடைத்த குண்டு அகழி
நீர் அழுவம் நிவப்புக் குறித்து,
நிமிர் பரிய மா தாங்கவும்;
ஆவம் சேர்ந்த புறத்தை தேர் மிசைச்
சாப நோன் ஞாண் வடுக் கொள வழங்கவும்;
பரிசிலர்க்கு அருங் கலம் நல்கவும்; குரிசில்!
வலிய ஆகும், நின் தாள் தோய் தடக் கை.
புலவு நாற்றத்த பைந் தடி
பூ நாற்றத்த புகை கொளீஇ, ஊன் துவை
கறி சோறு உண்டு வருந்து தொழில் அல்லது,
பிறிது தொழில் அறியா ஆகலின், நன்றும்
மெல்லிய - பெரும! - தாமே, நல்லவர்க்கு
ஆர் அணங்கு ஆகிய மார்பின், பொருநர்க்கு
இரு நிலத்து அன்ன நோன்மைச்,
செரு மிகு சேஎய்! - நின் பாடுநர் கையே.

திணை - அது; துறை - இயன்மொழி.

சேரமான் செல்வக் கடுங்கோ வாழியாதன் கபிலர் கைப் பற்றி, 'மெல்லியவாமால் நும் கை' எனக் கபிலர் பாடியது.

# 15. பாண்டியன் பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதி

*தேர் கொண்டு குழிபட்ட தெருக்களில் கழுதை ஏர் பூட்டி உன் பகைவர் நாட்டைப் பாழ் செய்தனை.*

*தேர்களைச் செலுத்திக் கழனிகளை அழித்தனை; களிறுகள் கொண்டு குளங்களைக் கலக்கினாய்.*

*உன் பகைவர்கள் உன்னிடம் தோற்று ஓடினர். இவ்வாறு நீ வெற்றி கொண்ட களங்கள் பலவாகும்.*

*ஊரின்கண் மறையவரைத் துணையாகக் கொண்டு வேள்விகள் நடத்தினை; அவற்றின் நினைவாகத் தூண்களும் எழுப்பி உள்ளாய்.*

*பாடினி நீ போர் மேற் செல்வதைச் சிறப்பித்துப் பாடுவாள். வலிமை மிக்க வேந்தன் நீ!*

*நீ போரில் பகைவர்களை வெற்றி கொண்ட போர்க் களங்களா ஊரின்கண் நீ நடத்திய வேள்விகளா எவை மிகுதிப் பட்டவை?*

கடுந் தேர் குழித்த ஞெள்ளல் ஆங்கண்,
வெள் வாய்க் கழுதைப் புல் இனம் பூட்டிப்
பாழ் செய்தனை, அவர் நனந்தலை நல் எயில்;
புள்ளினம் இமிழும் புகழ்சால் விளை வயல்,
வெள் உளைக் கலி மான் கவி குளம்பு உகளத்
தேர் வழங்கினை, நின் தெவ்வர் தேஎத்துத்;
துளங்கு இயலான், பணை எருத்தின்,
பாவு அடியான், செறல் நோக்கின்,
ஒளிறு மருப்பின் களிறு அவர
காப்பு உடைய கயம் படியினை;
அன்ன சீற்றத்து அனையை: ஆகலின்,
விளங்கு பொன் எறிந்த நலம் கிளர் பலகையொடு
நிழல் படு நெடு வேல் ஏந்தி, ஒன்னார்
ஒண் படைக் கடுந் தார் முன்பு தலைக்கொண்மார்,
நசை தர வந்தோர் நசை பிறக்கு ஒழிய,
வசை பட வாழ்ந்தோர் பலர்கொல்? புரை இல்
நல் பனுவல், நால் வேதத்து,
அருஞ் சீர்த்திப் பெருங் கண்ணுறை
நெய்ம் மலி ஆவுதி பொங்கப் பல் மாண்
வீயாச் சிறப்பின் வேள்வி முற்றி,
யூபம் நட்ட வியன் களம் பலகொல்?
யா பலகொல்லோ? - பெரும! வார் உற்று
விசி பிணிக்கொண்ட மண் கனை முழவின்
பாடினி பாடும் வஞ்சிக்கு
நாடல் சான்ற மைந்தினோய்! நினக்கே.

திணையும் துறையும் அவை.

பாண்டியன் பல் யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியை நெட்டிமையார் பாடியது.

# 16. சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி

நீ வீட்டு மரங்களை விறகாகக் கொண்டு ஊரை எரித்த சுடுதீயின் ஒளிக் காட்சி சூரியன் மறையும் அந்திப் பொழுதில் தோன்றும் செக்கர் வானத்தை ஒத்திருக்கிறது.

முருகனைப் போன்ற சீற்றம் உடையவன் நீ. பகைவர் நாட்டை எரியூட்டி அழித்தனை. உன் யானைகள் உனக்குத் துணையாக நின்று போர் செய்தன.

பகைவர்கள் வயல்கள் வளம் மிக்கவை. வள்ளைக் கொடியும், ஆம்பல் மலரும், பகன்றைக் காயும், பாகல்கனியும் மிக்கவை; மற்றும் கரும்பு மிக்கு விளையும் கழனிகள் அவை; அவை அனைத்தும் பாழ்பட்டு அழிந்து ஒழிந்தன.

வினை மாட்சிய விரை புரவியொடு,
மழை உருவின தோல் பரப்பி,
முனை முருங்கத் தலைச் சென்று, அவர்
விளை வயல் கவர்பூட்டி,
மனை மரம் விறகு ஆகக்
கடி துறை நீர்க் களிறு படீஇ,
எல்லுப் பட இட்ட சுடு தீ விளக்கம்
செல் சுடர் ஞாயிற்றுச் செக்கரின் தோன்றப்
புலம் கெட இறுக்கும் வரம்புஇல் தானைத்,
துணை வேண்டாச் செரு வென்றிப்,
புலவு வாள், புலர் சாந்தின்,
முருகற் சீற்றத்து, உரு கெழு குருசில்!
மயங்கு வள்ளை, மலர் ஆம்பல்,
பனிப் பகன்றை, கனிப் பாகல்,
கரும்பு அல்லது காடு அறியாப்
பெருந் தண் பணை பாழ் ஆக,
ஏம நல் நாடு ஒள் எரி ஊட்டினை,
நாம நல் அமர் செய்ய,
ஓராங்கு மலைந்தன, பெரும! நின் களிறே.

திணை - வஞ்சி, துறை - மழபுலவஞ்சி.

சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியைப் பாண்டரங் கண்ணனார் பாடியது.

# 17. சேரமான் யானைக் கண்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை

தெற்கே குமரி வடக்கே இமயம் இவ்வெல்லைக்குட்பட்ட நாட்டை உன் முன்னோர் ஆண்டனர். அரசர்கள் அவர்களுக்கு அடிபணிந்து வழி மொழிந்தனர். தீமைகளை அகற்றியும், நன்மைகளை நிலைநிறுத்தியும் நல்லாட்சி செய்தனர். விதித்தது பெற்றுக் குடிகளை வருத்தாமல் ஆட்சி செய்தனர். அவர்கள் வழிவந்த காவலன் நீ!

தொண்டி என்னும் ஊரார் மதிக்கும் காவல் வேந்தன் நீ! அது தென்னை மரங்களையும், அகன்ற வயல்களையும் பெற்று உள்ளது. மலைகள் சூழ்ந்த நாடு அது. மணல் பரப்பு உடைய கழிக்கானலில் பல்வகைப் பூக்கள் அழகு தருகின்றன. அத்தகைய நகர் தொண்டி; அதன் காவலன் நீ!

நீ பகைவர்பால் சிறைப்பட்டுத் தப்பித்து வந்தாய்; அது மறக்கமுடியாத நிகழ்ச்சியாகும். குழியில் அகப்பட்ட பெருங் களிறு ஒன்று அதைத் தூர்த்துவிட்டு வெளியேறித் தன் இன யானைகளோடு சேர்வதைப் போல் நீ தப்பித்து வந்தாய். உன் சுற்றத்தோடு இனிது ஆட்சி செய்கிறாய்.

அதனைக் கேட்டு மகிழ்வாரும் உளர். அஞ்சி நடுங்குபவரும் உள்ளனர். உன்பால் இழந்த நாட்டையும், பொன் ஆபரணங் களையும் கேட்டுத் திரும்பப் பெற முடியும் என்ற நம்பிக்கையால் மகிழ்பவர் உளர். நீ சினந்து நோக்கினால் தங்கள் நாடும் ஆட்சி யும் இழந்து விடுவோம் என்று அஞ்சிக் கவலை உறுபவரும் உளர், கடல் பெருஞ்சேனை உடைய நீ வெற்றிச் சிறப்பும் ஈகையும் மிக்கவன். சேரர்தம் அரசே! இத்தகு சிறப்புகளை எண்ணி உன்னைப் புகழ்ந்து ஏத்தி உன்னைக் காண வந்தோம் யாம்.

தென் குமரி, வட பெருங்கல்,
குண குட கடலா எல்லை,
குன்று, மலை, காடு, நாடு,
ஒன்று பட்டு வழிமொழியக்
கொடிது கடிந்து, கோல் திருத்திப்
படுவது உண்டு, பகல் ஆற்றி,

இனிது உருண்ட சுடர் நேமி
முழுது ஆண்டோர் வழி காவல!
குலை இறைஞ்சிய கோள் தாழை
அகல் வயல், மலை வேலி,
நிலவு மணல் வியன் கானல்,
தெண் கழிமிசைத் தீப் பூவின்,
தண் தொண்டியோர் அடு பொருந!
மாப் பயம்பின் பொறை போற்றாது,
நீடு குழி அகப்பட்ட
பீடு உடைய எறுழ் முன்பின்,
கோடு முற்றிய கொல் களிறு
நிலை கலங்கக் குழி கொன்று,
கிளை புகலத் தலைக்கூடியாங்கு-
நீ பட்ட அரு முன்பின்
பெருந் தளர்ச்சி பலர் உவப்பப்
பிறிது சென்று, மலர் தாயத்துப்
பலர் நாப்பண் மீக்கூறலின்,
'உண்டாகிய உயர் மண்ணும்,
சென்று பட்ட விழுக் கலனும்,
பெறல் கூடும், இவன் நெஞ்சு உறப் பெறின்' எனவும்,
'ஏந்து கொடி இறைப் புரிசை,
வீங்கு சிறை, வியல் அருப்பம்,
இழந்து வைகுதும், இனி நாம் - இவன்
உடன்று நோக்கினன், பெரிது' எனவும்,
வேற்று அரசு பணி தொடங்கு நின்
ஆற்றலொடு புகழ் ஏத்திக்
காண்கு வந்திசின், பெரும! ஈண்டிய
மழை என மருளும் பல் தோல், மலை எனத்
தேன் இறை கொள்ளும் இரும் பல் யானை,
உடலுநர் உட்க வீங்கிக் கடல் என
வான் நீர்க்கு ஊக்கும் தானை, ஆனாது
கடு ஒடுங்கு எயிற்ற அரவுத் தலை பனிப்ப,
இடி என முழங்கும் முரசின்,
வரையா ஈகைக் குடவர் கோவே!

திணை - வாகை; துறை - அரச வாகை; இயன்மொழியும் ஆம்.

பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனால் பிணியிருந்த யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை வலிதின் போய்க் கட்டில் எய்தினானைக் குறுங்கோழியூர் கிழார் பாடியது.

# 18. பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்

தனிப் பேரரசராக விளங்கும் புகழை நிலைநாட்டியவர்கள் உன் முன்னோர்கள். நீ பல காலம் நீடூழி வாழ்க!

காஞ்சிப் பூவைக் கதுவும் வாளை மீனும், வரால் மீனும், கெடிற்று மீனும் உடைய ஆழமான அகழியையும், வான் அளாவிய நீள் மதிலையும் உடைய வளம் மிக்க மூதூரின் பேரரசன் நீ.

மேல் உலகத்துத் துறக்க வாழ்வு வேண்டினாலும், இவ் உலகத்திலேயே பேரரசனாகத் திகழ வேண்டும் என்றாலும், புகழை நிலைநாட்டி உயர்வு பெற வேண்டும் என்றாலும் அவற்றிற்குச் சில தகுதிகள் உள்ளன.

நீர் இல்லை என்றால் மக்கள் உயிர் வாழ இயலாது. நீரைக் கொண்டுதான் உணவைப் படைக்க இயலும். நீரும் நிலமும் சேரும் சேர்க்கையால் தான் உணவு உண்டாகிறது. உணவு தருவார் உயிர் கொடுப்பவர் ஆவர்.

மழை நீரையே நம்பி வாழும் பயிர்கள் செழிப்பது இல்லை; மழை நீரைத் தேக்கிக் கட்டுப்படுத்தி அணைகள் இட்டுத் தளைப்படுத்துவது இன்றியமையாதது ஆகும்.

வெறும் நிலத்தை வைத்துக் கொண்டு என்ன செய்ய முடியும்? நீரைத் தேக்கித் தளைப்படுத்தினால்தான் வாழ்வில் செழுமை காண முடியும். அவர்களே சாதனை படைத்தவர் ஆவர். ஏனையோர் புறக்கணிக்கப்படுவர். அவர்கள் பெயர் நிலைத்து இருக்காது.

முழங்கு முந்நீர் முழுவதும் வளைஇப்
பரந்துபட்ட வியல் ஞாலம்
தாளின் தந்து, தம் புகழ் நிறீஇ,
ஒரு தாம் ஆகிய உரவோர் உம்பல்!
ஒன்று பத்து அடுக்கிய கோடி கடை இரீஇய
பெருமைத்தாக, நின் ஆயுள்தானே!
நீர்த் தாழ்ந்த குறுங் காஞ்சிப்

பூக் கதூஉம் இன வாளை,
நுண் ஆரல், பரு வரால்,
குரூஉக் கெடிற்ற, குண்டு அகழி;
வான் உட்கும் வடி நீள் மதில்;
மல்லல் மூதூர் வய வேந்தே!
செல்லும் உலகத்துச் செல்வம் வேண்டினும்,
ஞாலம் காவலர் தோள் வலி முருக்கி,
ஒரு நீ ஆகல் வேண்டினும், சிறந்த
நல் இசை நிறுத்தல் வேண்டினும், மற்று அதன்
தகுதி கேள், இனி, மிகுதியாள!
நீர் இன்று அமையா யாக்கைக்கு எல்லாம்
உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே;
உண்டி முதற்றே உணவின் பிண்டம்;
உணவு எனப்படுவது நிலத்தொடு நீரே;
நீரும் நிலனும் புணரியோர் ஈண்டு
உடம்பும் உயிரும் படைத்திசினோரே;
வித்தி வான் நோக்கும் புன் புலம் கண் அகன்
வைப்பிற்று ஆயினும், நண்ணி ஆளும்
இறைவன் தாட்கு உதவாதே; அதனால்,
அடு போர்ச் செழிய! இகழாது வல்லே
நிலன் நெளி மருங்கில் நீர் நிலை பெருகத்
தட்டோர் அம்ம, இவண் தட்டோரே;
தள்ளாதோர் இவண் தள்ளாதோரே.

திணை - பொதுவியல்; துறை - முதுமொழிக் காஞ்சி.
பாண்டியன் நெடுஞ்செழியனைக் குடபுலவியனார் பாடியது.

# 19. பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்

*தலையாலங்கானத்துப் போரில் தமிழ் மன்னர்கள் வந்து எதிர்த்தனர். பெருநிலமன்னர் இருவர்; குறுநில மன்னர் ஐவர்.*

*நீ ஒருவனாக இருந்து கூற்றுவனைப் போல எதிரிகளை மாய்த்தாய். உன் படை வீரர்கள் எதிரிகளின் யானைகளை அம்புகளை ஏவிப் புண்படுத்தினர். அவை குன்றத்தில் தங்கும் குருவிக் கூட்டம்போல் சென்று பதிந்தன. அவற்றை வெட்டி*

வீழ்த்தினர்; அவ் யானைகளின் துதிக்கைகள் துணிபட்டுத் தரையில் கிடந்தன. வாயொடு அத் துதிக்கைகள் விழுந்தன. அவை கலப்பை போல் இருந்தன.

களிறுகளை எறிந்து உனக்காகப் போர் செய்த வீரர்கள் பலர் உயிர் இழந்தனர். அவர்தம் உடல் துணிபட்டு அவை சிதைவு பெற்றுள்ளன.

அவற்றைக் கண்டு அவர்தம் தாய்மார்கள் உவகைக் கண்ணீர் விட்டனர். கூற்றுவனும் நாணி அவர்கள்பால் இரக்கம் காட்டினான்.

அவ் ஏழு மன்னரைக் கொன்று நீ பெற்ற வெற்றி என்னை அளவற்ற மகிழ்வில் ஆழ்த்துகிறது. உன் வீர மார்பினைத் தழுவி மகிழ்வு கொள்ள விரும்புகிறேன்.

புலியைப் பிடிக்க வைக்கப்படும் கற்சிறை போன்றது உன் வலிமை மிக்க மார்பு என மதித்து அதனைத் தழுவி யான் மகிழ்வு கொண்டேன்.

இமிழ் கடல் வளைஇய ஈண்டு அகல் கிடக்கைத்,
தமிழ் தலைமயங்கிய தலையாலங்கானத்து,
மன் உயிர்ப் பன்மையும், கூற்றுத்து ஒருமையும்,
நின்னொடு தூக்கிய வென் வேற் செழிய!
'இரும் புலி வேட்டுவன் பொறி அறிந்து மாட்டிய
பெருங் கல் அடாரும் போன்ம்' என விரும்பி,
முயங்கினேன் அல்லனோ, யானே - மயங்கிக்
குன்றத்து இறுத்த குரீஇ இனம் போல,
அம்பு சென்று இறுத்த அரும் புண் யானைத்
தூம்புடைத் தடக் கை வாயொடு துமிந்து,
நாஞ்சில் ஒப்ப, நிலம் மிசைப் புரள,
எறிந்து களம் படுத்த ஏந்து வாள் வலத்தர்
எந்தையொடு கிடந்தோர், எம் புன் தலைப் புதல்வர்;
'இன்ன விறலும் உளகொல், நமக்கு?' என,
மூதிற் பெண்டிர் கசிந்து அழ, நாணிக்
கூற்றுக் கண்ணோடிய வெருவரு பறந்தலை,
எழுவர் நல் வலம் கடந்தோய்! நின்
கழூஉ விளங்கு ஆரம் கவைஇய மார்பே?

திணை - வாகை; துறை - அரச வாகை.

அவனை அவர் பாடியது.

# 20. சேரமான் யானைக் கண்சேய் மாந்தரஞ் சேரல் இரும்பொறை

ஆழநீர்க் கடலையும், நீண்ட நிலப்பரப்பையும் காற்று, இயங்கும் திசைகளையும், வெற்று இடம் ஆகிய ஆகாயத்தையும் அளந்து அறியவும் செய்யலாம். ஆனால் உன் அறிவையும், அன்பின் திறத்தையும், இரக்க உணர்வையும் அளக்க இயலாது.

நின் குடிமக்கள் அடுப்பு எரிவிக்கும் தீ, சூரியனின் வெப்பம் ஆகிய இவற்றைத்தாம் அறிவர். மற்று எந்தக் கொடுமையையும் அவர்கள் அறியமாட்டார்கள்.

வில் என்றால் அவர்கள் அறிவது வானவில்தான். கொலை செய்யும் வில் அதனை அவர்கள் கண்டது இல்லை. பகைவர்கள் போர் தொடுத்து அவர்கள் கண்டது இல்லை.

ஏர் உழும் கலப்பையை மட்டும் அறிந்துள்ளனர். மற்றும் பகைவர் தம் படைக்கலம் யாதும் அவர்கள் அறிந்தது இல்லை.

நீ பிறர் மண்ணைக் கவர்ந்து உள்ளாய்; பிற நாட்டினர் உன் நாட்டில் அடி எடுத்து வைத்ததும் இல்லை. உன் நாட்டு வயவுறு மகளிர்தாம் உன் மண்ணை உண்பர்; பகைவர் மண்ணைத் தொட்டது இல்லை.

வீரம் அதன் அறிகுறியாக உன் அரண்களில் அம்புகள் வைக்கப்பட்டுள்ளன. அறம் அது உன் செங்கோலில் காண முடிகிறது.

புதுப் பறவைகள் வருதலும், பழைய பறவைகள் வெளி யேறிச் செல்லுதலும் நிகழலாம். கால மாற்றம்; அதனால் எந்தக் கேடும் உன் நாட்டில் நிகழாவண்ணம் நீ காத்தல் செய்கிறாய்.

நாட்டு மக்கள் நின்பால் நேசம் காட்டுவர். உன் நல் வாழ்வுக்கு வாழ்த்துக் கூறுகின்றனர்.

இரு முந்நீர்க் குட்டமும்,
வியல் ஞாலத்து அகலமும்,
வளி வழங்கு திசையும்,
வறிது நிலைஇய காயமும், என்றாங்கு
அவை அளந்து அறியினும், அளத்தற்கு அரியை,

அறிவும், ஈரமும், பெருங் கண்ணோட்டமும்:
சோறு படுக்கும் தீயோடு
செஞ் ஞாயிற்றுத் தெறல் அல்லது
பிறிது தெறல் அறியார், நின் நிழல் வாழ்வோரே;
திருவில் அல்லது கொலை வில் அறியார்;
நாஞ்சில் அல்லது படையும் அறியார்;
திறன் அறி வயவரொடு தெவ்வர் தேய, அப்
பிறர் மண் உண்ணும் செமமல்! நின் நாட்டு
வயவுறு மகளிர் வேட்டு உணின் அல்லது,
பகைவர் உண்ணா அரு மண்ணினையே;
அம்பு துஞ்சும் கடி அரணால்,
அறம் துஞ்சும் செங்கோலையே;
புதுப் புள் வரினும், பழம் புள் போகினும்,
விதுப்புறவு அறியா ஏமக் காப்பினை;
அனையை ஆகன்மாறே,
மன் உயிர் எல்லாம் நின் அஞ்சும்மே.

திணையும் துறையும் அவை.

சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரல் இரும்பொறையைக் குறுங்கோழியூர் கிழார் பாடியது.

# 21. கானப் பேரெயில் கடந்த உக்கிரப் பெருவழுதி

*புலவர் நாவுக்கு எட்டாத புகழ்படைத்தவன் நீ! கானப் பேரெயிலை நீ கைப்பற்றியுள்ளாய். அது ஆழமான அகழியையும், உயரமான மதிலையும், அம்பு எய்யும் அறைகளையும், அடர்த்தி யான காவல் காடுகளையும் உடையது. மற்றும் அதனைச் சுற்றிப் படை வீடுகளும் அமைக்கப்பட்டு உள்ளன. இவ்வளவு அரண்கள் இருந்தும் அப்பேரெயிலை நீ வேங்கை மார்பனிடமிருந்து அகப்படுத்திக் கொண்டாய்.*

*இனி அவனால் அதனைத் திரும்பிப் பெற இயலாது. கொல்லன் காய்ச்சும் இரும்பில் அவன் சொரியும் நீர் மீட்டற்கு அரிது. அது போன்ற நிலைதான் இது என்பதை அவன் அறிந்துள்ளான். அதற்காக அவன் பெரிதும் வருந்துகின்றவன் ஆகின்றான்.*

புலவர்கள் நாளும் உன் வெற்றிகளைச் சிறப்பித்துப் பாடுவர். உன்னை இகழ்பவர் உன்னோடு மோதி அழிவர். நீ வெற்றிகள் பெறுக! உன்வேல் பொலிவு பெற்றுச் சிறப்பதாக.

புலவரை இறந்த புகழ்சால் தோன்றல்!
'நில் வரை இறந்த குண்டு கண் அகழி,
வான் தோய்வு அன்ன புரிசை, விசும்பின்
மீன் பூத்தன்ன உருவ ஞாயில்,
கதிர் நுழைகல்லா மரம் பயில் கடி மிளை,
அருங் குறும்பு உடுத்த கானப்பேர் எயில்,
கருங்கைக் கொல்லன் செந் தீ மாட்டிய,
இரும்பு உண் நீரினும், மீட்டற்கு அரிது என,
வேங்கை மார்பன் இரங்க, வைகலும்
ஆடு கொளக் குழைந்த தும்பைப் புலவர்
பாடுதுறை முற்றிய, கொற்ற வேந்தே!
இகழுநர் இசையொடு மாயப்
புகழொடு விளங்கிப் பூக்க, நின் வேலே!

திணையும் துறையும் அவை.

கானப்பேர் எயில் கடந்த உக்கிரப் பெருவழுதியை ஐயூர் மூலங் கிழார் பாடியது.

## 22. சேரமான் யானைக் கட்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை

போரை முடித்துப் பாசறையில் வெற்றிவிழா எடுக்கிறாய். உன் யானைகள் போர் இன்றிக் கட்டுத் தறியில் அசைந்து கொண்டு இருக்கின்றன. வீரர்கள் வாளை எடுத்து வைத்துவிட்டு உறங்கு கின்றனர்; வீரர்கள் வேறுவேறாகக் கூரைகள் உடைய பாடி வீடுகளில் தங்கி உள்ளனர். அவர்கள் வெற்றி பெற்ற மகிழ்ச்சியில் குரவை எடுத்து ஆரவாரம் செய்கின்றனர்.

போர் செய்து பகைவர் நாட்டில் இருந்து கொண்டு வந்த பொருளை உன்னை நாடிவரும் இரவலர்க்கு வாரி வழங்குகிறாய். பாசறையில் அவர்களுக்கு வேண்டும் சிறப்புகளைச் செய்கிறாய்.

கொல்லி என்னும் ஊருக்குத் தலைவனே! நின் செல்வம் அளவற்றது; உன்னைப் பாடும் புலவர்க்கு வாரி வழங்குகிறாய்;

உன்னிடம் பரிசு பெறுபவர் வேறு இடம் செல்ல நினைப்பது இல்லை.

நீ காக்கும் நாடு தேவர் உலகத்திலும் சிறந்தது என்று சொல்லக் கேட்டேன். உன்னைக் காண வந்துள்ளேன்.

நீ மேலும் பலபோர்கள் நடத்திப் புகழ் பெறுக; வீரர்களுக்குச் சோறு தந்து உன் படை வீரர்கள் மேலும் செயல்பட ஊக்குவிப்பாயாக!

தூங்கு கையான் ஓங்கு நடைய,
உறழ் மணியான் உயர் மருப்பின,
பிறை நுதலான் செறல் நோக்கின,
பா அடியான் பணை எருத்தின,
தேன் சிதைந்த வரை போல,
மிஞிறு ஆர்க்கும் கமழ் கடாத்து,
அயறு சோரும் இருஞ் சென்னிய,
மைந்து மலிந்த மழ களிறு
கந்து சேர்பு நிலைஇ வழங்கப்
பாஅல் நின்று கதிர் சோரும்
வான் உறையும் மதி போலும்
மாலை வெண் குடை நீழலான்,
வாள் மருங்கு இலோர் காப்பு உறங்க;
அலங்கு செந்நெற் கதிர் வேய்ந்த
ஆய் கரும்பின் கொடிக் கூரை,
சாறு கொண்ட களம் போல,
வேறு வேறு பொலிவு தோன்றக்
குற்று ஆனா உலக்கையால்
கலிச் சும்மை வியல் ஆங்கண்,
பொலந் தோட்டுப் பைந் தும்பை
மிசை அலங்கு உளையப் பனைப் போழ் செரீஇச்
சின மாந்தர் வெறிக் குரவை
ஓத நீரின் பெயர்பு பொங்க;
வாய் காவாது பரந்து பட்ட
வியன் பாசறைக் காப்பாள!
வேந்து தந்த பணி திறையான்
சேர்ந்தவர்தம் கடும்பு ஆர்த்தும்,
ஓங்கு கொல்லியோர், அடு பொருந!

வேழ நோக்கின் விறல் வெஞ் சேஎய்!
வாழிய, பெரும! நின் வரம்பு இல் படைப்பே,
நின் பாடிய அலங்கு செந்நாப்
பின் பிறர் இசை நுவலாமை,
ஓம்பாது ஈயும் ஆற்றல் எம் கோ!
'மாந்தரஞ்சேரல் இரும்பொறை ஓம்பிய நாடே
புத்தேள் உலகத்து அற்று' எனக் கேட்டு வந்து,
இனிது கண்டிசின்; பெரும! முனிவு இலை,
வேறு புலத்து இறுக்கும் தானையொடு!
சோறு பட நடத்தி-நீ துஞ்சாய்மாறே!

திணையும் துறையும் அவை; துறை - இயன்மொழியும் ஆம்.

சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறையைக் குறுங் கோழியூர் கிழார் பாடியது.

# 23. பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்

*''களிறுகள் நீர்த்துறைகளைக் கலக்கின; முருகனது கூனிகள் போலச் சீற்றம் மிக்க வீரர்கள் கழனிகளில் புகுந்து கொள்ளை அடித்தனர். அவர்கள் காவல் மரத்தினை வெட்டிச் சிதைத்தனர்; எரியிட்டு ஊரைக் கொளுத்தினர். அழிவுகள் பலவும் செய்துள்ள னர். இன்னும் இவற்றைப் போல் அழிவுகளைச் செய்வர் உன் வீரர்கள்; துணிவு மிக்கவன் நீ என்று யாவரும் அஞ்சும்படி படைகளைக் கொண்டு தலையாலங் கானத்தில் போர் செய்து வென்றனை; கூற்றுவன் அனைய ஆற்றல் உடைய உன்னைக் காண வந்துள்ளேன்.*

*மருப்பு அறுபட்ட ஆண்மான் அது புலியின் தாக்குதலால் அதற்கு இரையாகிறது. அதனைக் கண்டு இனி இங்கு வாழக் கூடாது என்பதால் உயிர் தப்பத் தன் குட்டியோடு பெண் மான் தெறிக்கத் தெறிக்க ஓடிப் பூளைச் செடி நீடிய பாழிடத்துக்குச் செல்கிறது. அங்கே வேளைச் செடியில் வெண் பூவைக் கறிக்கிறது. அத்தகைய ஆள் வழக்கு அற்ற காட்டு வழியைக் கடந்து யான் வந்திருக்கிறேன்.*

'வெளிறு இல் நோன் காழ்ப் பணை நிலை முனைஇக்
களிறு படிந்து உண்டெனக் கலங்கிய துறையும்;
கார் நறுங் கடம்பின் பாசிலைத் தெரியல்,
சூர் நவை, முருகன் சுற்றத்து அன்ன, நின்
கூர் நல் அம்பின் கொடு வில் கூளியர்
கொள்வது கொண்டு, கொள்ளா மிச்சில்
கொள் பதம் ஒழிய வீசிய புலனும்;
வடி நவில் நவியம் பாய்தலின், ஊர்தொறும்
கடிமரம் துளங்கிய காவும் நெடுநகர்
வினை புனை நல்இல் வெவ் எரி நைப்ப,
கனை எரி உரறிய மருங்கும்; நோக்கி,
நண்ணார் நாண, நாள்தொறும் தலைச் சென்று,
இன்னும் இன்ன பல செய்குவன், யாவரும்
துன்னல் போகிய துணிவினோன்' என,
ஞாலம் நெளிய ஈண்டிய வியன் படை
ஆலங்கானத்து அமர் கடந்து அட்ட
கால முன்ப! நிற் கண்டனென் வருவல்-
அறு மருப்பு எழிற் கலை புலிப்பால் பட்டெனச்
சிறு மறி தழீஇய தெறிநடை மடப் பிணை
பூளை நீடிய வெருவரு பறந்தலை
வேளை வெண் பூக் கறிக்கும்
ஆள் இல் அத்தம் ஆகிய காடே.

திணையும் துறையும் அவை; துறை - நல்லிசை வஞ்சியும் ஆம்.

பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனைக் கல்லாடனார் பாடியது.

# 24. பாண்டியன் தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழியன்

*நெற் கதிர்களை அரியும் உழவர்கள் வெய்யிலை வெறுத்தால் கடலில் பாய்ந்து ஆடுவர். பரதவர்கள் கள் குடித்துவிட்டுக் குரவை ஆடி மகிழ்வர். இளைஞர்கள் புன்னை மலர் பறித்து அவற்றைச் சூடிக் கொண்டு கன்னி இளம் பெண்டிரோடு கைகோத்து மகிழ்வர். பெண்கள் பனம்நுங்கு நீர், தென்னை இளநீர், கருப்பஞ்சாறு இவற்றைப் பருகிப் பின்*

கடலில் பாய்ந்து விளையாடுவர். இத்தகைய மகிழ்வுமிக்க நல்லூர்கள் கொண்டது மிழலைக் கூற்றம். அது எவ்வி என்பானுக்கு உரியது. அதனையும் வேளிர்கள் ஆண்ட முத்தூறு என்னும் கூற்றம் இவை இரண்டையும் வெற்றி கொண்டவன் நீ!

புகழ்மிக்க வாழ்வு உனக்கு அமைவதாக! வீரர்கள் உன்தாளினை வாழ்த்தவும், மகளிர் பொன் கலத்தில் கள்வார்த்துக் கொடுக்க அதனைப் பருகி இன்புற்றும் வாழ்வாயாக. இரவலர்க்கு ஈந்து நற்புகழ் பெறுக. பீடும் பெருமையும் மிக்க வாழ்வு உனது; இது மதிக்கப்படுவது ஆகும்; வாழ்க்கை என்பது புகழொடு வாழ்வது ஆகும். மற்றையோர் வாழ்ந்தாலும் அவர்கள் வாழ்ந்தவர் என்று மதிக்கப்படமாட்டார்கள்.

நெல் அரியும் இருந் தொழுவர்
செஞ் ஞாயிற்று வெயில் முனையின்,
தெண் கடல் திரை மிசைப் பாயுந்து;
திண் திமில் வன் பரதவர்
வெப்பு உடைய மட்டு உண்டு,
தண் குரவைச் சீர் தூங்குந்து;
தூவற் கலித்த தேம் பாய் புன்னை
மெல் இணர்க் கண்ணி மிலைந்த மைந்தர்
எல் வளை மகளிர்த் தலைக் கை தரூஉந்து;
வண்டு பட மலர்ந்த தண் நறுங் கானல்
முண்டகக் கோதை ஒண் தொடி மகளிர்
இரும் பனையின் குரும்பை நீரும்,
பூங் கரும்பின் தீம் சாறும்,
ஓங்கு மணற் குவவுத் தாழைத்
தீம் நீரோடு உடன் விரா அய்,
முந் நீர் உண்டு முந்நீர்ப் பாயும்
தாங்கா உறையுள் நல் ஊர் கெழீஇய
ஓம்பா ஈகை மா வேள் எவ்வி
புனல் அம் புதவின் மிழலையொடு - கழனிக்
கயல் ஆர் நாரை போர்வில் சேக்கும்,
பொன் அணி யானைத் தொல் முதிர் வேளிர்,
குப்பை நெல்லின், முத்தூறு தந்த
கொற்ற நீள் குடைக், கொடித் தேர்ச் செழிய!
நின்று நிலைஇயர் நின் நாள்மீன்; நில்லாது

படாஅச் செலீஇயர், நின் பகைவர் மீனே-
நின்னொடு, தொன்று மூத்த உயிரினும், உயிரொடு
நின்று மூத்த யாக்கை அன்ன, நின்
ஆடு குடி மூத்த விழுத் திணைச் சிறந்த
வாளின் வாழ்நர் தாள் வலம் வாழ்த்த,
இரவல் மாக்கள் ஈகை நுவல'
ஒண் தொடி மகளிர் பொலங்கலத்து ஏந்திய
தண் கமழ் தேறல் மடுப்ப, மகிழ் சிறந்து,
ஆங்கு இனிது ஒழுகுமதி, பெரும! ஆங்கு அது
வல்லுநர் வாழ்ந்தோர் என்ப- தொல் இசை,
மலர் தலை உலகத்துத் தோன்றிப்
பலர், செலச் செல்லாது, நின்று விளிந்தோரே,

திணை - பொதுவியல்; துறை - பொருண்மொழிக் காஞ்சி.
அவனை மாங்குடி கிழார் பாடியது.

## 25. பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்

வானத்து இயங்கும் ஞாயிறும் திங்களும் ஒன்று சேர்ந்து நிலத்தின்கண் வருவதுபோல் இணைந்த சோழனையும் சேரனையும் எதிர்த்துப் போர்க்களத்தில் வீழ்த்தினாய்; அவர்கள் தம் முரசினைக் கைக் கொண்டாய்.

இப்போரில் இறந்துபட்ட வீரர்கள் அவர்களை இழந்த மகளிர் கைம்மை ஏற்றுக் கதறி அழுத அழுகையும், தலைமுடி களைந்த கைம்மைநிலையும் உன்னை மாற்றிவிட்டன. அதனால் மேலும் தொடராமல் போரை நிறுத்தி உள்ளாய்; இரக்க உணர்வு உன்னைத் தடுத்து நிறுத்தியுள்ளது.

மீன் திகழ் விசும்பில் பாய் இருள் அகல
ஈண்டு செலல் மரபின் தன் இயல் வழாஅது,
உரவுச் சினம் திருகிய உரு கெழு ஞாயிறு,
நிலவுத் திகழ் மதியமொடு, நிலம் சேர்ந்தா அங்கு,
உடல் அருந் துப்பின் ஒன்றுமொழி வேந்தரை
அணங்கு அரும் பறந்தலை உணங்கப் பண்ணிப்
பிணியுறு முரசம் கொண்ட காலை,

நிலை திரிபு எறியத் திண் மடை கலங்கிச்
சிதைதல் உய்ந்தன்றோ, நின் வேல்-செழிய!-
முலை பொலி ஆகம் உருப்ப நூறி,
மெய்ம் மறந்து பட்ட வரையாப் பூசல்
ஒள் நுதல் மகளிர் கைம்மை கூர,
அவிர் அறல் கடுக்கும் அம் மென்
குவை இருங் கூந்தல் கொய்தல் கண்டே.

திணை வாகை; துறை - அரச வாகை.

அவனைக் கல்லாடனார் பாடியது.

## 26. பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்

காற்றுக்கு அசையும் மரக்கலம் நீரைக் கிழித்துச் செல்வதைப் போல் உன் யானைகள் களம் சென்று வீரர்களை ஓட்ச் செய்தன. பகை அரசர்களை நீ வெற்றி கொண்டு அவர்கள் முரசினைக் கைக் கொண்டாய்; மற்றும் அவர்கள் தலைகளை அடுப்பாகவும், குருதியைப் புனலாகவும் உலையேற்றித் தசையையும், மூளையையும் அரிசியாக இட்டு அவர்கள் தோள்களைத் துடுப்பாகக் கொண்டு துழாவிக் கள வேள்வி செய்தனை.

போரில் வெற்றி கண்ட செழியனே! நகரின்கண் வேதியர்களைக் கொண்டு அவர்கள் தலைமையில் யாகவேள்விகள் நடத்தினை; தோற்ற அரசர்கள் ஏவல் செய்தனர். வேள்வி பல செய்து முற்றுவித்தாய்.

வேள்வி முற்றிய வேந்தனே! பகைவர்கள் நின்னிடம் தோற்றார்கள்; எனினும் அவர்கள் ஏற்றம் பெற்றவர் ஆயினர். உன்னை எதிர்த்ததால் அவர்கள் உயர்வு பெற்றனர். அவர்களும் பாராட்டப்படுபவர் ஆயினர்.

நளி கடல் இருங் குட்டத்து
வளி புடைத்த கலம் போலக்
களிறு சென்று களன் அகற்றவும்,
களன் அகற்றிய வியல் ஆங்கண்
ஒளிறு இலைய எஃகு ஏந்தி,

அரைசு பட அமர் உழக்கி,
உரை செல முரசு வெளவி,
முடித் தலை அடுப்பு ஆகப்
புனற் குருதி உலைக் கொளீஇத்
தொடித் தோள் துடுப்பின் துழந்த வல்சியின்,
அடுகளம் வேட்ட அடு போர்ச் செழிய!
ஆன்ற கேள்வி, அடங்கிய கொள்கை,
நான் மறை முதல்வர் சுற்றம் ஆக,
மன்னர் ஏவல் செய்ய, மன்னிய
வேள்வி முற்றிய வாய் வாள் வேந்தே!
நோற்றோர் மன்ற - நின் பகைவர், நின்னொடு
மாற்றார் என்னும் பெயர் பெற்று,
ஆற்றார் ஆயினும், ஆண்டு வாழ்வோரே.

திணையும் துறையும் அவை.
அவனை மாங்குடி கிழார் பாடியது.

## 27. சோழன் நலங்கிள்ளி

*சேற்றில் தோன்றும் தாமரை அவற்றின் இலைகள் பலவும் உதிர்வதுபோல் உயர்குடியில் பிறந்தவர் பலரும் பெயரும் புகழும் இன்றி மறைந்து விடுகின்றனர். அவர்களுள் ஒருசிலரே புலவர் பாடும் புகழைப் பெறுகின்றனர்; பாராட்டப்படுகின்றனர்.*

*அத்தகைய புகழ்மிக்க வாழ்க்கை வாழ நீ முற்படுவாயாக.*

*புலவர் பாடும் புகழ் உடையவர் மறுமையில் துறக்க வாழ்வைப் பெறுவர். திங்களின் தேய்வும், மறைவும் நிலை யாமையை உணர்த்துகின்றன. பிறந்தவர் அனைவரும் இறப்பது உறுதி. நிலையாமையை உணர்ந்து வருந்தி வந்தோர்க்கு அவர்கள் யார் எத்தகையவர் என்று பேதம் பாராமல் உணவு அருந்தச் செய்க; அருள் உள்ளம் உன்பால் நிலவுவதாக.*

*செல்வம் மிக்குப் பிறர் அல்லல் தீர்க்கும் ஈகை அதனால் வரும் புகழ் உன்பால் நிலவுவதாக!*

*உன் பகைவர்கள் கொடைத்திறன் வாய்க்காமல் தேய்ந்து அழிவு எய்துவாராக.*

சேற்று வளர் தாமரை பயந்த, ஒண் கேழ்,
நூற்று இதழ் அலரின் நிரை கண்டன்ன,
வேற்றுமை இல்லா விழுத் திணைப் பிறந்து,
வீற்றிருந்தோரை எண்ணுங்காலை,
உரையும் பாட்டும் உடையோர் சிலரே;
மரை இலை போல மாய்ந்திசினோர் பலரே;
'புலவர் பாடும் புகழுடையோர் விசும்பின்
வலவன் ஏவா வான ஊர்தி
எய்துப என்ப, தம் செய் வினை முடித்து' எனக்
கேட்பல்; எந்தை! சேட்சென்னி! நலங்கிள்ளி!
தேய்தல் உண்மையும், பெருகல் உண்மையும்,
மாய்தல் உண்மையும், பிறத்தல் உண்மையும்,
அறியாதோரையும் அறியக் காட்டித்
திங்கட் புத்தேள் திரிதரும் உலகத்து,
வல்லார்ஆயினும், வல்லுநர் ஆயினும்,
வருந்தி வந்தோர் மருங்கு நோக்கி,
அருள, வல்லை ஆகுமதி; அருள் இலர்
கொடாஅமை வல்லர் ஆகுக;
கெடாஅத் துப்பின் நின் பகை எதிர்ந்தோரே.

திணை - பொதுவியல்; துறை - முதுமொழிக்காஞ்சி. சோழன் நலங்கிள்ளியை உறையூர் முதுகண்ணன் சாத்தனார் பாடியது.

## 28. சோழன் நலங்கிள்ளி

குருடு, தசைப்பிண்டம், கூன், குள்ளம், ஊமை, செவிடு, விலங்கு வடிவு, மந்தபுத்தி இவை குறைப் பிறவிகள்; இவற்றால் எந்த நன்மையும் விளைவது இல்லை. பேதைமை உடையவை; இவை நீங்கிப் பிறப்பது உயர் பேறு ஆகும். மானிடப் பிறவி இதனை நன்கு பயன்படுத்துவது அறிவுடைமை ஆகும். இதனை நம் முன்னோர் அறிவித்துள்ளனர்.

உன் பகை நாட்டவர் வளம் குன்றிய வாழ்க்கை உடையவர். சேவற்கோழி தினை காப்பவரைக் கூவித் துயில் எழுப்பும் கடுங்குரல்தான் அங்குக் கேட்க முடியும். அத்தகைய வன்புலக் காட்டின்கண் வாழ்பவர் நின் பகைவர்.

வேலிக்குப் புறம்பே நின்று வேண்டுவார்க்குக் கரும்பினை அகத்தே உள்ளவர் பிய்த்து எறிவர். அதனால் தாமரை மலர்கள் சிதைவு பெறும்; அது கூத்தர் ஆடும் களனை ஒத்து இருக்கிறது.

*அத்தகைய வளம்மிக்க வயல்கள் உடைய மருத நிலங்களை நீ பெற்றிருக்கிறாய்.*

*அறம் செய்து மேன்மை அடைவதற்கு உனக்கு வாய்ப்புகள் உள்ளன; வளமும் உள்ளது. அதனால் உன் செல்வத்தைக் கொண்டு அறம், பொருள், இன்பம் இப் பேறுகளைப் படைத்துக் கொள்க. இவற்றை நீ அடைய முயலாவிட்டால் நீ பெற்றுள்ள செல்வம் பயனற்றதாகிவிடும். நீ உன்னைப் போற்றிக் கொள்ளாமை ஆகிவிடும்.*

'சிறப்பு இல் சிதடும், உறுப்பு இல் பிண்டமும்,
கூனும், குறளும், ஊமும், செவிடும்,
மாவும், மருளும், உளப்பட வாழ்நர்க்கு
எண் பேர் எச்சம் என்று இவை எல்லாம்
பேதைமை அல்லது ஊதியம் இல்' என,
முன்னும் அறிந்தோர் கூறினர்; இன்னும்,
அதன் திறம் அத்தை யான் உரைக்க வந்தது-
வட்ட வரிய செம் பொறிச் சேவல்
ஏனல் காப்போர் உணர்த்திய கூஉம்
கானத்தோர், நின் தெவ்வர்; நீயே,
புறஞ்சிறை மாக்கட்கு அறம் குறித்து, அகத்தோர்
புய்த்து எறி கரும்பின் விடு கழை தாமரைப்
பூம் போது சிதைய வீழ்ந்தெனக் கூத்தர்
ஆடு களம் கடுக்கும் அக நாட்டையே;
அதனால், அறனும் பொருளும் இன்பமும் மூன்றும்
ஆற்றும், பெரும! நின் செல்வம்;
ஆற்றாமை நின் போற்றாமையே.

திணையும் துறையும் அவை.
அவனை அவர் பாடியது.

## 29. சோழன் நலங்கிள்ளி

*தினமும் நாள் மகிழ் இருக்கையில் நீ பாணர்க்குப் பொற்றாமரை தந்து சிறப்புச் செய்க.*

*நாள் மகிழ் அவையில் பாணரைவிட்டு நீங்கிப் பின் நின் உரிமை மகளிரைத் தழுவி மகிழ்க; இன்ப வாழ்வு இனியவதாக.*

அடுத்து முரசு இயம்பும் உன் முற்றத்தின்கண் அமர்ந்து குற்றம் செய்தவரை ஒறுத்தும், நல்லவர்களுக்கு நன்மைகள் செய்தும் நாள் ஓலக்கம் நடத்துக.

நல்லது தீது என்ற வேறுபாடு பாராமல் நல்லொழுக்கத்தைக் கைவிடும் கீழ்மையர்தம் உறவினைக் கொள்ளற்க.

கழனிகளில் பறவைகளை ஓட்டும் உழவர்கள் மீனும் கள்ளும் தெங்கிளநீரும் உண்டு மகிழும் வளம் மிக்க நாடுகளை உன் படைத் தலைவர்களுக்கு வழங்கி அவர்களைச் செல்வம் உடையவராக ஆக்குக. அவர்கள்பால் வரும் வறியவர்க்குப் பொருள் வழங்கி உதவ நீ அவர்கள் வாழ்க்கையை வளமுடையது ஆக்குக.

இவ் உலக வாழ்க்கை ஒரு நாடக மேடை போன்றது. இன்று அதில் பங்கு கொள்ளும் கூத்தர் மறுநாள் வருவது இல்லை; மாறிக் கொண்டே இருப்பர். நம் நிலையும் இவ்வாறே மாறி மாறி அமைவது ஆகும்.

உளநாள் சில; அவற்றை வளநாளாகக் கொள்க. உன் சுற்றத்தவரை மகிழ்வுபடுத்துக. அவர்கள் வாழ்க்கை மலர்ச்சி பெற உதவுக. நீ ஈட்டிய பொருள் புகழ் நாட்டுதற்குப் பயன்படுவதாக.

அழல் புரிந்த அடர் தாமரை
ஐது அடர்ந்த நூற் பெய்து,
புனை வினைப் பொலிந்த பொலன் நறுந் தெரியல்
பாறு மயிர் இருந் தலை பொலியச் சூடிப்
பாண் முற்றுக, நின் நாள் மகிழ் இருக்கை!
பாண் முற்று ஒழிந்த பின்றை, மகளிர்
தோள் முற்றுக, நின் சாந்து புலர் அகலம்! ஆங்க
முனிவு இல் முற்றத்து, இனிது முரசு இயம்பக்
கொடியோர்த் தெறுதலும், செவ்வியோர்க்கு அளித்தலும்,
ஒடியா முறையின் மடிவு இலை ஆகி,
'நல்லதன் நலனும் தீயதன் தீமையும்
இல்லை' என்போர்க்கு இனன் ஆகிலியர்!
நெல் விளை கழனிப் படு புள் ஓப்புநர்
ஒழி மடல் விறகின் கழி மீன் சுட்டு,
வெங் கள் தொலைச்சியும், அமையார், தெங்கின்

இளநீர் உதிர்க்கும் வளம் மிகு நல் நாடு
பெற்றனர் உவக்கும் நின் படை கொள் மாக்கள்
பற்றா மாக்களின் பரிவு முந்துறுத்துக்
கூவை துற்ற நாற் கால் பந்தர்ச்
சிறு மனை வாழ்க்கையின் ஒரீஇ, வருநர்க்கு
உதவி ஆற்றும் நண்பின் பண்புடை
ஊழிற்றாக, நின் செய்கை! விழவில்
கோடியர் நீர்மை போல முறைமுறை
ஆடுநர் கழியும் இவ் உலகத்துக் கூடிய
நகைப்புறன் ஆக, நின் சுற்றம்!
இசைப்புறன் ஆக, நீ ஒம்பிய பொருளே!

திணையும் துறையும் அவை.
அவனை அவர் பாடியது.

## 30. சோழன் நலங்கிள்ளி

கதிரவன் இயக்கம், அதன் சூழ்வட்டம், அவ்வட்டத்தைச் சூழ்ந்துள்ள பல்வேறு மண்டிலங்கள், காற்று இயங்கும் திசைகள் வெற்று இடமாகிய ஆகாயம் ஆகிய இவற்றைத்தாம் நேரில் சென்று அளந்து அறிந்தவர்போல அறிந்து கூறுபவரும் உள்ளனர்.

அத்தகைய ஆற்றல்மிக்க அவ் அறிஞர்களாலும் அறிந்து கூறமுடியாதபடி உள் செறிவினை உடையவனாக விளங்குகிறாய். யானை தன் கவுளில் ஒடுக்கி எறிவதற்கு என்று கல்லை மறைத்து வைத்து உள்ளது. அது பிறர்க்குப் புலப்படாது; அதுபோல் உன் வலிமை வெளிக்காட்டாது அடக்கி வைத்துள்ளாய்; வேண்டும்போது அது வெளிப்படும் இயல்பினது. அதனால் உன்னைப் புலவர்கள் எவ்வாறு பாடுவது? அவர்களாலும் முற்றும் அறிந்து மொழிய இயலாத நிலையில் உள்ளாய்.

உன் நாடு வணிகவளம் மிக்கது ஆகும். உன் துறைமுகம் ஆகிய புகாரில் நுழையும் மரக்கலங்கள் பாய்மரத்தோடும் கூம்போடும் உள்புக அவற்றில் உள்ள பண்டங்களைச் சுமைத் தொழிலர்கள் இறக்கி வைப்பர். அவற்றை இடை நிலத்திலேயே வழியில் குவித்து வைப்பர். அத்தகைய கடல் வணிகம் உள்ள நாடு உன் நாடு ஆகும்.

செஞ் ஞாயிற்றுச் செலவும்,
அஞ் ஞாயிற்றுப் பரிப்பும்,
பரிப்புச் சூழ்ந்த மண்டிலமும்,
வளி திரிதரு திசையும்,
வறிது நிலைஇய காயமும், என்று இவை
சென்று அளந்து அறிந்தோர் போல, என்றும்
இனைத்து என்போரும் உளரே; அனைத்தும்
அறி அறிவு ஆகாச் செறிவினை ஆகிக்
களிறு கவுள் அடுத்த எறிகற்போல
ஒளித்த துப்பினைஆதலின், வெளிப்பட
யாங்கனம் பாடுவர், புலவர்? கூம்பொடு
மீப் பாய் களையாது, மிசைப் பரம் தோண்டாது,
புகாஅர்ப் புகுந்த பொருங் கலம் தகாஅர்
இடைப் புலப்பெரு வழிச் சொரியும்
கடற் பல் தாரத்த நாடு கிழவோயே!

திணை - பாடாண் திணை; துறை - இயன்மொழி.
அவனை அவர் பாடியது.

## 31. சோழன் நலங்கிள்ளி

பொருளும் இன்பமும் அறத்தை ஒட்டியே அமைகின்றன. அதுபோலச் சேரன் பாண்டியன் இருவர்தம் குடைகளும் உன் குடையை ஒட்டிப் பின்னால் தொடர்கின்றன. உன் குடையே ஓங்கி உள்ளது.

போர் விரும்பி அதனால் கிடைக்கும் புகழ் இதனை அடைய நீ பாசறையை விட்டுவிலகுவது இல்லை.

உன் யானைகள் போர் வெறி கொண்டு ஆவேசத்தோடு பகைவர் மதில்களைத் தாக்குகின்றன.

போர் என்றாலே பெருவிருப்புக் கொள்ளும் உன் வீரர்கள் பகைக்களம் சேய்மையது என்று கூறி மனம் சோர்வு கொள்ளார். அவர்கள் போர் வருவதை ஆவலோடு எதிர் நோக்குகின்றனர்.

போர் முடித்து நீ கீழைக் கடலில் இருந்து மேற்கு நோக்கிச் செல்கிறாய். வெற்றி விழா எடுத்துவிட்டுப் பின் மேற்செலவைத்

*தொடர்கிறாய். எங்கே வடக்கு நோக்கி வருகிறாயோ என்ற அச்சத்தில் வடபுலத்து அரசர்கள் துயில் இழந்து நடுங்கிக் கொண்டு இருக்கின்றனர்.*

சிறப்புடை மரபின் பொருளும் இன்பமும்
அறத்து வழிப்படூஉம் தோற்றம் போல,
இரு குடை பின்பட ஓங்கிய ஒரு குடை,
உரு கெழு மதியின், நிவந்து, சேண் விளங்க,
நல் இசை வேட்டம் வேண்டி, வெல் போர்ப்
பாசறை அல்லது நீ ஒல்லாயே;
நுதிமுகம் மழுங்க மண்டி, ஒன்னார்
கடி மதில் பாயும் நின் களிறு அடங்கலவே;
'போர்' எனின், புகலும் புனை கழல் மறவர்,
'காடு இடைக் கிடந்த நாடு நனி சேஎய;
செல்வேம்அல்லேம்' என்னார்; 'கல்லென்
விழவுடை ஆங்கண் வேற்றுப்புலத்து இறுத்துக்
குண கடல் பின்னது ஆகக், குட கடல்
வெண் தலைப் புணரி நின் மான் குளம்பு அலைப்ப,
வல முறை வருதலும் உண்டு' என்று அலமந்து,
நெஞ்சு நடுங்கு அவலம் பாய,
துஞ்சாக் கண்ண, வட புலத்து அரசே.

திணை - வாகை; துறை - அரச வாகை; மழபுலவஞ்சியும் ஆம்.
அவனைக் கோவூர் கிழார் பாடியது.

## 32. சோழன் நலங்கிள்ளி

*பாணர் சுற்றத்திற்குப் பசிக்கு உணவு என்றால் வஞ்சி நகரையே வழங்கிச் சிறப்புச் செய்வான். விறலிக்குப் பூ விலைக்குப் பெறப் பொருள் தேவை என்றால் மாட மதுரையையே தருவான். யார் எது வேண்டுமானாலும் மறுக்காமல் கொடுப்பான். புலவர்களே வாருங்கள்! வந்து வேண்டிய பரிசில் கேட்டுப் பெற்றுக் கொள்ளுங்கள். அவனைப் பாடுவோமாக.*

*எதையும் தரக் கூடிய வளம் உடையது அவன் நாடு. குயவர் சிறுவர்கள் சுழற்சிச் சக்கரத்தில் களிமண்ணை வைத்து அவர்கள்*

விரும்பும் மண் பாண்டங்களை வனைவர். அதைப்போல் அவன் நாடு விரும்பியது அளிக்கக் கூடிய வளம் உடையது.

கடும்பின் அடுகலம் நிறையாக, நெடுங் கொடிப்
பூவா வஞ்சியும் தருகுவன் ஒன்றோ?
'வண்ணம் நீவிய வணங்கு இறைப் பணைத் தோள்,
ஒள் நுதல், விறலியர் பூவிலை பெறுக!' என,
மாட மதுரையும் தருகுவன்: எல்லாம்
பாடுகம் வம்மினோ, பரிசில் மாக்கள்!
தொல் நிலக் கிழமை சுட்டின், நல் மதி
வேட்கோச் சிறாஅர் தேர்க் கால் வைத்த
பசு மண் குரூஉத் திரள் போல, அவன்
கொண்ட குடுமித்து, இத் தண் பணை நாடே,

திணை - பாடாண்திணை; துறை - இயன்மொழி.
அவனை அவர் பாடியது.

## 33. சோழன் நலங்கிள்ளி

வேட்டுவர் கொண்டு தரும் மான் இறைச்சிக்கும், ஆயர் மகள் கொண்டு தரும் தயிருக்கும் மாறாக உழவர் மகள் வெண்ணெல் முகந்து கொடுக்கிறாள். அத்தகைய வளம் மிக்க நாடு பாண்டிய நாடு.

அந்த நாட்டின் மீது படை எடுத்துச் சென்று அவற்றின் ஏழு மதில்களைக் கைப்பற்றி அவற்றில் உன் புலிச் சின்னத்தைப் பொறிக்கும் ஆற்றல் உன்பால் உள்ளது.

உன் பாசறைகளில் பாடுநர் உன் வெற்றியைப் பாடுகின்றனர். வீரர்கள் பொலிவுடன் திகழ்கின்றனர். இறைச்சி கலந்த சோற்றினைப் பாணர் சுற்றம் அருந்தி மகிழ அவர்களுக்குத் தருகின்றாய். பெருமை மிக்கு விளங்குகிறது உன் பாசறை இருக்கை.

உன் நகரில் அல்லியம் என்னும் கூத்தை ஆடுவோர் போலக் காதல் கொண்ட காதலன் காதலியர் என்னும் இருவரன்றி இரவில் தனியே எந்த ஆடவனும் நடந்து செல்லாத சோலைகளை உடைய ஒதுக்குத் தெருக்களில் மாடந்தோறும் நீ ஆடுகளை வெட்டிப்

*பலியிட்டு விழாக்கள் எடுக்கின்றாய். நீ இவ்வாறு ஊரின் கண் எடுக்கும் விழாக்களை விடப் பாசறையில் எடுக்கும் விழாக்களே மிகுதியாகும்.*

கான் உறை வாழ்க்கை, கத நாய், வேட்டுவன்
மான் தசை சொரிந்த வட்டியும், ஆய்மகள்
தயிர் கொடு வந்த தசும்பும், நிறைய,
ஏரின் வாழ்நர் பேர் இல் அரிவையர்
குளக் கீழ் விளைந்த களக் கொள் வெண்ணெல்
முகந்தனர் கொடுப்ப, உகந்தனர் பெயரும்
தென்னம் பொருப்பன் நல் நாட்டுள்ளும்,
ஏழ் எயிற் கதவம் எறிந்து, கைக்கொண்டு, நின்
பேழ்வாய் உழுவை பொறிக்கும் ஆற்றலை;
பாடுநர் வஞ்சி பாடப் படையோர்
தாது எரு மறுகின் பாசறை பொலியப்
புலராப் பச்சிலை இடை இடுபு தொடுத்த
மலரா மாலைப் பந்து கண்டன்ன
ஊன் சோற்று அமலை பாண் கடும்பு அருத்தும்
செம்மற்று அம்ம, நின் வெம் முனை இருக்கை-
வல்லோன் தைஇய வரி வனப்பு உற்ற
அல்லிப் பாவை ஆடு வனப்பு ஏய்ப்பக்
காம இருவர் அல்லது, யாமத்துத்
தனி மகன் வழங்காப் பனி மலர்க் காவின்,
ஒதுக்குஇன் திணி மணற் புதுப் பூம் பள்ளி
வாயில் மாடந்தொறும் மை விடை வீழ்ப்ப,
நீ ஆங்குக் கொண்ட விழவினும் பலவே.

திணை - வாகை; துறை - அரச வாகை.

அவனை அவர் பாடியது.

## 34. சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன்

*பசுவின் மடியை அறுத்து அதனை மடிவிப்போர், மகளிர் கருச் சிதைத்தோர், தாய் தந்தையரைப் புறக்கணிப்பவர் இவர்களுக்கு எல்லாம் கழுவாய் உண்டு; அவர்கள் தவறுகள் மன்னிக்கப்படும்.*

நன்மை செய்தால் அதை மறப்பவர்க்கு மாற்று உய்வு இல்லை என்று அறநூல்கள் கூறி இருக்கின்றன.

காலையும் மாலையும் வரகுச் சோறு உண்டுவரும் எளியவர்க்கு இலந்தி மன்றத்தில் அன்பு மொழி பேசி அருகிருந்து கறிசோறு உண்பித்து அவர்க்கு வேண்டிய செல்வம் அளித்தவன்; ''எங்கோன் வளவன் வாழ்க'' என்று அவனைச் சிறப்பித்துப் பாடேனாயின் சூரியனும் உதிக்கமாட்டான்.

இவ் உலகத்தில் சான்றோர் செய்த நன்மைகள் நிலைப்பதால் மழை பெய்கிறது; இமயத்தில் பெய்யும் மழைத் துளியினும் நீ பல்லாண்டு வாழ்க என்று வாழ்த்துகிறேன்.

'ஆன் முலை அறுத்த அறனிலோர்க்கும்,
மாண் இழை மகளிர் கருச் சிதைத்தோர்க்கும்,
குரவர்த் தப்பிய கொடுமையோர்க்கும்,
வழுவாய் மருங்கில் கழுவாயும் உள' என,
'நிலம் புடைபெயர்வதுஆயினும், ஒருவன்
செய்தி கொன்றோர்க்கு உய்தி இல்' என,
அறம் பாடிற்றே- ஆயிழை கணவ!
'காலை அந்தியும், மாலை அந்தியும்,
புறவுக் கரு அன்ன புன் புல வரகின்
பால் பெய் புன்கம் தேனொடு மயக்கிக்
குறு முயற் கொழுஞ் சூடு கிழித்த ஒக்கலொடு,
இரத்தி நீடிய அகன் தலை மன்றத்துக்
கரப்பு இல் உள்ளமொடு வேண்டு மொழி பயிற்றி,
அமலைக் கொழுஞ் சோறு ஆர்ந்த பாணர்க்கு
அகலாச் செல்வம் முழுவதும் செய்தோன்,
எம் கோன், வளவன் வாழ்க!' என்று, நின்
பீடு கெழு நோன் தாள் பாடேன் ஆயின்,
படுபு அறியலனே, பல் கதிர்ச் செல்வன்;
யானோ தஞ்சம்; பெரும! இவ் உலகத்துச்
சான்றோர் செய்த நன்று உண்டாயின்,
இமயத்து ஈண்டி, இன் குரல் பயிற்றிக்
கொண்டல் மா மழை பொழிந்த
நுண் பல் துளியினும் வாழிய, பலவே!

திணை - பாடாண் திணை; துறை - இயன்மொழி. சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனை ஆலத்தூர் கிழார் பாடியது.

# 35. சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன்

சேர சோழ பாண்டியர் மூவேந்தர் ஆவர். அவர்களுள் பேரரசு எனப் போற்றப்படுவது நினதே யாகும். அவ்வாறே காவிரி பாயும் சோழ நாடே வளம் மிக்க நாடு என்று போற்றப்படுகிறது.

இந்நாட்டு அரசனாகிய உனக்கு ஒன்று கூற விரும்புகிறேன்.

முறை வேண்டுவோர்க்குக் காட்சிக்கு எளியனாக இருந்து அவர்கள் குறைகளைக் கேட்டு உதவுவது உன் கடமையாகும். மழை வேண்டும்போது பெய்தால் அது மிக்க பயன்தருவது ஆகும். அதுபோல முறை வேண்டும்போதே குறை தீர்ப்பது நன்மை தருவதாகும்.

நீ ஏந்திய வெண் கொற்றக்குடை வெய்யிலைத் தடுப்பதற்கு அன்று; குடிகளின் துயர்களைக் களைவதற்கு ஆகும்.

மற்றும் நீ பெறும் போர் வெற்றிகளுக்கு எல்லாம் அடிப்படை உழவர்தம் உழைப்பும், அவர்கள் தரும் வளனும் ஆகும். உழவர்களைக் காத்து ஓம்புதல் உன் கடமை ஆகும்.

மழை பெய்யாது பொய்த்தாலும், நீர் வெள்ளம் அற்றுவிட்டாலும், இயற்கைக்கு மாறாகக் கேடுகள் நிகழ்ந்தாலும் இவ் உலகம் அரசரைத்தான் பழித்துக் கூறும்.

உன்பால் அக்கறை கொள்ளாது பொறுப்பில்லாமல் பேசுவாரது சொற்களைக் கொள்ளாது உழவர்களை மதித்து அவர்களுக்கு நன்மை செய்தால் நாடு வளம் பெறும்; பகைவர்களும் உன் அடிபணிந்து வழி மொழிவர்.

நளி இரு முந்நீர் ஏணி ஆக,  
வளி இடை வழங்கா வானம் சூடிய  
மண் திணி கிடக்கைத் தண் தமிழ்க் கிழவர்,  
முரசு முழங்கு தானை மூவருள்ளும்,  
அரசு எனப்படுவது நினதே, பெரும!  
அலங்குகதிர்க் கனலி நால்வயின் தோன்றினும்,  
இலங்குகதிர் வெள்ளி தென் புலம் படரினும்,  
அம் தண் காவிரி வந்து கவர்பு ஊட்டத்

தோடு கொள் வேலின் தோற்றம் போல,
ஆடு கண் கரும்பின் வெண் பூ நுடங்கும்
நாடு எனப்படுவது நினதே அத்தை; ஆங்க
நாடு கெழு செல்வத்துப் பீடு கெழு வேந்தே!
நினவ கூறுவல்; எனவ கேண்மதி!-
அறம் புரிந்தன்ன செங்கோல் நாட்டத்து
முறை வேண்டு பொழுதில் பதன் எளியோர் ஈண்டு
உறை வேண்டு பொழுதில் பெயல் பெற்றோரே;
ஞாயிறு சுமந்த கோடு திரள் கொண்மூ
மாக விசும்பின் நடுவு நின்றாங்கு,
கண் பொர விளங்கு நின் விண் பொரு வியன்குடை
வெயில் மறைக் கொண்டன்றோ? அன்றே; வருந்திய
குடி மறைப்பதுவே; கூர்வேல் வளவ!
வெளிற்றுப் பனந் துணியின் வீற்றுவீற்றுக் கிடப்ப,
களிற்றுக் கணம் பொருத கண் அகன் பறந்தலை,
வருபடை தாங்கிப் பெயர் புறத்து ஆர்த்துப்
பொருபடை தரூஉம் கொற்றமும் உழுபடை
ஊன்று சால் மருங்கின் ஈன்றதன் பயனே;
மாரி பொய்ப்பினும், வாரி குன்றினும்,
இயற்கை அல்லன செயற்கையில் தோன்றினும்,
காவலர்ப் பழிக்கும், இக் கண் அகல் ஞாலம்;
அது நன்கு அறிந்தனைஆயின், நீயும்
நொதுமலாளர் பொதுமொழி கொள்ளாது,
பகடு புறந்தருநர் பாரம் ஓம்பிக்
குடி புறந்தருகுவைஆயின், நின்
அடி புறந்தருகுவர், அடங்காதோரே.

திணை - அது; துறை - செவியறிவுறூஉ.

அவனை வெள்ளைக்குடி நாகனார் பாடிப் பழஞ் செய்க்கடன் வீடுகொண்டது.

## 36. சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன்

*பொருநை மணல்மேடுகளில் சிறு பெண்கள் கழங்கு ஆடி மகிழ்வர்; அந்த மணல்மேடுகள் இன்று சிதைந்து சிதறிக் கிடக்கின்றன.*

மற்றும் நகரில் உள்ள சோலைகள்தோறும் கோடரி கொண்டு உன் வீரர்கள் மரங்களை வெட்டி வீழ்த்துகின்றனர். அவற்றை வெட்டும் ஓசையைக் கேட்டும் மதில் சூழ்ந்த அரண்மனையில் இனிது இருக்கிறான் அந்நகர் ஆளும் வேந்தன்.

போர் ஓசை கேட்டும், ஊர் அழிவுகள் அறிந்தும், எதிர்ப்பு இன்றி மக்கள் நலத்தைப் பற்றிக் கருதாமல் ஒதுங்கி வாழ்கிறான். அத்தகைய இழிவுமிக்கவனை எதிர்த்துப் போர் செய்தாய் என்றால் அது உனக்கு நாணத்தைத் தருவதாகும்; இழிவு தரும்.

இனி அவன் மீது போர் தொடுப்பதோ, விடுப்பதோ எது உயர்ச்சியைத் தரும் என்பதை நீ அறிவாய். சிந்தித்துச் செயல்படுக.

அடுநைஆயினும், விடுநைஆயினும்,
நீ அளந்து அறிதி, நின் புரைமை - வார் கோல்,
செறி அரிச் சிலம்பின், குறுந் தொடி மகளிர்
பொலம் செய் கழங்கின் தெற்றி ஆடும்
தண் ஆன்பொருநை வெண் மணல் சிதையக்
கருங் கைக் கொல்லன் அரம் செய் அவ் வாய்
நெடுங் கை நவியம் பாய்தலின், நிலை அழிந்து,
வீ கமழ் நெடுஞ் சினை புலம்பக் காவுதொறும்
கடி மரம் தடியும் ஓசை தன் ஊர்
நெடு மதில் வரைப்பின் கடி மனை இயம்ப,
ஆங்கு இனிது இருந்த வேந்தனொடு, ஈங்கு, நின்
சிலைத் தார் முரசம் கறங்க,
மலைத்தனை என்பது நாணுத் தகவு உடைத்தே.

திணை - வஞ்சி; துறை - துணைவஞ்சி.
அவன் கருவூர் முற்றியிருந்தானை ஆலத்தூர் கிழார் பாடியது.

## 37. சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன்

நீ சோழன் சிபிச் சக்கரவர்த்தியின் வழித்தோன்றல். இடி ஓசை கேட்ட நாகம் போல் உயிருக்கு அஞ்சிப் புகல் இடம் தேடிய புறாவின் துயர் தீர்த்தவன்; அச்சோழனின் உயர் மரபில் தோன்றியவன் நீ!

*நீ எதிர்க்கும் அரசன் அரண்வலி உடையவன்; அகழியில் முதலைகள் மிக்கு உள்ளன. காவல் செய்வோர் கைவிளக்கு நிழலை இம்முதலைகள் கவ்வச் செல்லும். மதில்கள் செம்பு போல் உறுதி யானவை. யானைப் படையும் அவன்பால் உள்ளது. படை வலிமை உடைய அவன் உயிருக்கு அஞ்சி ஒதுங்கி மறைந்து இருக்கிறான். அவன் செயல் நன்மை தருவது ஆகாது.*

*அதனால் இத்தகைய கீழ் மகனோடு நீ போர் செய்வது தக்கது ஆகும். வலிமை படைத்தவன் நீ; அவன் மீது போர் தொடுப்பாயாக!*

நஞ்சுடை வால் எயிற்று, ஐந் தலை சுமந்த,
வேக வெந் திறல், நாகம் புக்கென,
விசும்பு தீப் பிறப்பத் திருகிப் பசுங் கொடிப்
பெரு மலை விடரகத்து உரும் எறிந்தாங்குப்
புள் உறு புன்கண் தீர்த்த, வெள் வேல்,
சினம் கெழு தானைச் செம்பியன் மருக!
கராஅம் கலித்த குண்டு கண் அகழி,
இடம் கருங் குட்டத்து உடன் தொக்கு ஓடி,
யாமம் கொள்பவர் சுடர் நிழல் கதூஉம்
கடு முரண் முதலைய நெடுநீர் இலஞ்சிச்,
செம்பு உறழ் புரிசைச் செம்மல் மூதூர்,
வம்பு அணி யானை வேந்து அகத்து உண்மையின்,
'நல்ல' என்னாது, சிதைத்தல்
வல்லையால், நெடுந்தகை! செருவத்தானே.

திணை - வாகை; துறை - அரசவாகை; முதல் வஞ்சியும் ஆம்.
அவனை மாறோக்கத்து நப்பசலையார் பாடியது.

# 38. சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன்

*களிறுகள் மிக்கு உடைய சேனைகளைக் கொண்டு வெற்றிகளைக் குவிக்கும் படைவேந்தே! நீ சினந்து நோக்கும் இடங்களில் எரி தவழ்கிறது. நீ நயந்து பார்க்கும் இடத்துப் பொன் பூக்கிறது; செல்வம் வாரி வழங்குகிறாய்.*

*வெய்யிலில் நிலவு விரும்பினாலும், நிலவில் வெய்யில் வேண்டினாலும் விளைவிக்கும் ஆற்றல் உன்பால் உள்ளது. எதையும் சாதிக்கும் சாதனையாளன் நீ!*

*இந்த மண்ணில் பிறந்து இங்கு வளர்ந்தவர் யாம்; உன்னைப் புகழ்வதில் சிறப்பு இல்லை.*

*வேற்று நாட்டுப் பரிசிலர் நீ வாழும் இந்நாட்டை நினைத்துப் பார்க்கின்றனர். துறக்க இன்பம்கூட அவரவர் செய்த நல்வினைகளுக்கு ஏற்ப அமைவது ஆகும். ஈத்து உவக்கும் இன்பத்தைத் துறக்க நாட்டவர் கண்டது இல்லை. ஈவோர் இரப்போர் இருவரும் இருந்தால்தான் ஈகை என்ற நல்லறம் நிலவும். துறக்கத்தில் இல்லாத சிறப்பு உன் நாட்டில் உள்ளது என்பதால் நின் பகைவர் தேசத்தில் வாழ்பவரும் உன் நாட்டையே நினைக்கின்றனர். உனக்கு உரியது இந்நாடு ஆதலின் இதனையே பெரிதும் நேசிக்கின்றனர்.*

வரை புரையும் மழ களிற்றின் மிசை,
வான் துடைக்கும் வகைய போல,
விரவு உருவின கொடி நுடங்கும்
வியன் தானை விறல் வேந்தே!
நீ, உடன்று நோக்கும்வாய் எரி தவழ,
நீ, நயந்து நோக்கும்வாய் பொன் பூப்பச்
செஞ் ஞாயிற்று நிலவு வேண்டினும்,
வெண் திங்களுள் வெயில் வேண்டினும்,
வேண்டியது விளைக்கும் ஆற்றலைஆகலின்,
நின் நிழற் பிறந்து, நின்நிழல் வளர்ந்த
எம் அளவு எவனோ மற்றே? ‘இன்நிலைப்
பொலம் பூங் காவின் நல் நாட்டோரும்
செய்வினை மருங்கின் எய்தல் அல்லதை,
உடையோர் ஈதலும் இல்லோர் இரத்தலும்
கடவது அன்மையின், கையறவு உடைத்து’ என,
ஆண்டுச் செய் நுகர்ச்சி ஈண்டும் கூடலின்,
நின்நாடு உள்ளுவர், பரிசிலர் -
ஒன்னார் தேஎத்தும், நின்னுடைத்து எனவே,

திணை - பாடாண் திணை; துறை - இயல்மொழி.

அவன், ‘எம் உள்ளீர்? எம் நாட்டீர்?’ என்றாற்கு ஆவூர் மூலங்கிழார் பாடியது.

# 39. சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன்

நீ பிறர்க்கு ஈவது தனிச்சிறப்பு அன்று. அது உன் பிறவிக் குணம். புறாவுக்காகத் தன் உயிரையும் ஈந்தவன் உன் முன்னோன்.

போர் வெற்றி என்பதும் உன்னைப் பொறுத்தவரை புதுவது அன்று. தொடித்தோள் செம்பியன் தேவர்களுக்காக அசுரர்களின் அசையும் மதில்களை எறிந்து புகழ் கொண்டுள்ளான்.

நீதி வழங்குவதில் தனிப்பெருமை உனக்கு உள்ளது என்று கூறுவதற்கு இல்லை. உன் முன்னோன் கரிகால் வளவன் உறந்தை அவையத்தில் நீதி வழங்கிப் புகழ் பெற்றுள்ளான்.

உன் முன்னோர்கள் பெரும்புகழ் படைத்தவர் ஆவர்; அச்சால்பு உன்பால் அமைந்துள்ளது.

இமயத்தில் விற்பொறி பொறித்தவன் சேர மன்னன். அவன் தலை நகர் வஞ்சி; அதன்மீது படை எடுத்து அச்சேரனை வெற்றி கொண்டாய். பெருமைமிக்க இப்போர் வெற்றியை யாம் எவ்வாறு பாடுவது?

புறவின் அல்லல் சொல்லிய, கறை அடி
யானை வால் மருப்பு எறிந்த வெண் கடைக்
கோல் நிறை துலாஅம் புக்கோன் மருக!
ஈதல் நின் புகழும் அன்றே; சார்தல்
ஒன்னார் உட்கும் துன் அருங் கடுந் திறல்
தூங்கு எயில் எறிந்த நின் ஊங்கணோர் நினைப்பின்,
அடுதல் நின்புகழும் அன்றே; கெடு இன்று,
மறம் கெழுசோழர் உறந்தை அவையத்து,
அறம் நின்று நிலையிற்று ஆகலின், அதனால்
முறைமை நின்புகழும் அன்றே; மறம் மிக்கு
எழு சமம் கடந்த எழு உறழ் திணிதோள்,
கண் ஆர் கண்ணிக், கலிமான், வளவ!
யாங்கனம் மொழிகோ யானே - ஓங்கிய
வரை அளந்து அறியாப் பொன்படு நெடுங்கோட்டு
இமயம் சூட்டிய ஏம விற்பொறி,
மாண் வினை நெடுந்தேர், வானவன் தொலைய
வாடா வஞ்சி வாட்டும் நின்
பீடுகெழு நோன் தாள் பாடுங்காலே?

திணையும் துறையும் அவை.

அவனை மாறோக்கத்து நப்பசலையார் பாடியது.

# 40. சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன்

நீ பகைவேந்தர் தம் எயில்களை அழித்து அவர்களை வென்று அவர்தம் பொன்முடி கவர்ந்து அதைக் கொண்டு காலுக்குக் கழல் சமைத்துக் கொண்டாய். அத்தகு வீரன் நீ! வலிமை மிக்கவன்.

உன்னை இகழ்பவர் தாழ்வு பெறுவர்; போற்றுவார் பொலிவு பெற்றுத் திகழ்வர்; பொன்னும் பொருளும் பெற்று உயர்வர். இத்தகு காட்சி இன்று காண்கிறோம்.

இனிய சொல்லும் காட்சிக்கு எளிமையும் உன்பால் நிலவுவனவாகுக. அதுபோல் என்றும் காண்போமாக!.

நீ செழுமைமிக்க நாட்டுக்குத் தலைவன். ஒரு பெண் யானை படுத்து உறங்கும் சிறிய இடம் ஏழு களிறுகளுக்கு உணவு தரும் வயல் வளம் பெற்றுள்ள நாடு உனது.

செல்வ வளம்மிக்க நீ இன்றுபோல் என்றும் சிறப்புடன் வாழ்வாயாக; ஈதல் இசைபட வாழ்தல் உன்பால் நிலவுவதாக.

நீயே, பிறர் ஓம்புறுமற மன்எயில்
ஓம்பாது கடந்து அட்டு, அவர்
முடி புனைந்த பசும்பொன் நின்
அடிபொலியக் கழல் தைஇய
வல்லாளனை; வயவேந்தே!
யாமே, நின், இகழ் பாடுவோர் எருத்து அடங்கப்
புகழ் பாடுவோர் பொலிவு தோன்ற,
இன்று கண்டாங்குக் காண்குவம் - என்றும்
இன்சொல் எண் பதத்தை ஆகுமதி - பெரும!
ஒரு பிடி படியும் சீறிடம்
எழு களிறு புரக்கும் நாடு கிழவோயே!

திணை - அது; துறை - செவியறிவுறூஉ.
அவனை ஆவூர் மூலங்கிழார் பாடியது.

# 41. சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன்

போர் வல்வேந்தே! உன் பகை நாட்டவர் தீய நிகழ்ச்சிகளைக் கனவிலும் நனவிலும் காண்கின்றனர். திசை இரு நான்கும் கொள்ளிக் கட்டைகள் எரிகின்றன. மரக்கிளைகள் பற்றி எரிகின்றன; சூரியன் பல இடத்தும் தோற்றம் அளிக்கிறது. அச்சம் தரும் பறவைகள் தம் கடுமையான குரல்களில் கத்துகின்றன. நிலத்திலே மக்களின் பற்கள் தாமாகக் கழன்று விழுகின்றன. எண்ணெய் ஆடுபவராய் விளங்குகின்றனர். பன்றிமீது ஏறிச் சுற்றி வருகின்றனர். தாம் கட்டி இருக்கும் ஆடைகளைக் களைந்து வேறுபடுத்துகின்றனர். இந்நிகழ்ச்சிகளைக் கனவிலும் நனவிலும் கண்டு கலக்கமுற்ற ஆடவர்கள் நீ படை எடுத்து வருவாய் என்று கருதி அச்சம் அடைந்துள்ளனர்.

உயிருக்குப் பாதுகாப்பு இழந்து அந்நாட்டு ஆடவர்கள் தாம் அன்பு காட்டும் இளம் புதல்வர் கண்களை முத்தமிட்டுத் தம் மனைவியர்க்குத் தம் துயரத்தை மறைக்க முயல்கின்றனர்.

நீ எதிர்க்கும் நாடு கலக்கமுற்றிருக்கிறது. கவலை கொண்டவராய் அஞ்சி நடுங்கிக் கொண்டிருக்கின்றனர்.

காலனும் காலம் பார்க்கும்; பாராது,
வேல் ஈண்டு தானை விழுமியோர் தொலைய,
வேண்டு இடத்து அடூஉம் வெல் போர்வேந்தே!
திசை இரு-நான்கும் உற்கம் உற்கவும்
பெரு மரத்து, இலை இல்நெடுங் கோடு வற்றல் பற்றவும்,
வெங் கதிர்க் கனலி துற்றவும், பிறவும்,
அஞ்சுவரத் தகுந புள்ளுக் குரல் இயம்பவும்,
எயிறு நிலத்து வீழவும், எண்ணெய் ஆடவும்,
களிறு மேல் கொள்ளவும், காழகம் நீப்பவும்,
வெள்ளி நோன் படை கட்டிலொடு கவிழவும்,
கனவின் அரியன காணா, நனவில்
செருச் செய் முன்ப! நின் வரு திறன் நோக்கி,
மையல் கொண்ட ஏமம் இல் இருக்கையர்,
புதல்வர் பூங் கண் முத்தி, மனையோட்கு

எவ்வம் கரக்கும் பைதல் மாக்களொடு
பெருங் கலக்குற்றன்றால் தானே - காற்றோடு
எரி நிகழ்ந்தன்ன செலவின்
செரு மிகு வளவ! நிற்சினைஇயோர் நாடே.

திணை - வஞ்சி; துறை - கொற்றவள்ளை
அவனைக் கோவூர் கிழார் பாடியது.

## 42. சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன்

*ஈகையும் போர் வெற்றியும் உடைய தலைவனே! நின் யானை மலை போலத் தோற்றம் அளிக்கிறது. சேனைகள் கடல் என முழங்குகின்றன. வேல்கள் மின்னலைப்போல் ஒளி விடுகின்றன. பகை அரசர்கள் நடுங்கும் ஆற்றல் உன்பால் உள்ளது. உன்பால் எந்தக் குறையும் காணப்பட்டிலது. எதுவும் புதியது என்று கூற இயலாது. அனைத்தும் உன்பால் நிலைத்து உள்ளவையே.*

*உன் நாட்டில் புனல் ஓடும் ஓசை கேட்குமேயன்றி வீரர்கள் அடுகளத்தில் படுதோல்வியுற்று முறையிடும் கதறல் ஓசை கேட்பது இல்லை. புலி தன் குட்டியைக் காப்பதுபோலக் குடிமக்களை நீ கருத்தோடு காத்து நன்மை செய்கிறாய்.*

*வளம் மிக்க நாடு உனது; விளைச்சல் அற்ற வன் புலத்தவர்க்கு உன் நாட்டினர் வாளை மீனையும், ஆமையையும் தருவர். பருகக் கரும்பின் சாறும், சூடிக் கொள்ளக் கருங் குவளைப் பூவும் தருவர்.*

*மலையில் இருந்து இறங்கிக் கடல்நோக்கிச் செல்லும் ஆறுகள் பலவற்றைப் போல் புலவர்கள் எல்லாம் நின்னை நோக்கி வருகின்றனர். நீயோ கூற்றுவனைப் போல் சினந்து பகைவர் மண்நோக்கிச் செல்கின்றாய். உன் வெற்றிச் சிறப்பை யாம் போற்றுகிறோம்.*

ஆனா ஈகை, அடுபோர், அண்ணல்! நின்
யானையும் மலையின் தோன்றும்; பெரும! நின்
தானையும் கடல் என முழங்கும்; கூர் நுனை

வேலும் மின்னின் விளங்கும்; உலகத்து
அரைசு தலை பனிக்கும் ஆற்றலைஆதலின்,
புரை தீர்ந்தன்று; அதுபுதுவதோ அன்றே!
தண் புனற் பூசல் அல்லது, நொந்து,
'களைக, வாழி, வளவ! என்று, நின்
முனைதரு பூசல் கனவினும் அறியாது,
புலி புறங்காக்கும் குருளை போல,
மெலிவுஇல் செங்கோல் நீ புறங்காப்பப்
பெரு விறல் யாணர்த்து ஆகி, அரிநர்
கீழ் மடைக் கொண்ட வாளையும், உழவர்
படை மிளிர்ந்திட்ட யாமையும், அறைநர்
கரும்பில் கொண்ட தேனும், பெருந் துறை
நீர் தரு மகளிர் குற்ற குவளையும்,
வன் புலக் கேளிர்க்கு வரு விருந்து அயரும்
மென் புல வைப்பின் நல் நாட்டுப் பொருந!
மலையின் இழிந்து, மாக்கடல் நோக்கி,
நில வரை இழிதரும் பல்யாறு போலப்
புலவர் எல்லாம் நின் நோக்கினரே;
நீயே, மருந்து இல் கணிச்சி வருந்த வட்டித்துக்
கூற்று வெகுண்டன்ன முன்பொடு,
மாற்று இரு வேந்தர் மண் நோக்கினையே.

திணை - வாகை; துறை - அரச வாகை

அவனை இடைக்காடனார் பாடியது.

## 43. சோழன் மாவளத்தான்

*பருந்தின் பார்வையில் அகப்பட்ட புறவினைக் காத்த சோழன் வழித் தோன்றல் நீ! சோழன் நலங்கிள்ளி புகழ்மிக்க மாமன்னன்; அவன் உடன் பிறந்த தம்பி நீ; மறவர் தலைவன்; வண்மையில் சிறந்தவன்; சிறப்புமிக்க உன்னை யான் கடிந்து பேசவும் நீ எதிர்த்துப் பேசாமல் அடக்கம் காட்டினாய். ''உன் முன்னோர்கள் பார்ப்பனர்களை இகழ்ந்தது இல்லை; நீ இகழ்ந்து விட்டாய்'' என்று உன்மீது பழி சுமத்தினேன்.*

*அந்த இழிமொழியை நீ மறுத்துப் பேசாமல் பொறுத்துக் கொண்டாய். இது உன் தகைமையைக் காட்டுகிறது.*

பழி சுமத்திய யானே தவறு செய்தவன்; வருந்துகிறேன். நீ மறுப்புக் கூறாமல் அமைதி காத்தாய்; ''தவறு செய்திருந்தால் மன்னிக்க'' என்று அடக்கம் காட்டினாய். இது வியப்பாக உள்ளது.

தம்மை இழிவுபடக் கூறினாலும் அவர்களைப் பொறுப்பது உன் குடி மரபினர்க்கு உள்ள இயல்பு போலும். அவ்வியல்பையே நீ வெளிப்படுத்தினாய்.

பிழை செய்தது யான்; உன்னை வாழ்த்துகிறேன். காவிரிக் கரையின் மணல் மேட்டில் உள்ள மணலினும் பல ஆண்டுகள் நீ வாழ்வாயாக.

நிலமிசை வாழ்நர் அலமரல் தீரத்
தெறு கதிர்க் கனலி வெம்மை தாங்கிக்
கால் உணவு ஆகச் சுடரொடு கொட்கும்
அவிர்சடை முனிவரும் மருளக் கொடுஞ்சிறைக்
கூர் உகிர்ப் பருந்தின் ஏறு குறித்து, ஒரீஇத்
தன் அகம் புக்க குறு நடைப் புறவின்
தபுதி அஞ்சிச் சீரை புக்க
வரையா ஈகை உரவோன் மருக!
நேரார்க் கடந்த முரண் மிகு திருவின்
தேர்வண்கிள்ளி தம்பி! வார் கோல்,
கொடுமர மறவர் பெரும! கடு மான்
கை வண் தோன்றல்! ஐயம் உடையேன் :
'ஆர் புனை தெரியல் நின் முன்னோர் எல்லாம்
பார்ப்பார் நோவன செய்யலர்; மற்று இது
நீர்த்தோ நினக்கு?' என வெறுப்பக் கூறி,
நின் யான் பிழைத்தது நோவாய் என்னினும்,
நீ பிழைத்தாய் போல் நனி நாணினையே;
'தம்மைப் பிழைத்தோர்ப் பொறுக்கும் செம்மல்
இக் குடிப் பிறந்தோர்க்கு எண்மை காணும்' எனக்
காண்தகு மொய்ம்ப! காட்டினை; ஆகலின்,
யானே பிழைத்தனென்; சிறக்க நின் ஆயுள்-
மிக்கு வரும் இன் நீர்க் காவிரி
எக்கர் இட்ட மணலினும் பலவே!

திணையும் துறையும் அவை.

சோழன் நலங்கிள்ளி தம்பி மாவளத்தானும் தாமப்பல் கண்ணனும் வட்டுப் பொருவுழிக் கை கரப்ப, வெகுண்டு வட்டுக் கொண்டு எறிந்தானை, 'சோழன் மகன் அல்லை' என, நாணியிருந்தானைத் தாமப்பல் கண்ணனார் பாடியது.

# 44. சோழன் நெடுங்கிள்ளி

யானைகள் தம் பிடிகளுடன் நீரில் படியச் செல்வது இல்லை; நெல் கவளம் உண்பது இல்லை; கம்பத்தில் மோதி அவற்றில் முட்டிக் கொண்டு நிலத்தில் புரள்கின்றன; வருந்தும் யானைகள் இடியென முழங்குகின்றன.

குழந்தைகள் பாலில்லாமல் அலறுகின்றன. மகளிர் பூவில்லாமலும், எண்ணெய் இடாமலும் தலையை முடித்துக் கொள்கின்றனர். வீட்டில் உள்ளவர்கள் குடிக்கவும் நீர் இல்லாமல் வருந்திக் கூவுவர். இவர்கள் எல்லாம் வருந்திக் கிடக்கவும் இங்கு நீ எதிர்க்காமல் இனிது இருப்பது தக்கது அன்று.

படை வலிமை மிக்க அரசன் நீ; அறக்கோட்பாடு அதற்கு மதிப்புத் தருவதாக இருந்தால் 'இவ்வாட்சி நினது' என்று வெளிப்படக் கூறிக் கதவுகளைத் திறந்து விடுக; அன்றி நீ வீரத்துக்கு மதிப்புத் தருவதாக இருந்தால் எதிரியைச் சந்தித்துப் போர் செய்யக் கதவுகளைத் திறந்துவிடுக.

இரண்டும் கெட்டநிலையில் கதவுகளை நன்றாக இறுக்கி அடைத்துக் கொண்டு மதில்புறத்து ஒரு மூலையில் ஒடுங்கி இருப்பது நாணத்தக்கது ஆகும்; இழுக்கும் ஆகும்.

இரும் பிடித் தொழுதியொடு பெருங் கயம் படியா,
நெல்லுடைக் கவளமொடு நெய்ம் மிதி பெறாஅ,
திருந்து அரை நோன் வெளில் வருந்த ஒற்றி,
நிலமிசைப் புரளும் கைய, வெய்து உயிர்த்து,
அலமரல் யானை உரும் என முழங்கவும்,
பால் இல் குழவி அலறவும், மகளிர்
பூ இல் வறுந்தலை முடிப்பவும், நீர் இல்
வினை புனை நல் இல் இனைகூஉக் கேட்பவும்,
இன்னாது அம்ம, ஈங்கு இனிது இருத்தல்;
துன் அருந் துப்பின் வய மான் தோன்றல்!
அறவைஆயின், 'நினது' எனத் திறத்தல்;
மறவைஆயின், போரொடு திறத்தல்;
அறவையும் மறவையும் அல்லையாகத்

திறவாது அடைத்த திண் நிலைக் கதவின்
நீள் மதில் ஒரு சிறை ஒடுங்குதல்
நாணுத்தகவு உடைத்து, இது காணுங்காலே.

திணையும் துறையும் அவை.

அவன் ஆவூர் முற்றியிருந்த காலத்து அடைத்து இருந்த நெடுங்கிள்ளியைக் கோவூர் கிழார் பாடியது.

# 45. சோழன் நெடுங்கிள்ளியும் நலங்கிள்ளியும்

*நீவிர் இருவரும் சோழ குல மன்னர்கள். ஒரே குடியில் பிறந்தவர்கள் ஆவீர்.*

*நீவிர் பனந்தோட்டையோ வேம்பின் மாலையையோ அணிந்தவர் அல்லர். இருவரும் ஆத்தி மாலை அணிந்தவர் ஆவீர்.*

*நீங்கள் இருவரில் ஒருவர் தோற்றாலும் அது நும்குடிக்கு ஏற்படும் தோல்வியே ஆகும். இருவரும் வெல்வது என்பது இயலாத ஒன்று; அதனால் நீவிர் ஒருவரை ஒருவர் எதிர்த்துக் கொண்டு போரிடுதல் தக்க செயல் அன்று; நம்மைப் போன்ற அரசர்கள் இதைக் கேட்டால் அவர்களுக்கு இது பெருமகிழ்வு செய்யும். சோழ அரசர் அழிவது பிற அரசர்களுக்குப் பெருமகிழ்வு தருவது ஆகும். அதனால் பகையை விட்டு நட்பினைக் கொள்வீராக.*

இரும் பனை வெண் தோடு மலைந்தோன் அல்லன்;
கருஞ் சினை வேம்பின் தெரியலோன் அல்லன்;
நின்ன கண்ணியும் ஆர் மிடைந்தன்றே; நின்னொடு
பொருவோன் கண்ணியும் ஆர் மிடைந்தன்றே;
ஒருவீர் தோற்பினும், தோற்பது நும் குடியே;
இருவீர் வேறல் இயற்கையும் அன்றே; அதனால்
குடிப்பொருள் அன்று, நும் செய்தி; கொடித் தேர்
நும் ஓர் அன்ன வேந்தர்க்கு
மெய்ம் மலி உவகை செய்யும், இவ் இகலே.

திணை - வஞ்சி; துறை - துணைவஞ்சி.

சோழன் நலங்கிள்ளி உறையூர் முற்றி இருந்தானையும், அடைத்திருந்த நெடுங்கிள்ளியையும், கோவூர் கிழார் பாடியது.

# 46. சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன்

நீயோ புறவின் துயரத்தையும், பிறர் இடுக்கண்கள் பலவற்றையும் தீர்த்த சோழனின் வழியில் வந்தவன்.

இவரோ அறிவைத் துணையாகக் கொண்டு வாழும் புலவர்தம் துன்பம் போக்கியஅரகர் மரபில் வந்தவர்.

இச் சிறுவர்கள் களிறு கண்டு அஞ்சி அழுதவர்கள் இப்பொழுது புதுமை கண்டு வியப்பு உற்றுத் தம் அழுகையை நிறுத்திவிட்டனர். மன்றத்தை மருளப் பார்க்கின்ற புதுவகையான துயரம் இவர்கள்பால் தெரிகிறது.

இவர்கள் நிலைஇது; கேட்டனை இதனை; இனி நீ விரும்பியது செய்க.

நீயே, புறவின் அல்லல் அன்றியும், பிறவும்
இடுக்கண் பலவும் விடுத்தோன் மருமகனை;
இவரே, புலன் உழுது உண்மார் புன்கண் அஞ்சித்
தமது பகுத்து உண்ணும் தண் நிழல் வாழ்நர்;
களிறு கண்டு அழூஉம் அழா அல் மறந்த
புன் தலைச் சிறாஅர்; மன்று மருண்டு நோக்கி,
விருந்தின் புன்கணோ உடையர்;
கேட்டனைஆயின், நீ வேட்டது செய்ம்மே!

திணையும் துறையும் அவை.

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் மலையமான் மக்களை யானைக்கு இடுவுழிக் கோவூர் கிழார் பாடி, உய்யக் கொண்டது.

# 47. சோழன் நலங்கிள்ளி

புலவர்களாகிய யாம் வள்ளல்களைத் தேடிப் பறவைகளைப் போல் காடுகள் பல கடந்து செல்வோம்; நீண்ட தூரம் என்று தயங்குவது இல்லை.

திருந்தாத நாவினைக் கொண்டு இயன்றவரை பாடிப் பிறர் தருவது பெற்று மகிழ்கிறோம். பெற்றதைக் கொண்டு எம்

சுற்றத்தவரும் அருந்தத் தருகிறோம். அவற்றைச் சேர்த்து வைக்காமல் மற்றவர்க்கும் வாரித் தருகிறோம். அரசர்கள் தரும் சிறப்புகளுக்காக வருந்தி வாழும் இப்பரிசில் வாழ்க்கை பிறர்க்குத் தீது நினைத்தது இல்லை.

எம் பகைவர் நாணும்படி நிமிர்ந்து நடப்போம்; அதனோடு அரசர்களாகிய உங்களைப் போல எங்களுக்குத் தலைமையும் உள்ளது.

வள்ளியோர்ப் படர்ந்து, புள்ளின் போகி,
'நெடிய' என்னாது சுரம் பல கடந்து'
வடியா நாவின் வல்லாங்குப் பாடிப்
பெற்றது மகிழ்ந்து, சுற்றம் அருத்தி,
ஓம்பாது உண்டு, கூம்பாது வீசி,
வரிசைக்கு வருந்தும் இப் பரிசில் வாழ்க்கை
பிறர்க்குத் தீது அறிந்தன்றோ? இன்றே; திறப்பட
நண்ணார் நாண, அண்ணாந்து ஏகி,
ஆங்கு இனிது ஒழுகின் அல்லது, ஓங்கு புகழ்
மண் ஆள் செல்வம் எய்திய
நும் ஓர் அன்ன செம்மலும் உடைத்தே.

திணையும் துறையும் அவை.

சோழன் நலங்கிள்ளியுழைநின்று உறையூர் புகுந்த இளந்தத்தன் என்னும் புலவனைக் காரியாற்றுத் துஞ்சிய நெடுஞ்கிள்ளி, 'ஒற்று வந்தான்' என்று கொல்லப்புக் குழிக் கோவூர் கிழார் பாடி, உய்யக் கொண்டது.

## 48. சேரமான் கோக் கோதை மார்பன்

கோதை மார்பன் அவன் அணிந்துள்ள பூமாலை, அவன் துணைவியர் சூடியுள்ள பூமாலை, உப்பங்கழியில் மலரும் நெய்தற்பூ இவற்றால் கடற்கரைக் கானலே மணம் பெறுகிறது; தேன் நிறைகிறது. அத்தகைய சிறப்பு மிக்கது தொண்டி என்னும் எமது ஊர்; அதனை ஆள்பவன் யாம் மதித்துப் போற்றும் தலைவன் ஆவான்.

வயதில் மூத்த இரவலனே! நீ அவனை எப்பொழுதாவது சென்று கண்டால் போரில் தம் தலைவன் வெற்றிகள் பெறும் போது எல்லாம் அவனைப் புகழ்ந்து பாடிக் கொண்டிருக்கிறான் ஒருவன் என்று என்னைப் பற்றி மறவாமல் அவனிடம் கூறுக;

இதுவே யான் வேண்டுவது; அவனை மதித்துப் போற்றும் புலவன் யான்.

கோதை மார்பின் கோதையானும்,
கோதையைப் புணர்ந்தோர் கோதையானும்,
மாக் கழி மலர்ந்த நெய்தலானும்,
கள் நாறும்மே, கானல்அம் தொண்டி;
அஃது எம் ஊரே; அவன் எம் இறைவன்;
அன்னோற் படர்திஆயின், நீயும்
எம்மும் உள்ளுமோ - முதுவாய் இரவல!-
'அமர் மேம்படூஉம் காலை, நின்
புகழ் மேம்படுநனைக் கண்டனம்' எனவே.

திணை - பாடாண் திணை; துறை - புலவராற்றுப் படை. சேரமான் கோக்கோதை மார்பனைப் பொய்கையார் பாடியது.

## 49. சேரமான் கோக்கோதை மார்பன்

கோதை மார்பன் ஆகிய எம் வேந்தை யான் எப்படி அழைப்பது? மலை நாடன் என்று கூறுவதா? மருத நிலத் தலைவன் என்று கூறுவதா? கடல் நிலத்தை உடைய சேர்ப்பன் என்று கூறுவதா? எவ்வாறு அவனை விளிப்பது?

அவன் நாட்டில் குறிஞ்சி நிலத்தில் வாழும் எயினர் கிளிகளை ஓட்ட அவர்கள் தம் தட்டையைப் புடைத்தால் அதன் ஒலி மருத நிலத்துக் கழனிகளிலும், நெய்தல் நிலத்துக் கடற் கரையிலும் சென்று ஒலிக்கிறது. அங்கு உள்ள பறவைகள் மேலே எழுகின்றன. அதனால் இம் மூன்று நிலத்துக்கும் அவன் உரியவன் ஆகிறான்.

நாடன் என்கோ? ஊரன் என்கோ?
பாடு இமிழ் பனிக் கடற் சேர்ப்பன் என்கோ?
யாங்கனம் மொழிகோ, ஓங்கு வாட் கோதையை?-
புனவர் தட்டை புடைப்பின், அயலது
இறங்கு கதிர் அலமரு கழனியும்,
பிறங்கு நீர்ச் சேர்ப்பினும், புள் ஒருங்கு எழுமே!

திணையும் துறையும் அவை; துறை - இயன்மொழியும் ஆம்.
அவன் அவர் பாடியது.

# 50. தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை

முரசுக்கு வாரினைக் கொண்டு போர்த்தி மயிற் பீலியும் உழைஞக் கொடியும் சூட்டிக் குருதிப் பலி இடுவதற்கு முன் அதனை நீராட்டிக் கொணர எடுத்துச் செல்வர். எண்ணெய் நுரை முகந்தது போன்று மெல்லிய பூக்களால் நிரப்பப்பட்டு இருந்தது முரசு கட்டில்; அது முரசு கட்டில் என்பதை அறியாமல் அதில் ஏறிப்படுத்த என்னை இருகூறாக வெட்டி இருக்க வேண்டும். அவ்வாறு செய்யாமல் உயிர்வாழ விட்டதே நீ தமிழை முழுதும் அறிந்து மதிக்கிறாய் என்பதற்கு அறிகுறியாகும்.

அதனோடும் அமையாமல் அருகில் நின்று முழவு போன்ற நின்வலிமை மிக்க தோள்கொண்டு வெண்சாமரம் வீசினாய். இவ்வாறு மதித்துப் பணிவிடை செய்தது எது கருதி? இவ் உலகில் புகழ் படைத்தவருக்கே மறுமையில் துறக்கம் வாய்க்கும் என்ற செய்தியைக் கேட்டதாலோ! வெற்றி மிகு வேந்தன் நீ; இவ்வாறு செய்தது வியப்பாக உள்ளது.

மாசு அற விசித்த வார்புறு வள்பின்
மை படு மருங்குல் பொலிய, மஞ்ஞை
ஒலி நெடும் பீலி ஒண் பொறி மணித் தார்,
பொலங் குழை உழிஞையோடு, பொலியச் சூட்டிக்
குருதி வேட்கை உரு கெழு முரசம்
மண்ணி வாரா அளவை, எண்ணெய்
நுரை முகந்தன்ன மென் பூஞ் சேக்கை
அறியாது ஏறிய என்னைத் தெறுவர,
இரு பாற்படுக்கும் நின் வாள் வாய் ஒழித்ததை
அதூஉம் சாலும், நல் தமிழ் முழுது அறிதல்;
அதனொடும் அமையாது, அணுக வந்து, நின்
மதனுடை முழவுத்தோள் ஓச்சித் தண்ணென
வீசியோயே; வியலிடம் கமழ,
இவண் இசை உடையோர்க்கு அல்லது, அவணது
உயர் நிலை உலகத்து உறையுள் இன்மை
விளங்கக் கேட்ட மாறுகொல்-
வலம் படு குருசில்! நீ ஈங்கு இது செயலே?

திணை - அது; துறை - இயன்மொழி

சேரமான் தகடூர் எறிந்த பெருஞ் சேரல் இரும்பொறை முரசுகட்டில் அறியாது ஏறிய மோசிகீரனைத் தவறு செய்யாது, அவன் துயில் எழுந்துணையும் கவரி கொண்டு வீசியானை மோசிகீரனார் பாடியது.

# 51. பாண்டியன் கூடகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதி

வெள்ளப் பெருக்கு மிகுமாயின் அதனைத் தடுத்து நிறுத்த இயலாது; தீ மிகுந்தால் அதில் தப்பிப் பிழைக்க வழி கிடையாது; காற்று மிக்கு வீசினால் அதனைத் தடுத்து நிறுத்த இயலாது. அது போல் வழுதி சினம் கொண்டால் எதிர்த்து நிற்பாரைக் காண முடியாது.

தமிழ்நாடு மூவேந்தர்க்கும் பொது என்பதைப் பொறுக்கா தவனாகிப் போரை நடத்தினால் அதற்குத் தாக்குப் பிடிக்க முடியாமல் அவன் வேண்டும் திறைப் பொருள் தந்து அடிபணிந்து வாழ்பவர் நடுக்கம் அற்றனர்.

அவன் நல் ஆதரவு இழந்தவர்கள் அஞ்சி நடுங்கி நாளும் நாளும் செத்துக் கொண்டிருப்பவர் ஆகின்றனர். சிதலை ஆகிய கறையான் எடுக்கும் புற்றில் ஈசல் ஒரு பகல் வாழ்வதே அரிது. அவற்றைப்போல் நிலையற்ற வாழ்வை அவர்கள் அடைவர், அவர்கள் இரங்கத் தக்கவர் ஆவர்.

நீர் மிகின், சிறையும் இல்லை; தீ மிகின்,
மன் உயிர் நிழற்றும் நிழலும் இல்லை;
வளி மிகின், வலியும் இல்லை; ஒளி மிக்கு
அவற்று ஓர்அன்ன சினப் போர் வழுதி,
'தண் தமிழ் பொது' எனப் பொறாஅன், போர் எதிர்ந்து,
கொண்டி வேண்டுவன்ஆயின், 'கொள்க' எனக்
கொடுத்த மன்னர் நடுக்கு அற்றனரே;
அளியரோ அளியர், அவன் அளி இழந்தோரே-
நுண் பல சிதலை அரிது முயன்று எடுத்த
செம் புற்று ஈயல் போல,
ஒரு பகல் வாழ்க்கைக்கு உலமருவோரே!

திணை - வாகை; துறை - அரச வாகை.

பாண்டியன் கூடகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதியை ஐயூர் முடவனார் பாடியது.

# 52. பாண்டியன் கூடகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதி

புலி தன் குகையில் இருந்து வெளிப்பட்டு இரைதேடத் தலைகாட்டுமாயின் யார் அதன்முன் நிற்க முடியும்?

அதுபோல நீ போர் செய்யக் கருதி வடபுலம் நோக்கிப் புறப்பட்டால் அவர்கள் நடுங்கி அஞ்சுவர்.

மீன் சுடுகின்ற புகை வயல்களில் உள்ள மருத மரக் கிளையில் படியும் வளம்மிக்க பகைவர் தம் நாடுகள் பாழ்பட்டு அழிவு பெறுகின்றன. கோயில்கள் பூசை இழந்து வெறுமை உறுகின்றன. தூண்களில் உள்ள தெய்வப் படிமைகள் சிதைந்து கீழே விழுந்து கிடக்கின்றன. அப்பாழ் மண்டபங்களில் நரை மூதாளர்கள் சூதாடும் கருவியை இடுவதால் குழிவுகள் உண்டா கின்றன. அவற்றில் காட்டுக் கோழிகள் முட்டைகள் இடுகின்றன. நீ போர் தொடுக்கச் சென்றால் பகைவர் நாடுகள் இவ்வாறு காடுகளாக மாறி அழிவு பெறும். யார் உன்னை எதிர்க்க வல்லார்?

அணங்குடை நெடுங் கோட்டு அளையகம் முனைஇ,
முணங்கு நிமிர் வயமான் முழு வலி ஒருத்தல்,
ஊன் நசை உள்ளம் துரப்ப, இரை குறித்துத்
தான் வேண்டு மருங்கின் வேட்டு எழுந்தாங்கு,
வட புல மன்னர் வாட, அடல் குறித்து,
இன்னா வெம் போர் இயல் தேர் வழுதி!
இது நீ கண்ணியது ஆயின், இரு நிலத்து
யார்கொல் அளியர்தாமே? - ஊர்தொறும்
மீன் சுடு புகையின் புலவு நாறு நெடுங் கொடி
வயலுழை மருதின் வாங்குசினை வலக்கும்
பெரு நல் யாணரின் ஒரீஇ, இனியே
கலி கெழு கடவுள் கந்தம் கைவிடப்
பலி கண் மாறிய பாழ்படு பொதியில்,
நரை மூதாளர் நாய் இடக் குழிந்த
வல்லின் நல் அகம் நிறையப் பல் பொறிக்
கானவாரணம் ஈனும்
காடு ஆகி விளியும் நாடு உடையோரே!

திணையும் துறையும் அவை.
அவனை மருதன் இளநாகனார் பாடியது.

# 53. சேரமான் மாந்தரஞ்சேரல் இரும்பொறை

*முத்துக்கள் சிதறிக் கிடக்கும் மணல்பாங்கில் மாடங்களின் திண்ணைகளில் பெண்கள் குழுமி ஆடுவர். அத்தகைய விளங்கில் என்னும் உனக்கு உரிய ஊரினை முற்றுகை இட்டு வளைத்தவர்களை விரட்டி முறியடித்து ஓட்டினாய்.*

*இவ் வெற்றியை விரித்துக் கூறினால் அதற்கு எல்லையே கிடையாது; தொகுத்துக் கூறினால் முழுவதும் கூறியது ஆகாது. இதனை எம் போன்ற புலவர்கள் எடுத்துக் கூறிச் சிறப்பித்துப் பாட இயலாது.*

*கபிலன் இன்று இருந்தால் இவ்வெற்றியைச் சிறப்புறப் பாட இயலும். அவன் இன்று இல்லை என்ற குறையை நீ உணர்கிறாய்.*

*பாடுவது புலவர்களோடு ஒன்றிய தொழில். அதை விட்டு விலக முடியாது. அதனால் யானும் பாடமுயல்வேன்; அதில் வெற்றியும் காண்பேன். கபிலன் இல்லை என்ற அந்தக் குறையைச் சிறப்பித்துப்பாடி யான் நிறைவு செய்வேன்.*

முதிர் வார் இப்பி முத்த வார் மணல்,
கதிர் விடு மணியின் கண் பொரு மாடத்து,
இலங்கு வளை மகளிர் தெற்றி ஆடும்
விளங்கு சீர் விளங்கில் விழுமம் கொன்ற
களம் கொள் யானைக், கடு மான், பொறைய!-
விரிப்பின் அகலும்; தொகுப்பின் எஞ்சும்;
மம்மர் நெஞ்சத்து எம்மனோர்க்கு ஒருதலை
கைம்முற்றல, நின் புகழே, என்றும்;
ஒளியோர் பிறந்த இம் மலர் தலை உலகத்து
வாழேம் என்றலும் அரிதே - 'தாழாது
செறுத்த செய்யுட் செய் செந் நாவின்,
வெறுத்த கேள்வி, விளங்கு புகழ்க் கபிலன்
இன்று உளன்ஆயின், நன்றுமன்' என்ற நின்
ஆடு கொள் வரிசைக்கு ஒப்பப்
பாடுவல்மன்னால், பகைவரைக் கடப்பே.

திணையும் துறையும் அவை.

சேரன் மாந்தரஞ் சேரல் இரும்பொறையைப் பொருந்தில் இளங்கீரனார் பாடியது.

# 54. சேரமான் குட்டுவன் கோதை

சேரமான் குட்டுவன் கோதை அவன் அவையில் புகுவது எம்மைப் போன்ற புலவர்களுக்கு எளிது; அடையாத திறந்த வாயில் அது. அவன் வாரி வழங்குவான்.

அவனை எதிர்த்துப் போர் செய்ய விரும்பினால் பேரரசர் ஆயினும் அணுகுவதற்கு அரிது.

புலிதங்கிய குகைமுன் ஆட்டிடையன் தான் ஓட்டிச் செல்லும் ஆட்டினத்தோடு அருகில் செல்ல அஞ்சுவான். அவனால் செல்ல இயலாது. அதுபோல் பெருநில மன்னர்களும் அவன் நாட்டு மண்ணில் அடியெடுத்து வைக்க அஞ்சுவர். செல்ல அஞ்சுவர்.

எம் கோன் இருந்த கம்பலை மூதூர்,
உடையோர் போல இடையின்று குறுகிச்
செம்மல் நாள் அவை அண்ணாந்து புகுதல்
எம் அன வாழ்க்கை இரவலர்க்கு எளிதே;
இரவலர்க்கு எண்மை அல்லது - புரவு எதிர்ந்து,
வானம் நாண, வரையாது, சென்றோர்க்கு
ஆனாது ஈயும் கவி கை வண்மைக்
கடு மான் கோதை துப்பு எதிர்ந்து எழுந்த
நெடுமொழி மன்னர் நினைக்கும்காலைப்
பாசிலைத் தொடுத்த உவலைக் கண்ணி,
மாசு உண் உடுக்கை, மடி வாய், இடையன்
சிறு தலை ஆயமொடு குறுகல்செல்லாப்
புலி துஞ்சு வியன் புலத்தற்றே
வலி துஞ்சு தடக் கை அவனுடை நாடே.

திணையும் துறையும் அவை.

சேரமான் குட்டுவன் கோதையைக் கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக் குமரனார் பாடியது.

# 55. பாண்டியன் இலவந்திகைப்பள்ளித் துஞ்சிய நன்மாறன்

முப்புரம் எறித்த சிவனின் நெற்றிக்கண் மேம்பட்டு உயர்ந்து விளங்குவதுபோல முப்பெரு மன்னர்களுள் மேம்பட்டு விளங்கும் பேரரசன் நீ! யானை, குதிரை, தேர், காலாள் என்ற நால்வகைப்

படையுடன் உன் சேனை மாட்சிமை பெற்றிருந்தாலும் அறநெறி ஒட்டியே அரசுக்கு வெற்றி அமைவது ஆகும். அறநெறி அரசுக்கு அடிப்படையாகும்.

அதனால் நம்மவர் என்று நீதி பிழையாதே! பிறர் என்று அவர்களுக்கு அநீதி இழைக்காதே! ஞாயிறுபோல ஒறுத்தலும், திங்களைப் போலத் தணிவும், வானத்து மழையைப் போல வழங்கலும் உடையையாகி விளங்குக! வறியவர் இல்லையென்று கூறும்படி அவர்கள் இன்மையைப் போக்குக! கடல் அலை அலைக்கும் செந்திலில் முருகவேள் நிலைத்துள்ள நீர்த் துறை அங்குத் தொகுத்துள்ள எக்கர் மணலினும் பல ஆண்டுகள் வாழ்வாயாக.

ஓங்கு மலைப் பெரு வில் பாம்பு ஞாண் கொளீஇ,
ஒரு கணை கொண்டு மூஎயில் உடற்றிப்
பெரு விறல் அமரர்க்கு வென்றி தந்த
கறை மிடற்று அண்ணல் காமர் சென்னிப்
பிறை நுதல் விளங்கும் ஒரு கண் போல,
வேந்து மேம்பட்ட பூந் தார் மாற!-
கடுஞ் சினத்த கொல் களிறும்,
கதழ் பரிய கலி மாவும்,
நெடுங் கொடிய நிமிர் தேரும்,
நெஞ்சு உடைய புகல் மறவரும், என
நான்குடன் மாண்டதுஆயினும், மாண்ட
அற நெறி முதற்றே, அரசின் கொற்றம்;
அதனால், நமர் எனக் கோல் கோடாது,
'பிறர்' எனக் குணம் கொல்லாது,
ஞாயிற்று அன்ன வெந் திறல் ஆண்மையும்,
திங்கள் அன்ன தண் பெருஞ் சாயலும்,
வானத்து அன்ன வண்மையும், மூன்றும்,
உடையை ஆகி, இல்லோர் கையற,
நீ நீடு வாழிய - நெடுந்தகை!- தாழ் நீர்
வெண் தலைப் புணரி அலைக்கும் செந்தில்
நெடு வேள் நிலைஇய காமர் வியன் துறைக்
கடு வளி தொகுப்ப ஈண்டிய
வடு ஆழ் எக்கர் மணலினும் பலவே!

திணை - பாடாண் திணை; துறை - செவியறிவுறூஉ.

பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறனை மதுரை மருதன் இளநாகனார் பாடியது.

# 56. இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய பாண்டியன் நன்மாறன்

*எருதுக் கொடியை ஏந்தியவனும் சூலப் படையை உடையவனும் ஆக விளங்குபவன் சிவபெருமான்; கடலில் தோன்றும் சங்கு போன்ற நிறத்தவன் பலராமன்; நீலமணி போன்ற மேனியையும், கருடக் கொடியையும் கொண்டவன் திருமால்; மயிலை வாகனமாகக் கொண்டவன் முருகன்; இந் நால்வரும் இவ் உலகைக் காக்கும் கடவுளர் ஆவர்.*

*இந் நால்வருள் கூற்றுவனைப் போல் விளங்கும் சிவனை உன் சீற்றத்தால் ஒத்து விளங்குகிறாய். பலராமனை வலியால் நிகர்த்து உள்ளாய். எதிரிகளைக் கொல்லும் திருமாலைப் புகழால் ஒத்து விளங்குகிறாய். கருதியது முடிப்பதில் முருகனை ஒத்து விளங்குகிறாய்.*

*ஒவ்வொரு வகையில் ஒரு தெய்வத்தை நிகர்த்து விளங்குகிறாய். உன்னால் இயலாதது யாதும் இல்லை.*

*இரவலர்க்கு வரையாது ஈக! யவனர் தந்த மதுவினை மகளிர் பொன்கலத்து ஏந்தித்தரப் பருகி மகிழ்ந்து வாழ்க. இருள் அகற்றும் ஞாயிறு போலவும் திங்கள் போலவும் நீ நின்று நிலைத்து வாழ்க.*

ஏற்று வலன் உயரிய எரி மருள் அவிர் சடை,
மாற்று அருங் கணிச்சி, மணி மிடற்றோனும்;
கடல் வளர் புரி வளை புரையும் மேனி,
அடல் வெந் நாஞ்சில், பனைக் கொடியோனும்;
மண்ணுறு திரு மணி புரையும் மேனி,
விண் உயர் புட் கொடி, விறல் வெய்யோனும்,
மணி மயில் உயரிய மாறா வென்றிப்
பிணிமுக ஊர்தி, ஒண் செய்யோனும் - என
ஞாலம் காக்கும் கால முன்பின்
தோலா நல்இசை, நால்வருள்ளும்
கூற்று ஒத்தீயே, மாற்று அருஞ் சீற்றம்;
வலி ஒத்தீயே, வாலியோனை;
புகழ் ஒத்தீயே, இகழுநர் அடுநனை;
முருகுஒத் தீயே, முன்னியது முடித்தலின்:
ஆங்கு ஆங்கு அவர் அவர் ஒத்தலின், யாங்கும்

அரியவும் உளவோ, நினக்கே? அதனால்,
இரவலர்க்கு அருங் கலம் அருகாது ஈயா,
யவனர் நன் கலம் தந்த தண் கமழ் தேறல்
பொன் செய் புனை கலத்து ஏந்தி, நாளும்
ஒண் தொடி மகளிர் மடுப்ப, மகிழ் சிறந்து,
ஆங்கு இனிது ஒழுகுமதி! - ஓங்கு வாள் மாற!-
அம் கண் விசும்பின் ஆர் இருள் அகற்றும்
வெங் கதிர்ச் செல்வன் போலவும், குட திசைத்
தண் கதிர் மதியம் போலவும்,
நின்று நிலைஇயர், உலகமோடு உடனே!

திணை - அது; துறை - பூவை நிலை.

அவனை மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார் பாடியது.

# 57. இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய பாண்டியன் நன்மாறன்

மாயோனைப் போல் கற்றோர் மற்றோர் யாவராலும் மதித்துப் போற்றத் தக்க புகழினை உடையவன் நீ. உனக்கு ஒன்று கூற விரும்புகிறேன்.

நீ பிறரோடு போர் செய்யக் கருதுங்காலத்து உன் வீரர்கள் வழக்கம்போல் அவர்கள் கழனிகளைக் கொள்ளையிடட்டும்; அவர்கள் பேரூர்களை எரிக்கட்டும்; உன் வேல்கள் பகைவர் உயிரை மாய்க்கட்டும்.

என்றாலும் ஒன்றே ஒன்று தவிர்க்கவும்; பகைவர் காவல் மரங்கள் உன் யானைகளைக் கட்டுவதற்குக் கட்டுத் தறியாகா; அவற்றால் எந்தப் பயனும் இல்லை; அவற்றை வெட்டுவது தவிர்க்கவும்.

வல்லார் ஆயினும், வல்லுநர் ஆயினும்,
புகழ்தல் உற்றோர்க்கு மாயோன் அன்ன,
உரைசால் சிறப்பின் புகழ்சால் மாற!
நின் ஒன்று கூறுவது உடையேன்: என் எனின்,
நீயே, பிறர் நாடு கொள்ளும்காலை, அவர் நாட்டு
இறங்கு கதிர்க் கழனி நின் இளையரும் கவர்க;

நனந் தலைப் பேர் ஊர் எரியும் நைக்க;
மின்னு நிமிர்ந்தன்ன நின் ஒளிறு இலங்கு நெடு வேல்
ஒன்னார்ச் செகுப்பினும் செகுக்க; என்னதூஉம்
கடிமரம் தடிதல் ஓம்பு- நின்
நெடு நல் யானைக்குக் கந்து ஆற்றாவே.

திணை - வஞ்சி; துறை - துணை வஞ்சி.

அவனைக் காவிரிப்பூம் பட்டினத்துக் காரிக்கண்ணனார் பாடியது.

# 58. சோழன் குராபள்ளித் துஞ்சிய பெருந்திருமா வளவனும் பாண்டியன் வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதியும்

நீயோ காவிரி பாயும் சோழநாடன்; இவனோ ஆல விழுதுபோல் நிழல் தந்து தம்மைச் சார்ந்தோருக்கு உதவுபவன்.

இடி சிறிது எனினும் அது அரவுகளை நடுங்கச் செய்யும். அதுபோலப் பகைவர்களை நடுங்கச் செய்யும் வீரம் படைத்தவன் இவன்; பாண்டியர் குடியுள் ஏறு போன்றவன்.

நீயோ அறம் மிக்கு உள்ள உறந்தைக்குத் தலைவன்; இவனோ பொதிய மலையில் கிடைக்கும் சந்தனத்தையும் கடலில் கிடைக்கும். முத்தினையும் சிறப்பாகப் பெற்று அவற்றால் வளம் மிக்கவன்; முரசு முழங்கும் சேனையை உடையவன்; தமிழ் தலைமை பெற்றுள்ள கூடல் மாநகர் வேந்தனும் ஆவான்.

பால் நிற வண்ணன் ஆகிய பலராமனும், நீல நிறத்தவன் ஆகிய திருமாலும் உடன்நிற்பதுபோல் நீவிர் இருவரும் இணைந்து செயல்பட்டால் கடல் சூழ்ந்த இவ் உலகம் உம் கையகப்படும்.

அதனால் நெடுநாள் பழகியவர் போலவும் உம்மிடம் மிக்க நட்புடையவர் போலவும் காட்டிக் கொண்டு இடையே புகுந்து உம்மைப் பிரிக்க முயல்வர்; அவர்கள் மேற்போக்கான சொற்களைக் கேட்டு நடந்து கொள்ளாதீர்.

இன்றுபோல உம் நட்பு என்றும் நிலவுவதாக! அடுகளத்தில் வெற்றிகள் மேலும் மேலும் பெருகுவதாக! உம் புலிச் சின்னமும் மீன் சின்னமும் சேரநாட்டு மன்னன் குன்றின்மேல் பதிவனவாக!

நீயே, தண் புனற் காவிரிக் கிழவனை; இவனே,
முழு முதல் தொலைந்த கோளி ஆலத்துக்
கொழு நிழல் நெடுஞ் சினை வீழ் பொறுத்தாங்குத்
தொல்லோர் மாய்ந்தெனத் துளங்கல் செல்லாது,
நல் இசை முது குடி நடுக்கு அறத் தழீஇ,
இளையது ஆயினும் கிளை அரா எறியும்
அரு நரை உருமின், பொருநரைப் பொறாஅச்
செரு மாண் பஞ்சவர் ஏறே; நீயே,
அறம் துஞ்சு உறந்தைப் பொருநனை; இவனே,
நெல்லும் நீரும் எல்லார்க்கும் எளிய என,
வரைய சாந்தமும், திரைய முத்தமும்,
இமிழ் குரல் முரசம் மூன்றுடன் ஆளும்
தமிழ் கெழு கூடல் தண் கோல் வேந்தே;
பால் நிற உருவின் பனைக் கொடியோனும்,
நீல் நிற உருவின் நேமியோனும், என்று
இரு பெருந் தெய்வமும் உடன் நின்றாஅங்கு,
உரு கெழு தோற்றமொடு உட்குவர விளங்கி,
இன்னீர்ஆகலின், இனியவும் உளவோ?
இன்னும் கேண்மின்: நும் இசை வாழியவே;
ஒருவீர் ஒருவீர்க்கு ஆற்றுதிர்; இருவீரும்
உடன் நிலை திரியீர் ஆயின், இமிழ்திரைப்
பௌவம் உடுத்த இப் பயம் கெழு மா நிலம்
கையகப்படுவது பொய் ஆகாதே;
அதனால், நல்ல போலவும், நயவ போலவும்,
தொல்லோர் சென்ற நெறிய போலவும்,
காதல் நெஞ்சின் நும் இடை புகற்கு அலமரும்
ஏதில்மாக்கள் பொதுமொழி கொள்ளாது,
இன்றே போல்க, நும் புணர்ச்சி; வென்று வென்று
அடு களத்து உயர்க, நும் வேலே; கொடுவரிக்
கோண்மாக் குயின்ற சேண் விளங்கு தொடு பொறி
நெடு நீர்க் கெண்டையொடு பொறித்த
குடுமிய ஆக, பிறர் குன்று கெழு நாடே.

திணை - பாடாண் திணை; துறை - உடனிலை.

சோழன் குராப்பள்ளித் துஞ்சிய பெருந் திருமாவளவனும், பாண்டியன் வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதியும், ஒருங்கு இருந்தாரைக் காவிரிப்பூம் பட்டினத்துக் காரிக்கண்ணனார் பாடியது.

# 59. பாண்டியன் சித்திர மாடத்துத் துஞ்சிய நன்மாறன்

பொன்மாலை உன் மார்புக்கு அழகு செய்கிறது. கால் அடியைத் தொடும் உன் கைகள் உனக்குத் தோற்றத்தைத் தருகின்றன. அழகிய தோற்றம் உடைய வழுதியே!

நீ யாவர்க்கும் உவந்து அளிப்பதில் பெருமகிழ்வு கொள்கிறாய்.

நீ மற்றவர்கள் யாவர் எத்தகையர் என்பதை ஆராய்ந்து அறிக; எது பொய் எது மெய் என்பது ஆராய்ந்து அறிக; பிறர் கூறும் பொய்மைக்கு அடி பணியாதே.

நீ பகைவர் மாட்டுச் சினத்தோடு எதிர்க்கவும்; கடலில் காலையில் எழும் ஞாயிறுபோல் அவர்களைக் காய்வாயாக; எம்மைப் போன்றவர்க்கு நீ திங்களைப் போல் அருள் செய்வாயாக.

ஆரம் தாழ்ந்த அணி கிளர் மார்பின்,
தாள் தோய் தடக் கைத் தகை மாண் வழுதி!
வல்லை மன்ற, நீ நயந்து அளித்தல்;
தேற்றாய், பெரும! பொய்யே; என்றும்
காய் சினம் தவிராது கடல் ஊர்பு எழுதரும்
ஞாயிறு அனையை, நின் பகைவர்க்குத்
திங்கள் அனையை, எம்மனோர்க்கே.

திணை - அது; துறை - பூவை நிலை.

பாண்டியன் சித்திரமாடத்துத் துஞ்சிய நன்மாறனை மதுரைக் கூல வாணிகன் சீத்தலைச் சாத்தனார் பாடியது.

# 60. சோழன் குராப் பள்ளித் துஞ்சிய பெருந் திருமாவளவன்

கடல் நடுவே செல்லும் படகுகளில் ஒளிவிடும் விளக்குகளைப் போல் விண்மீன்கள் இடையே ஒளிவிடும் நிறைமதியைக் கண்டு காட்டு மயில்போல் சுரவழியில் செல்லும் விறலியும் யானும் அதனை விரைந்து தொழுதோம்.

*கடற்கரைக் கழியில் உப்பை முகந்து கொண்டு கற்கள் பொருந்திய மலைநாட்டை நோக்கிச் செல்லும் உமணர்கள் தம் வண்டியின் சக்கரம் கற்களிடை ஆழ்ந்துவிட அதில் பூட்டியுள்ள வலிமைமிக்க எருது அதன் ஆழ்ச்சியைப் போக்குகிறது. அவ் எருதினைப் போல் இடுக்கண்களைக் களைந்து ஆட்சி செய்பவன் சோழன். வெற்றி முரசு முழங்குகிற அவன் நாட்டில் நிழல் தரும் அவன் வெண்கொற்றக் குடையை இந்நிறைமதி நிகர்த்துள்ளது. இவ் ஒப்புமை காரணமாக அதனைத் தொழுதனம்.*

முந்நீர் நாப்பண் திமில் சுடர் போலச்
செம்மீன் இமைக்கும் மாக விசும்பின்
உச்சி நின்ற உவவு மதி கண்டு,
கட்சி மஞ்ஞையின் சுரமுதல் சேர்ந்த,
சில் வளை விறலியும், யானும், வல் விரைந்து,
தொழுதனம் அல்லமோ, பலவே - கானல்
கழி உப்பு முகந்து கல் நாடு மடுக்கும்
ஆரைச் சாகாட்டு ஆழ்ச்சி போக்கும்
உரனுடை நோன் பகட்டு அன்ன எம் கோன்,
வலன் இரங்கு முரசின் வாய் வாள் வளவன்,
வெயில் மறைக் கொண்ட உரு கெழு சிறப்பின்
மாலை வெண் குடை ஒக்குமால் எனவே?

திணை - அது; துறை - குடை மங்கலம்.

சோழன் குராப்பள்ளித் துஞ்சிய பெருந் திருமாவளவனை உறையூர் மருத்துவன் தாமோதரனார் பாடியது.

# 61. சோழன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நலங்கிள்ளி சேட் சென்னி

*வயலில் நெய்தலையும், ஆம்பலையும் உழத்தியர் களைகளாகக் களைவர். அவ்வயல்களில் உள்ள வாளையைப் பிடித்துத் துண்டாக்கிச் சோற்றுக்குக் கறியாகக் கொண்டு அவ்வூர் உழவர் விலாப்புடைக்கத் தின்பர்; அதனால் செயல் தடுமாறுவர். அவர் தம் சிறுவர்கள் தேங்காயைப் பறித்துத் தின்பர். அவை திகட்டிவிட்டால் தம் தந்தையர் எழுப்பிக் குவித்துவைத்த வைக்கோல் போரில் ஏறிப் பனம் பழத்தைப் பறிப்பர். இத்தகைய புதுவருவாய் உடையது சோழ நன்னாடு.*

*அதன் தலைவன் சோழர் தலைவன் சென்னி. அவனுடன் போர் செய்ய முற்படுவாராயின் அவர்களுக்கு உறுவது யாம் அறிவோம். அவன் தோளோடு மலைந்தோர் வாழ்ந்ததும் இல்லை; அவன் காலடியில் விழுந்து வணங்கியவர் தாழ்ந்ததும் இல்லை.*

கொண்டைக் கூழைத் தண் தழைக் கடைசியர்
சிறு மாண் நெய்தல் ஆம்பலொடு கட்கும்,
மலங்கு மிளிர், செறுவின் தளம்பு தடிந்து இட்ட
பழன வாளைப் பரூஉக் கண் துணியல்
புது நெல் வெண் சோற்றுக் கண்ணுறை ஆக,
விலாப் புடை மருங்கு விசிப்ப மாந்தி,
நீடு கதிர்க் கழனிச் சூடு தடுமாறும்
வன் கை வினைஞர் புன் தலைச் சிறாஅர்
தெங்கு படு வியன் பழம் முனையின், தந்தையர்
குறைக்கண் நெடும் போர் ஏறி, விசைத்து எழுந்து
செழுங் கோட் பெண்ணைப் பழம் தொட முயலும்,
வைகல் யாணர், நல் நாட்டுப் பொருநன்,
எஃகு விளங்கு தடக் கை இயல் தேர்ச் சென்னி,
சிலைத்தார் அகலம் மலைக்குநர் உளர் எனின்
தாம் அறிகுவர் தமக்கு உறுதி; யாம் அவன்
எழு உறழ் திணி தோள் வழு இன்று மலைந்தோர்
வாழக் கண்டன்றும் இலமே; தாழாது,
திருந்து அடி பொருந்த வல்லோர்
வருந்தக் காண்டல், அதனினும் இலமே.

திணை - வாகை; துறை - அரச வாகை.

சோழன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நலங்கிள்ளி சேட் சென்னியைக் கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக் குமரனார் பாடியது.

## 62. சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதன் சோழன் வேற் பல் தடக்கைப் பெருவிறற் கிள்ளி

*ஒருவரை ஒருவர் வெல்வது எங்ஙனம் முடியும்? எதிர்த்த இருதிறத்துப் படை வீரர்கள் படுகளத்தில் பட்டு உயிர் துறந்தனர். பேய்களும் பருந்துகளும் அவர்களைச் சுற்றி வட்டமிடுகின்றன.*

எதிர்த்த அரசர்கள் இருவரும் மாய்ந்து ஒழிந்தனர். குடைகள் சாய்ந்து ஒழிந்தன; முரசங்கள் ஒலித்தல் நின்றன.

போர்க் களத்தில் போர் செய்வார் இன்மையால் அவை வெறிச்சிடுகின்றன. பாசறைகளில் வீரர்கள் நடமாட்டம் அற்றுவிட்டது. இறந்துபட்ட வீரர்களின் துணைவியர் கைம்மை நோன்பு மேற்கொள்ளாமல் உயிர் வாழ்தலை வெறுத்து அவர்கள் உடன் மாய்ந்தனர்; வீரர்கள் மார்புகளைத் தழுவிய வண்ணம் உடன் வீழ்ந்தனர்; உயிர்விட்டனர்.

வீரத்தோடு பொருதமையால் தேவர்களும் நல் விருந்தினரைப் பெற்றனர். போர் செய்த வீரர்கள் துறக்க வாழ்வு அடைந்தனர். அதனால் நும்தம் புகழ் சிறப்புறுவதாக.

வரு தார் தாங்கி, அமர் மிகல் யாவது?
பொருது ஆண்டு ஒழிந்த மைந்தர் புண் தொட்டுக்,
குருதிச் செங் கைக் கூந்தல் தீட்டி,
நிறம் கிளர் உருவின் பேஎய்ப் பெண்டிர்
எடுத்து எறி அனந்தற் பறைச் சீர் தூங்கப்
பருந்து அருந்துற்ற தானையொடு, செரு முனிந்து,
அறத்தின் மண்டிய மறப் போர் வேந்தர்-
தாம் மாய்ந்தனரே; குடை துளங்கினவே;
உரைசால் சிறப்பின் முரைசு ஒழிந்தனவே;
பல் நூறு அடுக்கிய வேறு படு பைஞ் ஞிலம்
இடம் கெட ஈண்டிய வியன் கண் பாசறை,
களம் கொளற்கு உரியோர் இன்றித் தெறுவர,
உடன் வீழ்ந்தன்றால், அமரே; பெண்டிரும்
பாசடகு மிசையார், பனி நீர் மூழ்கார்,
மார்பகம் பொருந்தி ஆங்கு அமைந்தனரே;
வாடாப் பூவின், இமையா நாட்டத்து,
நாற்ற உணவினோரும் ஆற்ற
அரும் பெறல் உலகம் நிறைய
விருந்து பெற்றனரால்; பொலிக, நும் புகழே!

திணை - தும்பை; துறை - தொகை நிலை.

சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதனும், சோழன் வேற் பல் தடக்கைப் பெருவிறற்கிள்ளியும், போர்ப்புறத்துப் பொருது வீழ்ந்தாரைக் கழாத்தலையார் பாடியது.

# 63. சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதன்

*அம்புபட்ட யானைகள் அனைத்தும் வினையின்றிக் களத்தில் பட்டு இறந்துவிட்டன. வீரர்களோடு குதிரைகள் சேர்ந்து இறந்துவிட்டன. தேரில் செல்லும் வீரர்கள் எல்லாம் தம் கண்களைத் தாம் பிடித்த பரிசைகள் மறைக்க ஒருங்கு மாய்ந்தனர். முரசங்களும் அவற்றை எடுத்து அடிப்பார் இல்லாமையால் பழுதுபட்டுப் பாழாகிவிட்டன. வேல்கள் மார்பில் பாய்ந்ததால் வேந்தர்கள் இருவரும் களத்தில் இறந்துபட்டனர். இனி இவர்கள் நாடு என்ன ஆகும்? எவ்வாறு துளிர்க்கும்?*

*வயல்களில் ஆம்பல் தண்டினை வளையல்களாக அணிந்த மகளிர் பச்சை அவல் அரிசியை வாயில் இட்டு முக்கியவராய்த் தண்புனலில் பாய்ந்து விளையாடுவர். புதிய விளைச்சல்கள் தொடர்ந்து வருவாய் உடைய வயல்கள் மிக்க நாடுகள் அவர்களுடையவை. அவற்றைக் காப்பார் இல்லாமையால் அழிவுபடுவது உறுதி; அவர்கள் நாடுகள் சீர்கெட்டு அழியும்.*

எனைப் பல் யானையும் அம்பொடு துளங்கி,
விளைக்கும் வினை இன்றிப் படை ஒழிந்தனவே;
விறற் புகழ் மாண்ட புரவி எல்லாம்
மறத் தகை மைந்தரொடு ஆண்டுப் பட்டனவே;
தேர் தர வந்த சான்றோர் எல்லாம்,
தோல் கண் மறைப்ப, ஒருங்கு மாய்ந்தனரே;
விசித்து வினை மாண்ட மயிர்க் கண் முரசம்,
பொறுக்குநர் இன்மையின், இருந்து விளிந்தனவே;
சாந்து அமை மார்பில் நெடு வேல் பாய்ந்தென,
வேந்தரும் பொருது, களத்து ஒழிந்தனர்; இனியே,
என் ஆவதுகொல்தானே-கழனி
ஆம்பல் வள்ளித் தொடிக் கை மகளிர்
பாசவல் முக்கித் தண் புனல் பாயும்,
யாணர் அறாஅ வைப்பின்
காமர் கிடக்கை அவர் அகன் தலை நாடே?

திணையும் துறையும் அவை.

அவரை அக் களத்தில் பரணர் பாடியது.

# 64. பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி

முதுகுடுமிப் பெருவழுதி பகைப் புலத்தில் வீரர்களைச் சாய்த்து வெற்றி பெற்றிருக்கிறான். அவன் யானைகள் அவன் நடத்தும் அமரில் பகைவர்களைத் தாக்கி வீழ்த்தி உள்ளன. படுகளம் அதனைச் சுற்றிப் பருந்துகள் வட்டமிடுகின்றன. அவன் வெற்றி பெற்றுள்ளான்.

நம் வறுமை தீர அவன் வழங்குவான். இதுவரை உப்பு மில்லாமல் வெறும் நீர் கலந்த பருக்கைச் சோறு தின்று சலித்து விட்டோம். அதைவிட்டு ஒழிக்க அவனைச் சென்று பாடுவோம்.

நல்யாழையும், சிறுபறையையும் தோல்பையில் போட்டுக் கட்டி வைத்து அதைச் சுமந்து கொண்டு வளையல்கள் சில அணிந்த விறலியே! நாம் பகைப் புலத்தில் உள்ள அவனை நாடிச் செல்வோமாக.

நல் யாழ், ஆகுளி, பதலையொடு சுருக்கிச்
செல்லாமோதில் - சில் வளை விறலி!-
களிற்றுக் கணம் பொருத கண் அகன் பறந்தலை,
விசும்பு ஆடு எருவை பசுந் தடி தடுப்பப்
பகைப் புலம் மரீஇய தகைப் பெருஞ் சிறப்பின்
குடுமிக் கோமாற் கண்டு,
நெடு நீர்ப் புற்கை நீத்தனம் வரற்கே?

திணை - பாடாண் திணை; துறை - விறலியாற்றுப்படை.

பாண்டியன் பல் யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதியை நெடும்பல்லியத்தனார் பாடியது.

# 65. சேரமான் பெருஞ்சேரலாதன்

முழவுகள் மார்ச்சனை மறந்தன. யாழ்கள் இசை எழுப்பு வதை நிறுத்தியன. உண்கலங்கள் கொழுஞ்சோறு மறந்தன. சுற்றத்தினர் கள்ளை மறந்தனர்; உழவர்கள் உழும் தொழிலை மறந்தனர். ஊர்கள் விழா எடுப்பதை நிறுத்தி விட்டனர்.

போர் மூண்டது; நிலவு நிறை நாளில் சூரியனும் சந்திரனும் நேர் எதிர் நின்றால் ஒன்று நிலை பெறுகின்றது; மற்றொன்று

*மறைந்து விடுகிறது. அதுபோல் எம்சேர அரசன் மறைவு நிகழ்ந்துவிட்டது; அவன் மார்பில் பாய்ந்த அம்பு முதுகுவழிச் சென்றது. அதனால் புறப்புண் ஏற்பட அதற்காக நாணி வடக் கிருந்து உயிர் விடத் துணிந்தான். அவன் இனி மறைந்த பிறகு எங்களுக்குப் பகலும் இருளாகும்; துன்பத்தில் ஆழ்பவராவோம்.*

மண் முழா மறப்பப், பண் யாழ் மறப்ப,
இருங் கண் குழிசி கவிழ்ந்து இழுது மறப்பச்
சுரும்பு ஆர் தேறல் சுற்றம் மறப்ப,
உழவர் ஓதை மறப்ப, விழவும்
அகலுள் ஆங்கண் சீறூர் மறப்ப,
உவவுத் தலைவந்த பெரு நாள் அமையத்து,
இரு சுடர் தம்முள் நோக்கி, ஒரு சுடர்
புன்கண் மாலை மலை மறைந்தாங்குத்
தன் போல் வேந்தன் முன்பு குறித்து எறிந்த
புறப் புண் நாணி, மறத் தகை மன்னன்
வாள் வடக்கிருந்தனன்; ஈங்கு,
நாள் போல் கழியல, ஞாயிற்றுப் பகலே.

திணை - பொதுவியல்; துறை - கையறு நிலை.

சேரமான் பெருஞ் சேரலாதன் சோழன் கரிகாற் பெருவளத்தானோடு பொருது, புறப் புண் நாணி, வடக்கிருந்தானைக் கழாத்தலையார் பாடியது.

## 66. சோழன் கரிகாற் பெருவளத்தான்

*கடலில் காற்றை எதிர்த்துக் கலம் செலுத்திய திறலோன் வழிவந்தவன் நீ! கரிகால் வளவனே! நீ போரில் உன் ஆற்றல் தோன்ற வென்றாய்;*

*வெண்ணிப் பறந்தலையில் உன்னோடு போர் செய்த பெருஞ்சேரலாதன் புறப்புண்ணுக்கு நாணம் கொண்டு வடக்கிருந்து உயிர் விட்டான். நீ விட்ட அம்பு அவன் மார்பைத் துளைத்து அது முதுகுவழிச் சென்றது; அதனால் அவனுக்கு ஏற்பட்டது இப்புறப்புண். நீ அடைந்த வெற்றி மிகப் பெரிது; பாராட்டத்தக்கதுதான்.*

*எனினும் அவன் தன் உயிரை விட்டுப் புகழ் எய்திவிட்டான்; அதனால் அவன் உன்னைவிட உயர்ந்து விட்டான். நன்மையை அவன் அடைந்து உயர்வு பெற்றான்; அதற்கு நீ துணை செய்தாய்.*

நளி இரு முந்நீர் நாவாய் ஓட்டி,
வளி தொழில் ஆண்ட உரவோன் மருக!
களி இயல் யானைக் கரிகால்வளவ!
சென்று, அமர்க் கடந்த நின் ஆற்றல் தோன்ற
வென்றோய்! நின்னினும் நல்லன் அன்றே-
கலி கொள் யாணர் வெண்ணிப் பறந்தலை,
மிகப் புகழ் உலகம் எய்திப்
புறப் புண் நாணி, வடக்கிருந்தோனே.

திணை - வாகை; துறை - அரச வாகை.

சோழன் கரிகாற் பெருவளத்தானை வெண்ணிக் குயத்தியார் பாடியது.

## 67. கோப்பெருஞ்சோழன்

*அன்னச் சேவலே! சோழனின் ஒளி பெற்ற முகத்தைப் போல விளங்கும் முழு நிலவு வீசும் இந்த மாலைப் பொழுதில் யாம் தனிமையில் நிற்கிறோம்.*

*குமரித்துறையில் அயிரை மீனை உண்டு வயிறு நிறைந்து பின் வடமலை நோக்கிச் செல்வாயாயின் இடையில் சோழ நல் நாட்டில் தங்க நேரிட்டால் உறையூர் உயர் நிலை மாடத்தில் உள்ள குறும்பு அறையில் தங்கி வாயில் மறுத்தாலும் விடாது அரண் மனைக்குள் புகுந்து எம்பெருங்கோ கிள்ளி கேட்கும்படி பிசிர் என்னும் ஊரில் வாழும் ஆந்தையின் அடியின் கீழ் தங்குபவன் நீ என்று அவனிடம் கூறினால் மாட்சிமை மிக்க நின் பெடை பூட்டிக் கொள்ள நல்ல ஆபரணங்களை உனக்குத் தருவான். நீ அவற்றைப் பெடை அன்னத்துக்குத் தர அது மகிழ்ச்சி அடையும்.*

அன்னச் சேவல்! அன்னச் சேவல்!
ஆடு கொள் வென்றி அடு போர் அண்ணல்
நாடு தலை அளிக்கும் ஒள் முகம் போலக்
கோடு கூடு மதியம் முகிழ் நிலா விளங்கும்
மையல் மாலை, யாம் கையறுபு இனையக்
குமரிஅம் பெருந் துறை அயிரை மாந்தி,
வடமலைப் பெயர்குவைஆயின், இடையது
சோழ நல் நாட்டுப் படினே, கோழி
உயர் நிலை மாடத்து, குறும்பறை அசைஇ,
வாயில் விடாது கோயில் புக்கு, எம்

பெருங் கோக் கிள்ளி கேட்க, இரும் பிசிர்
ஆந்தை அடியுறை எனினே, மாண்ட நின்
இன்புறு பேடை அணியத் தன்
அன்புறு நன் கலம் நல்குவன் நினக்கே.

திணை - பாடாண் திணை; துறை - இயன்மொழி
கோப்பெருஞ் சோழனைப் பிசிராந்தையார் பாடியது.

## 68. சோழன் நலங்கிள்ளி

உடும்பு உரித்ததுபோல் உன் கடும்பினர் விலா எலும்புகள் வெளியே தெரியும்படி பசித்து வருந்தி இருக்கின்றனர். அவர்தம் கடும்பசியைக் களைபவரைக் காணாமல் வழி காட்டுபவர் இல்லாமையால் வெறுத்து ஒதுங்கி வாழும் பாணனே! நீ இங்கு இருந்து என்ன செய்யப் போகிறாய்?

எம் தலைவன் சோழன் நலங்கிள்ளி அவன் சிறப்புகளைக் கூறுகிறேன்; செவி மடுப்பாயாக! மெல்லியல் மகளிர்க்கு அவன் இனிமையானவன். அவர்பால் மென்மொழி பேசி அவர்களை மகிழ்விப்பான்.

பகைத் தன்மை கொண்டு வந்து அணுகினால் அவர்களை அகப்படுத்திப் புன்மையராக்கும் வன்மை உடையவன்.

அவன் காவிரி பாயும் வளம்மிக்க நாட்டை உடையவன்; அவன் நாட்டில் வீரர்கள் போர் செய்யத் தினவு கொண்டிருக் கின்றனர்.

நாட்டில் உட்பகை தீர்ந்து விட்டது; வெளிப் பகைக்கும் வாய்ப்பு இல்லாமையால் வீரர்கள் செயலின்றிக் கிடக்கின்றனர். வாழ்க்கையை வெறுத்து இருக்கின்றனர். போர்ப்பறை கேட்டு அவர்கள் கிளர்ச்சி உறுகின்றனர்.

அவன் யானைகள், கள் பருகுவார் கை நடுங்கிச் சிந்திய கள் அதனால் ஏற்படும் சேறு அதில் கால் வைத்து அகப்பட்டுக் கொண்டு அசையாமல் நிற்கின்றன. போர் முரசு அதன் பேரொலி அதனைக் கேட்கும் ஆர்வத்துடன் உற்றுக் கவனித்து வருகின்றன. அத்தகைய சிறப்பு உடையது உறந்தை நகர்; அதன் தலைவன் இவன்.

அவனிடம் சென்று பொருள் பெறுக! அவனிடம் பொருள் பெறுபவர் பிறர் கடை வாயிலை நினைக்கவே மாட்டார்கள். செல்வ வளம் பெற்றுச் சிறப்புப் பெறுக.

உடும்பு உரித்தன்ன என்பு எழு மருங்கின்
கடும்பின் கடும் பசி களையுநர்க் காணாது,
சில் செவித்து ஆகிய கேள்வி நொந்து நொந்து,
ஈங்கு எவன் செய்தியோ? - பாண! - பூண் சுமந்து,
அம் பகட்டு எழிலிய செம் பொறி ஆகத்து
மென்மையின் மகளிர்க்கு வணங்கி, வன்மையின்
ஆடவர்ப் பிணிக்கும் பீடு கெழு நெடுந் தகை,
புனிறு தீர் குழவிக்கு இலிற்று முலை போலச்
சுரந்த காவிரி மரம் கொல் மலி நீர்
மன்பதை புரக்கும் நல் நாட்டுப் பொருநன்,
உட்பகை ஒரு திறம் பட்டெனப் புட் பகைக்கு
ஏவான் ஆகலின், சாவேம் யாம் என,
நீங்கா மறவர் வீங்கு தோள் புடைப்பத்
தணி பறை அறையும் அணி கொள் தேர் வழிக்
கடுங் கள் பருகுநர் நடுங்கு கை உகுத்த
நறுஞ் சேறு ஆடிய வறுந் தலை யானை
நெடு நகர் வரைப்பில் படு முழா ஓர்க்கும்
உறந்தையோனே குருசில்;
பிறன் கடை மறப்ப, நல்குவன், செலினே.

திணை - அது; துறை - பாணாற்றுப்படை.
சோழன் நலங்கிள்ளியைக் கோவூர் கிழார் பாடியது.

# 69. சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன்

கையில் நீ மீட்டுவது யாழ்; புரவலர் இன்மையால் உன்னை வாட்டுவது பசி; உன் இடுப்பில் வேற்று இழை நுழைந்து வியர்வையால் நனையப் பெற்ற கந்தல் ஆடை; அதனை நீ பாதுகாத்து உடுத்துகின்றாய்.

அறக்கொள்கை இல்லாதவன் யாக்கை போலப் பொலிவிழந்த வாழ்க்கையை உடைய உன் மெலிந்த சுற்றத்தினரோடு

*ஊர் ஊராகச் சுற்றி வந்து களைத்து விட்டு மெதுவாக என்னை அணுகி வினவுகின்றாய்!*

*போர்க் களத்தில் யானைகள் பலவற்றைக் கொன்று வீழ்த்தி வெற்றி பெற்றவன்; உயர்நிலை மாடங்களை உடைய உறந்தைக்கு அரசன்; பகைவரைத் தாக்க ஏந்திய வேலினை உடையவன்; பகைவர் புலம் சென்று அவர்களை எதிர்க்கும் ஆற்றல் உடையவன்; பசும் பொன்னால் இயன்ற பூண்களை அணிந்தவன்; கிள்ளிவளவன் அவனைச் சார்ந்து படர்குவை ஆயின் அவன் வாசற்கடையில் நிற்கவே தேவை இல்லை. கடும் பகலில் அவன் தேர் வீசிப் பரிசிலர்க்கு அளிக்கும் ஓலக்கம் அதனை நீ சற்று உற்றுப் பார்த்தால் போதுமானது. நீ அவன் பார்வையில் பட்டால் உடனே நீ பொற்றாமரை சூட அவன் தருவது உறுதி.*

கையது, கடன் நிறை யாழே; மெய்யது,
புரவலர் இன்மையின் பசியே; அரையது,
வேற்று இழை நுழைந்த வேர் நனை சிதாஅர்
ஓம்பி உடுத்த உயவற் பாண!
பூட்கை இல்லோன் யாக்கை போலப்
பெரும் புல்லென்ற இரும் பேர் ஒக்கலை;
வையகம் முழுதுடன் வளைஇப் பையென
என்னை வினவுதிஆயின், மன்னர்
அடு களிறு உயவும் கொடி கொள் பாசறைக்
குருதிப் பரப்பின் கோட்டு மா தொலைச்சிப்
புலாக் களம் செய்த கலாஅத் தானையன்
பிறங்கு நிலை மாடத்து உறந்தையோனே;
பொருநர்க்கு ஓக்கிய வேலன், ஒரு நிலைப்
பகைப் புலம் படர்தலும் உரியன்; தகைத் தார்
ஒள் எரி புரையும் உரு கெழு பசும் பூண்
கிள்ளி வளவற் படர்குவைஆயின,
நெடுங் கடை நிற்றலும் இலையே; கடும் பகல்
தேர் வீசு இருக்கை ஆர நோக்கி,
நீ அவற் கண்ட பின்றைப் பூவின்
ஆடு வண்டு இமிராத் தாமரை
சூடாயாதல் அதனினும் இலையே.

திணை துறையும் அவை.

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனை ஆலத்தூர் கிழார் பாடியது.

# 70. சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன்

சீறியாழ்ப் பாணனே! யாமையைக் கோத்து வைத்தது போலக் கிணையைக் கொம்பில் இயைத்து வைத்துள்ளாய்; உன் பாடல் இசையைக் கேட்க என்று என்னை அழைத்து வினவுகின்றாய்; இரவலனே!

தை மாதத்துத் தண்குளம்போல் கொள்ளக் கொள்ளக் குறையாத செல்வ வளம் மிக்கது அவன் அரண்மனை.

அந்த நாட்டு மக்கள் அடுப்புத் தீயைக் கண்டு உள்ளனர். சூரியனின் வெப்பத்தை அறிந்துள்ளனர். வெம்மை என்பதை அவர்கள் கண்டது இல்லை. அவன் ஆட்சியில் செம்மையைத்தான் காண்கின்றனர். அத்தகைய தலைவன் கிள்ளி வளவனின் நற்புகழைக் கேட்டு அறிந்து அதனை மதித்து இனிய நகைமொழி உடைய விறலியோடு நீ சென்றால் செல்வம் பெற்று உயர்வாய்.

விறகு வெட்டி எடுத்துவரச் செல்லும்ஆள் எதிர்பாராமல் பொன் கிடைக்க அதனைப் பெறுகிறான். அதைப் போன்றது அன்று அவன் ஈகை; பெறுவோமோ இல்லையோ என்று ஐயுறுதல் வேண்டாம்; எதிர்பாராமல் கிடைப்பது அன்று; பரிசில் பெறுவது உறுதி.

தேஎம் தீம் தொடைச் சீறியாழ்ப் பாண!
'கயத்து வாழ் யாமை காழ் கோத்தன்ன
நுண் கோல் தகைத்த தெண் கண் மாக் கிணை
இனிய காண்க; இவண் தணிக' எனக் கூறி;
வினவல் ஆனா முது வாய் இரவல!
தைஇத் திங்கள் தண் கயம் போலக்
கொளக்கொளக் குறைபடாக் கூழுடை வியல் நகர்,
அடுதீ அல்லது சுடுதீ அறியாது;
இரு மருந்து விளைக்கும் நல் நாட்டுப் பொருநன்,
கிள்ளி வளவன் நல் இசை உள்ளி,
நாற்ற நாட்டத்து அறு கால் பறவை
சிறு வெள் ஆம்பல் ஞாங்கர் ஊதும்
கை வள் ஈகைப் பண்ணன் சிறுகுடிப்

பாதிரி கமழும் ஓதி, ஒள் நுதல்,
இன் நகை விறலியொடு மென்மெல இயலிச்
செல்வைஆயின், செல்வை ஆகுவை;
விறகு ஒய் மாக்கள் பொன் பெற்றன்னதோர்
தலைப்பாடு அன்று, அவன் ஈகை;
நினைக்க வேண்டா; வாழ்க, அவன் தாளே!

திணையும் துறையும் அவை.

அவனைக் கோவூர் கிழார் பாடியது.

## 71. ஒல்லையூர் தந்த பூதப் பாண்டியன்

*சிங்கத்தைப் போன்று சினந்து ஊக்கமிக்கவராகத் தாக்குதற்கு வருவராயின் அவர்களைப் பொருது அவர்களை அலறத் தாக்கா விட்டால் தேரோடு அவர்களைப் புறம் காணச் செய்யவில்லை யென்றால் யான் இழிவுகள் பல அடைவேனாக.*

*மதிக்கும் என் அன்பு மனைவியைப் பிரிந்து தனிமை உறுபவன் ஆகுக.*

*நீதி அற்றவனை அறங்கூறு அவையத்து இருத்தி அவன் தவறு செய்ய யான் காரணம் ஆவேன் ஆகுக; கொடுங்கோல் வேந்தன் என்ற நிலையை எய்துவேன் ஆகுக.*

*என் நண்பினர் மையல் என்னும் ஊருக்குத் தலைவனான மாவன், ஆந்தை, அந்துவஞ் சாத்தன், ஆதன் அழிசி, சினம் மிக்க இயக்கன் இவர்கள் உட்பட ஏனைய நண்பர்களோடு கலந்து உரையாடி மகிழும் வாழ்க்கையை இழப்பேன் ஆகுக.*

*மக்களைக் காக்கும் மிக்க உயர்குடியில் பிறந்த யான் தென்புலம் காவல் செய்வதை விட்டு வேறு பிற வன்புலம் காக்கும் பிறப்புப் பெறுவேன் ஆகுக.*

மடங்கலின் சினைஇ, மடங்கா உள்ளத்து,
அடங்காத் தானை வேந்தர் உடங்கு இயைந்து,
என்னொடு பொருதும் என்ப; அவரை
ஆர் அமர் அலறத் தாக்கித் தேரொடு
அவர்ப் புறங்காணேன் ஆயின் - சிறந்த
பேர் அமர் உண்கண் இவளினும் பிரிக;

அறன் நிலை திரியா அன்பின் அவையத்துத்
திறன் இல் ஒருவனை நாட்டி, முறை திரிந்து
மெலிகோல் செய்தேன் ஆகுக; மலி புகழ்
வையை சூழ்ந்த வளம் கெழு வைப்பின்
பொய்யா யாணர் மையற் கோமான்
மாவனும், மன் எயில் ஆந்தையும், உரை சால்
அந்துவஞ் சாத்தனும், ஆதன் அழிசியும்,
வெஞ் சின இயக்கனும், உளப்படப் பிறரும்,
கண் போல் நண்பின் கேளிரொடு கலந்த
இன் களி மகிழ் நகை இழுக்கி யான் ஒன்றோ,
மன்பதை காக்கும் நீள் குடிச் சிறந்த
தென் புலம் காவலின் ஒரீஇப் பிறர்
வன் புலம் காவலின் மாறி யான் பிறக்கே!

திணை - காஞ்சி; துறை - வஞ்சினக் காஞ்சி.
ஒல்லையூர் தந்த பூதப் பாண்டியன் பாட்டு.

## 72. தலையாலங் கானத்துச் செரு வென்ற பாண்டியன் நெடுஞ்செழியன்

*இவன் நாட்டைப் புகழ்ந்து கூறுபவர் நகைக்கத்தக்கவர் எனவும், இளையன் இவன் எனவும் என் மனம் உளையக் கூறியதோடு அமையாமல் நெடுநல் யானையும், தேரும், குதிரையும், படையமை மறவரும், உடையம் யாம் எனச் செருக்கோடு சில சொற்கள் பேசிச் சினம் தூண்டிய வேந்தரை அரிய போரில் தாக்கி முரசத்தோடு அவர்களை அகப்படுத்தவில்லையென்றால் யான் கீழ்மை உறுவேன் ஆகுக!*

*என் குடிமக்கள் தக்க ஆட்சியின்றி அவர்கள் மிக்க துயர் அடைந்து அலமுறுவார் ஆகுக! என்னைக் கொடியன் என்று தூற்றுவாராக!*

*ஓங்கிய சிறப்பும் உயர்ந்த கேள்வியும் உடைய மாங்குடி மருதன் தலைவனாகப் புகழ்மிக்க புலவர்கள் என் நில எல்லையைப் பாடாது ஒழிவாராக!*

*என்னால் புரக்கப்படுபவர் துயரம் அடையவும், இரப் போர்க்கு ஈயவும் இயலாத வறுமையை யான் அடைவேன் ஆகுக.*

'நகுதக்கனரே, நாடு மீக்கூறுநர்;
இளையன் இவன்' என உளையக் கூறிப்
'படு மணி இரட்டும் பா அடிப் பணைத் தாள்
நெடு நல் யானையும், தேரும், மாவும்,
படை அமை மறவரும், உடையம் யாம்' என்று
உறு துப்பு அஞ்சாது, உடல் சினம் செருக்கிச்
சிறு சொல் சொல்லிய சினம் கெழு வேந்தரை
அருஞ் சமம் சிதையத் தாக்கி, முரசமொடு
ஒருங்கு அகப்படேஎன் ஆயின்- பொருந்திய
என் நிழல் வாழ்நர் செல் நிழல் காணாது,
'கொடியன் எம் இறை' எனக் கண்ணீர் பரப்பிக்
குடி பழி தூற்றும் கோலேன் ஆகுக;
ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி
மாங்குடி மருதன் தலைவன் ஆக,
உலகமொடு நிலைஇய பலர் புகழ் சிறப்பின்
புலவர் பாடாது வரைக, என் நிலவரை;
புரப்போர் புன்கண் கூர,
இரப்போர்க்கு ஈயா இன்மை யான் உறவே.

திணையும் துறையும் அவை.

பாண்டியன் தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழியன் பாட்டு.

# 73. சோழன் நலங்கிள்ளி

மெல்ல வந்து என் தாளில் விழுந்து வணங்கி 'ஈக' என்று கூறி இரப்பாராயின் அரசு மட்டும் அன்று அவர்க்கு என் இன்னுயிரும் கொடுத்து உதவுவேன்.

இந்நிலத்து மன்னர்கள் எவரேனும் என் ஆற்றலை மதிக்காமல் என்னை இகழ்ந்து பேசுவாராயின் அவர்கள் தப்பிப் பிழைத்துச் செல்வது இயலாது. தூங்குகின்ற புலியைக் கால் தடுக்கி அதன்மீது விழும் குருடனின் நிலையைத்தான் அவர்கள் அடைவர்.

அத்தகையவனை யானை தன்கால் அகப்பட்ட மூங்கில் அதைத் தின்ன அதனை வளைத்து முறிப்பதுபோல் வருந்தப் பொராமல் விட்டேனாயின் காதல் கொள்ளாத தீது உடைய மாதர்

தம் ஒல்லா முயக்கிடை என் தார் குழைவதாக! ஒழுக்கக் கேடு என்பால் விளைவது ஆகுக!

மெல்ல வந்து, என் நல் அடி பொருந்தி,
'ஈ' என இரக்குவர் ஆயின், சீருடை
முரசு கெழு தாயத்து அரசோ தஞ்சம்;
இன் உயிர் ஆயினும் கொடுக்குவென், இந் நிலத்து;
ஆற்றல் உடையோர் ஆற்றல் போற்றாது, என்
உள்ளம் எள்ளிய மடவோன், தெள்ளிதின்
துஞ்சு புலி இடறிய சிதடன் போல,
உய்ந்தனன் பெயர்தலோ அரிதே; மைந்துடைக்
கழை தின் யானைக் கால் அகப்பட்ட
வன் திணி நீள் முளை போலச் சென்று, அவண்
வருந்தப் பொரேஎன்ஆயின், பொருந்திய
தீது இல் நெஞ்சத்துக் காதல் கொள்ளாப்
பல் இருங் கூந்தல் மகளிர்
ஒல்லா முயக்கிடைக் குழைக, என் தாரே!

திணையும் துறையும் அவை.
சோழன் நலங்கிள்ளி பாட்டு.

# 74. சேரமான் கணைக்கால் இரும்பொறை

இறந்து குழந்தை பிறந்தாலும் ஊன் பிண்டம் பிறந்தாலும் அது ஆண்மையுடையதன்று என்று வாளில் வெட்டிப் புதைப்பர். இது மறவர்தம் பண்பு ஆகும். மானம் மிக்கவர் தம் செயல் ஆகும்.

பசி அது தணிய நாயினும் கேடாக நடத்தும் பகைவர் மாட்டுத் தண்ணீர் தருக என்று கேட்டுப் பெறும் இழிதகவு நேர்ந்தது; இது தக்கது அன்று; இவ்வுலகு இத்தகைய இழிவு மேற்கொள்பவரை ஏற்காது.

குழவி இறப்பினும், ஊன்தடி பிறப்பினும்,
'ஆள் அன்று' என்று வாளின் தப்பார்;
தொடர்ப் படு ஞமலியின் இடர்ப்படுத்து இரீஇய
கேள் அல் கேளிர் வேளாண் சிறுபதம்,
மதுகை இன்றி, வயிற்றுத் தீத் தணியத்

தாம் இரந்து உண்ணும் அளவை
ஈன்மரோ, இவ் உலகத்தானே?

திணை - பொதுவியல்; துறை - முதுமொழிக் காஞ்சி.

சேரமான் கணைக்கால் இரும்பொறை சோழன் செங்கணானோடு திருப்போர்ப் புறத்துப் பொருது, பற்றுக் கோட்பட்டுக் குடவாயில் கோட்டத்துச் சிறையில் கிடந்து, தண்ணீர் தா என்று பெறாது, பெயர்த்துப் பெற்றுக் கைக் கொண்டிருந்து உண்ணான் சொல்லித் துஞ்சிய பாட்டு.

## 75. சோழன் நலங்கிள்ளி

ஆட்சி என்பது வயது மூத்தவர் மறைய அவர்கள் விட்டுச் செல்வது. இது விதி முறைப்படி கிடைக்கும் வாய்ப்பு. இதனால் பெருமைபடத் தக்கது ஏதும் இல்லை.

அது யார் கைக்கு வருகிறது என்பதைப் பொருத்துத்தான் அதற்குச் சிறப்பு உண்டாகிறது. அது மக்கள் வரிப்பொருள் பெற்று உண்டு தின்று வாழும் வாழ்வாகவே முடியும். ஆண்மை அற்ற சிறியவர் பெற்றால் அதில் எந்தச் சிறப்பும் உண்டாவது இல்லை. வீரம் அற்றவர் கைக்கு வந்தால் அது அவர்க்குச் சுமையே ஆகும்.

அமர்க்குச் சென்று எதிரிகளைத் தாக்கும் ஆற்றலும் வீரமும் உடையவன் பெறுவானாயின் அது உயர்வு பெறுகிறது. முரசு கொண்டு நல்லாட்சி புரியும் பெருநில மன்னர்க்கு அது மிகவும் எளிமையானது; சுமையாகாதது. வற்றிய குளத்தில் உலர்ந்து தக்கையாகிவிட்ட வெண்கிடை போன்றது ஆகும்.

'மூத்தோர் மூத்தோர்க் கூற்றம் உய்த்தெனப்
பால் தர வந்த பழ விறல் தாயம்
எய்தினம்ஆயின், எய்தினம் சிறப்பு' எனக்
குடி புரவு இரக்கும் கூர் இல் ஆண்மைச்
சிறியோன் பெறின், அது சிறந்தன்று மன்னே;
மண்டு அமர்ப் பரிக்கும் மதனுடை நோன் தாள்
விழுமியோன் பெறுகுவன்ஆயின், தாழ் நீர்
அறு கயமருங்கின் சிறு கோல் வெண் கிடை
என்றூழ் வாடு வறல் போல, நன்றும்

நொய்தால் அம்ம தானே-மை அற்று,
விசும்புற ஓங்கிய வெண் குடை,
முரசு கெழு வேந்தர் அரசு கெழு திருவே.

திணை - அது; துறை - பொருண்மொழிக் காஞ்சி.
சோழன் நலங்கிள்ள பாட்டு.

# 76. பாண்டியன் தலையாலங் கானத்துச் செருவென்றநெடுஞ்செழியன்

இதுவரை போர் என்றால் ஒருவனை ஒருவன்தான் எதிர்த்து வந்துள்ளான். வெற்றியும் தோல்வியும் பெற்றுள்ளனர். இதுதான் உலக இயற்கையும் ஆகும்.

தான் ஒருவனாக இருந்து பாண்டியன் நெடுஞ்செழியன் எழுவர் தம் வலிமையை அடக்கி வென்றான்; இது புதுமையது ஆகும்.

பாண்டியன் ஒருவன் அவன் பெருமையையும் தலைமையையும் சரியாக உணராதவராகி எதிர்க்க வந்தது புதுமையாக உள்ளது. இதுவரை இதுபோன்ற செய்தியைக் கேட்டதும் இல்லை; அறிந்ததும் இல்லை.

வேம்பின் ஒள்ளிய தளிரையும், உழிஞைக் கொடியையும் அணிந்தவனாய் இவ் எழுவரை எதிர்த்து அவர்களை வென்றான். ஒரு தானாக நின்று எழுவரையும் பொருது களத்தில் வெற்றி பெற்றது வியக்கத்தக்கது ஆகும். வரலாறு படைத்த செய்தியும் ஆகும்.

ஒருவனை ஒருவன் அடுதலும், தொலைதலும்,
புதுவது அன்று; இவ் உலகத்து இயற்கை;
இன்றின் ஊங்கோ கேளலம்-திரள் அரை
மன்ற வேம்பின் மாச் சினை ஒண் தளிர்
நெடுங் கொடி உழிஞைப் பவரொடு மிடைந்து,
செறியத் தொடுத்த தேம் பாய் கண்ணி,
ஒலியல் மாலையொடு, பொலியச் சூடிப்
பாடு இன் தெண் கிணை கறங்கக் காண்தக,
நாடு கெழு திருவின், பசும் பூண், செழியன்

பீடும் செம்மலும் அறியார் கூடிப்
'பொருதும்' என்று தன்தலை வந்த
புனை கழல் எழுவர் நல் வலம் அடங்க,
ஒரு தான் ஆகிப் பொருது, களத்து அடலே.

திணை - வாகை; துறை - அரச வாகை.

பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனை இடைக்குன்றூர் கிழார் பாடியது.

# 77. பாண்டியன் தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்

யார் இதை எதிர்பார்த்தார்கள். நேற்றுவரை அவன் விளையாடிக் கொண்டிருந்தான். இன்று அவன் போருக்கு எழுவான் என்று யார் எதிர்பார்த்தார்கள்.

காலில் சதங்கை கட்டி இருந்தவன்; அதை நீக்கிவிட்டுக் கழலைப் புனைந்து கொண்டான்.

அழகுக்காக அவன் வளர்த்து வந்தது குடுமி முடி; அதனை மழுங்கக் களைந்து வேப்பம் தளிரையும், உழிஞைக் கொடியை யும் சூடிக் கொண்டு போர்க் கோலம் செய்து கொண்டான்.

அவன் கையைக் குறுகிய வளைகள் அழகு செய்து கொண்டிருந்தன. அவற்றைத் தூக்கி எறிந்து விட்டுக் கையில் வில்லைப் பற்றிக் கொண்டான்.

தேர் ஏந்திப் போருக்குப் புறப்பட்டு இருக்கிறான். அவன் தேர் ஏறி அமர்ந்துள்ள காட்சி தனி அழகைத் தருகிறது. ஏற்றமிகு காட்சி அது.

பொலிவுமிக்க இத்தோற்றம் காண்பவரை வியக்கச் செய்கிறது. இவன் யார்? வாழ்க இவன் தலைமாலை! மலர் மாலை அணிந்துள்ளான். இன்னும் ஐம்படைத் தாலியைக் களையவே இல்லை. பால் குடித்து வந்தவன் இன்று அவன் சோறு உண்ணத் தொடங்கியுள்ளான். சிறுவன் அவன் போர்க் கோலம் கொண்டுள்ளது வியக்கத்தக்கதாக உள்ளது.

அங்கங்கே எதிர்த்து மேல்வந்த புதிய போர் வீரர்களைக் கண்டு அவர்களை வியக்கவும் இல்லை; இழித்து உரைக்கவும்

இல்லை. அவர்களை அழுந்தப் பற்றித் தூக்கி எறிந்து நிலத்தில் மோதித் தாக்கி வெற்றி காண்கிறான்.

இது குறித்து அவன் மகிழ்வும் கொள்ளவில்லை. அரிய செயல் இது என்று தன்னை மிகுத்துப் பேசிக் கொண்டதும் இல்லை. அடக்கம் இதுதான் அவனிடம் காண முடிகிறது.

கிண்கிணி களைந்த கால் ஒண் கழல் தொட்டுக்
குடுமி களைந்த நுதல் வேம்பின் ஒண் தளிர்
நெடுங் கொடி உழிஞைப் பவரொடு மிலைந்து,
குறுந் தொடி கழித்த கைச் சாபம் பற்றி,
நெடுந் தேர்க் கொடிஞ்சி பொலிய நின்றோன்
யார்கொல்? வாழ்க, அவன் கண்ணி! தார் பூண்டு,
தாலி களைந்தன்றும் இலனே; பால் விட்டு
அயினியும் இன்று அயின்றனனே; வயின்வயின்
உடன்று மேல் வந்த வம்ப மள்ளரை
வியந்தன்றும், இழிந்தன்றும், இலனே; அவரை
அழுந்தப் பற்றி, அகல் விசும்பு ஆர்ப்பு எழக்
கவிழ்ந்து நிலம் சேர அட்டதை
மகிழ்ந்தன்றும், மலிந்தன்றும், அதனினும் இலனே.

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது

# 78. பாண்டியன் தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்

முன்பின் அறியாத புதிய வீரர்கள் வந்தவர்கள்; இவன் வீரத்தை மதியாது வீணாக வந்து எதிர்த்து அகப்பட்டுக் கொண்டனர்.

புலி குகையிலிருந்து மூரி நிமிர்ந்து புறப்பட்டு இரையைத் தேடிச் செல்வது போல எம் தலைவன் விளங்குகிறான். அவனை மதிக்காமல் போர் செய்யப் புதியவர் வந்தனர். யாம் மிக்க வலிமை உடையவர் என்று தம்மை மதித்துக் கொண்டனர். நம்மோடு போர் செய்யும் இவன் இளையன்; அறியாத சிறுவன் என்று இகழ்ந்தனர். இவனை வென்றால் கொள்ளத்தக்க பொருளும் மிகுதி என எள்ளி வந்து எதிர்த்தனர்.

நேரில் சந்தித்தபின் இவன் ஆற்றல் முன் நிற்க மாட்டாராய் ஒடுங்கி நின்றனர்; அவர்கள் கண்கள் பொலிவு இழந்தன. நலிவு அடைந்து ஓடவும் தொடங்கினர்.

அவர்களைக் களத்திலேயே வைத்துக் கொல்லாமல் ஓடவிட்டு அவர்களைப் பின்தொடர்ந்து அவரவர்தம் தந்தையர் ஆட்சி செய்த சொந்த மண்ணில் வைத்துக் கொன்று அழித்தான். அவர்கள் மனைவியர் மனம் அழிந்து அவர்களும் உடன் உயிர் விட்டனர்.

வணங்கு தொடைப் பொலிந்த வலி கெழு நோன் தாள்,
அணங்கு அருங் கடுந் திறல் என்னை முணங்கு நிமிர்ந்து,
அளைச் செறி உழுவை இரைக்கு வந்தன்ன
மலைப்பு அரும் அகலம் மதியார், சிலைத்து எழுந்து,
'விழுமியம், பெரியம், யாமே; நம்மின்
பொருநனும் இளையன்; கொண்டியும் பெரிது' என,
எள்ளி வந்த வம்ப மள்ளர்
புல்லென் கண்ணர்; புறத்தில் பெயர,
ஈண்டு அவர் அடுதலும் ஒல்லான், ஆண்டு அவர்
மாண் இழை மகளிர் நாணினர் கழியத்
தந்தை தம் ஊர் ஆங்கண்,
தெண் கிணை கறங்கச் சென்று, ஆண்டு அட்டனனே.

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

# 79. பாண்டியன் தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்

தன் மூதூர் வாயிலின்கண் உள்ள குளிர்ந்த குளத்தில் மூழ்கி, ஊர்ப் பொது மன்றத்தில் உள்ள வேம்பின் தளிரை மிலைந்து கொண்டு, தெளிந்த ஓசையை உடைய பறை முழங்கக் களிறு போலக் களத்துக்கு வந்துள்ளான்.

அவனை எதிர்க்கப் புதிதாக வந்த மறவர்கள் பலர்; அவர்களில் ஒரு சிலர் தப்பவும் முடியும். ஏனெனில் பகற்பொழுது சிறிதே உள்ளது. அதற்குள் அவர்கள் அனைவரையும் கொன்று முடிப்பது இயலாது.

மூதூர் வாயில் பனிக் கயம் மண்ணி,
மன்ற வேம்பின் ஒண் குழை மிலைந்து,
தெண் கிணை முன்னர்க் களிற்றின் இயலி,
வெம் போர்ச் செழியனும் வந்தனன்; எதிர்ந்த
வம்ப மள்ளரோ பலரே;
எஞ்சுவர் கொல்லோ, பகல் தவச் சிறிதே.

திணையும் துறையும் அவை.
அவனை அவர் பாடியது.

## 80. சோழன் போரவைக் கோப் பெருநற்கிள்ளி

இனிய கள் மிகுதியாக உள்ள ஊர் ஆமூர். பெருநற் கிள்ளி அங்கே போர் செய்யும் பொது மன்றத்தில் தனிப்போர் நடத்த வந்த மல்லனை அவன் மதவலியை முருக்கி அவனோடு போர் செய்கிறான்.

ஒரு காலை மண்டியிட்டு அவன் மார்பில் மிதித்துக் கொண்டு மற்றொரு காலால் அவனை மடக்கிப் போட்டு வளைத்து அவனோடு மற்போர் செய்கிறான்.

பசித்து அதனால் மூங்கிலை வளைத்து முறிக்கும் யானையைப் போல் அவன் தலையையும் காலையும் பிடித்து வளைத்துத் தாக்கி அவனை வெல்கிறான்.

இந்த அதிசய நிகழ்ச்சி அதனை அவன் தந்தை தித்தன் காண்பானாக! அவன் விரும்பினாலும் விரும்பா விட்டாலும் தன் மகன் பேராற்றல் கண்டு வியப்பானாக.

இன் கடுங் கள்ளின் ஆமூர் ஆங்கண்,
மைந்துடை மல்லன் மத வலி முருக்கி,
ஒரு கால் மார்பு ஒதுங்கின்றே; ஒரு கால்
வரு தார் தாங்கிப் பின் ஒதுங்கின்றே-
நல்கினும் நல்கான்ஆயினும், வெல் போர்ப்
பொரல் அருந் தித்தன் காண்கதில் அம்ம-
பசித்துப் பணை முயலும் யானை போல,
இரு தலை ஒசிய எற்றிக்
களம் புகு மல்லற் கடந்து அடு நிலையே.

திணை - தும்பை; துறை - எருமை மறம்.
சோழன் போரவைக்கோப் பெருநற்கிள்ளி முக்காவனாட்டு ஆமூர் மல்லனைப் பொருது அட்டு நின்றானைச் சாத்தந்தையார் பாடியது.

# 81. சோழன் போரவைக் கோப்பெருநற்கிள்ளி

போர்ப் பேர் ஆரவாரம் கடலினும் பெரிதாக உள்ளது. அவன் களிறு கார் காலத்து இடியைவிட முழக்கம் செய்கிறது.

ஆத்தி மாலை சூடியவன்; கவித்த கையை உடையவன்; இச்சோழ மன்னன் தோல்வியை அளிக்கிறான். இவன் கை அகப்பட்டவர் யாரோ? இரங்கத் தக்கவர் ஆகின்றனர்.

ஆர்ப்பு எழு கடலினும் பெரிது; அவன் களிறே
கார்ப் பெயல் உருமின் முழங்கல் ஆனாவே;
யார்கொல் அளியர்தாமே-ஆர் நார்ச்
செறியத் தொடுத்த கண்ணிக்
கவி கை மள்ளன் கைப்பட்டோரே?

திணை - வாகை; துறை - அரச வாகை.

அவனை அவர் பாடியது.

# 82. சோழன் போரவைக் கோப்பெரு நற்கிள்ளி

ஊரில் புதிதாக வந்த மள்ளனோடு ஆத்தி மாலை சூடிய நெடுந்தகை நிகழ்த்தும் மற்போர் வியக்கத்தக்கதாக உள்ளது.

விறுவிறுப்பும் விரைவும் கொண்டதாக உள்ளது. அதற்கு எதை உவமையாகக் கூறுவது? இவ்வூர்க் கட்டில் பின்னுபவன் அவன் கை தான் நினைவுக்கு வருகிறது. ஊரிலே திருவிழா; மனைவிக்குப் பிள்ளைப்பேறு; மழை வேறு; இந்த இழுபறிகளுக்கு அவன் ஈடு கொடுத்து ஆக வேண்டும்.

விழாவுக்குச் செல்வதா மனைவிக்குச் சென்று உதவுவதா மழை பெய்வதால் நிலத்துக்குச் சென்று விதைக்கச் செல்வதா இம் மூன்றையும் அவன் கவனித்துத்தான் ஆக வேண்டும்.

அவன் தொழில் கட்டில் பின்னுவது; அதையும் செய்து முடிக்க வேண்டும். வாரைச் செலுத்தும் அவன் கை ஊசி அது விறுவிறுப்புடன்; இயங்குகிறது. அவ் இழிதொழிலன் கை ஊசியின் விரைவு அவன் செய்யும் போரில் காண முடிகிறது. அதைத்தான் உவமையாகக் கூற முடியும்.

சாறு தலைக்கொண்டெனப் பெண் ஈற்று உற்றெனப்
பட்ட மாரி ஞான்ற ஞாயிற்றுக்
கட்டில் நிணக்கும் இழிசினன் கையது
போழ் தூண்டு ஊசியின் விரைந்தன்றுமாதோ-
ஊர் கொள வந்த பொருநனொடு,
ஆர் புனை தெரியல் நெடுந்தகை போரே!

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

## 83. போரவைக் கோப்பெருநற்கிள்ளி

இவ்வூரில் இன்று மற்போர் செய்யும் காளை போன்ற தலைவனோடு யான் காதல் கொண்டுள்ளேன். அவனை அடையப் பெறாமல் மெலிந்து வருகிறேன். மெலிவு கண்டால் தாய் அறிவாள். அவள் கடிந்து கொள்வாள். அதற்காக அஞ்சுகிறேன்.

அவனை அடைந்து விடுவது என்று முடிவு கொண்டு அவனைத் தழுவச் சென்றால் இந்த அவையில் உள்ளவர் கடிந்து கொள்வர். அவர்களுக்காக அஞ்சுகிறேன்.

காதலை அடக்கிக் கொள்ளவும் முடியவில்லை; வெளிப்படுத்தித் துணிந்து யான் அவனைத் தழுவிக் கொள்ளவும் முடியவில்லை. இருவேறு உணர்வுகளுக்கு இடையே என் நெஞ்சு அலை மோதுகிறது. என்னைப்போல் இவ்வூரும் இருகூறு பட்டுள்ளது. ஒருகூறு என் தாய்; மற்றொரு கூறு இவ் அவையத்தார். அவர்களும் என்னைப் போல் வருந்துவாராக!

அடி புனை தொடுகழல், மை அணல் காளைக்கு என்
தொடி கழித்திடுதல் யான் யாய் அஞ்சுவலே;
அடு தோள் முயங்கல் அவை நாணுவலே;
என்போல் பெரு விதுப்புறுக—என்றும்
ஒரு பாற் படாஅதாகி,
இரு பாற் பட்ட இம் மையல் ஊரே!

திணை - கைக்கிளை; துறை - பழிச்சுதல்

அவனைப் பெருங்கோழிநாய்க்கன் மகள் நக்கண்ணையார் பாடியது.

## 84. போரவைக் கோப்பெரு நற்கிள்ளி

என் தலைவன் நாடிழந்த வறுமையால் புல்லிய உணவு உண்டபோதும் பெருந்தோளானே யாவான்; வலிமை குறைந்தவன் அல்லன்.

யான் அவன் புறஞ்சிறை இருந்தும் அவனை அடையப் பெறாமையினால் பசலை பாய்ந்து பொன் நிறத்தைப் பெற்றுள்ளேன்.

போரை ஏற்று என் தலைவன் போர்க்களம் புகுந்தால் கல்லென ஆரவாரம் செய்யும் விழா எடுக்கும் போர்க் களத்தில் அவனை எதிர்க்கும் மள்ளர்க்கு அவன் உமணர் வெருவும் கற்கள் நிரம்பிய துறையாவான். அவனை வெல்வது அரிது ஆகும்.

என்னை, புற்கை உண்டும் பெருந் தோளன்னே;
யாமே, புறஞ் சிறை இருந்தும் பொன் அன்னம்மே;
போர் எதிர்ந்து என்னை போர்க் களம் புகினே,
கல்லென் பேர் ஊர் விழவுடை ஆங்கண்,
ஏமுற்றுக் கழிந்த மள்ளர்க்கு
உமணர் வெரூஉம் துறையன்னன்னே.

திணையும் துறையும் அவை.
அவனை அவர் பாடியது.

## 85. போரவைக் கோப்பெரு நற்கிள்ளி

என் தலைவன் கிள்ளி வளவனுக்கு இஃது சொந்த ஊர் அன்று; அவனுக்கு இது சொந்த நாடும் அன்று; இவ்வூர்க்கு அவன் புதியவன்.

அதனால் அவனை இவ்வூர் மக்கள் நன்கு அறிந்தவர் அல்லர்; அவன் வெற்றி அடைவது உறுதி என்று கூறுபவர் சிலர்; வெற்றி அடைவது இயலாது என்று உரைப்பவர் சிலர். ஆளுக்கு ஒருவிதமாகப் பலரும் பலவாறாகப் பேசுகின்றனர். அதுவும் நல்லதே யாகும். அவன் பெருமை பேசப்படுகின்றது.

இதைக் கேட்டு ஆர்வ மிகுதியால் காற்சிலம்பு ஒலிக்க ஓடோடிச் சென்று என் மனையின்கண் போந்தை மரத்தின்

மறைவின் இருந்து யான் இந்தப் போரினைக் காண முடிந்தது. மகத்தான வெற்றி; அவன் பெரு வெற்றி அடைந் தான். அதை யான் கண்டு மகிழ்கிறேன். தெளிவான முடிவு.

என்னைக்கு ஊர் இஃது அன்மையானும்,
என்னைக்கு நாடு இஃது அன்மையானும்,
'ஆடு ஆடு' என்ப, ஒரு சாரோரே;
'ஆடு அன்று' என்ப, ஒரு சாரோரே;
நல்ல, பல்லோர் இரு நன் மொழியே;
அம் சிலம்பு ஒலிப்ப ஓடி, எம் இல்,
முழா அரைப் போந்தை பொருந்தி நின்று,
யான் கண்டனன், அவன் ஆடு ஆகுதலே.

திணையும் துறையும் அவை.
அவனை அவர் பாடியது.

# 86. காவற்பெண்டு - தன்னிலை விளக்கம்

''இந்தச் சிறிய வீட்டின் முற்றத்தில் தூணைப் பற்றிக் கொண்டு''நின் மகன் எங்கே இருக்கிறான்?'' என்று வினவுகின்றாய்.

அவன் எங்கே இருப்பான் என்பதை என்னால் சுட்டிக் கூற இயலாது.

என்றாலும் இது மட்டும் என்னால் கூற முடியும். ஈன்ற வயிறு இது; புலி சேர்ந்து வதிந்த கற்குகை இது. இதுவே அவனுக்கும் எனக்கும் உள்ள தொடர்பு. அவனைப் போர்க்களத்தில் காணலாம்.

சிற்றில் நல் தூண் பற்றி, 'நின் மகன்
யாண்டு உள்னோ?' என வினவுதி; என் மகன்
யாண்டு உளன்ஆயினும் அறியேன்; ஓரும்
புலி சேர்ந்து போகிய கல் அளை போல,
ஈன்ற வயிறோ இதுவே;
தோன்றுவன்மாதோ, போர்க்களத்தானே!

திணை - வாகை; துறை - ஏறாண் முல்லை.
காவற்பெண்டின் பாட்டு.

# 87. அதியமான் நெடுமான் அஞ்சி

பகைவர்களே களத்தில் புகுவதைத் தவிருங்கள்.

போரை ஏற்க எங்களிடத்து ஒப்பற்ற வீரன் ஒருவன் உளன்.

எட்டுத் தேர்களைச் செய்யும் ஆற்றல்மிக்க தச்சன் ஒருவன் ஒரு திங்கள் பொழுதில் ஓரே ஒரு சக்கரத்தைச் செய்கிறான் என்று வைத்துக் கொள்ளுங்கள். அந்தத் தேர்க்கால் எத்தகைய வலிமை யோடு கூடியது? அத்தகைய வலிமை உடையவன் அவன், உரம் கொண்ட நெஞ்சும், வலிமை மிக்க தோளும் உடையவன் அவன். அவனை எதிர்த்து வீணாக மாளப் போகிறீர். போர்க் களம் புகுதல் தவிர்வீராக.

களம் புகல் ஓம்புமின், தெவ்விர்! போர் எதிர்ந்து,
எம்முளும் உளன் ஒரு பொருநன்; வைகல்
எண் தேர் செய்யும் தச்சன்
திங்கள் வலித்த கால் அன்னோனே.

திணை - தும்பை; துறை - தானை மறம்.
அதியமான் நெடுமான் அஞ்சியை ஔவையார் பாடியது.

# 88. அதியமான் நெடுமான் அஞ்சி

நீவிர் யாராக இருந்தாலும் சரி; முன்னணிப் படையும் விரைந்து போர் செய்யும் தூசிப் படையும் கொண்டு போர் செய்யலாம் என்று தவறாக முடிவு செய்யாதீர்கள்.

மிக்க வலிமையினையும், நெடிய வேலினையும் தாங்கிய மழவர் குடிமகன்; போரில் வெற்றிகண்ட மாவீரன்; முழவு போன்ற தோளை உடையவன்; அத்தகைய என் தலைவனைக் காணாதவரை நீவிர் உம் படை வலிமை பற்றிப் பேசித் தருக்குக் கொண்டிருக்கலாம் இனி அதனைத் தவிர்வீர் ஆக!

தனியொருவனாகவே உங்களைக் களத்தில் சந்திக்கும் ஆற்றல் அவன்பால் உள்ளது.

யாவிர்ஆயினும், 'கூழை தார் கொண்டு
யாம் பொருதும்' என்றல் ஓம்புமின்-ஓங்கு திறல்

ஒளிறு இலங்கு நெடு வேல் மழவர் பெருமகன்,
கதிர் விடு நுண் பூண் அம் பகட்டு மார்பின்
விழவு மேம்பட்ட நல் போர்
முழவுத் தோள் என்னையைக் காணா ஊங்கே.

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

## 89. அதியமான் நெடுமான் அஞ்சி

*அழகும் பொலிவும்மிக்க விறலியே! உம் நாட்டில் என்னை எதிர்க்கத் தக்க வீரரும் உளரோ என்று அறியாமல் வினாவும் படைமிக்க வேந்தனே! உன் அறியாமையைக் கண்டு வருந்துகிறேன். எரிகோலுக்கு அஞ்சாத அரவுபோல எதிர்த்துப் போரிடும் இளம் வீரர்கள் பலர் உள்ளனர்.*

*அது மட்டும் அன்று; பொது மன்றத்தில் மரத்தில் தொங்கவிட்டு இருக்கும் பறை காற்றுக்குக் கிளை அசைந்து ஒலி செய்தாலும் அதுகூடப் போர் அழைப்பு என்று கருதி எழும் என் தலைவனும் உள்ளான். அதியன் அவன் பெரு வீரன் ஆவான்.*

இழை அணிப் பொலிந்த ஏந்து கோட்டு அல்குல்,
மடவரல், உண்கண், வாள் நுதல், விறலி!
பொருநரும் உளரோ, நும் அகன் தலை நாட்டு? என,
வினவல் ஆனாப் பொருபடை வேந்தே!
எறி கோல் அஞ்சா அரவின் அன்ன
சிறு வல் மள்ளரும் உளரே; அதாஅன்று,
பொதுவில் தூங்கும் விசியுறு தண்ணுமை
வளி பொரு தெண் கண் கேட்பின்,
'அது போர்' என்னும் என்னையும் உளனே.

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

## 90. அதியமான் நெடுமான் அஞ்சி

*காந்தள்பூ மிக்கு உள்ள மலைச்சாரலில் மறப்புலி சீறி எழுந்தால் அதன் முன் நிற்கும் மான் கூட்டம் உள்ளதா?*

*ஞாயிறு சீறி எழுந்தால் அதன் முன் திசைகள் எல்லாம் செறிந்த இருள் ஆயினும் நிற்காது.*

*உப்பு வணிகர் செலுத்தும் வண்டியை இழுத்துச் செல்லும் மிடுக்கான எருதுக்கு இதுதான் துறை என்று வகுப்பது உண்டோ? எத்தகையது ஆயினும் அதற்கு அது ஒரு தடை அன்று. எதிர்ப்பு அதற்கு ஒரு பொருட்டு அன்று.*

*கணைய மரத்தை ஒத்து விளங்கும் வலிமைமிக்க கைகளை உடைய மழவர் தம் தலைவனே! அதியர்கோனே!*

*நின் மண்ணை மிதித்து உன்னை எதிர்க்கத் துணியும் வீரரும் உள்ளனரோ? நீ களம் புகுவதால் உன்னை யாரும் எதிர்த்து நிற்க இயலாது.*

உடை வளை கடுப்ப மலர்ந்த காந்தள்
அடை மல்கு குளவியொடு கமழும் சாரல்,
மறப் புலி உடலின், மான் கணம் உளவோ?
மருளின விசும்பின் மாதிரத்து ஈண்டிய
இருளும் உண்டோ, ஞாயிறு சினவின்?
அச்சொடு தாக்கிப் பார் உற்று இயங்கிய
பண்டச் சாகாட்டு ஆழ்ச்சி சொல்லிய,
வரி மணல் ஞெமரக் கல் பக, நடக்கும்
பெருமிதப் பகட்டுக்குத் துறையும் உண்டோ?
எழுமரம் கடுக்கும் தாள் தோய் தடக் கை
வழு இல் வன் கை, மழவர் பெரும!
இரு நிலம் மண் கொண்டு சிலைக்கும்
பொருநரும் உளரோ, நீ களம் புகினே?

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

## 91. அதியமான் நெடுமான் அஞ்சி

*பகைவர் களம் பல கடந்து வெற்றி கொண்ட வேந்தே! அதியர் தலைவனே! பால்போன்ற பிறையை நெற்றியில் அணிந்துள்ளவன்; நீல நிறத்து மிடற்றினை உடையவன்*

*சிவபெருமான் நஞ்சு உண்டு தேவர்களைக் காத்தவன்; அவனைப் போல் நீ நிலைத்து இருப்பாயாக!*

*நெடுமலை உச்சியின் பிளவுகளில் கிடைத்த அரிய நெல்லிக்கனியை அதன் பெருமையை மறைத்து வைத்து எனக்குத் தந்தாய். அது உண்டால் நீண்ட நாள் வாழ முடியும் என்ற உண்மையை மறைத்து எனக்குத் தந்தாய். இது மதிக்கத்தக்க செயல் ஆகும்.*

வலம் படுவாய் வாள் ஏந்தி,ஒன்னார்
களம் படக் கடந்த கழல் தொடித் தடக் கை,
ஆர் கலி நறவின், அதியர் கோமான்
போர் அடு திருவின் பொலந் தார் அஞ்சி!
பால் புரை பிறை நுதற் பொலிந்த சென்னி
நீலமணி மிடற்று ஒருவன் போல
மன்னுக- பெரும நீயே! தொல் நிலைப்
பெரு மலை விடரகத்து அரு மிசைக் கொண்ட
சிறியிலை நெல்லித் தீம் கனி குறியாது,
ஆதல் நின் அகத்து அடக்கிச்
சாதல் நீங்க, எமக்கு ஈத்தனையே!

திணை - பாடாண் திணை; துறை - வாழ்த்தியல்,
அவனை அவர் நெல்லிப் பழம் பெற்றுப் பாடியது.

## 92. அதியமான் நெடுமான் அஞ்சி

*குழந்தையின் மழலைச் சொல் யாழ் போன்று இனிதாக இசைப்பதும் இல்லை; தாள வரையறை கொண்டதும் அன்று; பொருளும் நன்கு புலப்படுவது இல்லை. என்றாலும் அதன் தந்தைக்கு அது சுவைக்கிறது; இனிக்கிறது; நெகிழ வைக்கிறது.*

*அதைப் போன்றவைதான் என் வாய்ச் சொற்களும்.*

*பகைவர்கள் மதிலைக் கடந்து வெற்றிகள் பல கண்டாய்; நெடுமான் அஞ்சி நீ என் சொற்களைக் கேட்டு எனக்கு அருள் செய்வதும் அத்தகையதே.*

யாழொடும் கொள்ளா; பொழுதொடும் புணரா;
பொருள் அறிவாரா; ஆயினும், தந்தையர்க்கு

அருள் வந்தனவால்,புதல்வர்தம் மழலை:
என் வாய்ச் சொல்லும் அன்ன - ஒன்னார்
கடி மதில் அரண் பல கடந்த
நெடுமான் அஞ்சி! நீ அருளன்மாறே.

திணை - அது; துறை - இயன்மொழி.
அவனை அவர் பாடியது.

## 93. அதியமான் நெடுமான் அஞ்சி

*நீ நடத்திய போரில் உன்னை எதிர்த்த அரசர்கள் களத்தில் பட்டு உயிர் இழந்தனர். நீயும் மார்பில் விழுப்புண் பட்டு வீரச் செயல் விளைவித்தாய். வாழ்க நீ!*

*அவ்வாறு அவர்கள் உன்னால் வீரமரணம் அடையவில்லை என்றால் அவர்களுக்கு இந்த வாய்ப்புக் கிடைத்திருக்காது.*

*உன் தூசிப் படைக்கு ஆற்றாது அவர்கள் ஓடிச் சென்று உயிர் பிழைத்திருக்கலாம். அவர்கள் இறுதிக் காலத்தில் இயற்கை மரணம் அடைந்திருப்பார்கள்.*

*அவ்வாறு களத்தில் மடியாத வீரர்களை மறையவர் சடங்குப்படி வாளால் இருகூறு படுத்தி அவர்களைச் சவ அடக்கம் செய்திருப்பர். அந்த இழிவினின்று காத்து எதிர்த்த அனைவரையும் கொன்று முடித்தாய்; உயர்வு அளித்தாய்.*

*இனி உன்னைப் போர்க்களத்தில் எதிர்ப்பவரே யாரும் இல்லை. அதனால் போர் செய்வதற்கே இனி வாய்ப்பும் இல்லை. யானைகள் பலபட நீ பொருது விழுப்புண்பட்டுப் பெருமை பெற்றுள்ளாய். வீரம் மிக்க உன் போர்த்திறனை வியக்கிறேன். பாராட்டுகிறேன். வாழ்க நீ!*

திண் பிணி முரசம் இழுமென முழங்கச்
சென்று, அமர் கடத்தல் யாவது? - வந்தோர்
தார் தாங்குதலும் ஆற்றார், வெடிபட்டு,
ஓடல் மரீஇய பீடு இல் மன்னர்
நோய்ப்பால் விளிந்த யாக்கை தழீஇக்
காதல் மறந்து, அவர் தீது மருங்கு அறுமார்,

அறம் புரி கொள்கை நான்மறை முதல்வர்
திறம் புரி பசும் புல் பரப்பினர் கிடப்பி
'மறம் கந்தாக நல் அமர் வீழ்ந்த
நீள் கழல் மறவர் செல்வுழிச் செல்க!' என
வாள் போழ்ந்து அடக்கலும் உய்ந்தனர்மாதோ-
வரி ஞிமிறு ஆர்க்கும் வாய் புகு கடாஅத்து
அண்ணல் யானை அடு களத்து ஒழிய,
அருஞ் சமம் ததைய நூறி, நீ,
பெருந் தகை! விழுப் புண் பட்ட மாறே.

திணை - வாகை; துறை - அரச வாகை.

அவன் பொருது புண்பட்டு நின்றோனை அவர் பாடியது.

## 94. அதியமான் நெடுமான் அஞ்சி

*ஊர்ச் சிறுவர்கள் யானையின் வெண்கோட்டினைக் கழுவு கின்றனர். அவர்கள்பால் அது இனிமையாக நடந்து கொள்கிறது.*

*அதைப் போலப் புலவர்களாகிய எம்மிடத்து நீ அன்பு காட்டுகிறாய். இனியனாக விளங்குகிறாய்.*

*அதே யானை மதம் பட்டு விட்டால் அது கொடிது ஆகிறது. யாரையும் அது அணுக விடாது. அதுபோல் பகைவர்களுக்கு நீ கொடியவனாய் அமைகிறாய். அவர்கள் உன்னை அணுக இயலாது.*

ஊர்க் குறுமாக்கள் வெண் கோடு கழாஅலின்,
நீர்த் துறை படியும் பெருங் களிறு போல
இனியை, பெரும! எமக்கே; மற்று அதன்
துன் அருங் கடாஅம் போல
இன்னாய், பெரும! நின் ஒன்னாதோர்க்கே.

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

## 95. அதியமான் நெடுமான் அஞ்சி

*இங்கே போர்ப் படைக் கருவிகளை அழகாக அடுக்கி வைத்திருக்கிறாய். மயிற்பீலி சார்த்தி அவற்றை அழகுபடுத்தி யுள்ளாய். மாலை சார்த்தி வழிபாடு செய்ய வைத்திருக்கிறாய்.*

அங்கே அதியன் போர்க் கருவிகளை இப்படிக் கொட்டிலில் அடுக்கி வைக்கவில்லை; அவை போர்க் களத்தில் பகைவரைக் குத்தியதால் முனைகள் சிதைந்து பழுதுபட்டு உள்ளன. அவற்றைக் கொல்லன் கொட்டிலுக்கு அனுப்பிப் பழுது பார்த்துக் கொண்டிருக்கிறான்

அதியன் தன் இடத்தில் உள்ளவற்றைப் பிறர்க்குப் பகிர்ந்து அளிப்பான்; சோறு உண்ணத் தருவான்; செல்வம் மிக்கு உண்டாயின் பரிசிலர்க்கு வாரி வழங்குகிறான். இதுதான் அவன் செய்வது; அடுக்கி வைத்து அழகு பார்ப்பது இல்லை. பூ இட்டு வழிபடுவது இல்லை; மக்களை மதிக்கிறான்; போர்க் கருவிகளை அவன் நம்புவது இல்லை.

இவ்வே, பீலி அணிந்து, மாலை சூட்டிக்
கண் திரள் நோன் காழ் திருத்தி, நெய் அணிந்து,
கடியுடை வியல் நகரவ்வே; அவ்வே,
பகைவர்க் குத்திக் கோடு, நுதி சிதைந்து,
கொல் துறைக் குற்றிலமாதோ- என்றும்
உண்டாயின் பதம் கொடுத்து,
இல்லாயின் உடன் உண்ணும்,
இல்லோர் ஒக்கல் தலைவன்,
அண்ணல் எம் கோமான், வைந் நுதி வேலே.

திணை - பாடாண் திணை; துறை - வாள் மங்கலம்

அவன் தூதுவிடத் தொண்டைமானுழைச் சென்ற ஔவைக்கு அவன் படைக்கலன் கொட்டில் காட்ட, அவர் பாடியது.

# 96. அதியமான் பொகுட்டு எழினி (அதியன்மகன்)

பொகுட்டு எழினியே! உனக்கு இருவகைப் பகைகள் எழுந்துள்ளன.

ஒன்று மகளிர் உன்னைக் கண்டு காதல் கொள்கின்றனர். அவர்கள் உன்னை அடையப் பெறாமையால் மெலிந்து கண்கள் பசப்புப் பெறுகின்றனர். தோள்கள் மெலிவு அடைகின்றனர். அவர்களைக் கவர்ந்து வருத்துகிறாய். இது உனக்கு ஏற்பட்டுள்ள முதற்பகை.

நீ நின் படை வீரர்களுக்குச் சோறும் இறைச்சியும் தந்து ஊக்குவித்துப் படை எடுக்கிறாய். அவர்களோடு யானைகள் பலவும் சேர்ந்து ஊர்களை அழிக்கும் என்று பகைவர்கள் அஞ்சுகின்றனர். இது இரண்டாவது பகை. அவர்கள் தம் ஊர்களில் தங்குவதற்கு அஞ்சித் தம் ஊரைவிட்டு நீங்கத் துணிகின்றனர்.

ஒன்று மகளிர் உன்பால் கொள்ளும் காதல்பகை; அது உன் இளமை பற்றியது. மற்றொன்று மோதல்பகை. அது உன் வீரத்தின் விளைவு.

அலர் பூந் தும்பை அம் பகட்டு மார்பின்,
திரண்டு நீடு தடக்கை, என்னை இளையோற்கு
இரண்டு எழுந்தனவால், பகையே: ஒன்றே,
பூப் போல் உண்கண் பசந்து, தோள் நுணுகி,
நோக்கிய மகளிர்ப் பிணித்தன்று; ஒன்றே,
'விழவின்றுஆயினும், படு பதம் பிழையாது,
மை ஊன் மொசித்த ஒக்கலொடு, துறை நீர்க்
கைமான் கொள்ளுமோ?' என,
உறையுள் முனியும், அவன் செல்லும் ஊரே.

திணை - அது; துறை - இயன்மொழி.
அவன் மகன் பொகுட்டெழினியை அவர் பாடியது.

## 97. அதியமான் நெடுமான் அஞ்சி

உறையிலிருந்து கழித்த வாள்கள் பகைவர்கள் தம் மதிலை அழித்தலின் ஊனில் முழுகி உரு இழந்து விட்டன.

வேல்கள் குறும்புமிக்க அரண்களையும், பகைவர்தம் நாடுகளையும் வென்றமையின் அவை சிதைந்து கிடக்கின்றன.

களிறுகள் கதவுகளைத் தாக்கி அவர்தம் குறும்புகளைச் சிதைத்தலினால் அவற்றின் கொம்புகளில் உள்ள கிம்புரிகள் கழன்று விட்டன.

குதிரைகள் பகைவர்களை உழக்கியதால் குளம்புகள் குருதிக் கறை பெற்றுள்ளன.

கடல் போன்ற சேனையை உடைய அரசன் தாங்கும் கேடயங்கள் துளைபட்டுக் கிடக்கின்றன.

*அவனோடு மாறுபட்டவர் உய்வது எங்ஙனம்? உயிர் பிழைப்பது அரிது.*

*நீவிர் உம் பழைய ஊர்களைக் காத்தல் வேண்டின் அவனுக்குத் திறை தந்து இறையாண்மையைக் காத்துக் கொள்வீர்.*

*அவ்வாறு திறை தர மறுத்தால் நீங்கள் உயிர் தப்புவது இயலாது;*

*யான் இவ்வளவு சொல்லியும் தெளிவுபட நடந்து கொள்ளீர் ஆயின், உம் மனைவியர் தோளைத் துறப்பது உறுதி. இஃது அறிந்து நடந்து கொள்வீராக.*

போர்க்கு உரைஇப் புகன்று கழித்த வாள்,
உடன்றவர் காப்புடை மதில் அழித்தலின்,
ஊன் உற மூழ்கி, உரு இழந்தனவே;
வேலே, குறும்பு அடைந்த அரண் கடந்து, அவர்
நறுங் கள்ளின் நாடு நைத்தலின்,
சுரை தழீஇய இருங் காழொடு
மடை கலங்கி நிலை திரிந்தனவே;
களிறே, எழூஉத் தாங்கிய கதவம் மலைத்து, அவர்
குழூஉக் களிற்றுக் குறும்பு உடைத்தலின்,
பரூஉப் பிணிய தொடி கழிந்தனவே;
மாவே, பரந்து ஒருங்கு மலைந்த மறவர்
பொலம் பைந் தார் கெடப் பரிதலின்,
களன் உழந்து அசைஇய மறுக் குளம்பினவே;
அவன் தானும், நிலம் திரைக்கும் கடல் தானைப்
பொலந் தும்பைக் கழல் பாண்டில்
கணை பொருத துளைத் தோலன்னே.
ஆயிடை, உடன்றோர் உய்தல் யாவது? தடந்தாள்,
பிணிக் கதிர், நெல்லின் செம்மல் மூதூர்
நுமக்கு உரித்தாகல் வேண்டின், சென்று அவற்கு
இறுக்கல் வேண்டும் திறையே; மறுப்பின்,
ஒல்வான்அல்லன், வெல்போரான் எனச்
சொல்லவும் தேறீர்ஆயின், மெல் இயல்,
கழற் கனி வகுத்த துணைச் சில்ஓதிக்,
குறுந் தொடி மகளிர் தோள் விடல்
இறும்பூது அன்று; அஃது அறிந்து ஆடுமினே.

திணையும் துறையும் அவை.
அதியமான் நெடுமான் அஞ்சியை அவர் பாடியது.

# 98. அதியமான் நெடுமான் அஞ்சி

உன் போர்யானைகளைக் கண்டு அவை மதில்களைத் தாக்கும் என்பது அறிந்து முன் காப்பாகப் பகைவர்கள் கதவுகளுக்குக் கணையம் இடுகின்றனர்.

உன் குதிரைகள் வருதலைக் கண்டு முட்களைக் கொண்டு நுழை வாயில்களை அடைக்கின்றனர்.

நின் உறையிலிருந்து வெளியே எடுக்கப்பட்ட வேல்களைக் கண்டு அவர்கள் தம் கேடயங்களைச் சீர் செய்து கொள்கின்றனர்; அவற்றிற்குப் பிடியும் பூணும் இடுகின்றனர்.

வலிமைமிக்க உன் படை வீரர்களைக் கண்டு எதிர்க்க மாட்டாமல் தம் குருதிபட்ட அம்புகளைத் தூணியில் இட்டுச் செறித்துக் கொள்கின்றனர். அவர்கள் ஒடுங்கி எதிர்க்க அஞ்சுகின்றனர்.

ஐயவி புகைத்தும் தடுக்க முடியாக்: கூற்றம் போல் அவர்களுக்கு நீ தோற்றம் அளிக்கிறாய்

பகைவர்கள் இரங்கத் தக்கவர்; சோலைகளும், வயல்களும் உடைய அவர்கள் நாடு இனி அழியத்தான் போகிறது.

முனைத் தெவ்வர் முரண் அவியப்
பொரக் குறுகிய நுதி மருப்பின் நின்
இனக் களிறு செலக் கண்டவர்
மதிற் கதவம் எழுச் செல்லவும்,
பிணன் அழுங்கக் களன் உழக்கிச்
செலவு அசைஇய மறுக் குளம்பின் நின்
இன நல் மாச் செலக் கண்டவர்
கவை முள்ளின் புழை அடைப்பவும்,
மார்புறச் சேர்ந்து ஒல்காத்
தோல் செறிப்பு இல் நின் வேல் கண்டவர்
தோல் கழியொடு பிடி செறிப்பவும்,
வாள் வாய்த்த வடுப் பரந்த நின்
மற மைந்தர் மைந்து கண்டவர்
புண் படு குருதி அம்பு ஒடுக்கவும்,
நீயே, ஐயவி புகைப்பவும் தாங்காது, ஒய்யென,

உறுமுறை மரபின் புறம் நின்று உய்க்கும்
கூற்றத்து அனையை; ஆகலின், போற்றார்
இரங்க விளிவதுகொல்லோ -- வரம்பு அணைந்து
இறங்குகதிர் அலம்வரு கழனிப்
பெரும் புனற் படப்பை, அவர் அகன் தலை நாடே!

திணை - வாகை; துறை - அரச வாகை; திணை - வஞ்சியும், துறை - கொற்ற வள்ளையும் ஆம்.

அவனை அவர் பாடியது.

## 99. அதியமான் நெடுமான் அஞ்சி

அமரர்களைப் போற்றியும், வணங்கியும், அவர்களுக்கு ஆகுதி தந்தும், அங்கு இருந்து கரும்பு இங்குக் கொண்டு வந்து சேர்ததும் சிறப்புகளைப் பெற்று இம்மண்ணுலகை உன் முன்னோர் ஆண்டனர். அவர்கள் புகழுடன் ஆட்சி செய்தனர்.

அவர்களைப் போல நீயும் உன் முன்னோர்கள் விட்டு வைத்த அரசு உரிமையைப் பெற்றுச் சிறப்புற ஆள்கின்றாய். ஏழு இலச்சினை உடைய அரசு உரிமையை நீ பெற்றுள்ளாய்.

அப்படி இருந்தும் மன நிறைவு கொள்ளாமல் நீ எழுவரொடு மலைந்து உன் ஆற்றலை வெளிப்படுத்தினாய். நீ புலவர் பாடுதற்கு அரியை ஆயினாய்.

நீ உன்னோடு மாறுபட்ட கோவலூர் அரசனை அழித்து வெற்றி பெற்ற சிறப்பைப் பரணர் பாடினர். அது சிறப்புத் தருகிறது.

அமரர்ப் பேணியும், ஆவுதி அருத்தியும்,
அரும் பெறல் மரபின் கரும்பு இவண் தந்தும்,
நீர் அக இருக்கை ஆழி சூட்டிய
தொல் நிலை மரபின் நின் முன்னோர் போல,
ஈகை அம் கழற் கால், இரும் பனம் புடையல்,
பூ ஆர் காவின், புனிற்றுப் புலால் நெடு வேல்,
எழு பொறி நாட்டத்து எழாஅத் தாயம்
வழு இன்று எய்தியும் அமையாய்ச் செரு வேட்டு,
இமிழ் குரல் முரசின் எழுவரொடு முரணிச்

சென்று, அமர் கடந்து, நின் ஆற்றல் தோற்றிய
அன்றும், பாடுநர்க்கு அரியை; இன்றும்
பரணன் பாடினன் மற்கொல் - மற்று நீ
முரண் மிகு கோவலூர் நூறி, நின்
அரண் அடு திகிரி ஏந்திய தோளே!

திணையும் துறையும் அவை.

அவன் கோவலூர் எறிந்தானை அவர் பாடியது.

## 100. அதியமான் நெடுமான் அஞ்சி

*அவன் கையது வேல்; காலில் கழல் புனைந்துள்ளான்; மெய்யது வியர்வை; மிடற்றின்கண் பசும்புண். பனந்தோட்டையும், வெட்சி மலரையும் வேங்கைப் பூவுடன் விரவித் தன் சுரிந்த முடியில் சூட்டியவனாய் வரிப்புலியோடு பொருத வலிமைமிக்க களிறு போல் பகைவருடன் போர் செய்துள்ளான். அதனால் எழுந்த சினம் இன்னும் மாறவில்லை. அவனுடன் பகை கொண்டு போருக்கு வருபவர் உய்வது இயலாது.*

*செருக் களத்துப் பகைவரை நோக்கிய அவன் கண்கள் தன் சிறுவனை நோக்கியும் அந்தச் சிவப்பு மாறவில்லை. அடங்காச் சினத்தினனாக உள்ளான்.*

கையது வேலே; காலன புனை கழல்;
மெய்யது வியரே; மிடற்றது பசும் புண்;
வட்கர் போகிய வளர் இளம் போந்தை
உச்சிக் கொண்ட ஊசி வெண் தோட்டு,
வெட்சி மா மலர், வேங்கையொடு விரைஇச்
சுரி இரும் பித்தை பொலியச் சூடி,
வரிவயம் பொருத வயக் களிறு போல,
இன்னும் மாறாது சினனே; அன்னோ!
உய்ந்தனர் அல்லர் இவன் உடற்றியோரே;
செறுவர் நோக்கிய கண், தன்
சிறுவனை நோக்கியும், சிவப்பு ஆனாவே.

திணையும் துறையும் அவை; திணை - வஞ்சியும், துறை - கொற்றவள்ளையும் ஆம்.

அதியமான் தவமகன் பிறந்தவனைக் கண்டானை அவர் பாடியது.

# 101. அதியமான் நெடுமான் அஞ்சி

ஒரு நாள் மட்டும் யாம் அவனிடம் செல்லவில்லை. பல நாள் பலரோடு சென்றாலும் முதல் நாளைப் போலவே என்றும் விருப்பத்தோடு எங்களை வரவேற்றான்.

அழகிய, பூண் அணிந்த யானையையும், புனைவு பெற்ற தேரையும் உடையவன் அதியமான். அவனிடம் பரிசு பெறுவதில் காலம் நீட்டித்தாலும் நீட்டிக்கலாம். ஆனால், பரிசு பெறுவது உறுதி; யானை தன் கொம்பிடை வைத்த கவளம் அதன் வாயில் செல்வது தப்பாது; அதுபோன்றது அவன் தரும் பரிசில்.

அவனிடம் பரிசு பெற விழைந்த நெஞ்சமே! வருந்தற்க! அவன்தாள் வாழ்வதாக!

ஒரு நாள் செல்லலம்; இரு நாள் செல்லலம்;
பல நாள் பயின்று, பலரொடு செல்லினும்,
தலை நாள் போன்ற விருப்பினன்மாதோ-
இழை அணி யானை இயல் தேர் அஞ்சி
அதியமான்; பரிசில் பெறூஉம் காலம்
நீட்டினும், நீட்டாதுஆயினும், களிறு தன்
கோட்டு இடை வைத்த கவளம் போலக்
கையகத்தது; அது பொய் ஆகாதே;
அருந்த ஏமாந்த நெஞ்சம்!
வருந்த வேண்டா, வாழ்க, அவன் தாளே!

திணை - பாடாண் திணை; துறை - பரிசில் கடாநிலை.
அவனை அவர் பாடியது.

# 102. அதியமான் பொகுட்டு எழினி (அதியன் மகன்)

எருதுகள் இளையவை; புதியவை; இதற்குமுன் அவற்றைப் பூட்டியதும் இல்லை. அவை பூட்டப்பட்ட வண்டியில் பண்டச் சுமையோ பெரிது. வழியில் மேடு பள்ளங்கள். என்ன ஆகும் என்று கூற முடியாது. அதற்காக அவ்வண்டிக்கு உமணர் ஏற்கனவே உள்ள கீழ்மூல அச்சோடு சேம அச்சு ஒன்று உடன் சேர்த்துக் கட்டி எடுத்துச் செல்வர்.

சேம அச்சு போல் ஆபத்துக் காலத்தில் அரும்பொருள் கொடுத்து உதவும் உயர்வு உன்பால் உள்ளது. ஈகையில் மிக்கோன்; புகழ்மிக்கவன் நீ! முழுநிலவைப் போல் நிறைகுணம் படைத் தவன் நீ! உன் நிழலில் வாழ்வோர்க்கு யாது குறை உள்ளது?

'எருதே இளைய; நுகம் உணராவே;
சகடம் பண்டம் பெரிது பெய்தன்றே;
அவல் இழியினும், மிசை ஏறினும்,
அவணது அறியுநர் யார்?' என, உமணர்
கீழ் மரத்து யாத்த சேம அச்சு அன்ன,
இசை விளங்கு கவி கை நெடியோய்; திங்கள்
நாள் நிறை மதியத்து அனையை; இருள்
யாவணதோ, நின் நிழல் வாழ்வோர்க்கே?

திணை - அது; துறை - இயன்மொழி.
அவன் மகன் பொகுட்டெழினியை அவர் பாடியது

## 103. அதியமான் நெடுமான் அஞ்சி

காவடியில் ஒரு பக்கம் பதலை என்னும் பறை; மற்றொரு பக்கம் சிறுமுழவு. இவை தொங்க விட்டுச் செல்கிறாய் நீ!.

உணவுக் கலன் அது வெறுமை உற்றுக் கவிழ்க்கப்பட்டு உள்ளது. அதை நிரப்புவார் யார் என்று கவலையுடன் வினவுகின்றாய்.

சுரத்தில் செல்லும் விறலியே! நீ செல்வதாக இருந்தால் அவன் சேய்மையில் உள்ளவன் அல்லன்.

அவன் போர்முனையில் எதிரிகளின் ஊர்களை எரியிட்டுக் கொளுத்திக் கொண்டிருக்கிறான். அதில் எழும் புகை மலையைத் தழுவும் மேகம் போல இளங்களிறுகளைச் சூழ்கிறது. ஈரம் புலராத உன் உணவுப் பாத்திரத்தில் அவன் மெழுகு அடைபோல நிணம் மிக்க கொழுமையான சோறு தருவான்.

உலகமே வறுமை உற்றாலும் அவன் தருவதில் வெறுமை காட்டமாட்டான். அவன் தாள் வாழ்க!

ஒரு தலைப் பதலை தூங்க, ஒரு தலைத்
தூம்பு அகச் சிறு முழாத் தூங்கத் தூக்கிக்
'கவிழ்ந்த மண்டை மலர்க்குநர் யார்?' எனச்
சுரன்முதல் இருந்த சில் வளை விறலி!
செல்வைஆயின், சேணோன் அல்லன்;
முனை சுட எழுந்த மங்குல் மாப் புகை
மலை சூழ் மஞ்சின், மழ களிறு அணியும்
பகைப் புலத்தோனே, பல் வேல் அஞ்சி;
பொழுது இடைப்படாஅப் புலரா மண்டை
மெழுகு மெல் அடையின் கொழு நிணம் பெருப்ப,
அலத்தற் காலை ஆயினும்,
புரத்தல் வல்லன்; வாழ்க, அவன் தாளே!

திணை - அது; துறை - விறலியாற்றுப்படை.
அதியமான் நெடுமான் அஞ்சியை அவர் பாடியது.

## 104. அதியமான் நெடுமான் அஞ்சி

*மறம்மிக்க பகை வீரர்களே! யாம் கூறுவதைச் சற்றுக் கேட்டு மதித்து நடந்து கொள்ளுங்கள். இது உமக்கு நன்மை தரும்.*

*ஊர்ப் பிள்ளைகள் நீராடும் நீர்த்துறை கால் அளவுதான். அதில் உள்ள முதலை வலிமைமிக்க யானைகளை ஈர்த்து அழிக்கும். தோற்றத்தில் அது சிறியதுதான். ஏற்றம் உடைய யானையை இழுத்து அதனைக் கொல்லும் ஆற்றல் அதன்பால் உள்ளது.*

*எம் தலைவன் வயதில் இளையவன்தான். அவன்பால் அடங்கி உள்ள நுண்மையான ஆற்றல் வெளியே புலப்படாது. அதனை அறிந்து கொள்ளாமல் இளையன் அவன் என்று உளைய அவனோடு போர் தொடுப்பீராயின் அவனை அடுதல் இயலாது; வெற்றி பெற இயலாது.*

போற்றுமின், மறவீர்! சாற்றுதும், நும்மை:
ஊர்க் குறுமாக்கள் ஆடக் கலங்கும்
தாள் படு சில் நீர்க் களிறு அட்டு வீழ்க்கும்
ஈர்ப்புடைக் கராஅத்து அன்ன என்னை

நுண் பல் கருமம் நினையாது,
'இளையன்' என்று இகழின், பெறல் அரிது, ஆடே.

திணை - வாகை; துறை - அரச வாகை.
அவனை அவர் பாடியது.

## 105. வேள்பாரி

*அழகு மிக்க விறலியே! பரந்துபட்ட நிலத்தில் குவளைகளில் இதழ்களில் நீர்த்துளி கலக்க மழை பெய்தாலும் பெய்யாவிட்டாலும் அவன் மலையுச்சிகளில் இருந்து அருவிநீர் விழுகின்றது. அது கொள் பயிரிடும் நிலத்திற்குப் பாய்கிறது; கால்வாயாக ஓடுகிறது.*

*அந்த மலை வீழ் அருவியைப் போல் இனிமையும், மென்மையும், நன்மையும் உடையவன் வேள்பாரி. அவன்பால் சென்றால் பொன் ஆபரணம் பெறுவாய்.*

சேயிழை பெறுகுவை- வாள் நுதல் விறலி!
தடவு வாய்க் கலித்த மா இதழ்க் குவளை
வண்டு படு புது மலர்த் தண் சிதர் கலாவப்
பெய்யினும், பெய்யாதுஆயினும், அருவி
கொள் உழு வியன் புலத்துழை கால் ஆக,
மால்புடை நெடு வரைக் கோடுதோறு இழிதரும்
நீரினும் இனிய சாயற்
பாரி வேள்பால் பாடினை செலினே.

திணை - பாடாண் திணை; துறை - விறலியாற்றுப்படை.
வேள் பாரியைக் கபிலர் பாடியது.

## 106. வேள்பாரி

*மெல்லிய இலைகளை உடையது; குவிந்து கொத்துக் கொத் தாகக் கிடப்பது எருக்கம்பூ, அவற்றை நல்லன என்றோ தீயவை என்றோ கொள்வது இல்லை. ஏதோ அவனுக்குக் கிடைத்தது அதுதான். அதைக் கொண்டு வருகிறான் தெய்வ வழிபாட்டுக்கு.*

*அம்மலரினை இட்டு அவன் வழிபடுகிறான் என்றால் அத்தெய்வம் அவனைப் பார்த்து எதற்கும் உதவாத இவ் எருக்க*

மாலைதான் உனக்குக் கிடைத்ததா என்று அவனைத் தள்ளி விடுவது இல்லை.

அவன் எதைக் கொண்டு வருகிறான் என்பது பெரிது அன்று; அவன் வழிபாடுதான் மதிக்கத்தக்கது. அதைத் தெய்வம் ஏற்றுக் கொள்கிறது. அவனுக்கு அருளவும் செய்கிறது.

அதைப் போலத்தான் வேள்பாரியும்; தன்னை நாடி வருபவர் அறிவு குறைந்தவர் ஆயினும் பண்பு குறைந்தவர் ஆயினும், அவர்களை ஒதுக்குவது இல்லை; அவர்கள் ஆற்றல் அற்றவர் என்பதால் அவர்களை அகற்றுவது இல்லை; போற்றுவார் யாவராயினும் அவர்களை மதித்துப் பரிசில்கள் தந்து அவர்கள் குறைகளை நீக்குவான். அவன் கை வண்மை நிலைத்து இருப்பது ஆகும்.

நல்லவும் தீயவும் அல்ல குவி இணர்ப்
புல்இலை எருக்கம்ஆயினும், உடையவை
கடவுள் பேணேம் என்னா; ஆங்கு,
மடவர் மெல்லியர் செல்லினும்,
கடவன், பாரி கை வண்மையே.

திணை - அது; துறை - இயன்மொழி.

அவனை அவர் பாடியது.

## 107. வேள் பாரி

புலமைமிக்க இப்புலவர்கள் ஈவதற்குப் பாரிதான் உளன் என்று பலமுறை கூறி வருகின்றனர். அவனையே ஏத்திப் புகழ்கின்றனர்.

அவன் தானா வாரி வழங்குகிறான்? அவனைத் தவிர வேறு யாருமே இல்லையா?

வான்மழை வாரிவழங்குகிறது. இந்த உலகத்தைக் காக்கிறது; உயிர்வாழ வைக்கிறது.

மழையும் பாரிபோல் வழங்குகிறது. இதைப் புலவர்கள் அறிய வேண்டும்.

இனி அவனைப் பாடுவது என்றால் மழையைப் போல் அவன் வழங்குகிறான் என்று உவமை கொடுத்துக் கூறுவதே தக்கது ஆகும்.

'பாரி பாரி' என்று பல ஏத்தி,
ஒருவற் புகழ்வர், செந் நாப் புலவர்;
பாரி ஒருவனும் அல்லன்;
மாரியும் உண்டு, ஈண்டு உலகு புரப்பதுவே.

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

## 108. வேள் பாரி

குறமகள் அடுப்பு எரிக்கும் கொள்ளிக் கட்டை சந்தனம் ஆதலின் அதன் நறுமணம் அடுத்து விளங்கும் மலைச்சாரலில் உள்ள வேங்கைப் பூங்கொம்பில் படருகிறது.

இத்தகைய சிறப்பு மிக்க பறம்பு நாட்டைப் பரிசிலர் கேட்டால் அவர்களுக்கு மறுக்காமல் தருவான். அப்பறம்பு தன்னிடம் இல்லை என்றால் தன்னையே அளிக்க முன்வருவான். அவர் பின் வாரேன் என்று மறுத்துக் கூறான். அறக்கொள்கை பூண்டவன்; ஈகை மிக்கவன்; எதையும் தரும் மன இயல்பு படைத்தவன்.

குறத்தி மாட்டிய வறல் கடைக் கொள்ளி
ஆரம்ஆதலின், அம் புகை அயலது
சாரல் வேங்கைப் பூஞ் சினைத் தவழும்
பறம்பு பாடினரதுவே; அறம் பூண்டு,
பாரியும், பரிசிலர் இரப்பின்,
'வாரேன்' என்னான், அவர் வரையன்னே.

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

## 109. வேள் பாரி

முரசினை உடைய மூன்று பேரரசர்களும் முற்றுகை இட்டுள்ளீர்கள். பாரியின் பறம்பு உங்கள் முற்றுகையால் உணவு இல்லாமல் வருந்துகிறது. அது உண்மைதான்; உங்கள் முற்றுகை யால் அவன் பணிந்துவிடுவான் என்று கருதற்க.

பாரியின் பறம்பு தன் நிறைவு கொண்டது; உழவுத் தொழிலைத்தான் நம்பி வாழ வேண்டும் என்பது இல்லை. உழவர் உழாமலேயே நான்கு விளைவுகள் அம்மலையில் உள்ளன.

ஒன்று சிறிய இலையுடைய மூங்கிலில் நெல் விளைகிறது. அடுத்து பலா மரங்கள் வேண்டிய அளவு தீஞ்சுளைகளைத் தருகின்றன. அடுத்து வள்ளிக் கிழங்கு வேண்டியது கிடைக்கிறது; அடுத்தது அவன் நெடிய குன்றம் தேன் சொரிகிறது.

வான் அளாவியது அவன் மலையே; வானத்து மீன்களைப் போன்றவை அதன்கண் உள்ள சுனைகள்; அங்கு மரந்தொறும் யானைகளைக் கட்டி வைத்தீர் ஆயினும்; இடம்தோறும் தேர்களைப் பரப்பி நிறுத்தினீர் என்றாலும் போர் செய்து அவன் குன்றைப் பெற இயலாது.

யான் அறிகுவன் அதனைப் பெறும் வழி. வடித்து முறுக்கப்பட்ட நரம்பினை உடைய சிறிய யாழை இசைத்து மணம் மிக்க கூந்தலை உடைய நும் விறலியர் பின்வர ஆடியும் பாடியும் சென்றால் நாடும் குன்றும் சேர்த்துத் தருவான்.

அளிதோதானே, பாரியது பறம்பே!-
நளி கொள் முரசின் மூவிரும் முற்றினும்,
உழவர் உழாதன நான்கு பயன் உடைத்தே:
ஒன்றே, சிறியிலை வெதிரின் நெல் விளையும்மே;
இரண்டே, தீம் சுளைப் பலவின் பழம் ஊழ்க்கும்மே;
மூன்றே, கொழுங் கொடி வள்ளிக் கிழங்கு வீழ்க்கும்மே;
நான்கே, அணி நிற ஓரி பாய்தலின், மீது அழிந்து,
திணி நெடுங் குன்றம் தேன் சொரியும்மே,
வான் கண் அற்று, அவன் மலையே; வானத்து,
மீன் கண் அற்று, அதன் சுனையே; ஆங்கு,
மரம்தொறும் பிணித்த களிற்றினிர் ஆயினும்,
புலம்தொறும் பரப்பிய தேரினிர் ஆயினும்
தாளின் கொள்ளலிர்; வாளின் தாரலன்;
யான் அறிகுவென், அது கொள்ளும் ஆறே:
சுகிர் புரி நரம்பின் சீறியாழ் பண்ணி,
விரை ஒலி கூந்தல் நும் விறலியர் பின் வர,
ஆடினிர் பாடினிர் செலினே,
நாடும் குன்றும் ஒருங்கு ஈயும்மே.

திணை - நொச்சி; துறை - மகள் மறுத்தல்.
அவனை அவர் பாடியது.

# 110. வேள் பாரி

பறம்பினை முற்றுகையிடுவதே உங்கள் முயற்சியாக உள்ளது. படைகள் பல கொண்டு மூவர் நீவிர் ஒருங்கு கூடி வந்து போர் செய்தாலும் பறம்பினை உங்களால் கொள்ள இயலாது.

பறம்பு மலை முந்நூறு ஊர்களைக் கொண்டது. அவ்வூர்கள் அனைத்தையும் பரிசிலர் பெற்றுக் கொண்டனர். அவர்களுக்கு அவை உரிமை ஆகிவிட்டன.

எஞ்சி இருப்பவன் பாரி ஒருவன் மட்டும் தான்; அவனைச் சுற்றி வாழும் புலவர்கள் ஆகிய யாமும் உள்ளோம்.

ஊர்கள் பரிசிலர்க்குத் தந்துவிட்டான். குன்று மட்டும் உள்ளது. நீர் பாடிச் சென்றால் அதனைக் கேட்டுப் பெறலாம்.

கடந்து அடு தானை மூவிரும் கூடி
உடன்றனிர் ஆயினும், பறம்பு கொளற்கு அரிதே;
முந்நூறு ஊர்த்தே தண் பறம்பு நல் நாடு;
முந்நூறு ஊரும் பரிசிலர் பெற்றனர்;
யாமும் பாரியும் உளமே;
குன்றும் உண்டு - நீர் பாடினிர் செலினே.

திணையும் துறையும் அவை.

மூவேந்தரும் பறம்பு முற்றியிருந்தாரை அவர் பாடியது.

# 111. வேள் பாரி

பெரியது; கருநிறத்தது இக்குன்று; எப்படி இதை அடைவது என்று அறியாமல் போரினால் வெல்ல முயல்கின்றனர். வேந்தர்கள் ஆயினும் வேல்கொண்டு அடைவது இயலாத செயல் ஆகும்.

நீல மலர் போன்ற கண்களையுடைய அழகிய கிணை மகள் பாடிச் சென்றால் அவள் அதனை எளிதிற் பெற முடியும். இரவலர்க்கு அவன் உவந்து தருவான்.

அளிதோ தானே, பேர் இருங் குன்றே!
வேலின் வேறல் வேந்தர்க்கோ அரிதே;

நீலத்து, இணை மலர் புரையும் உண்கண்
கிணை மகட்கு எளிதால், பாடினள் வரினே.

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

## 112. வேள் பாரி

சென்ற நிலவு நாளில் எம் தந்தை எம்முடன் இருந்தார். யாம் எம் தந்தையோடு மகிழ்வுடன் இருந்தோம். எம் குன்றையும் பிறர் கொண்டிலர்.

இதோ இந்த இவ்வெண்ணிலவில் முரசு உடைய வேந்தர் மூவர் எம் குன்றினைக் கொண்டனர். எம் தந்தையும் எம்முடன் இல்லை.

அற்றைத் திங்கள் அவ் வெண் நிலவின்,
எந்தையும் உடையேம்; எம் குன்றும் பிறர் கொளார்;
இற்றைத் திங்கள் இவ் வெண் நிலவின்,
வென்று எறி முரசின் வேந்தர் எம்
குன்றும் கொண்டார்; யாம் எந்தையும் இலமே!

திணை - பொதுவியல்; துறை - கையறுநிலை

பாரி மகளிர் பாடியது.

## 113. வேள் பாரி

மிக்க புகழ் உடைய பறம்பே! குடிக்கும் அளவுக்கு எங்களுக்குக் கள் கிடைத்தது; ஆட்டுக் கிடாயை வீழ்த்த அதனால் இறைச்சி கிடைத்தது; துவையலும், இறைச்சியுடன் கூடிய கொழுஞ் சோறும் உண்டோம். விரும்பிய வளன் தந்து எங்களை மகிழ்வித்தாய் முன்பு.

இனியாம் செய்வது யாது? பாரி உயிர் மாய்ந்து அதனால் கலங்கிச் செயலற்று நீர் நிறைந்த கண்ணோடு உன்னைத் தொழுது வாழ்த்தி விட்டுச் செல்கிறோம். பறம்பே நீ வாழ்க.

பாரி மகளிர் இளம் பெண்கள்; இவர்களுக்குத் தக்க கணவரைத் தேடி உரியவரை நாடிச் செல்கிறோம். இது எங்கள்

*நிலை. உன்னைவிட்டு யாம் பிரிந்து செல்கிறோம். அதற்கு வருந்துகிறோம்.*

மட்டு வாய் திறப்பவும், மை விடை வீழ்ப்பவும்,
அட்டு ஆன்று ஆனாக் கொழுந் துவை ஊன் சோறும்
பெட்டாங்கு ஈயும் பெரு வளம் பழுனி,
நட்டனைமன்னோ, முன்னே; இனியே,
பாரி மாய்ந்தெனக் கலங்கிக் கையற்று,
நீர் வார் கண்ணேம் தொழுது நிற் பழிச்சிச்
சேறும் வாழியோ பெரும் பெயர்ப் பறம்பே!-
கோல் திரள் முன் கைக் குறுந் தொடி மகளிர்
நாறு இருங் கூந்தல் கிழவரைப் படர்ந்தே.

திணையும் துறையும் அவை.

அவன் மகளிரைப் பார்ப்பார்ப் படுக்கக் கொண்டுபோவான் பறம்பு விடுத்த கபிலர் பாடியது.

## 114. வேள் பாரி

*களிறு மென்று தின்று மிச்சிலைத் தூர எறிவது போலத் தேனைப் பிழிந்து எடுத்து விட்டு அதன் சக்கையைத் தூர எறிந்தாலும் அதிலிருந்து வெளிப்படும் தேன் ஒழுகி முற்றங்களை நிரப்புகிறது. தேன் மிக்கு உள்ள குன்று அவனது; முற்றத்தில் இருந்து கொண்டு நற்றேர்களை அவன் புலவர்க்கு வாரி வழங்குகிறான். அத்தகைய சிறப்புடையது அவன் குன்று.*

*அந்த நெடிய குன்று இங்கு இருந்து பார்த்தாலும் அழகிய காட்சி தருகிறது. சற்றுத் தொலைவில் இருந்து பார்ப்பவருக்கும் அது தெரிந்து கொண்டுதான் இருக்கிறது. எம்மை விட்டு நீங்கி மறையவே மறையாது.*

ஈண்டு நின்றோர்க்கும் தோன்றும்; சிறு வரை
சென்று நின்றோர்க்கும் தோன்றும், மன்ற-
களிறு மென்று இட்ட கவளம் போல,
நறவுப் பிழிந்து இட்ட கோதுடைச் சிதறல்
வார் அசும்பு ஒழுகும் முன்றில்,
தேர் வீசு இருக்கை, நெடியோன் குன்றே.

திணையும் துறையும் அவை.

அவன் மகளிரைக் கொண்டு போம் கபிலர் பறம்பு நோக்கி நின்று சொல்லியது.

# 115. வேள் பாரி

வேலைத் தாங்கிய வேந்தர்க்கு இனியன் அல்லாதவன்; எமக்கு இனியன் ஆகின்றான்.

அவன் குன்று ஒருபக்கம் மலையருவி விழுந்து ஒலித்துக் கொண்டு இருக்கிறது. மற்றொரு பக்கம் பாணர் கைப்பாத்திரம் நிறையும்படி உகுக்கும் கள்ளாகிய தேறல் மலைச்சாரலில் அலைத்து ஒழுகு கிறது. அருவிபோலக் கள் அலைத்து ஒழுகிய குன்று அது; அத்தகைய குன்று எம்மை விட்டுச் சென்றுவிட்டது. அது வருத்தத்தைத் தருகிறது.

ஒரு சார் அருவி ஆர்ப்ப, ஒரு சார்
பாணர் மண்டை நிறையப் பெய்ம்மார்,
வாக்க உக்க தேக் கள் தேறல்
கல் அலைத்து ஒழுகும்மன்னே!-பல் வேல்,
அண்ணல் யானை, வேந்தர்க்கு
இன்னான் ஆகிய இனியோன் குன்றே.

திணையும் துறையும் அவை.
அவனை அவர் பாடியது.

# 116. வேள் பாரி

சோலைகளில் மயில்கள் ஆடின; முசுக்கலைகள் பாய்ந்து ஓடின; அவை பலாப்பழம் தின்று தெகுட்டு அடைந்தன; காலம் அன்றியும் மரங்கள் காய்த்துக் கனிகள் தந்தன; அத்தகைய மலைவளம் மிக்கது.

அப்பெருமை மிக்க மலையின் உச்சியில் ஏறிப் பாரி மகளிர் நின்று தம் தந்தை பாரியின் அருமையை அறியாதவராகிப் போர் செய்ய வந்த வேந்தர் தம் சேனைகளுடன் வந்த குதிரைகளை எண்ணிக் கொண்டிருந்தனர்.

இனிய நகையுடைய இவ்விளம் பெண்கள் இன்று புல் அடர்ந்த வழிகளையும், முள்ளிட்ட வேலியையும், பஞ்சுச் செடிகளையும் உடைய முற்றத்தை உடைய சிறிய தம் வீட்டில் பீரைச் சுரை படரும் சுவர்களின் பக்கங்களில் ஈச்ச இலைக் குப்பை

மீது ஏறி உமணர் செலுத்தும் உப்பு வண்டிகளை எண்ணிக் கொண்டிருக்கின்றனர்.

தேர்களை எண்ணியவர்கள் இன்று உப்பு வண்டிகளை எண்ணுகின்றனர். இத்தகைய இழிவு நிலை அடைந்தமை நினைத்து அதற்கு அழிவுறுகிறேன் யான்; என் வாழ்நாள் கெடுவதாக.

தீம் நீர்ப் பெருங் குண்டு சுனைப் பூத்த குவளைக்
கூம்பு அவிழ் முழுநெறி புரள்வரும் அல்குல்,
ஏந்து எழில் மழைக் கண், இன் நகை, மகளிர்
புல் மூசு கவலைய முள் மிடை வேலிப்
பஞ்சி முன்றில், சிற்றில் ஆங்கண்,
பீரை நாறிய சுரை இவர் மருங்கின்,
ஈத்து இலைக் குப்பை ஏறி, உமணர்
உப்பு ஒய் ஒழுகை எண்ணுப மாதோ;
நோகோ யானே; தேய்கமா, காலை!-
பயில் பூஞ்சோலை மயில் எழுந்து ஆலவும்,
பயில் இருஞ் சிலம்பில் கலை பாய்ந்து உகளவும்,
கலையும் கொள்ளாவாகப் பலவும்
காலம் அன்றியும் மரம் பயம் பகரும்
யாணர் அறாஅ வியல் மலை அற்றே
அண்ணல் நெடு வரை ஏறித் தந்தை
பெரிய நறவின், கூர் வேற் பாரியது
அருமை அறியார், போர் எதிர்ந்து வந்த
வலம் படு தானை வேந்தர்
பொலம் படைக் கலி மா எண்ணுவோரே.

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

## 117. வேள் பாரி

வானத்தில் சனி மீன் புகைந்தாலும், திசை நான்கும் புகை தோன்றினாலும், வெள்ளி தென் திசை ஏகினும் இந்தப் பறம்பு பசுமை பெற்றே உள்ளது. வயல்களில் புதற்பூ மிக்கு மலர்கின்றது; கன்றை ஈன்ற பசு வயிறு நிறையப் புல் மேய்கிறது. புல்வெளி மிக்கு உள்ளது.

இங்கு மழை எப்பொழுதும் பொய்த்தது இல்லை; ஆட்சிச் செம்மை ஒரு காரணம்; சான்றோர்கள் மிக்குள்ளனர். இது மற்றொரு காரணம். மழை வளம் மிக்க நாடு அது.

அதுமட்டுமன்று; பசுமையான இலைகளை உடைய முல்லை எப்பொழுதும் அரும்பு விட்டு அழகுபடுத்தும். வெருகுக் குட்டியின் கூரிய முள்போன்று இம்முல்லைகள் முகை விடுகின்றன. பாரியின் பறம்பு மழை வளம் மிக்கது ஆகும்.

மைம்மீன் புகையினும், தூமம் தோன்றினும்,
தென் திசை மருங்கின் வெள்ளி ஓடினும்,
வயலகம் நிறையப் புதல் பூ மலர,
மனைத்தலை மகவை ஈன்ற அமர்க் கண்
ஆமா நெடு நிரை நன் புல் ஆரக்
கோஒல் செம்மையின் சான்றோர் பல்கிப்
பெயல் பிழைப்பு அறியாப் புன்புலத்ததுவே-
பிள்ளை வெருகின் முள் எயிறு புரையப்
பாசிலை முல்லை முகைக்கும்
ஆய் தொடி அரிவையர் தந்தை நாடே.

திணையும் துறையும் அவை.
அவனை அவர் பாடியது.

## 118. வேள் பாரி

கூரிய வேலினைத் தாங்கியவன்; வலிமை மிக்க தோளினன்; தேரை உடையவன் பாரி வள்ளல்; அவன் நாட்டில் பாறைகளும் மலைச் சிகரங்களும் உள்ளன. அவை அந்நாட்டுக்கு அழகு தருவன. அவற்றுக்கு இடையில் சிறிய குளம் உள்ளது. பார்ப்பதற்கு அது எட்டாம் நாள் பிறைச் சந்திரனைப் போல் வளைவு கொண்டு உள்ளது. அது இனி உடைந்து பாழகிவிடுமோ! நினைக்கும்தோறும் வருத்தம் மேலிடுகிறது.

அறையும் பொறையும் மணந்த தலைய,
எண் நாள் திங்கள் அனைய கொடுங் கரைத்
தெள் நீர்ச் சிறு குளம் கீள்வதுமாதோ-
கூர் வேல் குவைஇய மொய்ம்பின்
தேர் வண் பாரி தண் பறம்பு நாடே!

திணையும் துறையும் அவை.
அவை அவர் பாடியது.

## 119. வேள் பாரி

கார்காலத்து மழை பெய்ய அதனால் இப் பறம்பு மலை காட்சிக்கு இனிதாகிறது.

களிற்று முகத்துப் புள்ளிகள் போலத் தெறுழ் பூ பூக்கிறது.

செம்புற்று ஈசலைப் புளிமோரில் இட்டுப் பருகி மகிழ்வர்.

மென்மையான தினை புதிது புதிதாக விளைந்து வளம் தருகிறது. அத்தகைய சிறப்பு உடையது இரவலர்க்கு ஈயும் வள்ளியோன் ஆகிய பாரியின் பறம்பு நாடு.

நிழல் இல்லாத நீண்ட வழிப் பாதையில் பேரரசர்கள் மிக்கு இருந்தும் நிழல் தரும் தனிமரம் போல விளங்குபவன் பாரி. அவன் குளிர்ந்த வயல்களையுடைய வளம் மிக்க நாடு இனிப் பாழாகி அழியுமோ! வருத்தம் மேலிடுகிறது.

கார்ப் பெயல் தலைஇய காண்பு இன் காலை,
களிற்று முக வரியின் தெறுழ் வீ பூப்பச்
செம் புற்று ஈயலின் இன் அளைப் புளித்து;
மென் தினை யாணர்த்து; நந்தும் கொல்லோ-
நிழல் இல் நீள் இடைத் தனி மரம் போலப்
பணை கெழு வேந்தரை இறந்தும்
இரவலர்க்கு ஈயும் வள்ளியோன் நாடே!

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

## 120. வேள் பாரி

வேங்கை மரத்தை உடைய மேட்டு நிலத்தில் கார் காலத்து மழை பெய்வதால் ஈரம் படிகிறது. அங்கு வரகுக் கதிர்கள் மிக்குக் காய்க்கின்றன. அவற்றை அரிவர்; தினையைக் கொய்து ஒன்று சேர்ப்பர். எள் கறுத்துக் காய்க்க அவை உதிர்கின்றன. அவரைக் காய் விளர்த்துக் கொள்ளும் பதமாகிறது. புதைத்து வைத்து எடுக்கும் மதுவினைச் சிறுகுடியோர் பகிர்ந்து பலருக்கும் அளித்துப் பருகி மகிழ்வர்.

நறுநெய்யில் வேர்க் கடலை வறுத்து எடுப்பர்; அவற்றை உண்டு மகிழ்வர். பெருந் தட்டுகளில் வடித்த சோற்றைக் கொட்டிப் பெருந்தோள் மகளிர் ஆர வைப்பர். இத்தகைய புதிய வருவாய்கள் மிக்கது. புலவர்கள் பாடும் புகழையும், பகவரை வெற்றி கொள்ளும் சிறப்பையும் உடைய பாரியின் பறம்பு. அது அழிந்து விடுமோ என்று அஞ்சுகிறேன்.

வெப்புள் விளைந்த வேங்கைச் செஞ் சுவல்
கார்ப் பெயல் கலித்த பெரும் பாட்டு ஈரத்துப்
பூழி மயங்கப் பல உழுது, வித்திப்
பல்லி ஆடிய பல் கிளைச் செவ்விக்
களை கால் கழாலின், தோடு ஒலிபு நந்தி,
மென் மயில் புனிற்றுப் பெடை கடுப்ப நீடிக்
கருந் தாள் போகி, ஒருங்கு பீள் விரிந்து
கீழும் மேலும் எஞ்சாமைப் பல காய்த்து,
வாலிதின் விளைந்த புது வரகு அரியத்
தினை கொய்யக் கவ்வை கறுப்ப, அவரைக்
கொழுங் கொடி விளர்க் காய் கோட் பதம் ஆக,
நிலம் புதைப் பழுனிய மட்டின் தேறல்
புல் வேய்க் குரம்பைக் குடிதொறும் பகர்ந்து,
நறு நெய்க் கடலை விசைப்பச் சோறு அட்டுப்
பெருந்தோள் தாலம் பூசல் மேவர,
வருந்தா யாணர்த்து; நந்தும் கொல்லோ-
இரும் பல் கூந்தல் மடந்தையர் தந்தை
ஆடு கழை நரலும் சேட் சிமைப் புலவர்
பாடி ஆனாப் பண்பின் பகைவர்
ஒடு கழல் கம்பலை கண்ட
செரு வெஞ் சேஎய் பெரு விறல் நாடே!

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

## 121. மலையமான் திருமுடிக்காரி

ஒரு திசை ஒருவனை நாடி நான்கு திசைகளில் இருந்தும் பரிசில் மாக்கள் வருவர்.

அவர்கள் சிறப்பு அறிதல் அரியது ஆகும். மிக்கு ஈவது எளியது ஆகும். வள்ளன்மை மிக்க தலைவனே! அதனை நன்கு அறிவாயாக. புலவரிடம் பொது நோக்கு ஒழிக. அதுவே அவர்களை மதிப்பது ஆகும்.

ஒரு திசை ஒருவனை உள்ளி, நால் திசைப்
பலரும் வருவர், பரிசில் மாக்கள்;
வரிசை அறிதலோ அரிதே; பெரிதும்
ஈதல் எளிதே; மா வண் தோன்றல்!
அது நன்கு அறிந்தனைஆயின்,
பொது நோக்கு ஒழிமதி, புலவர்மாட்டே!

திணை - அது; துறை - பொருண் மொழிக் காஞ்சி.
மலையமான் திருமுடிக்காரியைக் கபிலர் பாடியது.

## 122. மலையமான் திருமுடிக்காரி

கடல்கோளால் உன் நாடு உன்னை விட்டு நீங்கியது இல்லை.

நின் பகைவர் படையெடுத்து அதனைக் கொண்டதும் இல்லை.

நீயாக விரும்பி வேள்வித் தீயை ஓம்பும் கேள்வி அந்தணர்க்கு வழங்கி அவர்க்குத் தந்துவிட்டாய். நாடு அந்தணர்க்கு என்று ஆகிவிட்டது.

மூவேந்தர்களுள் யாராவது ஒருவர் தம் படைக்குத் துணையாகுக என்று வேண்டியவராய்க் கொட்டிக் குவிக்கும் பொருளை உன்னை நாடி வரும் இரவலர்க்கு என்று தந்துவிடுகிறாய். உன்னை வாழ்த்தும் இரவலர்க்கு அவற்றைத் தந்துவிடுகிறாய்.

வடமீன் அனையாள் கற்புடைய உன் மனைவி; அவள் தோளை மட்டும் உனதாகக் கொண்டு உரிமை பாராட்டுகிறாய். உடைமை என்றால் அதனைத்தான் கூறமுடியும். மற்றைய யாவற்றையும் பிறர்க்குத் தருவது என்பது நீ கடமையாகக் கொண்டுள்ளாய்.

*நினது என்று எதையும் வைத்துக் கொள்ளாத பெருமிதம் உன்பால் உள்ளது. அது மதிக்கத் தக்கது.*

கடல் கொளப்படா அது, உடலுநர் ஊக்கார்,
கழல் புனை திருந்து அடிக் காரி! நின் நாடே;
அழல் புறந்தரூஉம் அந்தணரதுவே;
வீயாத் திருவின் விறல் கெழு தானை
மூவருள் ஒருவன், 'துப்பு ஆகியர்' என,
ஏத்தினர் தரூஉம் கூழே, நும் குடி
வாழ்த்தினர் வரூஉம் இரவலரதுவே;
வடமீன் புரையும் கற்பின், மட மொழி,
அரிவை தோள் அளவு அல்லதை,
நினது என இலை நீ பெருமிதத்தையே.

திணை - பாடாண் திணை; துறை - இயன்மொழி.

அவனை அவர் பாடியது.

# 123. மலையமான் திருமுடிக்காரி

*அரசர்களை அவர்கள் நாள் ஓலக்கத்தில் குடித்து மகிழ்வுடன் இருக்கும்போது புகழ்ந்து பாடினால் அவர்கள் மனம் குளிர்வர்; தனம் குவியும்; வேண்டிய பரிசில் பெறுவர்.*

*மலையமான் அவனைப் புகழவே தேவையில்லை; புலவன் என்று ஒரு சொல் யார் எப்பொழுதும் சொன்னாலே போதும் அவர் நிலைமை அறிந்து பரிசில் ஈவான்.*

*அவன் கள்ளுண்டு மயங்காமல் இயல்பாக ஈந்த இழையணி நெடுந்தேர் முள்ளூர் மலை உச்சியில் பெய்யும் மழைத் துளியினும் மிகுதியாகும்.*

நாள் கள் உண்டு, நாள் மகிழ் மகிழின்,
யார்க்கும் எளிதே, தேர் ஈதல்லே;
தொலையா நல் இசை விளங்கு மலையன்
மகிழாது ஈத்த இழை அணி நெடுந் தேர்
பயன் கெழு முள்ளூர் மீமிசைப்
பட்ட மாரி உறையினும் பலவே.

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

# 124. மலையமான் திருமுடிக்காரி

அருவி ஒலிக்கும் நாடன் அவனைப் பாடுவோர் நாள் பார்த்துச் செல்லத் தேவையில்லை. புள் சகுனம் தடையாக இருந்தாலும் துணிந்து செல்லலாம். திறன் அற்ற பாடல்களைப் பாடினாலும் அதை அவன் பொருட்படுத்துவதில்லை. புலவர் என்று சென்றால் போதும். அவர்கள் பரிசில் பெறாது திரும்புவதில்லை.

நாள் அன்று போகி, புள் இடை தட்ப,
பதன் அன்று புக்கு, திறன் அன்று மொழியினும்,
வறிது பெயர்குநர்அல்லர்-நெறி கொளப்
பாடு ஆன்று, இரங்கும் அருவிப்
பீடு கெழு மலையற் பாடியோரே.

திணையும் துறையும் அவை.
அவனை அவர் பாடியது.

# 125. மலையமான் திருமுடிக்காரி

அண்மையில் நடந்த போரில் வெற்றி பெற்றவன் என்ன கூறுகிறான்? நீ அவர்களுக்குத் துணைக்கு வரவில்லை என்றால் இந்த வெற்றி தனக்கு வாய்த்திருக்காது என்றுதான் பேசுகிறான்.

தோற்றவன் என்ன கூறுகிறான்? நீ இல்லை என்றால் அவர்கள் தோற்றிருக்க மாட்டார்கள் என்றுதான் பேசுகிறான்.

வென்றவனும் உன்னைத்தான் குறிப்பிடுகிறான்; தோற்றவனும் உன்னைத்தான் குறிப்பிடுகிறான்.

போர் வெற்றி தோல்விகளுக்கு நீயே காரணமாக இருக்கிறாய்.

உழைத்துப் பெறும் பரிசில் நீ அடையும் பொருள்.

உழுது அதன் பின் எருது வைக்கோல் தின்கிறது. அதுபோன்று நீ பாடுபட்டுப் பொருளை ஈட்டுகிறாய். நீ உண்ணும் கள்அமிழ்தாக அமைக.

யாம் உன்னை நாடி வருகிறோம்; பருத்தி நூற்கும் பெண்டிர் அவர்தம் பஞ்சு போல் நீ தரும் இறைச்சித் துண்டு சுடச்சுட

உள்ளது. கொழுவிய அவ்விறைச்சியை ஒரு கையிலும், நீ தரும் மதுவை மற்றொரு கையிலும் வைத்துக் கொண்டு மாறி மாறி உண்போம். நின்னைக் காண வந்துள்ளேன்.

பருத்திப் பெண்டின் பனுவல் அன்ன,
நெருப்புச் சினம் தணிந்த நிணம் தயங்கு கொழுங் குறை,
பரூஉக் கள் மண்டையொடு, ஊழ் மாறு பெயர
உண்கும், எந்தை! நிற் காண்கு வந்திசினே,
நள்ளாதார் மிடல் சாய்த்த
வல்லாள! நின் மகிழ் இருக்கையே.
உழுத நோன் பகடு அழி தின்றாங்கு
நல் அமிழ்து ஆக, நீ நயந்து உண்ணும் நறவே;
குன்றத்து அன்ன களிறு பெயரக்
கடந்து அட்டு வென்றோனும், நிற் கூறும்மே;
'வெலீஇயோன் இவன்' என.
'கழல் அணிப் பொலிந்த சேவடி நிலம் கவர்பு
விரைந்து வந்து, சமம் தாங்கிய,
வல் வேல் மலையன் அல்லன் ஆயின்,
நல் அமர் கடத்தல் எளிதுமன், நமக்கு' எனத்
தோற்றோன்தானும், நிற் கூறும்மே,
'தொலைஇயோன் இவன்' என,
ஒரு நீ ஆயினை—பெரும! பெரு மழைக்கு
இருக்கை சான்ற உயர் மலைத்
திருத் தகு சேஎய்! நிற் பெற்றிசினோர்க்கே

திணை - வாகை; துறை - அரச வாகை.

சேரமான் மாந்தரஞ்சேரல் இரும்பொறையும் சோழன் இராச சூயம் வேட்ட பெருநற்கிள்ளியும் பொருத வழிச்சோழற்குத் துப்பாகிய தேர்வண்மலையனை வடம வண்ணக்கன் பெருஞ்சாத்தனார் பாடியது.

## 126. மலையமான் திருமுடிக்காரி

உன் முன்னோர்கள் கொடுத்துப் புகழ் பெற்றவர்கள். எதிரிகளின் யானைகளின் பட்டத்தில் இருந்த பொன்னைக் கொண்டு பொற்றாமரையாக்கிப் பாணர்க்குத் தந்து புகழ்பெற்ற வர்கள். போரிலும் ஈகையிலும் சிறந்தவர்கள்; அவர்கள் வழி வந்தவன் நீ.

காவற் காடுகளையும் அருவிகளையும் உடைய நாடு உன் நாடு; முள்ளூர் பெண்ணை நதியாயும் சோலைகள் உடையது; அது உன் ஊர் ஆகும்.

நீ பெற்ற பெருவெற்றியை யாம் பாட வந்தோம். எனினும் அறிவிற் சிறந்த அந்தணன் கபிலன் பாடிவிட்டான். எங்களுக்குப் பாட இடமே வைக்கவில்லை. முழுதும் அவன் சிறப்பித்துக் கூறிவிட்டான்.

சேர அரசர்கள் கடலில் கலம் செலுத்திய பிறகு யார் அவ் வாறு செய்ய முடியும்? கலம் செலுத்த அஞ்ச வேண்டியதுதான்.

அதைப் போன்ற நிலைதான் எங்களுடையது. கபிலன் பாடி முடித்த பிறகு நாங்கள் பாடுவதற்கு இடம் இல்லை; பாடினும் எடுபடாது.

பகை வேந்தர்கள் படுகளத்து ஒழிய அவர்கள் யானைகளோடு தாக்கி அழித்தாய்! இன்மை எங்களைத் துண்டுகிறது; உன் புகழ் மிக்கு உள்ளது; வண்மை மிக்கவன் நீ அதனால் உன்னைப் பாட வந்துள்ளோம்.

ஒன்னார் யானை யோடைப்பொன் கொண்டு
பாணர் சென்னி பொலியத் தைஇ
வாடாத் தாமரை சூட்டிய விழுச்சீர்
ஓடாப் பூட்கை யுரவோன் மருக
வல்லே மல்லே மாயினும் வல்லே
நின்வயிற் கிளக்குவ மாயிற் கங்குல்
துயின்மடிந் தன்ன தூங்கிரு ளிறும்பிற்
பறையிசை யருவி முள்ளூர்ப் பொருந
தெறலரு மரபினின் கிளையொடும் பொலிய
நிலமிசைப் பரந்த மக்கட் கெல்லாம்
புலனழுக் கற்ற வந்த ணாளன்
இரந்துசென் மாக்கட் கினியிட னின்றிப்
பரந்திசை நிற்கப் பாடின னதற்கொண்டு
சினம் மிகு தானை வானவன் குட கடல்,
பொலம் தரு நாவாய் ஓட்டிய அவ்வழிப்
பிற கலம் செல்கலாது அனையேம், அத்தை.
இன்மை துரப்ப, இசை தர வந்து, நின்
வண்மையின் தொடுத்தனம், யாமே—முள் எயிற்று

அரவு எறி உருமின் முரசு எழுந்து இயம்ப,
அண்ணல் யானையோடு வேந்து களத்து ஒழிய,
அருஞ் சமம் ததையத் தாக்கி, நன்றும்
நண்ணாத் தெவ்வர்த் தாங்கும்
பெண்ணை அம் படப்பை நாடு கிழவோயே!

திணை - பாடாண் திணை; துறை - பரிசில் துறை.
மலையமான் திருமுடிக் காரியை மாறோக்கத்து நப்பசலையார் பாடியது.

# 127. வேள் ஆய் அண்டிரன்

*யாழ்கொண்டு இசைமீட்டி யானைகளைப் பரிசிலாகப் பெற்றுச் சென்றவர் பலர். கட்டுத் தறிகளில் யானைகள் கட்டி இருந்த இடத்தில் இன்று யானைகள் இல்லை. காட்டு மயில்கள் தாம் அங்கு வட்டமிட்டுக் குழுமி இருக்கின்றன.*

*ஆய்வீடு இன்று அதுவும் வெறிச்சிடுகிறது; தாலி தவிர ஏனைய ஆபரணங்கள் அனைத்தையும் இரவலர்க்குத் தந்துவிட்டு மகளிர் பொலி விழந்து நிற்கின்றனர்.*

*மற்றைய அரசர் பலர் தம் வீடுகளில் சுவைமிக்க அடிசில் தாமே உண்பர்; பிறர்க்கு ஈதல் இன்றி வாழ்வர். செல்வம் மிக்கு உள்ளது. புகழ் அதைப் பற்றி அவர்கள் கவலைப்படுவதாகத் தெரியவில்லை. இப்படி வாழ்பவர் பலர் உள்ளனர். அதுபோல் ஆய் வாழாமல் மற்றவர்க்கு ஈந்து உயர்புகழ் பெற்று உள்ளான்.*

'களங்கனி அன்ன கருங் கோட்டுச் சீறியாழ்ப்
பாடு இன் பனுவற் பாணர் உய்த்தென,
களிறு இலவாகிய புல் அரை நெடு வெளில்,
கான மஞ்ஞை கணனொடு சேப்ப,
ஈகை அரிய இழை அணி மகளிரொடு
சாயின்று' என்ப ஆஅய் கோயில்;
சுவைக்கு இனிது ஆகிய குய்யுடை அடிசில்
பிறர்க்கு ஈவு இன்றித் தம் வயிறு அருத்தி,
உரைசால் ஓங்கு புகழ் ஒரீஇய
முறைசு கெழு செல்வர் நகர் போலாதே.

திணை - பாடாண்; துறை - கடைநிலை
ஆயை உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் பாடியது.

# 128. வேள் ஆய் அண்டிரன்

ஊர்ப் பொது இடத்தில் பலாமரத்துக் கிளைகளில் இசைக் கலைஞர்கள் தம் முழவினைக் கட்டி வைத்துச் செல்கின்றனர்.

அந்த முழவினைப் பலாப்பழம் என்று பெண் குரங்கு நினைக்கிறது. அதனைத் தட்டிப் பார்க்கிறது. அதில் எழுகின்ற முழவோசை அருகில் கீழே இருந்த அன்னச் சேவல்களை ஆட வைக்கிறது. அத்தகைய சிறப்புடைய பொதிகை மலைக்கு உரியவன் ஆய் அண்டிரன்.

அவன் நாட்டில் ஆடு மகள் செல்லக் கூடுமே யன்றிப் பீடு உடைய மன்னர்கள் புக இயலாது.

மன்றப் பலவின் மாச் சினை மந்தி
இரவலர் நாற்றிய விசி கூடு முழவின்
பாடு இன் தெண் கண், கனி செத்து, அடிப்பின்.
அன்னச் சேவல் மாறு எழுந்து ஆலும்,
கழல் தொடி ஆஅய் மழை தவழ் பொதியில்—
ஆடுமகள் குறுகின் அல்லது,
பீடு கெழு மன்னர் குறுகலோ அரிதே.

திணை - அது; துறை - வாழ்த்து; இயன்மொழியும் ஆம்.

அவனை அவர் பாடியது.

# 129. வேள் ஆய் அண்டிரன்

ஆய் அண்டிரன் அவன் மாமலையில் வாழும் குறவர் சிறுகுடிசைகளில் வாழ்பவர்; மூங்கில் குழாயில் வைத்திருக்கும் முதிர்ந்த கள்ளை மகிழ்வுடன் பருகுவர்; வேங்கை முற்றங்களில் குரவை ஆடுவர். தீஞ்சுளைப் பலா மிக்குள்ள மலை அது.

அவன் இரவலர்க்குத் தந்த யானைகள் அவற்றை எண்ணிக் கூற முடியாது. வானத்து நட்சத்திரங்கள் அவை எங்கும் நிறைந்து கருமையே இல்லாதபடி நிரம்பி விட்டால் வானம் வெளுப்பாகவே காட்சி அளிக்கும்.

அம்மீன்களின் கூட்டம் அவற்றைப் போன்றது அவன் தந்த யானைகளின் ஈட்டம்.

விண்மீன்களை எண்ண முடியாது. அதே போல அவன் தந்த யானைகளையும் கணக்கிட்டுக் கூறமுடியாது.

குறி இறைக் குரம்பைக் குறவர் மாக்கள்
வாங்கு அமைப் பழுனிய தேறல் மகிழ்ந்து
வேங்கை முன்றில் குரவை அயரும்,
தீம் சுளைப் பலவின், மா மலைக் கிழவன்—
ஆஅய் அண்டிரன், அடு போர் அண்ணல்—
இரவலர்க்கு ஈத்த யானையின், கரவு இன்று,
வானம் மீன் பல பூப்பின், ஆனாது
ஒரு வழிக் கரு வழி இன்றிப்
பெரு வெள்ளென்னின், பிழையாதுமன்னே.

திணை - அது; துறை - இயன்மொழி.
அவனை அவர் பாடியது.

## 130. வேள் ஆய் அண்டிரன்

உன் நாட்டில் ஒரு பெண்யானை ஒரே ஈனில் பத்து யானை களையா தருகிறது! உன்கொடைச் செயல் வியப்பாக உள்ளது.

நீ பரிசிலர்க்குத் தரும் யானைகளை எண்ணினால் அதற்கு உவமை கூற முடியாது. கொங்கரை மேற்குக் கடலுக்கு நீ ஓட்டி வெற்றி கொண்ட நாளில் அங்கு இருந்து கொண்டு வந்த வேல்களைவிட அவை பலவாகும். போர் வெற்றிச் சிறப்பும் கொடைச் சிறப்பும் மிக்கவன் நீ!

விளக்கு மணிக் கொடும் பூண் ஆஅய்! நின்நாட்டு
இளம்பிடி ஒரு சூல் பத்து ஈனும்மோ?—
நின்னும் நின்மலையும் பாடி வருநர்க்கு,
இன் முகம் கரவாது, உவந்து நீ அளித்த
அண்ணல் யானை எண்ணின், கொங்கர்க்
குட கடல் ஓட்டிய ஞான்றைத்
தலைப்பெயர்த்திட்ட வேலினும் பலவே!

திணையும் துறையும் அவை.
அவனை அவர் பாடியது.

# 131. வேள் ஆய் அண்டிரன்

அழகு மிக்க இந்தக் காடு ஆய் அண்டிரன் குன்றத்தைச் சிறப்பித்துப் பாடியதோ? இங்கு யானைகள் மிக்கு உள்ளனவே!

மழை பெய்யும் மேகங்கள் மிக்குத் தவழும் மாமலைக்கு உரியவன்; சுரபுன்னைப் பூவால் தொடுக்கப்பட்ட மாலையை அணிந்துள்ளான். வாள் ஏந்திய வீரன் அண்டிரன். அவன் மலையைச் சிறப்பித்துப் பாடித்தான் இந்தப் பரிசை இந்தக் காடு பெற்றிருக்க வேண்டும்.

மழைக் கணம் சேக்கும் மா மலைக் கிழவன்,
வழைப் பூங் கண்ணி வாய் வாள் அண்டிரன்,
குன்றம் பாடினகொல்லோ—
களிறு மிக உடைய இக் கவின் பெறு காடே?

திணையும் துறையும் அவை.
அவனை அவர் பாடியது.

# 132. வேள் ஆய் அண்டிரன்

ஆய் அவன் பெருமை அதனை அறியாமல் வறிதே காலத்தைக் கடத்தி விட்டேன். என் நா பிறர் புகழ் பேசியது, செவி பிறர் புகழைக் கேட்டுக் கொண்டிருந்தது. மாபெரும் தவறுகள் இழைத்து விட்டேன்.

நரந்தையையும், நறிய புல்லையும் மேய்ந்த கவரிமான் குவளைப் பூக்கள் மலிந்த சுனை நீரைப் பருகிவிட்டுத் தகரமரத்துத் தண்ணிழலில் தன் பெண்மானோடு தங்கும் இமயம் வடதிசைக் கண் உள்ளது. வடக்குக்குச் சிறப்பு வானை அளாவும் இமயம்.

அதே போலத் தெற்குக்குப் பெருமை தருவது ஆய் அண்டிரன் புகழ்., அவன் குடி இங்கு இல்லை என்றால் வடதிசை உயர்ந்து இருக்கும்; தென்திசை தாழ்ந்து போய் இருக்கும்.

ஆய்குடி இங்குத் தென்திசையில் இல்லை என்றால் உலகம் ஒரு பக்கம் சாய்ந்து நிலைகுலைந்து இருக்கும். வடக்கு உயர்ந்து இருக்கும்.

முன் உள்ளுவோனைப் பின் உள்ளினேனே!
ஆழ்க, என் உள்ளம்! போழ்க, என் நாவே!
பாழ் ஊர்க் கிணற்றின் தூர்க, என் செவியே!—
நரந்தை நறும்புல் மேய்ந்த கவரி
குவளைப் பைஞ் சுனை பருகி, அயல
தகரத் தண் நிழல் பிணையொடு வதியும்
வட திசையதுவே வான் தோய் இமயம்.
தென் திசை ஆஅய் குடி இன்றாயின்,
பிறழ்வது மன்னோ, இம் மலர் தலை உலகே.

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

# 133. வேள் ஆய் அண்டிரன்

*மெல்லிய இயல் உள்ள விறலியே! நல்லிசை என்பதைக் கேட்டு அறிந்திருக்கலாம். அதனை நீ கண்ணால் பார்க்க வேண்டுமா? புகழ் என்பது யாது? அதற்கு வடிவம் உள்ளதா? அதை நேரில் காண முடியுமா?*

*உனக்கு நேரில் காட்டுகிறேன். நீ அதைப் பார்க்க வேண்டுமா?*

*மணம் வீசும் கூந்தல் அது காற்றில் அலையத் தோகையை உடைய மயிலைப் போல் மெல்ல நடந்து ஆயைக் காணச் செல்குவாய். மாரி அன்ன வண்மை உடையவன். தேர் வேள் ஆய் அவனைக் காணச் செல்க. புகழ் வடிவினன் அவன்; அவனைக் கண்டால் நீ சிறப்புகள் பெறுவாய்.*

மெல் இயல் விறலி! நீ நல் இசை செவியின்
கேட்பின் அல்லது, காண்பு அறியலையே;
காண்டல் வேண்டினைஆயின்—மாண்ட நின்
விரை வளர் கூந்தல் வரை வளி உளரக்
கலவ மஞ்ஞையின் காண்வர இயலி,
மாரி அன்ன வண்மைத்
தேர் வேள் ஆயைக் காணிய சென்மே!

திணை - அது; துறை - விறலியாற்றுப்படை.

அவனை அவர் பாடியது.

## 134. வேள் ஆய் அண்டிரன்

ஒரு சிலர் இப் பிறவியில் செய்த நன்மைகள் அடுத்த பிறவிக்கு உதவும்; நன்மை கிடைக்கும் என்று எதிர்பார்த்துச் செய்கின்றனர். இது வணிகப் போக்கு.

இவன் ஏன் தருகிறான்? சான்றோர் சாற்றும் நெறி இது என்பதால்தான் தருகிறான். அதனால்தான் இவன் ஈதல் செய்கிறான். வள்ளன்மைக்கு இதுதான் காரணம்.

> 'இம்மைச் செய்தது மறுமைக்கு ஆம்' எனும்
> அற விலை வணிகன் ஆஅய் அல்லன்;
> பிறரும் சான்றோர் சென்ற நெறி என,
> ஆங்குப் பட்டன்று, அவன் கைவண்மையே.

திணை - அது; துறை - இயன்மொழி.

அவனை அவர் பாடியது.

## 135. வேள் ஆய் அண்டிரன்

புலிகள் வழங்கும் மலைச்சாரல் அவற்றின் வளைவுகளில் விறலி என்னைப் பின் தொடரப் படுமலைப் பாலையைப் பாடியவனாய் உன்னை நினைத்துக் கொண்டு யான் வந்துள்ளேன்.

யான் உன்னைக் காண வந்தது யானையோ தேரோ புரவியோ பரிசிலாகக் கேட்டுப் பெறுவதற்கு அன்று.

நீ கேட்டுத் தருவது இல்லை; வருகிறவர் எதை விரும்பு கிறார்களோ அதை அவர்களே எடுத்துக் கொள்ளச் சொல்கிறாய்; இது உன் இயல்பு.

பகைவர்களை அழித்துப் புகழுடன் விளங்கும் நாடன் நீ! உன்னைக் காணவே வந்துள்ளேன். அதுவே எனக்கு மனநிறைவு தருவதாகும்.

> கொடுவரி வழங்கும் கோடு உயர் நெடு வரை,
> அரு விடர்ச் சிறு நெறி ஏறலின், வருந்தித்,
> தடவரல் கொண்ட தகை மெல் ஒதுக்கின்,
> வளைக் கை விறலி என் பின்னள் ஆகப்,

பொன் வார்ந்தன்ன புரி அடங்கு நரம்பின்
வரி நவில் பனுவல் புலம் பெயர்ந்து இசைப்பப்,
படுமலை நின்ற பயம் கெழு சீறியாழ்
ஒல்கல் உள்ளமொடு ஒரு புடைத் தழீஇப்,
புகழ்சால் சிறப்பின் நின் நல் இசை உள்ளி,
வந்தனென் எந்தை! யானே: என்றும்,
மன்று படு பரிசிலர்க் காணின், கன்றொடு
கறை அடி யானை இரியல் போக்கும்
மலைகெழு நாடன்! மா வேள் ஆஅய்!—
களிறும் அன்றே; மாவும் அன்றே;
ஒளிறு படைப் புரவிய தேரும் அன்றே;
பாணர், பாடுநர், பரிசிலர், ஆங்கு அவர்,
தமது எனத் தொடுத்தவர் ஆயின், 'எமது' எனப்
பற்றல் தேற்றாப் பயங் கெழு தாயமொடு,
அன்னஆக, நின் ஊழி; நின்னைக்
காண்டல் வேண்டிய அளவை—வேண்டார்
உறு முரண் கடந்த ஆற்றல்
பொது மீக்கூற்றத்து நாடு கிழவோயே!

திணை - அது; துறை - பரிசில் துறை.

## 136. வேள் ஆய் அண்டிரன்

யாழுக்குப் போடும் மேல் உறை அதுபோல் உள்ளது அழுக்கேறிய என் ஆடை; அதன் கிழிச்சலை மறைக்க ஊசி கொண்டு தைக்க அதன் இடையில் உள்ள இடுக்குகளில் ஈரும் பேனும் குடி கொண்டுள்ளன; உடுத்தத் தக்க ஆடை இல்லை; இது முதற் குறை.

என் சுற்றத்தவர் உணவு இன்றி வருந்துகின்றனர். அவர்கள் விடும் கண்ணீர்; அவர்கள் பசி; இது அடுத்த தேவை.

மூன்றாவது வழிப்பறிக் கொள்ளையர் எம்மிடம் எந்தப் பொருளும் இல்லை என்று அறிவித்தும் கேளாமல் வழிப்பறி செய்ய வளைக்கின்றனர். குரங்கு போன்ற குள்ளவடிவினர் அவர்கள் தரும் தொல்லை; கைப் பொருள் யாதும் இல்லாத நிலை; இது மூன்றா வது. எம் இடுக்கண்களை நீ அறிந்தவன்

என்பதால் உன்னை நாடிக் கடுமையான வெய்யில் காயும் கொடுவழி கடந்து உன்னை நோக்கி வருகிறோம். உன் பெயரையும் புகழையும் ஏத்தி வருகிறோம்.

யாம் வருந்தி உழல்கிறோம். எங்களுக்குக் கொடுப்பதுதான் அறக்கொடை. மற்றவர்களுக்குத் தருவது எதிர்பார்த்துத் தருவது என்பதை எடுத்து உரைக்க விரும்புகிறேன்.

இனி நீ உன் விருப்பப்படி நல்குக! எதைக் கொடுத்தாலும் மகிழ்வுடன் ஏற்றுக் கொள்கிறோம்.

நீ துறையூரின் முன்துறையில் உள்ள ஆற்று மணலைப் போலப் பல ஆண்டுகள் வாழ்க என்று வாழ்த்தி நீ தரும் பொருளைக் கொண்டு உண்டு வாழ்வோம்.

யாழ்ப் பத்தர்ப் புறம் கடுப்ப
இழை வலந்த பல் துன்னத்து
இடைப் புரை பற்றிப், பிணி விடாஅ
ஈர்க் குழாத்தோடு இறை கூர்ந்த
பேஎன் பகை என ஒன்று என்கோ?
உண்ணாமையின் ஊன் வாடித்,
தெண் நீரின் கண் மல்கிக்,
கசிவுற்ற என் பல் கிளையொடு
பசி அலைக்கும் பகை ஒன்று என்கோ?
அன்ன தன்மையும் அறிந்தீயார்,
'நின்னது தா' என, நிலை தளர,
மரம் பிறங்கிய நளிச் சிலம்பில்,
குரங்கு அன்ன புன் குறுங் கூளியர்
பரந்து அலைக்கும் பகை ஒன்று என்கோ?
'ஆஅங்கு, எனைப் பகையும் அறியுநன் ஆய்'
எனக் கருதிப், பெயர் ஏத்தி,
வாய் ஆர நின் இசை நம்பிச்,
சுடர் சுட்ட சுரத்து ஏறி,
இவண் வந்த பெரு நசையேம்;
'எமக்கு ஈவோர் பிறர்க்கு ஈவோர்;
பிறர்க்கு ஈவோர் தமக்கு ஈப'வென
அனைத்து உரைத்தனன் யான் ஆக,
நினக்கு ஒத்தது நீ நாடி,

நல்கினை விடுமதி, பரிசில்! அல்கலும்,
தண் புனல் வாயில் துறையூர் முன்துறை
நுண் பல மணலினும் ஏத்தி,
உண்குவம், பெரும! நீ நல்கிய வளனே.

திணை - அது; துறை - பரிசில் கடாநிலை.
அவனைத் துறையூர் ஓடைகிழார் பாடியது.

## 137. நாஞ்சில் வள்ளுவன்

முரசு முழங்க ஆட்சி செய்யும் மூவேந்தர்களைச் சிந்தனை யாலும் யான் எண்ணியது இல்லை; அவர்கள் புகழ் பாடிப் பெறக் கருதியது இல்லை.

பெருநில மன்னராகிய மூவேந்தர்களை யான் பாடியது இல்லை; பாடும் ஆவலும் என்மாட்டு அமைந்தது இல்லை; உன்னையே யான் முதலில் அறிந்தது; உன் நாட்டைப் பற்றித் தான் யான் பாடுவது என்பது என் கொள்கை.

உன் நாடு வளம்மிக்கது; விதைத்து விட்டால் அதற்கு மழை தேவை இல்லை. வயலில் தேங்கி உள்ள நீரே அதனை உரம் கொள்ளச் செய்யும். உன் நிலத்து நெற் பயிர் கரும்பு போல் செழித்து வளர்வது. உணவுக்கு உன் நாட்டில் எந்தக் குறையும் இல்லை.

மழைக் காலத்தில் கிழக்குக் காற்று வீசப் பெய்யும் மழை கோடையாயினும் வற்றுவது இல்லை. குவளைகள் மகளிர் கண்களைப் போல் பூத்துப் பொலிவு தருகின்றன.

கரிய அடி மரத்தை உடைய வேங்கை பொன்னிறத்துப் பூக்களைத் தருகின்றது. அவற்றைச் சுமந்து நீலமணி போல் விளங்கும் உன் நதிகள் கடலில் சேர்க்கின்றன.

உன் மலையில் உள்ள தோட்டங்கள் மலைக்கு அழகு தருகின்றன. சோலைகள் மிக்க மலைச்சாரல் உடைய நாடு நினது ஆகும்.

சிறு வெள் அருவிகள் பாயும் பெருமலையை உடைய நாடன் நீ!

உன் நாட்டைப் பாடினால் அதுவே எமக்கு மனநிறைவு தருவதாகும். உன்னையும் உன் தாயையும் தந்தையையும் வாழ்த்தி மகிழ்கின்றேன். நீவீர் வாழ்க.

இரங்கு முரசின், இனம்சால் யானை,
முந்நீர் ஏணி விறல் கெழு மூவரை
இன்னும் ஓர் யான் அவா அறியேனே;
நீயே,முன்யான் அறியுமோனே—துவன்றிய
கயத்து இட்ட வித்து வறத்தின் சாவாது,
கழைக் கரும்பின் ஒலிக்குந்து,
கொண்டல் கொண்ட நீர் கோடை காயினும்,
கண் அன்ன மலர் பூக்குந்து,
கருங் கால் வேங்கை மலரின், நாளும்
பொன் அன்ன வீ சுமந்து,
மணி அன்ன நீர் கடற் படரும்;
செவ் வரைப் படப்பை நாஞ்சில் பொருந!
சிறுவெள் அருவிப் பெருங் கல் நாடனை!
நீ வாழியர், நின் தந்தை
தாய் வாழியர், நிற் பயந்திசினோரே!

திணை - அது; துறை - இயன்மொழி; பரிசில் துறையும் ஆம்.
நாஞ்சில் வள்ளுவனை ஒரு சிறைப் பெரியனார் பாடியது.

# 138. நாஞ்சில் வள்ளுவன்

*பசுக்கள் மேயும் காட்டு நிலத்தையும், மான்கள் திரியும் மலை நிலத்தையும் மீன்கள் மிக்குள்ள நீர்த்துறைகளையும் கடந்து உன் சிறிய யாழை எடுத்துக் கொண்டு பாட வந்திருக்கிறாய்.*

*கிழிச்சல் ஆடை, உன் கிழட்டு வயது இவை உன் துன்பத்தைக் காட்டுவன. கற்பனைகள் பல தாங்கிக் கொண்டு நீ வந்திருக்கிறாய். நாஞ்சில் வள்ளுவன் நீ கேட்டதைத் தருவான் என்று எண்ணிக் கொண்டு வந்திருக்கிறாய்.*

*அவன் உன்னைப் பார்த்து ''நீ இன்று போய் மறுநாள் வருக'' என்று கூறி அனுப்பமாட்டான்.*

*தழைத்த கூந்தலை உடைய பேரழகி அவன் துணைவி அவளோடு மகிழ்வுடன் இருப்பவன்.*

*கிளி தங்கும் சோலையில் மரப் பொந்தில் சேமித்து வைக்கக்கும் கதிராகிய வைப்பீடு போல அவனிடம் கேட்ட அளவில் எளிதில் பெற முடியும்.*

முன் நீ பரிசில் பெற்றிருக்கிறாய் என்பதால் தயக்கம் காட்டத் தேவை இல்லை. எத்தனை முறை வந்தாலும் அவன் கொடுத்துக் கொண்டே இருப்பான். இதற்குமுன் வந்தாய் என்று யாரும் பேசப் போவது இல்லை.

ஆனினம் கலித்த அதர் பல கடந்து
மானினம் கலித்த மலை பின் ஒழிய,
மீனினம் கலித்த துறை பல நீந்தி,
உள்ளி வந்த, வள் உயிர்ச் சீறியாழ்,
சிதாஅர் உடுக்கை, முதாஅரிப் பாண!
நீயே, பேர் எண்ணலையே; நின் இறை,
'மாறி வா' என மொழியலன்மாதோ;
ஒலி இருங் கதுப்பின் ஆயிழை கணவன்
கிளி மாீஇய வியன் புனத்து
மரன் அணி பெருங் குரல் அனையன் ஆதலின்,
நின்னை வருதல் அறிந்தனர் யாரே?

திணை - அது; துறை - பாணாற்றுப்படை.
அவனை மருதன் இளநாகனார் பாடியது.

## 139. நாஞ்சில் வள்ளுவன்

தோள் வடுப்பட இசைக் கருவிகள் பலவற்றையும் தாங்கி வரும் இள மங்கையர், மற்றும் விறலியர் ஆகிய இவர்கள் ஆடல் பாடல் வல்லவர்கள். இவர்கள் ஆடல் பாடல் இவற்றைக் கண்டு மகிழ்ந்து இவர்களுக்குச் சிறப்புச் செய்க என்று சொல்லிக் கொண்டிருக்க இது காலம் அன்று. கலைச் சிறப்புக் கண்டு விலை தருக என்று பொய் சொல்லிக் கொண்டிருக்க விரும்பவில்லை.

பசி அது போக்க அதற்குப் பரிசில் கேட்க வந்துள்ளோம். இதுதான் எங்கள் நோக்கம்.

உன் உள்ளம் எப்பொழுது கனியும் என்று காத்திருக்க முடியாது. நீ போருக்குச் சென்று விட்டால் எப்பொழுது திரும்பு வாய் அதுவும் கூறமுடியாது.

பெரு வேந்தன் உனக்குப் பொருள் தந்திருக்கிறான். அழைப்பு வந்திருக்கிறது. இனி நீ அதை மறுக்கப் போவது இல்லை; அவனுக்காக உன் உயிரையும் தருவாய்.

*நிலம் பிளவுபடுவது போல போர் என்று ஒன்று எப்பொழுதாவது வந்துவிட்டால் உன்னைக் காணவே முடியாது; அதில் சிக்கிக் கொண்டு திரும்ப மாட்டாய். அதுவரை காத்திருக்க முடியாது. என் சுற்றத்தவர் பசித்து இருக்கிறார்கள். அதனால் இப்பொழுதே காலம் தாழ்த்தாமல் ஈக; இதுதான் யாம் வேண்டுவது.*

சுவல் அழுந்தப் பல காய
சில் ஓதிப் பல் இளைஞருமே,
அடி வருந்த நெடிது ஏறிய
கொடி மருங்குல் விறலியருமே.
வாழ்தல் வேண்டிப்
பொய் கூறேன்; மெய் கூறுவல்;
ஓடாப் பூட்கை உரவோர் மருக!
உயர் சிமைய உழாஅ நாஞ்சில் பொருந!
மாயா உள்ளமொடு பரிசில் துன்னி,
கனி பதம் பார்க்கும் காலை அன்றே;
ஈதல் ஆனான், வேந்தே; வேந்தற்குச்
சாதல் அஞ்சாய், நீயே, ஆயிடை,
இருநிலம் மிளிர்ந்திசினா அங்கு, ஒரு நாள்,
அருஞ் சமம் வருகுவதுஆயின்,
வருந்தலும் உண்டு, என் பைதல் அம் கடும்பே.

திணை - அது; துறை - பரிசில் கடாநிலை
அவனை அவர் பாடியது.

## 140. நாஞ்சில் வள்ளுவன்

*பலா மரம் மிக்கு உள்ள பெருநில நாஞ்சில் தலைவன் இவன் போக்கு வியத்தற்கு உரியது. புலவர்களே! கொடைமடம் பட்டு அவன் செயலாற்றுகிறான்.*

*விறலியர் தோட்டத்தில் பறித்த கீரைக்கு யாம் உடன் உண்ணக் கறியாகச் சில அரிசிதான் கேட்டோம்.*

*வரிசை அறிந்து பரிசைத் தருபவன் அவன். ஒவ்வொன்றும் ஒருமலை என்று கூறக் கூடிய அளவில் மிகப்பெரிய யானைகளைப் பரிசாகத் தருகிறான். இது மடமை அல்லவா?*

கொடுப்பதில் எவ்வளவு தருவது என்று எண்ணிப் பார்க்காமல் அள்ளித் தருகிறான்.

இவ்வாறு கொடுப்பது பெரியோர் தம் செயலாக உள்ளது. பெரியவர்கள் கொடைத் திறன் வியக்கத் தக்கதாக உள்ளது. அவர்கள் அளவு அறிந்து தருவது இல்லை.

தடவு நிலைப் பலவின் நாஞ்சில் பொருநன்
மடவன், மன்ற; செந் நாப் புலவீர்!
வளைக் கை விறலியர் படப்பைக் கொய்த
அடகின் கண்ணுறையாக யாம் சில
அரிசி வேண்டினேமாகத், தான் பிற
வரிசை அறிதலின், தன்னும் தூக்கி
இருங் கடறு வளைஇய குன்றத்து அன்னது ஓர்
பெருங் களிறு நல்கியோனே; அன்னதுஓர்
தேற்றா ஈகையும் உளதுகொல்?
போற்றார் அம்ம, பெரியோர் தம் கடனே?

திணை - துறை; துறை - பரிசில் விடை.

அவனை ஔவையார் பாடியது.

## 141. வையாவிக் கோப்பெரும் பேகன்

எம்மைக் கண்டு ''எவ்வூர்? எங்கிருந்து வருகிறீர்?'' என்று வியப்புடன் கேட்கின்றீர்.

எங்களின் பாணர்கள் பொற்றா மரை சூடி உள்ளனர். விறலியர் பொன்னால் ஆகிய மாலையை அணிந்துள்ளனர்.

தேரில் வந்து இறங்கிய யாம் அதன் குதிரைகளைப் பூட்டு அவிழ்த்து விட்டு இளைப்பாறிக் கொண்டிருக்கிறோம். ''வெளி ஊரீர் போல இருக்கின்றீர்; நீவிர் யாவிர்'' என்று கேட்கின்றீர். நாங்களும் ஒரு காலத்தில் உங்களைப் போலத் தான் காய்ந்து கிடந்தோம். கடும்பசியால் உழந்து வருந்தினோம்.

வேல் தாங்கிய அரசன் பேகனைக் காணா முன்பு உங்களைப் போலத்தான் வறுமையுற்று இருந்தோம்.

வள்ளல் பேகனைப் பற்றி நீங்கள் கேள்விப் படவில்லை என்று தெரிகிறது.

மயிலுக்குப் போர்வை தேவை இல்லை; அது உடுத்தாது; போர்த்துக் கொள்ளாது. அது அவனுக்குத் தெரிந்ததுதான். அது தோகை விரித்து ஆட அது குளிருக்கு நடுங்குகிறது என்று தான் போர்த்திருந்த மேல் ஆடையை மயிலுக்குப் போர்த்தினான்; கொடை மடம் பட்டான்.

கொடுப்பது அதன் அளவைப் பற்றி அவன் ஆராய்வது இல்லை; எதுவாயினும் கொடுப்பது தக்கது என்பது அவன் கொள்கை. அவன் பிறர்க்கு ஈவது மறுமையை எதிர்நோக்கியது அன்று. பிறர் வறுமையைத் தீர்க்க என்பதே அவன் கொள்கை.

பாணன் சூடிய பசும் பொன் தாமரை
மாண் இழை விறலி மாலையொடு விளங்கத்,
கடும் பரி நெடுந் தேர் பூட்டு விட்டு அசைஇ,
ஊரீர் போலச் சுரத்திடை இருந்தனிர்!
யாரீரோ?' என, வினவல் ஆனாக்,
காரென் ஒக்கல், கடும் பசி, இரவல!
வென் வேல் அண்ணற் காணா ஊங்கே,
நின்னினும் புல்லியேம்மன்னே; இனியே,
இன்னேம் ஆயினேம்மன்னே; என்றும்
உடாஅ, போரா ஆகுதல் அறிந்தும்,
படாஅம் மஞ்ஞைக்கு ஈத்த எம் கோ,
கடாஅ யானைக் கலி மான் பேகன்,
'எத் துணை ஆயினும் ஈத்தல் நன்று' என,
மறுமை நோக்கின்றோ அன்றே,
பிறர், வறுமை நோக்கின்று, அவன் கை வண்மையே,

திணை - அது; துறை - பாணாற்றுப்படை; புலவராற்றுப்படையும் ஆம்.
வையாவிக் கோப்பெரும் பேகனைப் பரணர் பாடியது.

## 142. வையாவிக் கோப்பெரும் பேகன்

மழை, வற்றிக் கிடக்கும் குளத்தை நிரப்புகிறது; வயல்களில் பொழிகிறது; வளத்தை நல்குகிறது; அதோடு உவர் நிலத்திலும் பெய்து வீணாகிறது. அது இட பேதம் பார்ப்பது இல்லை.

பேகனும் தான் கொடுப்பதில் பேதம் பார்ப்பது இல்லை; எவருக்கு என்று எண்ணி வேறுபடுத்துவது இல்லை. கொடை மடம் படுவான்.

கொடை மடம் படுபவன் படைமடம் படுவது இல்லை. போர்க்களத்தில் அவன் ஆராய்ந்தே செயல்படுவான். தாக்குவது யாரை? எப்பொழுது? எங்கே? என்று அறிந்தே செயல்படுவான். அறிவு அற்று அழிவைத் தேடமாட்டான்.

அறு குளத்து உகுத்தும், அகல் வயல் பொழிந்தும்,
உறும் இடத்து உதவாது உவர் நிலம் ஊட்டியும்,
வரையா மரபின் மாரிபோலக்,
கடாஅ யானைக் கழற் காற் பேகன்
கொடைமடம் படுதல் அல்லது,
படைமடம் படான், பிறர் படை மயக்குறினே.

திணை - அது; துறை இயன்மொழி.
அவனை அவர் பாடியது.

## 143. வையாவிக் கோப்பெரும் பேகன்

மழை வேண்டிப் பலி இட்டு வழிபாடு செய்து மழை காணும் குறமகளிர், மிக்கு பெய்தால் ''மேகமே அகலுக'' என்பர். அவை நீங்க அவர்கள் உவகை கொள்வர். தினை உண்டு வாழும் வாழ்க்கையர்; அவர்கள் வாழும் மலை நாடனே; போரில் வெற்றியும் ஈகைச் சிறப்பும் உடைய பேகனே!

கடும்வழி கடந்து பசிக்கு வருந்தும் எம் சுற்றத்தினர் அவர்களுக்காகப் பரிசில் கேட்க உன் மலை நாட்டில் சிற்றூர் நோக்கி உன் வீட்டு வாயிலை அடைந்தோம்; உன் மலையையும் உன் சிறப்பையும் பாட அதைக் கேட்டு ஒரு நங்கை கண்ணீர் விட்டாள்; அது அவள் மார்பகத்தை நனைத்தது. அவள் யாரோ அறியக் கூடவில்லை; குழல் இரங்கி ஒலிப்பது போல அவள் அழுகை எங்களை வருத்தியது. அது எங்கள் உள்ளத்தை வாட்டுகிறது.

'மலை வான் கொள்க!' என, உயர் பலி தூஉய்,
'மாரி ஆன்று, மழை மேக்கு உயர்க!' எனக்
கடவுட் பேணிய குறவர் மாக்கள்,
பெயல் கண்மாறிய உவகையர், சாரற்

புனத் தினை அயிலும் நாட! சினப் போர்க்
கை வள் ஈகைக் கடு மான் பேக!
யார்கொல் அளியள்தானே - நெருநல்,
சுரன் உழந்து வருந்திய ஒக்கல் பசித்தெனக்,
குணில் பாய் முரசின் இரங்கும் அருவி
நளி இருஞ் சிலம்பின் சீறூர் ஆங்கண்,
வாயில் தோன்றி, வாழ்த்தி நின்று,
நின்னும் நின் மலையும் பாட, இன்னாது
இகுத்த கண்ணீர் நிறுத்தல் செல்லாள்,
முலையகம் நனைப்ப, விம்மிக்,
குழல் இனைவதுபோல் அழுதனள், பெரிதே?

திணை - பெருந்திணை; துறை - குறுங்கலி; தாபதநிலையும் ஆம்.
அவனால் துறக்கப்பட்ட கண்ணகி காரணமாக அவனைக் கபிலர் பாடியது.

# 144. வையாவிக் கோப்பெரும் பேகன்

இதோ இதைக் கேட்பாயாக! இருள் வரும் அந்திப்பொழுது எம் சிறிய யாழில் செவ்வழிப்பண் இசைத்து உன்னுடைய காட்டைச் சிறப்பித்துப் பாடினோம். கார் காலத்தைச் சித்திரித்தோம். இதை நாங்கள் எதிர்பார்க்கவில்லை.

பாட்டைக் கேட்டு நெகிழ்ந்தவளாய் நங்கை ஒருத்தி கண்ணீர் விட்டாள். இது எங்களுக்கு வியப்பு அளித்தது. இவள் ஏன் வருந்த வேண்டும்? அவளை வினவத் தொடங்கினோம்.

''இளநங்கையே யாம் நேசிக்கும் தலைவனுக்கு நீ உறவோ?'' என்று யாம் பணிவுடன் கேட்டோம்.

காந்தள் முகை போன்ற அவள் மெல்லிய விரலால் தன் கண்ணீரைத் துடைத்துக் கொண்டு ''யாம் இப்பொழுது அவனுக்குக் கிளைஞர் அல்லேம்; கேட்பீர். அவர் இனி எம்மைப் போல் ஒருத்தியை விரும்பி ஒலி செய்யும் தேரில் ஊர்க்கண் வருகிறார்; புகழ் விளங்கு பேகன்! '' என்று கூறினாள்.

அவள் யார்? ஏன் அழுகிறாள்? அவள் குறை யாது? அவள் உன் பெயரைக் கூறுகிறாள். அவளுக்கு அருள் செய்யவில்லை என்றால் அது கொடிது ஆகும்.

அருளாய் ஆகலோ கொடிதே; இருள் வரச்,
சீறியாழ் செவ்வழி பண்ணி, யாழ நின்
கார் எதிர் கானம் பாடினேமாக,
நீல் நறு நெய்தலின் பொலிந்த உண்கண்
கலுழ்ந்து, வார் அரிப் பனி பூண் அகம் நனைப்ப,
இனைதல் ஆனாளாக, 'இளையோய்!
கிளையைமன், எம் கேள் வெய்யோற்கு?' என,
யாம் தற் தொழுதனம் வினவக், காந்தள்
முகை புரை விரலின் கண்ணீர் துடையா,
'யாம் அவன் கிளைஞரேம்அல்லேம்; கேள், இனி:
எம் போல் ஒருத்தி நலன் நயந்து, என்றும்,
வரூஉம்' என்ப - 'வயங்கு புகழ்ப் பேகன்
ஒல்லென ஒலிக்கும் தேரொடு,
முல்லை வேலி, நல் ஊரானே.'

திணையும் துறையும் அவை.

அவனை அவள் காரணமாகப் பரணர் பாடியது.

## 145. வையாவிக் கோப்பெரும் பேகன்

மென்மை மிக்கது மயில்; அது குளிரால் நடுங்குகிறது என்று அதற்கு மேல் ஆடையைத் தந்தாய்! அழியாப் புகழ் கொண்டாய். யானைகள் மிக்கு உள்ள பேகனே! யாம் பசித்து அதனால் உன்னை நாடி வரவில்லை. எங்களை எதிர் பார்த்துச் சுற்றத்தவரும் இல்லை.

களங்கனியன்ன கருங்கோட்டுச் சிறிய யாழை இசைத்துக் கேட்பாரை மகிழ்விக்கிறோம். நாங்கள் வேண்டும் பரிசில் காசு பொருள் அன்று; அறம் செய்து உதவுக! அருளுக என்பதுதான் யாம் உன்னிடம் எதிர் பார்க்கும் பரிசில்.

இன்று இரவுப் பொழுது; நெடுந்தேர் ஏறித் தனிமையில் வருந்தி உறையும் ஒருத்தியின் துன்பத்தைக் களைவாயாக! இதுவே யாம் உன்னிடம் கேட்கும் பரிசில்.

'மடத் தகை மா மயில் பனிக்கும்' என்று அருளிப்,
படாஅம் ஈத்த கெடாஅ நல் இசைக்,
கடாஅ யானைக் கலி மான் பேக!
பசித்தும் வாரேம்; பாரமும் இலமே;

களங்கனி அன்ன கருங்கோட்டுச் சீறியாழ்
நயம்புரிந்து உறையுநர் நடுங்கப் பண்ணி,
'அறம் செய்தீமோ, அருள் வெய்யோய்!' என,
இஃது யாம் இரந்த பரிசில் : அஃது இருளின்,
இன மணி நெடுந் தேர் ஏறி,
இன்னாது உறைவி அரும் படர் களைமே!

திணையும் துறையும் அவை.

அவனை அவள் காரணமாக அவர் பாடியது.

## 146. வையாவிக் கோப்பெரும் பேகன்

பேகனே யான் எம் வறுமை தீர்க்க என்று கேட்க வரவில்லை. பொன் ஆபரணம் தருக என்றும் இரக்க வரவில்லை.

யாழிசைத்துச் செவ்வழிப் பண்பாடி உன்சீர்மிகு நாட்டைப் பாடினோம். இவ் இசை கேட்டு நீ இன்புற்றுப் பரிசில் தர விழையலாம். யாம் ஒரு வேண்டுகோள் விடுக்கிறோம்.

உன்னை எதிர் நோக்கும் ஏந்திழையாள் உன்னைப் பிரிந்து வாடுகிறாள். அவள் துயர் தீர நீ உன் தேரினை அங்குச் செலுத்துக.

வாடிய அவள் வாழ்வு மலரட்டும்; மயில் தோகை குவிந்தது போல விளங்கும் அவள் கூந்தலில் அவள் பூச் சூடிக் கொள்ளட்டும். அவள் மகிழ்வு பெற நீ அருளுக; இதுவேயாம் வேண்டுவது; எமக்குத் தரும் பரிசிலும் ஆகும்.

அன்ன ஆக: நின் அருங் கல வெறுக்கை
அவை பெறல் வேண்டேம்; அடு போர்ப் பேக!
சீறியாழ் செவ்வழி பண்ணி, நின் வன் புல
நல் நாடு பாட, என்னை நயந்து
பரிசில் நல்குவைஆயின், குரிசில்! நீ
நல்காமையின் நைவரச் சாஅய்,
அருந் துயர் உழக்கும் நின் திருந்துஇழை அரிவை
கலி மயில் கலாவம் கால் குவித்தன்ன,
ஒலி மென் கூந்தற் கமழ் புகை கொளீஇத்,
தண் கமழ் கோதை புனைய,
வண் வரி நெடுந் தேர் பூண்க, நின் மாவே!

திணையும் துறையும் அவை.

அவனை அவள் காரணமாக அரிசில் கிழார் பாடியது.

# 147. வையாவிக் கோப்பெரும் பேகன்

கல்முழைகளில் இருந்து விழும் அருவிகளை உடைய மலைகள் பலவற்றைக் கடந்து சிறிய யாழ் கொண்டு செவ்வழிப்பண் கூட்டிப் பாடினோம்.

அங்கே கார் காலத்து மழைத் துளி ஓசை கேட்டுத் தனிமையில் வருந்திக் கொண்டு இருந்தாள் ஒரு மங்கை; இது நேற்றைய தினம் நடந்த நிகழ்ச்சி; அவள் ஒரு மூலையில் ஒடுங்கித் தனிமையில் வருந்தியவளாய் இருந்தாள்.

வாரி முடிக்காத அவள் கூந்தல் நீலமணிபோல் விளங்க மாசறக் கழுவிப் புதுமலர் சூடி அவள் கவின் பெற நீ அங்குச் சென்றால் அதுவே யாம் வேண்டும் பரிசில். ஆவியர் தலைவனே! இதுவே யாம் வேண்டுவது.

கல் முழை அருவிப் பல் மலை நீந்திச்,
சீறியாழ் செவ்வழி பண்ணி வந்ததைக்,
கார் வான் இன் உறை தமியள் கேளா,
நெருநல் ஒரு சிறைப் புலம்புகொண்டு உறையும்
அரி மதர் மழைக் கண், அம் மா அரிவை
நெய்யொடு துறந்த மை இருங் கூந்தல்
மண்ணுறு மணியின் மாசுஅற மண்ணிப்,
புது மலர் கஞல, இன்று பெயரின்,
அதுமன், எம் பரிசில் - ஆவியர் கோவே!

திணையும் துறையும் அவை.

அவள் காரணமாக அவனைப் பெருங்குன்னூர் கிழார் பாடியது.

# 148. கண்டீரக் கோப் பெரு நள்ளி

அருவிகள் ஒலிக்கும் மலைக்குத் தலைவனே! நள்ளி!

விடா முயற்சியால் நீ கொணரும் செல்வத்தை வாழ்த்தி யாம் பரிசில் பெறுகிறோம்.

ஒவ்வொரு நாளும் பொன் ஆபரணங்களையும், களிறு களையும் கொண்டு வந்து நெற்கூடுகள் மிக்குள்ள நின் நகரில்

சேர்க்கிறாய்; அவற்றை எமக்கு நல்கு கிறாய்; அவற்றைப் பெறும் நாங்கள் மனநிறைவு கொள்கிறோம்.

பெருமையற்ற மன்னர்களைப் புகழ்ந்து பேசுவதும், அவர்கள் சாதிக்காத வெற்றிகளைச் சாதித்தனவாகப் புனைந்து கூறிக் கிளப்பதும் எம் சிறு செந்நாவால் இயலா. உன்னைப் பாடுவதில் தான் யாம் பெரு மகிழ்வு கொள்கிறோம்.

கறங்கு மிசை அருவிய பிறங்கு மலை நள்ளி! நின்
அசைவு இல் நோன் தாள் நசை வளன் ஏத்தி,
நாள்தோறும் நன் கலம் களிற்றொடு கொணர்ந்து,
கூடு விளங்கு வியல் நகர், பரிசில் முற்று அளிப்பப்;
பீடு இல் மன்னர்ப் புகழ்ச்சி வேண்டிச்,
செய்யா கூறிக் கிளத்தல்
எய்யாதாகின்று, எம் சிறு செந் நாவே.

திணை - பாடாண் திணை; துறை - பரிசில் துறை.
கண்டீரக்கோப் பெருநள்ளியை வன்பரணர் பாடியது.

## 149. கண்டீரக் கோப்பெரு நள்ளி

வாழ்க நீ நள்ளி! நீ எமக்கு நல்கிய வளம் அது எங்களைக் கெடுத்துவிட்டது; மயக்கம் கொள்ளச் செய்துவிட்டது. தலை கால் தெரியாமல் திகைக்க வைத்துவிட்டது.

நாங்கள் எங்கு இருக்கிறோம். என்ன செய்கிறோம் என்பதுகூட எங்களுக்குத் தெரிவது இல்லை.

காலையில் மருதம் பாட வேண்டும். மாலையில் செவ்வழிப் பண்பாட வேண்டும். இதுதான் நியதி. யாழிசை எம்மிடம் தடுமாறுகிறது.

எம் உறவினராகிய பாணர்கள் நிலைதடுமாறி வாழ்கின்றனர். அதற்குக் காரணம் நீ தந்த பெருஞ்செல்வம்; நீங்காத செல்வம். அது நிறைந்துவிட்டது.

நள்ளி! வாழியோ; நள்ளி! நள்ளென்
மாலை மருதம் பண்ணிக், காலைக்
கைவழி மருங்கின் செவ்வழி பண்ணி,

வரவு எமர் மறந்தனர் - அது நீ
புரவுக் கடன் பூண்ட வண்மையானே.

திணை - அது; துறை - இயன்மொழி.
அவனை அவர் பாடியது.

# 150. கண்டீரக் கோப்பெருநள்ளி

கூதிர் காலத்தில் பருந்தின் சிறகு போல என் கிழிந்த ஆடை இருந்தது. பழையது; ஒட்டுப் போட்டு அழுக்குப் படிந்திருந்தது. இத்தோற்றம் அவனை நெகிழ வைத்திருக்கிறது.

பலாமரத்து அடியில் யான் இளைப்பாறினேன். என்னைப் பற்றிய நினைவு என்னைவிட்டு அகன்றுவிட்டது.

என்னைப் பார்த்தாலே யான் வேற்று நாடுகள் பல சுற்றி வந்து களைத்து இருக்கிறேன் என்பதை அறிந்து கொள்ள முடிந்தது. என் உளைச்சலும் வருத்தமும் அவனுக்கு நன்கு தெரிய வந்தன.

அவன் தலைமுடியில் ஒளிபெற்ற ஆபரணம் அணிந்திருந்தான். செல்வன் என்பதை அது காட்டியது. கையில் வில்லை வைத்திருந்தான். அவன் வேட்டுவனாகத்தான் இருக்க வேண்டும்.

அவன் என்னைத்தொழுது இன்னுரை தந்தான். நான் உடனே அவனுக்கு மதிப்புத்தரும் பொருட்டு எழுந்து நின்றேன்.

கை அமர்த்தி என்னை இருக்க என்று கூறினான். அவனோடு உடன் வந்த இளைஞர் எங்கோ வழிமயங்கிச் சென்று இருந்தனர். ''அவர்கள் திரும்பி வருவதற்குள் கொழுவிய இறைச்சியை நெருப்பில் இட்டுச் சுட்டு நின் சுற்றத்தவரோடு தின்பீர்'' என்று கூறித் தந்தான்.

அமிழ்தத்தை ஒத்த அதனைத் தின்று எங்களை வாட்டிய பசியைப் போக்கிக் கொண்டோம்.

அருகில் இருந்த மரங்கள் மிக்க மலைச்சாரலில் கற்கள் இடை இருந்த அருவி நீரைத் தண்ணெனப் பருகிப் பின் அவனிடம் விடைபெறத் தொடங்கினேன்.

உமக்குத் தருதற்கு எம்மிடம் மதிப்பு மிக்க பொன் ஆபரணம் ஏதும் இல்லை. காட்டில் வாழ்பவர் யாம் என்று கூறித் தான் தன் மார்பில் பூண்டிருந்த ஒளிமிக்க பொன் மாலையையும் கையில் அணிந்திருந்த கடகத்தையும் கழற்றித் தந்தான்.

ஐயா! உம் நாடு எது? என்று கேட்டால் அவன்தன் நாட்டைப் பற்றி யாதும் கூறிற்றிலன். ஊர் அதுவும் உரைத்திலன். அவன் யார்? எந்த நாட்டினன்? எந்த ஊர்? அவற்றின் பெயர் எதையும் கூறவில்லை.

பிறர் அங்கங்கே உரையாட அதைக் கொண்டு அறிந்தேன். அவன் தோட்டி என்னும் பெயரை உடைய மலைநாட்டுக்கு உரியவன் என்பதையும், பளிங்குபோல் நீர் பாயும் அருவிகளை உடைய குன்றுகளை உடையது அவன் நாடு என்பதையும். அதற்குத் தலைவன் நள்ளி என்பான் அவன் என்பதையும் அறிய முடிந்தது.

கூதிர்ப் பருந்தின் இருஞ் சிறகு அன்ன
பாறிய சிதாரேன், பலவு முதல் பொருந்தித்,
தன்னும் உள்ளேன், பிறிது புலம் படர்ந்த என்
உயங்கு படர் வருத்தமும் உலைவும் நோக்கி,
மான் கணம் தொலைச்சிய குருதி அம் கழற் கால்,
வான் கதிர்த் திரு மணி விளங்கும் சென்னிச்,
செல்வத் தோன்றல், ஓர் வல் வில் வேட்டுவன்,
தொழுதனென் எழுவேற் கை கவித்து இரீஇ,
இழுதின் அன்ன வால் நிணக் கொழுங் குறை,
கான் அதர் மயங்கிய இளையர் வல்லே
தாம் வந்து எய்தா அளவை, ஒய்யெனத்
தான் ஞெலி தீயின் விரைவனன் சுட்டு, 'நின்
இரும் பேர் ஒக்கலொடு தின்ம்' எனத் தருதலின்,
அமிழ்தின் மிசைந்து, காய்பசி நீங்கி,
நல் மரன் நளிய நறுந் தண் சாரல்,
கல் மிசை அருவி தண்ணெனப் பருகி,
விடுத்தல் தொடங்கினேனாக, வல்லே,
'பெறுதற்கு அரிய வீறுசால் நன் கலம்
பிறிது ஒன்று இல்லை; காட்டு நாட்டேம்' என,
மார்பில் பூண்ட வயங்கு காழ் ஆரம்
மடை செறி முன்கைக் கடகமொடு ஈத்தனன்;

'எந் நாடோ?' எனப், நாடும் சொல்லான்;
'யாரீரோ?' எனப், பேரும் சொல்லான்;
பிறர் பிறர் கூற வழிக் கேட்டிசினே -
'இரும்பு புனைந்து இயற்றாப் பெரும் பெயர்த் தோட்டி
அம் மலை காக்கும் அணி நெடுங் குன்றின்,
பளிங்கு வகுத்தன்ன தீம் நீர்,
நளி மலை நாடன் நள்ளி அவன்' எனவே.

திணை - அது; துறை - இயன்மொழி.

அவனை அவர் பாடியது.

## 151. இளவிச்சிக்கோ

இன்று நேற்று அல்ல. காலம் காலமாக மலைநாட்டுத் தலைவன் கண்டீரக்கோ அவனை நச்சிப் பாடுநர் விரும்பிச் செல்வர்.

அவன் தன் வீட்டை விட்டு வெளியே நாடு கடந்து சேண் தூரம் சென்றாலும் நாங்கள் பரிசு பெறாது திரும்புவது இல்லை.

அவர் வீட்டுப் பெண்டிர் இளம் பெண் யானைகளைப் பரிசிலாகத் தந்து அனுப்புவர். எப்பொழுதும் யாம் பரிசில் பெறாமல் திரும்பிச் சென்றது இல்லை. அத்தகைய பெருமை உடையவன். அவ்னை இன்று நேரில் காண்கிறோம். கண்டு மகிழ்வு கொள்கிறோம். அவனைத் தழுவி யாம் எம் பாராட்டுதலைத் தெரிவிக்கிறோம். அவனை நேசிக்கிறோம்.

இளவிச்சிக்கோவே நீயும் அவனுடன் அமர்ந்திருக்கிறாய். உன்னைத் தழுவிக் கொள்ளத்தான் எங்களுக்கு விருப்பம். அழகிய தேருக்கு உரியவன் நன்னன் அவன் வழி வந்தவன் நீயும் தழுவிக்கொள்வதற்குத் தக்கவன்; என்றாலும் பாடுநர்க்கு உன் வாயில் எப்பொழுதும் அடைத்திருக்கிறது. அதனால் எம் சுற்றத்தினர் உன் மலையைப் பாடுவதையும் தவிர்த்துவிட்டனர்.

பண்டும் பண்டும் பாடுநர் உவப்ப,
விண் தோய் சிமைய விறல் வரைக் கவாஅன்,
கிழவன் சேட் புலம் படரின், இழை அணிந்து,
புன் தலை மடப் பிடி பரிசிலாகப்,

பெண்டிரும் தம் பதம் கொடுக்கும் வண் புகழ்க்
கண்டீரக்கோன் ஆகலின், நன்றும்
முயங்கல் ஆன்றிசின், யானே; பொலந் தேர்
நன்னன் மருகன் அன்றியும், நீயும்
முயங்கற்கு ஒத்தனைமன்னே; வயங்கு மொழிப்
பாடுநர்க்கு அடைத்த கதவின், ஆடு மழை
அணங்கு சால் அடுக்கம் பொழியும் நும்
மணம் கமழ் மால் வரை வரைந்தனர், எமரே.

திணையும் துறையும் அவை.

இளங் கண்டீரக்கோவும் இள விச்சிக்கோவும் ஒருங்கு இருந்தவழிச், சென்ற பெருந்தலைச் சாத்தனார் இளங் கண்டீரக்கோவைப் புல்லி, இள விச்சிக்கோவைப் புல்லாராக 'என்னை என் செயப் புல்லீராயினீர்?' என, அவர் பாடியது.

## 152. வல்வில் ஓரி

*யானையை வீழ்த்த அவன் எய்த அம்பு குறுக்கே வந்த புலியை வீழ்த்தியது; அது இறந்துபட்டது.*

*அதன் பின் அந்த அம்பு புள்ளிமான் ஒன்று துள்ளி ஓட அதனையும் கொன்றது.*

*அதன் பின் உரல் போன்ற தலையை உடைய பன்றியை வீழ்த்தியது. அதன் பின் அங்கே ஒரு புற்றில் தங்கி இருக்கும் உடும்பில் பாய்ந்து அங்கேயே தங்கிவிட்டது.*

*இது எங்களுக்கு வியப்பைத் தந்தது. ஒரே அம்பைக் கொண்டு புலி, மான், பன்றி, உடும்பு இத்தனையையும் வீழ்த்தி இருக்கிறான். இவன் திறம் மிக்க வேட்டுவன் என்று நினைத்தேன். விலைப் பொருட்டால் கொல்லும் வேடுவன் அல்லன்; கொலை செய்வது ஒரு தொழிலாகக் கொண்டவன் என்பதை அறிந்தோம். செல்வ முடையவன் போலவும் அவன் தோற்றம் தந்தான். அவன் பொன் ஆரம் அதனை மார்பில் அணிந்திருந்தான். சாரலில் அருவிபாயும் மலைநாட்டுத் தலைவன் ஓரியாக அவன் இருக்கக் கூடுமோ அல்லவோ என்ற ஐயம் எழுந்தது.*

*யாராக இருந்தால் என்ன பாடுவது என்று முடிவுக்கு வந்தேன். யான். ''நான் ஒரு வண்ணம் பாடுகிறேன்; விறலி!*

அதற்கு ஏற்ப நீவிர் முழவு, யாழ், தூம்பு, எல்லரி, ஆகுளி, பதலை, இவ்விசைக் கருவிகளை இயக்குமின்'' என்று கூறினேன்.

யாவரும் தத்தம் இசைக் கருவியை இயக்க யாம் பாடினோம். இருபத்தொரு துறையையும் முற்றும் பாடினோம். பின் அவனைக் 'கோவே' என்று அழைத்தோம்.

தான் யார் என்பதை நாங்கள் தெரிந்து கொண்டோம். ஆதலின் அவன் சிறிது நாணம் கொண்டான்.

''நாடுகள் பல கண்டு வருகின்றோம். உன்னைப் போல் திறன் மிக்க வேடுவனை யாம் கண்டது இல்லை'' என்று பாராட்டிப் பேசினோம்.

யாம் பாராட்டிப் பேச அவன் எங்களை விடவே இல்லை; தன் வேட்டையில் உயிர் செகுத்த மான் இறைச்சி அதனோடு பசு நெய் போன்ற தேன், இவற்றை அச்சுரத்தில் நல்கினான். அவற்றோடு தன் மலையில் கிடைத்த பொன் அதனைக் கொண்டு செய்த மணியுடன் கூடிய மாலையையும் தந்து ஏற்றுக் கொள்ளுங்கள் என்று அந்தக் காட்டு வழியில் கொடுத்து உதவினான்.

அவன் கொல்லி மலைத் தலைவன் ஓரி என்பதை யாம் அறிந்து கொண்டோம்.

'வேழம் வீழ்த்த விழுத் தொடைப் பகழி
பேழ் வாய் உழுவையைப் பெரும்பிறிது உறீஇப்,
புழல் தலைப் புகர்க் கலை உருட்டி, உரல் தலைக்
கேழற் பன்றி வீழ, அயலது
ஆழல் புற்றத்து உடும்பில் செற்றும்,
வல் வில் வேட்டம் வலம் படுத்து இருந்தோன்,
புகழ்சால் சிறப்பின் அம்பு மிகத் திளைக்கும்
கொலைவன் யார் கொலோ? கொலைவன் மற்று இவன்
விலைவன் போலான்; வெறுக்கை நன்கு உடையன்;
ஆரம் தாழ்ந்த அம் பகட்டு மார்பின்,
சாரல் அருவிப் பய மலைக் கிழவன்,
ஓரிகொல்லோ? அல்லன்கொல்லோ?
பாடுவல், விறலி! ஓர் வண்ணம்; நீரும்
மண் முழா அமைமின்; பண் யாழ் நிறுமின்;

கண் விடு தூம்பின் களிற்று உயிர் தொடுமின்;
எல்லரி தொடுமின்; ஆகுளி தொடுமின்;
பதலை ஒரு கண் பையென இயக்குமின்;
மதலை மாக் கோல் கைவலம் தமின்' என்று,
இறைவன் ஆகலின், சொல்லுபு குறுகி,
மூ-ஏழ் துறையும் முறையுளிக் கழிப்பிக்,
'கோ' எனப் பெயரிய காலை, ஆங்கு அது
தன் பெயர் ஆகலின் நாணி, மற்று, 'யாம்
நாட்டிடன் நாட்டிடன் வருதும்; ஈங்கு ஓர்
வேட்டுவர் இல்லை, நின் ஒப்போர்' என,
வேட்டது மொழியவும் விடாஅன், வேட்டத்தில்
தான் உயிர் செகுத்த மான் நிணப் புழுக்கோடு,
ஆன் உருக்கு அன்ன வேரியை நல்கி,
தன் மலைப் பிறந்த தா இல் நன் பொன்,
பல் மணிக் குவையொடும் விரைஇக், 'கொண்ம்' எனச்,
சுரத்திடை நல்கியோனே- விடர்ச் சிமை
ஓங்கு இருங் கொல்லிப் பொருநன்,
ஓம்பா ஈகை விறல் வெய்யோனே!

திணை - அது; துறை - பரிசில் விடை.

வல் வில் ஓரியை வன்பரணர் பாடியது.

## 153. வல் வில் ஓரி

மேகம் தவழும் மலைக்குத் தலைவன்; நாளும் இழைகள் அணிந்த யானைகளை தன்னிடம் வந்து இரப்பவருக்கு ஈயும் கொடையாளன். போர்களில் வெற்றி காணும் தலைவன். ஆதன் ஓரி அவன் மழை போலும் கொடைச்சிறப்பைக் காண்போம் என்று ஆர்வத்துடன் சென்றனர் எம் பாணர் சுற்றம்.

அவர்களுக்கு அவன் வெள்ளி நாரால் கட்டிய பொன்குவளை மாலை அதனைப் பரிசாகத் தந்தான். யானைகளையும் தந்தான். வேண்டிய பொருள் தந்து அவர்கள் பசியைப் போக்கினான். வளமான வாழ்க்கையைப் பெற்றனர்.

வேண்டிய பொருள் கிடைத்து விட்டது. பசி இல்லை. இனி இவர்கள் ஏன் பாடப் போகிறார்கள். ஆடப் போகிறார்கள். அவற்றை அவர்கள் மறந்தே விட்டார்கள். அவர்களுக்கு அத்தொழிலில் நாட்டமே இல்லாமல் போய்விட்டது.

மழை அணி குன்றத்துக் கிழவன், நாளும்,
இழை அணி யானை இரப்போர்க்கு ஈயும்,
சுடர் விடு பசும் பூண், சூர்ப்பு அமை முன் கை,
அடு போர் ஆனா, ஆதன் ஓரி
மாரி வண் கொடை காணிய, நன்றும்
சென்றதுமன், எம் கண்ணுளங் கடும்பே;
பனி நீர்ப் பூவா மணி மிடை குவளை
வால் நார்த் தொடுத்த கண்ணியும், கலனும்,
யானை இனத்தொடு பெற்றனர், நீங்கிப்,
பசியாராகல் மாறுகொல்-விசி பணிக்
கூடு கொள் இன் இயம் கறங்க,
ஆடலும் ஒல்லார், தம் பாடலும் மறந்தே?

திணை - அது; துறை - இயன்மொழி.
அவனை அவர் பாடியது.

## 154. கொண் கானங்கிழான்

அலைகள் மோதும் கடற்கரைக்கு அருகே சென்றாலும் குடிக்க நீர் வேண்டுவார் அருகில் நீர்க்கிணறு உள்ளதா என்று வினவுவர்.

அதுபோல் அரசர்கள் பலபேர் இருந்தாலும் அவர்கள் அத்துணைவரும் கொடையாளிகள் என்று கூற முடியாது. அவர்கள் உப்புக் கடல் போன்றவர்கள்; எதற்கும் பயன்படாதவர்கள். அவர்களால் எந்த நன்மையும் இருக்காது. வள்ளியோரைத்தான் புலவர்கள் படர்வர்.

எமக்கு உற்றது பசி; அதனால் உன்னை நாடி வந்துள்ளேன். நீ கொடுப்பது சிறிது எனினும் மனநிறைவு கொள்வேன். என் தொழில் பாடுவது. அதைச் செய்து முடிக்கிறேன். கொடுப்பதும் கொடுக்காததும் உன் விருப்பம். உன் வெற்றிச் சிறப்பையும் தூய வெள் அருவி பாயும் கொண் கானம் என்னும் மலை நாட்டையும் பாடுவது எம் தொழில்; அது என் கைவந்த கலை; பாடுகிறேன்.

திரை பொரு முந்நீர்க் கரை நணிச் செலினும்,
அறியுநர்க் காணின், வேட்கை நீக்கும்

சில் நீர் வினவுவர், மாந்தர்; அது போல்,
அரசர் உழையராகவும், புரை தபு
வள்ளியோர்ப் படர்குவர் புலவர்: அதனால்,
யானும், 'பெற்றது ஊதியம்; பேறு யாது?' என்னேன்;
உற்றனென் ஆதலின் உள்ளி வந்தனனே;
'ஈ' என இரத்தலோ அரிதே; நீ அது
நல்கினும், நல்காய் ஆயினும், வெல் போர்
எறி படைக்கு ஓடா ஆண்மை, அறுவைத்
தூ விரி கடுப்பத் துவன்றி மீமிசைத்
தண் பல இழிதரும் அருவி நின்
கொண் பெருங் கானம், பாடல் எனக்கு எளிதே.

திணை-அது; துறை-பரிசில் துறை.
கொண்கானங்கிழானை மோசிகீரனார் பாடியது.

# 155. கொண் கானம் கிழான்

*வளைந்த கோட்டை உடைய சிறிய யாழை வாடிய மருங்கிலே தழுவிக் கொண்டு "என் பாடல் இசை கேட்டு எம் துயர் நீக்குவார் யார்?" என்று வினவுகின்ற பாணனே! கேட்பாயாக!.*

*பாழ்பட்ட ஊர். அதில் நெருஞ்சி பொன்னிறத்துப் பூப் பூக்கிறது. அதற்கு ஒளி தந்து வாழ வைப்பது வானத்துக் கதிரவன்.*

*இல்லாது வருந்தும் பாணர்கள் அவர்கள். உணவுப் பாத் திரத்தை நிரப்ப ஒரு சூரியன் இல்லாமல் இல்லை. கொன்கானம் என்னும் பேரூரின் தலைவன் ஒருவன். இவர் தம் பசிபோக்க இருக் கிறான். அவர்கள் பாத்திரம் மலர்ச்சி பெறும்; கவலை நீங்கும். அவன்பால் செல்வீராக!*

வணர் கோட்டுச் சீறியாழ் வாடுபுடைத் தழீஇ,
'உணர்வோர் யார், என் இடும்பை தீர்க்க?' எனக்,
கிளக்கும், பாண!- கேள், இனி-நயத்தின்,
பாழ் ஊர் நெருஞ்சிப் பசலை வான் பூ
ஏர்தரு சுடரின் எதிர்கொண்டா அங்கு,
இலம்படு புலவர் மண்டை விளங்கு புகழ்க்

கொண் பெருங் கானத்துக் கிழவன்
தண் தார் அகலம் நோக்கின, மலர்ந்தே.

திணை - அது; துறை - பாணாற்றுப்படை.

அவனை அவர் பாடியது.

## 156. கொண்கானம் கிழான்

*பிறர் குன்றம் ஒன்றே ஒன்றில் சிறப்புப் பெற்று இருக்கும்; அது திண்மை.*

*கொண்கானம் என்னும் குன்றம் இரண்டு சிறப்புகளைப் பெற்று உள்ளது. மற்றவர் குன்றுகளைப் போல் அதற்கு உரிய திண்மை; மற்றொன்று புகழ்ச் சிறப்பு.*

*இரவலர்க்குக் கடன் கொடுத்தவர் அது திரும்பப் பெற அங்குச் சூழ்ந்திருப்பர். இது கொடைச் சிறப்பு.*

*மற்றும் சிறைப்பட்ட அரசரை மீட்பதற்குத் திறை கொணர்ந்து குவிப்பர். இது அவன் வெற்றிச் சிறப்பு.*

*இவ்விரு கூட்டம் அங்கு எப்பொழுதும் வட்டமிட்டுக் கொண்டிருக்கும். கொடை. வெற்றி இவற்றால் அவன் புகழ் நிரம்பியிருக்கும். இது அதன் தனிச் சிறப்பு.*

ஒன்று நன்கு உடைய பிறர் குன்றம்; என்றும்
இரண்டு நன்கு உடைத்தே கொண் பெருங் கானம்;
நச்சிச் சென்ற இரவலர்ச் சுட்டித்
தொடுத்து உணக் கிடப்பினும் கிடக்கும்; அஃதான்று;
நிறை அருந் தானை வேந்தரைத்
திறை கொண்டு பெயர்க்கும் செம்மலும் உடைத்தே.

திணை - அது; துறை - இயன் மொழி.

அவனை அவர் பாடியது.

## 157. ஏறைக்கோன்

*பெருங்கல் நாடன் எம் இறை; வில்லேந்திய வீரன்; கொலைவேல் தாங்கியவன்; காந்தள் பூவை மாலையாகச் சூட்டிக்*

கொள்ளும் குறவர்களுக்குத் தலைவன். சூரியன் அத்தமிக்கும் பொழுதில் கடமான் தன் துணையாகிய பெண்மானைக் காணாமையால் விரும்பி அழைக்கும் குரலைச் செவிமடுத்துக் கேட்கும் புலி திரிந்து வாழும் மலை அவனுடையது.

அவன் பொறுமைமிக்கவன். தம்மவர் தவறு செய்தால் அதனைத் தாங்கிக் கொள்வான்.

பிறர் துன்புறும்போது அவர்கள்பால் இரக்கம் காட்டும் கருணை உள்ளம் படைத்தவன்.

படைக்கண் நின்று போராடும் பெருவீரம் படைத்தவன். புறம் கொடுத்தல் அறியாதவன். மலைநாட்டுக் குறவரின் தலைவன்.

வேந்தர்கள் கூடியுள்ள சபையில் நிமிர்ந்து நடந்து செல்லும் பேராண்மை உடையவன். இவை அவன்பால் உள்ள தனிச் சிறப்புகள். இவை நீங்கள் மதிக்கும் ஏனைய தலைவர்களிடம் காண முடியாதவை. இந்நற்செயல்களை எம் தலைவனிடம்தான் காண இயலும்.

தமர் தன் தப்பின் அது நோன்றல்லும்,
பிறர் கையறவு தான் நாணுதலும்,
படைப் பழி தாரா மைந்தினன் ஆகலும்,
வேந்துடை அவையத்து ஓங்குபு நடத்தலும்,
நும்மோர்க்குத் தகுவன அல்ல; எம்மோன்,
சிலை செல மலர்ந்த மார்பின், கொலை வேல்,
கோடற் கண்ணிக், குறவர் பெருமகன்-
ஆடு மழை தவிர்க்கும் பயம் கெழு மீமிசை,
எல் படு பொழுதின், இனம் தலைமயங்கிக்,
கட்சி காணாக் கடமான் நல் ஏறு
மட மான் நாகு பிணை பயிரின், விடர் முழை
இரும் புலிப் புகர்ப் போத்து ஓர்க்கும்
பெருங் கல் நாடன்- எம் ஏறைக்குத் தகுமே.

திணையும் துறையும் அவை.

ஏறைக்கோனைக் குறமகள் இளவெயினி பாடியது.

# 158. குமணன்

பேரரசர் மூவருடன் எதிர்த்துப் போர் செய்த தலைவன் பறம்பு மலைத் தலைவன் பாரி; மற்றும் கொல்லி மலையை ஆண்ட ஓரி, காரி என்னும் பெயரை உடைய குதிரையை ஊர்ந்து சென்று பகைவர்களை வென்ற மலையமான், குதிரை மலைத் தலைவன் எழினியின் மகன் அதியமான், முழைகளும் சிகரங்களும் மிக்குடைய மலை நாட்டுக்குத் தலைவன் பேகன், மோசிகீரனாரால் பாடப் பெற்ற ஆய், கொடைச் சிறப்பு மிக்க நள்ளி என இவ் ஏழு வள்ளல்கள் மாய்ந்த பிறகு இரப்போர் வறுமை தீர்க்கும் வள்ளல் நீ எனப் பாணரும் பிறரும் கூடி வரின் அவர்தம் துன்பம் தீர்க்கிறாய் என்று யான் கேள்வியுற்று அவர்களோடு உன்னை நாடி வந்துள்ளேன். பலாக்கனியைப் பறித்து வைத்துக் கொண்டு தன் துணை மந்தியை அழைக்கும் கடுவன் உள்ள முதிர மலைத் தலைவனே! நீ இசை மேம்பட வள்ளன்மையுடன் விளங்குக! நீ வெற்றிகள் பெறுக.

முரசு கடிப்பு இகுப்பவும், வால் வளை துவைப்பவும்,<br>
அரசுடன் பொருத அண்ணல் நெடு வரைக்,<br>
கறங்கு வெள் அருவி கல் அலைத்து ஒழுகும்<br>
பறம்பின் கோமான் பாரியும்; பிறங்கு மிசைக்<br>
கொல்லி ஆண்ட வல் வில் ஓரியும்;<br>
காரி ஊர்ந்து பேர் அமர்க் கடந்த,<br>
மாரி ஈகை, மறப் போர் மலையனும்;<br>
ஊராது ஏந்திய குதிரைக், கூர் வேல்,<br>
கூவிளங் கண்ணி, கொடும் பூண், எழினியும்;<br>
ஈர்ந் தண் சிலம்பின் இருள் தூங்கு நளி முழை,<br>
அருந் திறன் கடவுள் காக்கும் உயர் சிமைப்,<br>
பெருங் கல் நாடன் பேகனும்; திருந்து மொழி<br>
மோசி பாடிய ஆயும்; ஆர்வம் உற்று<br>
உள்ளி வருநர் உலைவு நனி தீரத்,<br>
தள்ளாது ஈயும் தகைசால் வண்மை,<br>
கொள்ளார் ஓட்டிய, நள்ளியும் - என ஆங்கு<br>
எழுவர் மாய்ந்த பின்றை, 'அழிவரப்<br>
பாடி வருநரும் பிறரும் கூடி

இரந்தோர் அற்றம் தீர்க்கு' என, விரைந்து, இவண்
உள்ளி வந்தனென், யானே; விசும்புறக்
கழை வளர் சிலம்பின் வழையொடு நீடி,
ஆசினிக் கவினிய பலவின் ஆர்வுற்று,
முட் புற முது கனி பெற்ற கடுவன்
துய்த் தலை மந்தியைக் கையிடூஉப் பயிரும்,
அதிரா யாணர், முதிரத்துக் கிழவ!
இவண் விளங்கு சிறப்பின், இயல் தேர்க் குமண!
இசை மேந்தோன்றிய வண்மையொடு,
பகை மேம்படுக, நீ ஏந்திய வேலே!

திணை - அது; துறை - வாழ்த்தியல்; பரிசில் கடா நிலையும் ஆம்.
குமணனைப் பெருஞ்சித்திரனார் பாடியது.

## 159. குமணன்

நரை மூதாட்டி, முதுமைமிக்கவள் என் தாய்; அவள், ''என் உயிர் என்னை விட்டுப் போகவில்லை. இன்னும் எத்தனை ஆண்டுகள் வாழ வேண்டுமோ'' என்று கவலைப்பட்டவளாய்க் கோலைக் காலாகக் கொண்டு குறுகிக் குறுகி நடந்து முற்றத்தை விட்டுச் சற்றும் போகாதவள்; நூல் விரித்தது போன்ற நரை முடியினள்; அவள் வாட்டம் ஒரு புறம்.

என் மனைவியைக் குழந்தைகள் பிய்த்துத் தின்கின்றன. பால் பெறாமையால் பிசைந்து தின்ன வாடிய முலையள்; பசந்த மேனியள். குப்பையில் கீரையை அது முளைக்கும் தோறும் பறித்துக் கொண்டு வந்து உப்புப் போடாமல் நீர் உலையாக ஏற்றி மோர் இல்லாமல் வேக வைத்த சோறு அதுவும் சில சமயம் கிடைக்காமல் கீரையை மட்டும் தின்று வருகிறாள். அழுக்குப் படிந்த உடை; அதுவும் கிழிச்சல். பசியால் வாடி வருந்துகிறாள்; மனம் நொந்து அறத்தைப் பழித்துக் கொண்டு போராடிக் கொண்டிருக்கிறாள்; செயலற்றுக் கிடக்கிறாள்.

முதிர்ந்த என் தாயும், வருந்திக் கிடக்கும் என் மனைவியும் மகி ழும்படி நீ பெரிய யானையைத் தருகிறாய். வாடிக் கிடக்கும் தினைக் கதிர்க்கு அது தழைக்கப் பெரு மழை பொழிவது போல் அது அமையும்.

*என்றாலும் நீ நேராக வந்து மதித்துத் தந்தால்தான் பெறுவேன்; ஆட்கள் மூலம் அனுப்பினால் அதனை ஏற்றுக் கொள்ள மாட்டேன். யான் பாடிப் பெறும் பரிசில் குன்றி அளவு ஆயினும் நீ மகிழ்ந்து நேரில் தந்து வழி அனுப்பினால் மகிழ்ச்சி அடைவேன்.*

'வாழும் நாளோடு யாண்டு பல உண்மையின்,
தீர்தல் செல்லாது, என் உயிர்' எனப் பல புலந்து,
கோல் காலாகக் குறும் பல ஒதுங்கி,
நூல் விரித்தன்ன கதுப்பினள், கண் துயின்று,
முன்றில் போகா முதிர்வினள் யாயும்;
பசந்த மேனியொடு படர் அட வருந்தி,
மருங்கில் கொண்ட பல் குறுமாக்கள்
பிசைந்து தின, வாடிய முலையள், பெரிது அழிந்து,
குப்பைக் கீரை கொய்கண் அகைத்த
முற்றா இளந் தளிர் கொய்துகொண்டு, உப்பு இன்று,
நீர் உலையாக ஏற்றி, மோர் இன்று,
அவிழ்ப் பதம் மறந்து, பாசடகு மிசைந்து,
மாசொடு குறைந்த உடுக்கையள், அறம் பழியாத்,
துவ்வாளாகிய என் வெய்யோளும்;
என்றாங்கு, இருவர் நெஞ்சமும் உவப்பக் கானவர்
கரி புனம் மயக்கிய அகன்கண் கொல்லை,
ஐவனம் வித்தி, மையுறக் கவினி,
ஈனல்செல்லா ஏனற்கு இழுமெனக்
கருவி வானம் தலைஇயாங்கும்,
ஈத்த நின் புகழ் ஏத்தித், தொக்க என்,
பசி தினத் திரங்கிய, ஒக்கலும் உவப்ப-
உயர்ந்து ஏந்து மருப்பின் கொல்களிறு பெறினும்,
தவிர்ந்து விடு பரிசில் கொள்ளலென்; உவந்து, நீ
இன்புற விடுதிஆயின், சிறிது
குன்றியும் கொள்வல், கூர் வேற் குமண!
அதற்பட அருளல் வேண்டுவல்-விறற் புகழ்
வசை இல் விழுத் திணைப் பிறந்த
இசை மேந் தோன்றல்! நிற் பாடிய யானே.

திணை - அது; துறை - பரிசில் கடா நிலை.
அவனை அவர் பாடியது.

# 160. குமணன்

காய்ந்து உலர்ந்து கிடக்கும் புல் தழைக்க இடியுடன் கூடிய பெரு மழை பொழிவது போலப் பாண் சுற்றத்தினர் மகிழ்வு எய்தினர் என்றும், வானில் சந்திரனைச் சுற்றி நட்சத்திரக் கூட்டங்கள் வட்டமிடுவதைப் போலப் பெரிய தட்டு அதைச் சுற்றிச் சிறு கிண்ணங்களில் நெய் கலந்த சோறும் கொழுவிய இறைச்சியும் சூடு ஆறாமல் அவர்களுக்குத் தந்து மகிழ்வித்தான் என்றும், மற்றும் அவர்களுக்குப் பொன் ஆபரணங்களும் தந்து அனுப்பினான் என்றும், குமணன் முதிரமலைக்குத் தலைவன் என்றும் அறிவுறுத்தினார்கள்

நீயும் சென்றால் அவன் செல்வம் தருவான் என்று கூறி வழி அனுப்பினர். உன் புகழைப் பலரும் எடுத்துப் பேச யான் வந்தனன்.

வீட்டிலே உணவு இன்மையால் குழந்தைச் சிறுவன் வீட்டுப் பக்கமே தலைகாட்ட மாட்டான். பசி பொறுக்காமல் தன் தாயின் வற்றிய முலையைச் சுவைத்துப் பார்ப்பான். பால் பெறாமையால் கூழும் சோறும் கிடைக்குமா என்று துழாவிப் பார்ப்பான். உள்ளே வெறிச் சென்று கிடக்கும் வெற்றுப் பாத்திரம். அதைப் பார்த்து அழ அதை நிறுத்த முடியாமல் அவள் தாய் அவனைப் 'புலி, புலி' என்று அச்சுறுத்திப் பார்ப்பாள்; ஆகாயத்தில் அம்புலியைக் காட்டி இன்புறுத்த நினைப்பாள். இரண்டுக்கும் அவன் மசிய மாட்டான். ''உன்தந்தையை வெறுத்துக்காட்டும் சுளித்த உன் முகத்தைக் காட்டு''என்று அவனைத் திருப்ப முயல்வாள். அதற்கும் அவன் படிய மாட்டான். அவனைத் தணிப்பது எப்படி என்று அறிய மாட்டாது வருந்துவாள். அவள் துன்பம் தீர அவள் வளம் பெற்று வாழ மிக்க செல்வம் தந்து என்னை அனுப்பி வைக்க உன் புகழைப் பலவாறு ஏத்திப் பாடுவேன்.

'உரு கெழு ஞாயிற்று ஒண் கதிர் மிசைந்த
முளி புற் கானம் குழைப்பக், கல்லென
அதிர் குரல் ஏறொடு துளி சொரிந்தாங்குப்,
பசி தினத் திரங்கிய கசிவுடை யாக்கை
அவிழ் புகுவு அறியாதுஆகலின், வாடிய

நெறி கொள் வரிக் குடர் குளிப்பத் தண்ணெனக்,
குய் கொள் கொழுந் துவை நெய்யுடை அடிசில்,
மதி சேர் நாள்மீன் போல, நவின்ற
சிறு பொன் நன் கலம் சுற்ற இரீஇக்,
"கேடு இன்றாக, பாடுநர் கடும்பு" என,
அரிது பெறு பொலங் கலம் எளிதினின் வீசி,
நட்டோர் நட்ட நல் இசைக் குமணன்,
மட்டு ஆர் மறுகின், முதிரத்தோனே;
செல்குவைஆயின், நல்குவன், பெரிது' எனப்,
பல் புகழ் நுவலுநர் கூற, வல் விரைந்து,
உள்ளம் துரப்ப வந்தனென்; எள்ளுற்று,
இல் உணாத் துறத்தலின், இல் மறந்து உறையும்
புல் உளைக் குடுமிப் புதல்வன் பல் மாண்
பால் இல் வறு முலை சுவைத்தனன் பெறாஅன்,
கூழும் சோறும் கடைஇ, ஊழின்
உள் இல் வறுங் கலம் திறந்து, அழக் கண்டு,
மறப் புலி உரைத்தும், மதியம் காட்டியும்,
நொந்தனளாகி, 'நுந்தையை உள்ளிப்,
பொடிந்த நின் செவ்வி காட்டு' எனப் பலவும்
வினவல் ஆனாளாகி, நனவின்
அல்லல் உழப்போள் மல்லல் சிறப்பச்,
செல்லாச் செல்வம் மிகுத்தனை, வல்லே
விடுதல் வேண்டுவல் அத்தை; படு திரை
நீர் சூழ் நிலவரை உயர, நின்
சீர் கெழு விழுப் புகழ் ஏத்துகம் பலவே.

திணையும் துறையும் அவை.
அவனை அவர் பாடியது.

## 161. குமணன்

*மழை பெய்யாமையால் கோடைக் காலத்தில் குடிக்கவும் நீரில்லாமல் தவிப்போர் கங்கைக் கரையை நாடிச் செல்வர். அதுபோல உன்னை நாடி வரும் எமக்கும் பிறர்க்கும் செல்வம் வழங்கிச் சிறப்புச் செய்கிறாய்.*

வழிப்பறி கொள்ளையர் மிக்கு உள்ளனர்; உயிர்மேல் பற்று இல்லாமல் உழந்து திரிவன கலைமான்கள்; இந்தக் கடுமையான வழிகளைக் கடந்து சென்றவர் ஓர் ஆண்டு ஆகியும் திரும்ப வில்லையே என்று வழிமேல் விழி வைத்துக் காத்துக் கிடக்கிறாள் என் துணைவி.

அவள் மருட்சி அடைய யான் பெரிய யானையில் ஏறிச் செம்மாந்து செல்ல வேண்டும் என்பதே என் விழைவு.

வறுமை என்னை வாட்ட அது என்னைத் தூண்ட யான் உன்பால் வந்துள்ளேன். நின் கொடையை எதிர்பார்த்து வந்துள்ளேன். யான் கூறுவதைச் செவிமடுப்பாயாக.

எனக்குத் திறமை உள்ளதா இல்லையா என்பது பெரிது அன்று. என்னை வைத்து நீ முடிவு செய்யாதே. உன் பெருமைக்கு ஏற்ப நீ மகிழ்ந்து அளிப்பாயாக.

பெரு நிலவேந்தர்களும் எம் நிலை கண்டு அவர்கள் வெட்கப் பட வேண்டும். சீரும் சிறப்பும் மிக்க பரிசில் தந்து சிறப்புச் செய்க.

சாந்து பூசப்பட்ட நின் அழகிய மார்பினை உன் காதல் துணைவியர் தழுவ நீ மகிழ்வு பெறுவாய்.

நின்தாள் நிழல் வாழ்வோர் கொடைப் பொருள் பெற்று உயர்வர். வாள் ஏந்திப் போர் செய்யச் செல்லும் உன் படையையும் உன் சீர்மிகு செல்வத்தையும் ஏத்தி யாம் புகழ்வோம்.

நீண்டு ஒலி அழுவம் குறைபட முகந்துகொண்டு,
ஈண்டு செலல் கொண்மூ வேண்டுவயின் குழீஇப்,
பெரு மலை அன்ன தோன்றல, சூழ் முதிர்பு,
உரும் உரறு கருவியொடு, பெயல் கடன் இறுத்து,
வள மழை மாறிய என்றூழ்க் காலை,
மன்பதை எல்லாம் சென்று உணக், கங்கைக்
கரை பொரு மலி நீர் நிறைந்து தோன்றியாங்கு,
எமக்கும் பிறர்க்கும் செம்மலை ஆகலின்,
'அன்பு இல் ஆடவர் கொன்று, ஆறு கவரச்,
சென்று தலை வருந அல்ல, அன்பு இன்று,
வன் கலை தெவிட்டும், அருஞ் சுரம் இறந்தோர்க்கு,

இற்றை நாளொடும் யாண்டு தலைப்பெயர' எனக்
கண் பொறி போகிய கசிவொடு உரன் அழிந்து,
அருந் துயர் உழக்கும் என் பெருந் துன்புறுவி நின்
தாள் படு செல்வம் காண்தொறும் மருளப்,
பனை மருள் தடக் கையொடு முத்துப் பட முற்றிய
உயர் மருப்பு ஏந்திய வரை மருள் நோன் பகடு,
ஒளி திகழ் ஓடை பொலிய, மருங்கில்
படு மணி இரட்ட, ஏறிச் செம்மாந்து,
செலல் நசைஇ உற்றனென்- விறல் மிகு குருசில்!
இன்மை துரப்ப, இசைதர வந்து, நின்
வண்மையின் தொடுத்த என் நயந்தனை கேண்மதி!
வல்லினும், வல்லேன்ஆயினும், வல்லே,
என் அளந்து அறிந்தனை நோக்காது, சிறந்த
நின் அளந்து அறிமதி, பெரும! என்றும்
வேந்தர் நாணப் பெயர்வேன்; சாந்து அருந்திப்
பல் பொறிக் கொண்ட ஏந்து எழில் அகலம்
மாண் இழை மகளிர் புல்லுதொறும் புகல,
நாள் முரசு இரங்கும் இடனுடை வரைப்பில் நின்
தாள் நிழல் வாழ்நர் நன் கலம் மிகுப்ப,
வாள் அமர் உழந்த நின் தானையும்,
சீர் மிகு செல்வமும், ஏத்துகம் பலவே.

திணை - அது; துறை - பரிசில் துறை.
அவனை அவர் பாடிப் பகடு பெற்றது.

## 162. இளவெளி மான்

*இரப்பவர்க்குத் தரச் சுரும் கொடையாளி நீ ஒருவன் மட்டும் இருக்க வில்லை. வேறு கொடையாளிகளே இல்லை என்று கருத வேண்டாம்.*

*உலகத்தில் இரவலர்களும் உளர்; அவர்களுக்குச் சிறப்புச் செய்யும் புரவலர்களும் உளர். இதனைக் காண்பாயாக!*

*நின் ஊரின் கண் காவல் மரத்தில் யாம் கட்டி வைத்துள்ள நெடிய யானை யாம் கொண்டு வந்துள்ள பரிசில் ஆகும். அதனை நீயே வைத்துக் கொள். யான் சென்று வருகிறேன். நீ சிறப்பாக வாழ்க.*

இரவலர் புரவலை நீயும் அல்லை;
புரவலர் இரவலர்க்கு இல்லையும் அல்லர்;
இரவலர் உண்மையும் காண், இனி; இரவலர்க்கு
ஈவோர் உண்மையும் காண், இனி; நின் ஊர்க்
கடிமரம் வருந்தத் தந்து யாம் பிணித்த
நெடு நல் யானை எம் பரிசில்;
கடுமான் தோன்றல்! செல்வல் யானே.

திணை - அது; துறை - பரிசில் விடை.

அவர் வெளிமானுழைச் சென்றார்க்கு வெளிமான் துஞ்சுவான் தம்பியைப் 'பரிசில் கொடு' என, அவன் சிறிது கொடுப்பக் கொள்ளாது போய்க், குமணனைப் பாடிக், குமணன் பகடு கொடுப்பக் கொணர்ந்து நின்று, வெளிமான் ஊர்க் கடிமரத்துயாத்துச் சென்று, அவர் சொல்லியது.

## 163. குமணன்

உன்னை விரும்புவோர்க்கும் அதேபோல நீ விரும்பி நேசிப்பவர்க்கும், உன் சுற்றத்தவர்க்கும், உன் வறுமைக் காலத்தில் உனக்குக் கடன் தந்து உதவியவர்க்கும், மற்றும் இன்ன தன்மையர் என்று பார்க்காமல் என்னோடும் கலந்து ஆராயாமல் பொருளை வைத்துக் கொண்டு நாமே சிறப்பாக வாழலாம் என்று கருதாமல் எல்லோர்க்கும் கொடுப்பாயாக. பிறரிடத்தில் நீ பெற்றதுபோல நீயும் பிறர்க்குத் தந்து உதவுவாயாக.

பழமுதிர் சோலைகள் உடைய முதிர மலைக்குத் தலைவன் குமணன் நல்கிய செல்வம் இது. மனைக்கிழத்தியே! பலருக்கும் தந்து மகிழ்வோடு வாழ்வாயாக.

நின் நயந்து உறைநர்க்கும், நீ நயந்து உறைநர்க்கும்,
பல் மாண் கற்பின் நின் கிளை முதலோர்க்கும்,
கடும்பின் கடும் பசி தீர யாழ நின்
நெடுங் குறியெதிர்ப்பை நல்கியோர்க்கும்,
இன்னோர்க்கு என்னாது, என்னொடும் சூழாது,
வல்லாங்கு வாழ்தும் என்னாது, நீயும்
எல்லோர்க்கும் கொடுமதி-மனை கிழவோயே!-
பழம் தூங்கு முதிரத்துக் கிழவன்
திருந்து வேல் குமணன் நல்கிய வளனே.

திணை - அது; துறை - பரிசில்.

பெருஞ் சித்திரனார் குமணனைப் பாடிப் பரிசில் கொணர்ந்து மனையோட்குச் சொல்லியது.

# 164. குமணன்

அடுப்புப் பற்ற வைப்பதையே விட்டு விட்டாள் என் மனைவி. சாம்பலே இல்லாத வெற்று அடுப்பு அது. அதில் காளான் பூத்துக் கிடக்கிறது.

குழந்தை பசியால் தாய் முலை பற்றிக் குடிக்க முயல்கிறது. பால் இன்மையால் துளை தூர்ந்துவிட்டது. அதைச் சுவைத்துச் சுவைத்துப் பால் இல்லாமையால் அது அழுகிறது.

அழும் அந்தக் குழந்தையின் முகத்தைத் தாய் பார்க்கிறாள். அவள் கண்களில் நீர் நிறைகிறது. அது தேங்கி இருக்கும் அவள் அவலத்தை யான் பார்க்கிறேன். அவள் துன்பம் எம் துன்பம் ஆகியவற்றை நீக்கத் தக்கவன் நீதான் என்று முடிவு செய்தேன். உன்னை நோக்கி வந்துள்ளேன். யாழையும், முழவையும் உடைய கூத்தர்களின் வறுமையைப் போக்கும் உயர் குடியில் பிறந்தவன் நீ.

உன்னை விட்டு விலகாமல் வலியச் சூழ்ந்து நிற்பேன். பரிசு தந்தால்தான் அகல்வேன். இது என் இப்பொழுதைய நிலை; குழந்தை தாய்முகம் நோக்குகிறது; அவள் என்னை எதிர்பார்க் கிறாள். நான் உன்னை எதிர்பார்த்து வந்துள்ளேன். பொருளைப் பெற்றுதான் போவேன். வேறு வழியே இல்லை.

ஆடு நனி மறந்த கோடு உயர் அடுப்பின்
ஆம்பி பூப்பத், தேம்பு பசி உழவாப்,
பாஅல் இன்மையின் தோலொடு திரங்கி,
இல்லி தூர்ந்த பொல்லா வறு முலை
சுவைத் தொறு அழூஉம் தன் மகத்து முகம் நோக்கி,
நீரொடு நிறைந்த ஈர் இதழ் மழைக்கண் என்
மனையோள் எவ்வம் நோக்கி, நினைஇ,
நிற் படர்ந்திசினே- நல் போர்க் குமண!-
என் நிலை அறிந்தனைஆயின், இந் நிலைத்
தொடுத்தும் கொள்ளாது அமையலென்-அடுக்கிய
பண் அமை நரம்பின் பச்சை நல் யாழ்,
மண் அமை முழவின், வயிரியர்
இன்மை தீர்க்கும் குடிப் பிறந்தோயே.

திணை-அது; துறை - பரிசில் கடாநிலை.

தம்பியால் நாடு கொள்ளப்பட்டுக் காடு பற்றியிருந்த குமணனைப் பெருந்தலைச் சாத்தனார் பாடியது.

# 165. இளங்குமணன்

*நிலையில்லாத இவ்வுலகில் புகழை நிறுத்தி விட்டு மாள்பவரும் உளர்.*

*கிடைத்தற்கு அரிய செல்வம் படைத்தவர்களும் வறுமையால் இரக்கின்றவர்க்கு ஈயாமல் வாழ்கின்றனர். அவர்கள் அவர்தம் பெயரை நிலை நாட்டுவது இல்லை. அவர்கள் உலகத்தவரால் மறக்கப்படுகின்றனர்.*

*யானைகள் பலவற்றைப் பரிசிலர்க்கு நல்கிய புகழ்மிக்க தலைவன் குமணனைச் சென்று பார்த்தேன். குமணன் உன் தமையன்; அவன் நாட்டை உன்னிடம் ஒப்புவித்து விட்டு நீ வாழ வேண்டும் என்பதற்காகக் காட்டில் உறைகிறான். நாடு இழந்ததை விடப் பாடும் புலவனுக்கு ஈயாத நிலை மிகவும் கொடியது; இழிந்தது என்று தன் வாளைத் தந்து தன் தலையை அறுத்து எடுத்துக் கொண்டு அதனை உன்பால் சேர்க்க என்று கூறி அனுப்பியுள்ளான். தன்னைவிடச் சிறந்த பொருள் கொடுக்க அவனிடம் இல்லாமையால் வாளைத் தந்தான்.*

*மிக்க மகிழ்வோடு இதனைப் பெற்றுக் கொண்டு உன்பால் வந்துள்ளேன். இனி நீ விரும்பியது செய்க! இவ்வாளினை நீ காண்பாயாக!*

மன்னா உலகத்து மன்னுதல் குறித்தோர்
தம் புகழ் நிறீஇத் தாம் மாய்ந்தனரே;
துன் அரும் சிறப்பின் உயர்ந்த செல்வர்
இன்மையின் இரப்போர்க்கு ஈஇயாமையின்,
தொன்மை மாக்களின் தொடர்பு அறியலரே;
தாள் தாழ் படு மணி இரட்டும், பூ நுதல்,
ஆடு இயல் யானை பாடுநர்க்கு அருகாக்
கேடு இல் நல் இசை வய மான் தோன்றலைப்
பாடி நின்றனெனாகக், 'கொன்னே
பாடு பெறு பரிசிலன் வாடினன் பெயர்தல் என்
நாடு இழந்ததனினும் நனி இன்னாது' என,
வாள் தந்தனனே, தலை எனக்கு ஈயத்,
தன்னின் சிறந்தது பிறிது ஒன்று இன்மையின்;

ஆடு மலி உவகையொடு வருவல்,
ஓ டாப் பூட்கை நின் கிழமையோற் கண்டே.

திணை - அது; துறை - பரிசில் விடை.

தம்பியால் நாடு கொள்ளப்பட்டுக் காடு பற்றியிருந்த குமணனைக் கண்டு, அவன் தன் வாள் கொடுப்பக் கொண்டுவந்து, இளங் குமணற்குக் காட்டிப், பெருந்தலைச் சாத்தனார் பாடியது.

## 166. கௌணியன் விண்ணந்தாயன்

*சடை முடி தரித்த இறைவன் அவன் விரித்து உரைத்த வேதங்கள் நான்கனுக்கும், வேத அங்கங்கள் ஆறனுக்கும் எதிராகப் பேசி வாதிட்ட மாற்றுச் சமயத்தவரை மறுத்து வெகாடி உண்மை உணரச் செய்த உரவோர்கள் நும் முன்னோர்கள். அவர் இருபத்தொரு துறைகள் முற்றிய யாகங்களைச் செய்தவர்கள்.*

*அவர்கள் வழியில் வந்த நீ மான் தோலைப் பூணூல் மேலிட்டு அமர்ந்து வேள்விகளைச் செய்து முடித்தாய். உன் துணைவியர் நீ இட்ட ஏவல்களைச் செய்து இவ்வேள்விகளை நிறைவு செய்தனர்.*

*நீர் நாண நெய் வழங்கப்பட்டது. எண்ண முடியாத வேள்விகள் பல இயற்றினர்; உலகம் வியக்க உன் புகழ் எங்கும் பரவியது.*

*இந்த விழாவின் இறுதியில் நீ நடத்திய விருந்துகள் பல அவற்றில் யாமும் பங்கு கொண்டோம். இவ்விருந்துகள் தொடர்ந்து நடைபெறுவதாக! வேண்டியவற்றை யாம் பரிசிலாகவும் பெற்றுக் கொண்டோம்.*

*இனி எங்களுக்கு எந்தக் குறையும் இல்லை. எங்கள் சொந்த ஊராகிய காவரி பாயும் எம் ஊர்க்குச் சென்று நின் புகழ்பாடி உண்டும் தின்றும் மகிழ்வு கொண்டாடுவோம். நீ இமயத்தைப் போல நிலமிசை நீடு வாழ்க என்று வாழ்த்துகிறோம்.*

நன்று ஆய்ந்த நீள் நிமிர் சடை
முது முதல்வன் வாய் போகாது,
ஒன்று புரிந்த ஈர்-இரண்டின்,
ஆறு உணர்ந்த ஒரு முது நூல்
இகல் கண்டோர் மிகல் சாய்மார்,

மெய் அன்ன பொய் உணர்ந்து,
பொய் ஓராது மெய் கொளீஇ,
மூஏழ் துறையும் முட்டு இன்று போகிய
உரைசால் சிறப்பின் உரவோர் மருக!
வினைக்கு வேண்டி நீ பூண்ட
புலப் புல்வாய்க் கலைப் பச்சை
சுவல் பூண் ஞாண்மிசைப் பொலிய;
மறம் கடிந்த அருங் கற்பின்,
அறம் புகழ்ந்த வலை சூடிச்,
சிறு நுதல், பேர் அகல் அல்குல்,
சில சொல்லின், பல கூந்தல் நின்
நிலைக்கு ஒத்த நின் துணைத் துணைவியர்
தமக்கு அமைந்த தொழில் கேட்பக்;
காடு என்றா நாடு என்று ஆங்கு
ஈர்-ஏழின் இடம் முட்டாது,
நீர் நாண நெய் வழங்கியும்,
எண் நாணப் பல வேட்டும்,
மண் நாணப் புகழ் பரப்பியும்,
அருங் கடிப் பெருங் காலை,
விருந்துற்ற நின் திருந்து ஏந்து நிலை,
என்றும், காண்கதில் அம்ம, யாமே! குடாஅது
பொன் படு நெடு வரைப் புயலேறு சிலைப்பின்,
பூ விரி புது நீர்க் காவிரி புரக்கும்
தண் புனற் படப்பை எம் ஊர் ஆங்கண்,
உண்டும் தின்றும் ஊர்ந்தும் ஆடுகம்;
செல்வல்அத்தை, யானே; செல்லாது,
மழை அண்ணாப்ப நீடிய நெடு வரைக்
கழை வளர் இமயம் போல,
நிலீஇயர் அத்தை, நீ நிலம்மிசையானே.

திணை - வாகை; துறை - பார்ப்பன வாகை.

சோணாட்டுப் பூஞ்சாற்றூர்ப் பார்ப்பான் கௌணியன் விண்ணந்தாயனை ஆவூர் மூலங்கிழார் பாடியது.

## 167. ஏனாதி திருக்கிள்ளி

*களம் பல காண்கிறாய்; அதனால் வடுப் பெற்ற யாக்கை உனது. வடுப்பட்ட யாக்கை அதனால் உன்னைக் காண நீ இனிமை*

தர வில்லை; போரில் நீ பெறும் வெற்றிகள் அவை நினைக்குப் புகழைச் சேர்க்கின்றன. அவற்றைக் கேட்கச் செவிக்கு இனிமை தருகின்றன.

கண்ணுக்கு நீ இனியை அல்லை; செவிக்கு நீ இனியனாக விளங்குகிறாய்.

உன்னோடு எதிர்த்தவர் எதிர்க்க முடியாமல் புறங்கொடுத்து உயிர் தப்புகின்றனர். ஊறு ஏதும் இல்லாமல் ஊர் திரும்புகின்றனர். வடுப்படாத யாக்கை அதனால் கண்ணுக்கு இனியராகின்றனர். செவிக்கு இன்னாதவர் ஆகின்றனர்.

நீவிர் இருவரும் ஒன்றில் இனியராகவும் மற்றொன்றில் இன்னாதவராக வும் ஆகின்றீர். இவ்வகையில் உங்கள் இருவருக்கும் ஒற்றுமை நிலவுகிறது.

வீரம் மிக்க கிள்ளி வளவ! உன்னை இவ்வுலகம் வியந்து பாராட்டுகிறது. இதற்குக் காரணம் யாது? எமக்கு உரைத்தருள்க!

நீயே, அமர் காணின் அமர் கடந்து, அவர்
படை விலக்கி எதிர் நிற்றலின்,
வாஅள் வாய்த்த வடு ஆழ் யாக்கையொடு,
கேள்விக்கு இனியை; கட்கு இன்னாயே:
அவரே, நிற் காணின் புறம் கொடுத்தலின்,
ஊறு அறியா மெய் யாக்கையொடு,
கண்ணுக்கு இனியர்; செவிக்கு இன்னாரே:
அதனால், நீயும் ஒன்று இனியை; அவரும் ஒன்று இனியர்;
ஒவ்வா யா உள, மற்றே? வெல் போர்க்
கழல் புனை திருந்து அடிக் கடு மான் கிள்ளி!
நின்னை வியக்கும் இவ் உலகம்; அஃது
என்னோ? பெரும! உரைத்திசின் எமக்கே.

திணை - அது; துறை - அரச வாகை.

ஏனாதி திருக்கிள்ளியைக் கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக் குமரனார் பாடியது.

## 168. பிட்டங் கொற்றன்

மிளகுக் கொடி வளரும் மலைச் சாரலில் காந்தள் கிழங்கு அதனைத் தோண்டி எடுக்கக் கேழல் பன்றி நிலத்தை உழுகிறது.

கிழங்கு கிளர உழப்பட்ட நிலத்தில் காலம் அறிந்து வித்திட்டு அறுத்த தினை அதனை மரைஆன் தருகிற பாலொடு சேர்த்து அவற்றோடு மான் இறைச்சியும் இட்டு வேக வைத்துச் சோறு சமைக்கின்றனர். அதனை வாழை இலையில் இட்டுப் பலரும் பகுத்து உண்கின்றனர். அத்தகைய சிறப்புமிக்க குதிரை மலைக்குத் தலைவன் நீ.

நறைக் கொடி நாரால் தொடுக்கப்பட்ட வேங்கைப் பூவைத் தலையில் சூடிக் கொள்ளும் வடித்த அம்புகளை உடைய வில் வீரர்களுக்குத் தலைவன்; நீ ஈகையில் சிறந்தவனாகவும் உள்ளாய்.

தமிழகம் முழுவதும் உன் புகழ் பரப்பப் புலவர் பாடிச் சிறப்பிப்பர் என்று இரவலர் பலரும் கூறுகின்றனர். ஈயாதவர் களுக்கு இப் புகழ் வாய்ப்பது இல்லை. அவர்கள் நாணத்தக்கவர்.

அருவி ஆர்க்கும் கழை பயில் நனந் தலைக்
கறி வளர் அடுக்கத்து மலர்ந்த காந்தட்
கொழுங் கிழங்கு மிளிரக் கிண்டிக், கிளையொடு,
கடுங் கண் கேழல் உழுத பூழி,
நல் நாள் வரு பதம் நோக்கிக், குறவர்
உழாஅது வித்திய பரூஉக் குரற் சிறு தினை
முந்து விளை யாணர் நாள் புதிது உண்மார்,
மரை ஆன் கறந்த நுரை கொள் தீம் பால்,
மான் தடி புழுக்கிய புலவு நாறு குழிசி
வான் கேழ் இரும் புடை கழாஅது, ஏற்றிச்,
சாந்த விறகின் உவித்த புன்கம்
கூதளம் கவினிய குளவி முன்றில்,
செழுங் கோள் வாழை அகல் இலைப் பகுக்கும்
ஊராக் குதிரைக் கிழவ! கூர்வேல்,
நறை நார்த் தொடுத்த வேங்கை அம் கண்ணி,
வடி நவில் அம்பின் வில்லோர் பெரும!
கை வள் ஈகைக் கடு மான் கொற்ற!
வையக வரைப்பில் தமிழகம் கேட்பப்,
பொய்யாச் செந் நா நெளிய ஏத்திப்
பாடுப என்ப பரிசிலர், நாளும்-
ஈயா மன்னர் நாண,
வீயாது பரந்த நின் வசை இல் வான் புகழே.

திணை - பாடாண் திணை; பரிசில் துறை; இயன்மொழியும், அரச வாகையும் ஆம்.
பிட்டங் கொற்றனைக் கருவூர்க் கதப்பிள்ளைச் சாத்தனார் பாடியது.

# 169. பிட்டங் கொற்றன்

போர் மேற் செல்லுங்கால் படைகளுக்கு முன் நிற்கிறாய்.

அதே போல வருபடைகளையும் ஆற்றிடை விளங்கும் குன்று போல் முன் நின்று தடுக்கிறாய்.

பகைவர் தாக்குதலுக்கு நீ எப்பொழுதும் புறங் கொடுத்தது இல்லை. இளங்கோசர்கள் சிறுவர்கள் படைப் பயிற்சி பெற எய்யும் அம்புகளைத் தாங்கும் முருக்க மரத்தால் ஆகிய கம்பம் போல் பொருநர்க்குத் தோற்காது தாக்குப் பிடித்துப் போரில் நின்று போராடுகிறாய்.

போரையே உன் தொழிலாகக் கொண்டு விளங்கும் தலைவன் நீ!

ஒன்று கூற விரும்புகிறேன். நீ போர் முடித்துத் திரும்பும் வரை எங்கள் வறுமை எங்களை வாழ விடாது. எம் சுற்றத்தினர் வறுமைத் துன்பம் போக்க இப்பொழுதே கொடுத்து அனுப்புக. இதுவே யாம் வேண்டுவது.

நும் படை செல்லும்காலை, அவர் படை
எடுத்து எறி தானை முன்னரை எனாஅ,
அவர் படை வரூஉம்காலை, நும் படைக்
கூழை தாங்கிய, அகல் யாற்றுக்
குன்று விலங்கு சிறையின் நின்றனை எனாது,
அரிதால், பெரும! நின் செவ்வி என்றும்;
பெரிதால்அத்தை, என் கடும்பினது இடும்பை;
இன்னே விடுமதி பரிசில்! வென் வேல்
இளம் பல் கோசர் விளங்கு படை கன்மார்,
இகலினர் எறிந்த அகல் இலை முருக்கின்
பெரு மரக் கம்பம் போலப்,
பொருநர்க்கு உலையா நின் வலன் வாழியவே!

திணை - அது; துறை - பரிசில் கடா நிலை.

அவனைக் காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார் பாடியது.

# 170. பிட்டங் கொற்றன்

அவன் சிற்றூரில் வில் தொழிலாளர் இடையே துடிப்பறை அடிப்பவர் உண்டாக்கும் பேர் ஒலி புலி தூங்கும் மலைக்

குகைகளில் எதிர் ஒலிக்கும். அதனோடு கூகையின் குரல் ஒலியும் சேர்ந்து இரட்டிக்கும்.

இத்தகைய மலை நாட்டுக்குத் தலைவன் கொற்றன்; பரிசிலர்க்கு எளியன்; எதிர்க்கும் பகைவர்க்கு அரியன்; விறலியர்க்கு யானைத் தந்தத்தில் விளையும் முத்துக்களைத் தருவான். கள்ளாகிய தேறலைப் பாணர்க்கு நல்குவான்; அவர்க்கு அவன் மெல்லியன்.

கொல்லன் உலைக் களத்தில் அடுத்த உலைக்கல் போன்று அவனை எதிர்க்க வரும் பகைவர்க்கு வன்மையன். அதனால் பகைவர்களே! அவனை நெருங்காதீர்.

மரை பிரித்து உண்ட நெல்லி வேலிப்,
பரலுடை முன்றில், அம் குடிச் சீறூர்,
எல் அடிப்படுத்த கல்லாக் காட்சி
வில் உழுது உண்மார் நாப்பண், ஒல்லென,
இழி பிறப்பாளன் கருங் கை சிவப்ப,
வலி துரந்து சிலைக்கும் வன் கண் கடுந் துடி
புலி துஞ்சு நெடு வரைக் குடிஞையோடு இரட்டும்
மலை கெழு நாடன், கூர்வேல் பிட்டன்,
குறுகல் ஓம்புமின், தெவ்விர்! அவனே
சிறு கண் யானை வெண் கோடு பயந்த
ஒளி திகழ் முத்தம் விறலியர்க்கு ஈத்து,
நார் பிழிக் கொண்ட வெங் கட் தேறல்
பண் அமை நல் யாழ்ப் பாண் கடும்பு அருத்தி,
நசைவர்க்கு மென்மை அல்லது, பகைவர்க்கு
இரும்பு பயன் படுக்கும் கருங் கைக் கொல்லன்
விசைத்து எறி கூடமொடு பொரூஉம்
உலைக் கல் அன்ன, வல்லாளன்னே.

திணை - வாகை; துறை - வல்லாண் முல்லை; தானைமறமும் ஆம்.
அவனை உறையூர் மருத்துவன் தாமோதரனார் பாடியது.

## 171. பிட்டங் கொற்றன்

இன்று சென்று கேட்டாலும் தருவான்; சில நாள் கழித்துச் சென்றாலும் மறுக்காமல் தருவான்.

ஏற்கெனவே தந்து விட்டேன் என்று சொல்லி அவன் மறுப்பது இல்லை. மீண்டும் தொடர்ந்து தினமும் சென்றாலும் தருவதில் பொய்ப்பது இல்லை.

யாம் வேண்டியவாறு எம் வெறும் கலத்தை நிரப்புவான். அவனும் தன்னை உதவிக்கு அழைக்கும் அரசர்களுக்குப் போர்த் தொழிலை முடித்துத் தரட்டும்; அவனுக்கு வெற்றிகள் உண்டாகுக!

கூட்டமாகப் பெரும் பொருள் வந்து குவிவதாக; பசுக்களைத் தொழுவத்தோடு கேட்டாலும், களத்தில் விளையும் நெல்லின் குவியல் முழுவதையும் கேட்டாலும், பொன் ஆபரணங்களோடு களிற்றையும் கேட்டாலும் எமக்குத் தருவான். மற்றவர்களுக்கும் அவ்வாறே தரும் இயல்பினன்.

அத்தகைய சிறப்புகள் உடையவன் ஆதலின் எம் தலைவனின் உள்ளங்காலில் முள்ளும் தைக்காதிருக்க! ஈவோர் அருகிவிட்ட இவ்வுலகில் அவன் பிறர் வாழத் தருகிறான்; அவர்களை வாழ வைக்கிறான். அவன் தாள் வாழ்வதாக.

இன்று செலினும் தருமே; சிறு வரை
நின்று செலினும் தருமே; பின்னும்,
'முன்னே தந்தனென்' என்னாது, துன்னி
வைகலும் செலினும், பொய்யலன் ஆகி,
யாம் வேண்டியாங்கு எம் வறுங்கலம் நிறைப்போன்
தான் வேண்டியாங்குத் தன் இறை உவப்ப
அருந் தொழில் முடியரோ, திருந்து வேற் கொற்றன்;
இன மலி கதச் சேக் களனொடு வேண்டினும்,
களம் மலி நெல்லின் குப்பை வேண்டினும்,
அருங் கலம் களிற்றொடு வேண்டினும், பெருந்தகை
பிறர்க்கும் அன்ன அறத் தகையன்னே.
அன்னன் ஆகலின், எந்தை உள் அடி
முள்ளும் நோவ உறாற்கதில்ல!
ஈவோர் அரிய இவ் உலகத்து,
வாழ்வோர் வாழ, அவன் தாள் வாழியவே!

திணை - பாடாண் திணை; துறை - இயன்மொழி.

அவனைக் காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக் கண்ணனார் பாடியது.

## 172. பிட்டங் கொற்றன்

எந்தத் தயக்கமும் வேண்டாம்; உலை ஏற்றுக; சோறு ஆக்குக; கள்ளுக்கு இனி எந்தக் குறையும் இருக்காது; விறலியர் பூச்சூடி மகிழ்வு பெறுவாராக. இதைப் போல் இன்னும் மகிழ்வுகள் பெறுவாராக.

ஐவனம் காக்கும் காவலர் சுடு தீ ஒளி குறையுமானால் ஒளியுடையை மணிகள் இருளை அகற்றும் மலை நாட்டவன் பிட்டன். அவன் போரில் வெற்றி பெறக் காரணம் ஆகிய வேலும், அவனைப் படைத் தலைவனாக ஏற்கும் அரசனும், ஈகை மிக்கவனும் ஆகிய சேரமான் கோதை என்பானும், அவனோடு மாறுபட்டுப் போர் செய்ய எதிர் நிற்கும் மன்னர்களும் நெடிது காலம் வாழ்வாராக! போர்கள் மிகுந்தால்தான் அவனுக்கு வெற்றிகள் வந்து குவியும். பரிசிலர்க்கும் வாழ்வு கிடைக்கும்; வேண்டுவன தருவான்.

ஏற்றுக உலையே; ஆக்குக சோறே;
கள்ளும் குறைபடல் ஓம்புக; ஒள் இழைப்
பாடுவல் விறலியர் கோதையும் புனைக;
அன்னவை பிறவும் செய்க; என்னதூஉம்
பரியல் வேண்டா; வரு பதம் நாடி,
ஐவனம் காவலர் பெய் தீ நந்தின்,
ஒளி திகழ் திருந்து மணி நளிஇருள் அகற்றும்
வன் புல நாடன், வய மான் பிட்டன்
ஆர் அமர் கடக்கும் வேலும், அவன் இறை
மா வள் ஈகைக் கோதையும்,
மாறுகொள் மன்னரும், வாழியர் நெடிதே!

திணையும் துறையும் அவை.

அவனை வடம வண்ணக்கன் தாமோதரனார் பாடியது.

## 173. சிறுகுடி கிழான் பண்ணன்

என் வாழ்நாளும் பெற்றுப் பண்ணன் நெடுங்காலம் வாழ்வானாக! பாணர் தோழர்களே! பசிப்பிணி மருத்துவன் பண்ணன் இல்லம் அண்மையில் உள்ளதா சேய்மையில் உள்ளதா அறிவியுங்கள்.

இதோ என் பாண் சுற்றத்தினர் வறுமைத் துன்பமும், அவர்கள் பசித்து இருப்பதும் காண்பீராக!

புதிதாகப் பழுத்துக் கிடக்கும் மரங்களை நோக்கிப் பறவைகள் வந்து மொய்ப்பது போல உணவு பெற்றுத் திரும்பு வாரின் மகிழ்வு ஆரவாரம் கேட்கிறது.

மற்றும் மழை வரப் போவதை முன்னரே அறிந்து முட்டை யைத் தாங்கிக் கொண்டு மேடான நிலத்தில் சேர்த்து வைக்கச் செல்லும் சிற்றெறும்புகள் வரிசையைப் போல் பாணர் சிறுவர்கள் சோற்றுத் திரளைக் கையில் ஏந்திக் கொண்டு செல்கின்றனர்.

அதனால் பண்ணன் இல்லம் இங்குதான் எங்கோ உள்ளது என்பது தெரிகிறது. பசிப்பிணி மருத்துவன் ஆகிய பண்ணனின் இல்லம் எங்கே உள்ளது; அணித்தோ சேய்த்தோ அது மட்டும் அறிவிக்கவும்.

யான் வாழும் வாழ்நாள் அதுவும் பெற்றுப் பண்ணன் வாழ்வானாக!

யான் வாழும் நாளும் பண்ணன் வாழிய!
பாணர் காண்க, இவன் கடும்பினது இடும்பை;
யாணர்ப் பழு மரம் புள் இமிழ்ந்தன்ன
ஊண் ஒலி அரவம்தானும் கேட்கும்;
பொய்யா எழிலி பெய்விடம் நோக்கி,
முட்டை கொண்டு வன் புலம் சேரும்
சிறு நுண் எறும்பின் சில் ஒழுக்கு ஏய்ப்பச்,
சோறுடைக் கையர் வீறு வீறு இயங்கும்
இருங் கிளைச் சிறாஅர்க் காண்டும்; கண்டும்,
மற்றும் மற்றும் வினவுதும், தெற்றெனப்;
பசிப்பிணி மருத்துவன் இல்லம்
அணித்தோ? சேய்த்தோ? கூறுமின், எமக்கே.

திணையும் துறையும் அவை.

சிறுகுடிகிழான் பண்ணனைச் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன் பாடியது.

# 174. மலையமான் சோழிய ஏனாதி திருக்கண்ணன்

அசுரர்கள் சூரியனை மறைத்துவிட உலகம் இருள் பட்டு விட்டது; அஞ்சன வண்ணனாகிய திருமால் அதனை மீட்டுக் கொணர்ந்து உலக இருளைப் போக்கினான்.

அதுபோலச் சோழ நாட்டு மன்னன் போரில் புறங்கொடுத்து உயிருக்கு அஞ்சி முள்ளூரில் மறைந்து இருந்தான். பகைவர்களை ஓடச் செய்து அவனைத் தேடிப் பிடித்து மீண்டும் சோழ நாட்டுக்குத் தலைமை ஏற்கச் செய்து அந்நாட்டுக்கு ஒளி தந்தாய்.

அத்தகைய சிறப்புடைய நீ இப்பொழுது உன் முன்னவர் ஆகிய உன் தந்தை இறந்துபடக் கபிலன் பாடிச் சிறப்பித்த உன் முள்ளூர் தக்க தலைவன் இல்லாமல் தவிப்பு எய்தி உள்ளது. கோடைக் காலத்துப் பெருமழை போல அம் மக்களுக்கு நீ தலைவனாக விளங்குகிறாய். அரசு ஏற்று அவர்களுக்கு ஒளி தருகிறாய்.

சோழனை நீ அரசு பதவியில் நிறுத்தினாய். அதுபோல நீயும் தலைமைப் பதவி ஏற்று மக்களுக்கு ஒளி விளக்காகத் திகழ்கிறாய்; கோடை மழையாக விளங்குகிறாய்.

**அணங்குடை அவுணர் கணம் கொண்டு ஒளித்தெனச்,**<br>
**சேண் விளங்கு சிறப்பின் ஞாயிறு காணாது,**<br>
**இருள் கண் கெடுத்த பருதி ஞாலத்து**<br>
**இடும்பை கொள் பருவரல் தீரக், கடுந் திறல்**<br>
**அஞ்சன உருவன் தந்து நிறுத்தாங்கு,**<br>
**அரசு இழந்திருந்த அல்லற்காலை,**<br>
**முரசு எழுந்து இரங்கும் முற்றமொடு, கரை பொருது**<br>
**இரங்கு புனல் நெரிதரு மிகு பெருங் காவிரி**<br>
**மல்லல் நல் நாட்டு அல்லல் தீரப்,**<br>
**பொய்யா நாவின் கபிலன் பாடிய,**<br>
**மை அணி நெடு வரை ஆங்கண், ஒய்யெனச்**<br>
**செருப் புகல் மறவர் செல்புறம் கண்ட**<br>
**எள் அறு சிறப்பின் முள்ளூர் மீமிசை,**<br>
**அரு வழி இருந்த பெரு விறல் வளவன்**

மதி மருள் வெண்குடை காட்டி, அக்குடை
புதுமையின் நிறுத்த புகழ் மேம்படுந!
விடர்ப் புலி பொறித்த கோட்டைச், சுடர்ப் பூண்,
சுரும்பு ஆர் கண்ணிப், பெரும் பெயர் நும் முன்
ஈண்டுச் செய் நல் வினை ஆண்டுச் சென்று உணீஇயர்,
உயர்ந்தோர் உலகத்துப் பெயர்ந்தனன் ஆகலின்,
ஆறு கொல் மருங்கின் மாதிரம் துழவும்
கவலை நெஞ்சத்து அவலம் தீர,
நீ தோன்றினையே-நிரைத் தார் அண்ணல்!
கல் கண் பொடியக், கானம் வெம்ப,
மல்கு நீர் வரைப்பின் கயம் பல உணங்கக்,
கோடை நீடிய பைது அறு காலை,
இரு நிலம் நெளிய ஈண்டி,
உரும் உரறு கருவிய மழை பொழிந்தாங்கே.

திணை - வாகை; துறை - அரச வாகை.

மலையமான் சோழிய ஏனாதி திருக்கண்ணனை மாறோக்கத்து நப்பசலையார் பாடியது.

# 175. ஆதனுங்கன்

*ஆதனுங்கனே! என் தலைவனே! என் நெஞ்சத்தைத் திறந்து காண்பவர் உன்னை அங்குக் காண்பர்.*

*என் நினைவுகள் எல்லாம் உன்னைச் சுற்றியே இயங்கு கின்றன.*

*உன் புகழைத்தான் என் நா பேசுகிறது.*

*உயிருள்ளவரை யான் உன்னை மறக்க முடியாது; இறுதி மூச்சு உள்ளவரை உன் நினைவாகவே இருந்து வாழ்வேன். இதுதான் என் நிலை.*

*அதற்குக் காரணம் நீ வாழும் இடம் மோரியர் ஆட்சி இடம் பெற்ற உலக இடைகழியில் நிலைபெற்றுள்ள ஆதித்த மண்டலம் போல அறம் நிரம்பிய இடம்; அறவழி உன் வழி; பலருக்கு உதவி அருளுகிறாய்; அதனால்தான் உன்னை மதிக்கிறேன்; போற்று கிறேன்; உன் நினைவாகவே வாழ்கிறேன்.*

எந்தை! வாழி; ஆதனுங்க! என்
நெஞ்சம் திறப்போர் நிற் காண்குவரே;
நின் யான் மறப்பின், மறக்கும் காலை,
என் உயிர் யாக்கையின் பிரியும் பொழுதும்,
என் யான் மறப்பின், மறக்குவென்-வென் வேல்
விண் பொரு நெடுங் குடைக் கொடித் தேர் மோரியர்
திண் கதிர்த் திகிரி திரிதரக் குறைத்த
உலக இடைகழி அறை வாய் நிலைஇய
மலர் வாய் மண்டிலத்து அன்ன, நாளும்
பலர் புரவு எதிர்ந்த அறத் துறை நின்னே.

திணை - பாடாண் திணை; துறை - இயன்மொழி.
ஆதனுங்களைக் கள்ளில் ஆத்திரையனார் பாடியது.

# 176. ஓய்மான் நல்லியக் கோடன்

கேழல் பன்றி குத்திக் கிளறி வெளிப்படுத்தும் சேற்றில் ஆமையின் முட்டையையும், ஆம்பல் கிழங்கையும் விளையாடச் செல்லும் இளம் பெண்கள் கண்டு எடுப்பர். நீர் வளம் மிக்கது மாவிலங்கை என்னும் ஊர். அதன் தலைவன் நல்லியக் கோடனை யான் மதிக்கும் தலைவனாகப் பெற்றுள்ளேன். அவன் நட்பு எனக்கு வாய்த்துள்ளது. இது யான் செய்த நல்வினைதான். விதி எனக்கு உதவியுள்ளது.

அவன் அருள் நிரம்பிய மென்மை அது காணும்தோறும் இப்படித்தான் நினைக்கத் தோன்றுகிறது. அவனைக் கண்ணாரக் கண்டு அறியாத நாட்கள் வீணாகக் கழிந்தவை என்பதை உணர்கிறேன்.

பாரியின் பறம்பில் பனிச்சுனையில் உள்ள தெளிந்த நீரை அதே ஊரில் உள்ளவர்கள்கூட ஒரு சிலர் அதனைப் பயன்படுத்தாமல் அதனை ஒதுக்கி விடுகின்றனர். அதே போன்ற மடமைதான் எனது; நான் இதுவரை அவனை அறியாதது, அவனோடு உறவு கொள்ளாதது வீண்; வீணாகிவிட்டன. நாட்கள்; வெறுமை உற்ற நாட்கள்அவை.

ஓரை ஆயத்து ஒண் தொடி மகளிர்
கேழல் உழுத இருஞ் சேறு கிளைப்பின்,
யாமை ஈன்ற புலவு நாறு முட்டையைத்
தேன் நாறு ஆம்பற் கிழங்கொடு பெறூஉம்,
இழுமென ஒலிக்கும் புனல் அம் புதவின்,
பெரு மாவிலங்கைத் தலைவன், சீறியாழ்
இல்லோர் சொல் மலை நல்லியக்கோடனை
உடையை வாழி, எற் புணர்ந்த பாலே!
பாரி பறம்பின் பனிச் சுனைத் தெண் நீர்
ஓர் ஊர் உண்மையின் இகந்தோர் போலக்,
காணாது கழிந்த வைகல், காணா
வழி நாட்டு இரங்கும், என் நெஞ்சம் - அவன்
கழி மென் சாயல் காண்தொறும் நினைந்தே.

திணையும் துறையும் அவை.

ஒய்மான் நல்லியக் கோடனைப் புறத்திணை நன்னாகனார் பாடியது.

## 177. மல்லி கிழான் காரியாதி

*பொதுவாகப் புலவர்கள் அரசர்களிடம் பொன் அணிந்த யானைகளைப் பெறுகின்றனர். இவர்கள் உள்ளே அனுமதிக்கப் பட்டு வரவேற்கப்படுகின்றனர். என்றாலும் பல நாள் காத்திருந்தே பெறுகின்றனர். காத்திருந்து பெறும் பெருஞ்செல்வம் அது அதனை மல்லி கிழானிடம் எளிதில் பெற இயலும்.*

*மற்றும் மல்லி கிழான் காரியாதியின் ஊரில் குறும்புகளில் காவல் செய்யும் வில் வீரர்கள் புளிச்சுவையை விரும்பினால் களாப் பழத்தையும், துடரியையும் தின்ன அளிப்பான். இவை திகட்டி விட்டால் ஆற்று மணல் மேட்டில் ஏறி நாவல் பழத்தைப் பறித்து உண்பர். அத்தகைய சிறப்பு உடையவன் ஆதி.*

*குடநாட்டு எயினர் கொண்டு வரும் எய்ப் பன்றியின் இறைச்சியோடு வெண்ணெல் சோறு பெய்து பனம் ஓலைக் குடையில் வருநர்க்கு வரையாது வழங்குவான்; வீரர்களும் அவருடன் உண்பர். இவை எல்லாம் காரியாதி ஊரில் கிடைப்பன. அவர்கள் மகிழும்படி இவற்றைக் காரியாதி தந்து உபசரிக்கிறான்.*

*பேரரசர்கள் தரும் பொன் அணிந்த யானைகள் இவற்றோடு ஒப்பிட இங்கு அவன்பால் வருவார்க்குத் தரப்படும் காலை உணவு மதிக்கத் தக்கது. இவற்றிற்கு அவ்வரசர்கள் தரும் பெருஞ் செல்வம் ஈடு ஆகாது.*

ஒளிறு வாள் மன்னர் ஒண் சுடர் நெடு நகர்,
வெளிறு கண் போகப் பல் நாள் திரங்கிப்,
பாடிப் பெற்ற பொன் அணி யானை,
தமர் எனின், யாவரும் புகுப; அமர் எனின்,
திங்களும் நுழையா எந்திரப் படு புழை,
கள் மாறு நீட்ட நணி நணி இருந்த
குறும் பல் குறும்பின் ததும்ப வைகிப்,
புளிச் சுவை வேட்ட செங் கண் ஆடவர்
தீம் புளிக் களாவொடு துடரி முனையின்,
மட்டு அறல் நல் யாற்று எக்கர் ஏறிக்,
கருங் கனிநாவல் இருந்து கொய்து உண்ணும்,
பெரும் பெயர் ஆதி, பிணங்குஅரில் குட நாட்டு,
எயினர் தந்த எய்ம் மான் எறி தசைப்
பைஞ் ஞிணம் பெருத்த பசு வெள் அமலை,
வருநர்க்கு வரையாது தருவனர் சொரிய,
இரும் பனங் குடையின் மிசையும்
பெரும் புலர் வைகறைச் சீர் சாலாதே.

திணையும் துறையும் அவை.

மல்லிகிழான் காரியாதியை ஆவூர் மூலங்கிழார் பாடியது.

# 178. பாண்டியன் கீரஞ் சாத்தன்

*யானைகளையும், குதிரைகளையும் கட்டி வைத்துள்ள மணல் பரப்பிய முற்றம் அதில் புகுந்த சான்றோர்கள் அவர்களைப் புகழ்மிக்க சாத்தன் உணவு உண்ணச் செய்வதே தனித்தன்மையது.*

*உணவு உண்ணாமல் தயங்குவார் எனில் 'உண்க' என்று தன்மேல் ஆணையிட்டுச் சூள் உரைத்து அவர்களை வேண்டுவான். அருகிருந்து உண்ணச் செய்வான். இங்கே அவன் இனிய சாயலைக் காண முடிகிறது. அவன் மென்மையை உணர முடிகிறது.*

போர்க் களத்தில் இவன் வீரர்கள் சிலர் கள்ளைக் குடித்து விட்டுப் போதையில் போர் அணிக்குச் செல்லாமல் நெகிழ்வது உண்டு. 'ஆகா', ஓகோ என்று ஊரின்கண்நெடுமொழி பேசியவர்கள் களத்தில் அதனை மறந்து கள் மயக்கத்தில் கடமை ஆற்றாமல் அஞ்சி விலகி விடுவதும் உண்டு.

அந்த இக்கட்டான சமயத்தில் நெருக்கடி அதைத் தவிர்க்க இவன் படையில் அவர்களுக்கும் முந்திக் கொண்டு வந்து நிற்பான். இங்கே இவன் வன்மையைக் காண முடிகிறது. போர் வீரர்களுக்கு இவன் அரணாக இருந்து செயல்படுவான்.

கந்து முனிந்து உயிர்க்கும் யானையொடு, பணை முனிந்து
கால் இயற் புரவி ஆலும் ஆங்கண்,
மணல் மலி முற்றம் புக்க சான்றோர்
உண்ணார் ஆயினும், தன்னொடு சூளுற்று,
'உண்ம்' என இரக்கும் பெரும் பெயர்ச் சாத்தன்
ஈண்டோ இன் சாயலனே; வேண்டார்
எறி படை மயங்கிய வெருவரு ஞாட்பின்,
கள்ளுடைக் கலத்தர் உள்ளூர்க் கூறிய
நெடுமொழி மறந்த சிறு பேராளர்
அஞ்சி நீங்குங்காலை,
ஏமமாகத் தான் முந்துறுமே.

திணை - வாகை; துறை - வல்லாண் முல்லை.
பாண்டியன் கீரஞ்சாத்தனை அவர் பாடியது.

## 179. நாலை கிழவன் நாகன்

''இந்த மண்ணில் வள்ளல்கள் எனப்பட்டவர்கள் பலரும் மாய்ந்து மறைந்து விட்டனர். இனி யார் என்னை ஆதரிப்பார்கள்? கவிழ்த்து விட்ட எம் பாத்திரங்கள் மறுபடியும் எப்பொழுது மலர்ச்சி பெறும்'' என்று வினவுவதால் உங்களுக்குப் பாண்டிய நாட்டு மறவன் ஒருவனைப் பற்றி உரைக்க விரும்புகிறேன். அவன் நாலை கிழான் நாகன் என்பவன் ஆவான்.

தான் உதவுகிற வேந்தனுக்கு அவன் படைவீரர்கள் சென்று உதவுவர். போரில் வெல்லும் உபாயங்களை அறிவிப்பான். அவர்

கள் எதைச் செய்து முடிக்கச் சொன்னாலும் தவறாது சென்று முடிப்பான்.

நுகத்தில் பூட்டப்பட்ட எருதுபோல் சளைக்காமல் உழைப்பவன்! அவன் நாலை கிழான் நாகன் ஆவான். அவனே பசிக்கு மருத்துவனாக விளங்குகிறான் என்று பலரும் இவனைப் பற்றிக் கூறினர். அவன்பால் செல்க நீ!

'ஞால மீமிசை வள்ளியோர் மாய்ந்தென,
ஏலாது கவிழ்ந்த என் இரவல் மண்டை
மலர்ப்போர் யார்?' என வினவலின், மலைந்தோர்
விசி பிணி முரசமொடு மண் பல தந்த
திரு வீழ் நுண் பூண் பாண்டியன் மறவன்,
படை வேண்டுவழி வாள் உதவியும்,
வினை வேண்டுவழி அறிவு உதவியும்,
வேண்டுப வேண்டுப வேந்தன் தேஎத்து
அசை நுகம் படாஅ ஆண்தகை உள்ளத்துத்
தோலா நல்இசை, நாலை கிழவன்,
பருந்து பசி தீர்க்கும் நற் போர்த்
திருந்து வேல் நாகற் கூறினர், பலரே.

திணையும் துறையும் அவை.

நாலை கிழவன் நாகனை வடநெடுந் தத்தனார் பாடியது.

## 180. ஈர்ந்தூர் கிழான் தோயன் மாறன்

தொடர்ந்து தந்து கொண்டிருக்கும் பெருஞ்செல்வம் அவன்பால் இல்லை; இல்லை என்று சொல்லி அனுப்பும் சிறுமையும் அவனிடம் காண முடியாது.

தன் தலைவனுக்காகப் போர்களில் முன்நின்று வாள்வடு பெறுவான்; மறுபடியும் போர்க்குச் சென்று உதவுவான். இரும்பு சுவை பார்த்த விழுப்புண் ஏற்படுத்திய உடம்பு அவனது; மருந்துச் செடி அது வெட்டப்பட்டு வடுக்கள் தாங்குகின்றது. அதேபோல வடுப் பெற்ற யாக்கையன்.

ஈர்ந்தை என்னும் ஊரில் வாழ்பவன்; பாணர்கள் பசி தீர்க்கும் மருத்துவன் ஆவான்.

*முதுவாய் இரவலனே! இன்மை தீர வேண்டினால் நீயும் எம்முடன் வருக.*

*யாம் அவனிடம் சென்று கை நீட்டினால் அவன் கொல்லனிடம் செல்வான். எம் வாடிய வயிற்றைக் காட்டி இவர்களுக்குத் தரத் தனக்கு வேல் வடித்துக் கொடு என்று அவனை இரப்பான்.*

நிரப்பாது கொடுக்கும் செல்வமும் இலனே;
'இல்' என மறுக்கும் சிறுமையும் இலனே;
இறை உறு விழுமம் தாங்கி, அமரகத்து
இரும்பு சுவைக் கொண்ட விழுப்புண் நோய் தீர்ந்து,
மருந்து கொள் மரத்தின் வாள் வடு மயங்கி,
வடு இன்று வடிந்த யாக்கையன், கொடை எதிர்ந்து,
ஈர்ந்தையோனே, பாண் பசிப் பகைஞன்;
இன்மை தீர வேண்டின், எம்மொடு
நீயும் வம்மோ?- முதுவாய் இரவல!-
யாம் தன் இரக்கும்காலைத், தான் எம்
உண்ணா மருங்குல் காட்டித் தன் ஊர்க்
கருங் கைக் கொல்லனை இரக்கும்,
'திருந்துஇலை நெடு வேல் வடித்திசின்' எனவே.

திணையும் - துறையும் அவை; பாணாற்றுப் படையும் ஆம்.

ஈர்ந்தூர் கிழான் தோயன் மாறனைக் கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக் குமரனார் பாடியது.

## 181. வலார் கிழான் பண்ணன்

*ஊர் மன்றத்தில் விளவின் பழம் உதிர்ந்தால் எயிற்றியின் சிறுவனோடு யானைக் கன்று போட்டி இட்டுக் கொண்டு எடுக்க ஓடும். அத்தகைய அமைதிமிக்க ஊர் 'வலார்' என்பது; அதன் தலைவன் 'பண்ணன்' என்பான்.*

*பாணனே! உன் சுற்றத்தினர் பசியைப் போக்க வேண்டுமாயின் அவன் பகைப்புலம் நோக்கிச் செல்வதற்கு முன் அவனைச் சென்று காண்க. உன் பசிப்பிணி தீர்க்கும் பரிசில் அவன் தருவான்; விரைவில் செல்க.*

மன்ற விளவின் மனை வீழ் வெள்ளில்,
கருங் கண் எயிற்றி காதல் மகனொடு,

கான இரும் பிடிக் கன்று தலைக் கொள்ளும்
பெருங் குறும்பு உடுத்த வன் புல இருக்கைப்
புலாஅல் அம்பின், போர் அருங் கடி மிளை,
வலா அரோனே, வாய் வாள் பண்ணன்;
உண்ணா வறுங் கடும்பு உய்தல் வேண்டின்,
இன்னே சென்மதி, நீயே- சென்று, அவன்
பகைப் புலம் படரா அளவை, நின்
பசிப் பகைப் பரிசில் காட்டினை கொளற்கே.

திணையும் துறையும் அவை.

வலார் கிழான் பண்ணனைச் சோணாட்டு முகையலூர்ச் சிறு கருந்தும்பியார் பாடியது.

# 182. கடலுள் மாய்ந்த இளம் பெருவழுதி

இந்த உலகம் ஒழுங்காக இயங்குகிறது. அதற்குக் காரணம் ஒரு சிலர் உயர்ந்தோர் வாழ்வதால்தான்.

அவர்கள் இந்திரர்க்குக் கிடைக்கும் அமுதமேயாயினும் தனித்துத் தான் மட்டும் உண்ணார். பிறருக்கும் ஈந்தே உண்பர். அவர்கள் சினந்து பார்க்க முடியாது.

பிறர் அஞ்சுவதற்குத் தாமும் அஞ்சி அவற்றைத் தீர்க்க ஓயாது பாடுபடுவர். சோம்பிச் செயலற்றுக் கிடக்க மாட்டார்கள்.

புகழ் எனின் உயிரும் தந்து அதனைச் செய்து முடிப்பர். இகழ் எனின் இந்த உலகமே அவர்க்குக் கிடைப்பது ஆயினும் அதனைக் கொள்ள மாட்டார். அயர்வு கொள்ளார்.

இத்தகைய மாட்சியுடையராகித் தமக்கு என முயலாமல் பிறர்க்காகவே உழைத்து உதவுபவர் ஆவர்.

இத்தகைய உயர் மாந்தர் இருப்பதால்தான் இந்த உலகம் நல் வழியில் செயல்படுகிறது; இயங்குகிறது; வாழத் தகுதியுடையதாக அமைந்துள்ளது.

உண்டால் அம்ம, இவ் உலகம்-இந்திரர்
அமிழ்தம் இயைவதுஆயினும், 'இனிது' எனத்
தமியர் உண்டலும் இலரே; முனிவு இலர்;
துஞ்சலும் இலர்; பிறர் அஞ்சுவது அஞ்சிப்
புகழ் எனின், உயிரும் கொடுக்குவர், பழி எனின்

உலகுடன் பெறினும், கொள்ளலர்; அயர்விலர்;
அன்ன மாட்சி அனையர் ஆகித்
தமக்கு என முயலா நோன் தாள்,
பிறர்க்கு என முயலுநர் உண்மையானே.

திணை - பொதுவியல்; துறை - பொருண்மொழிக் காஞ்சி.
கடலுள் மாய்ந்த இளம் பெருவழுதி பாட்டு.

# 183. பாண்டியன் ஆரியப் படை கடந்த நெடுஞ்செழியன்

ஆசிரியனுக்கு உற்ற உதவிகள் செய்தும், மிக்க பொருள் கொடுத்தும், வழிபாடு செய்தும் கற்றல் நன்மை தருவதாகும்.

ஒரே வயிற்றில் பிறந்த மக்கள் ஆயினும் கல்வி கற்று உயர்ந்தவனாயின் அவனையே தாயும் மதிப்பாள். அவள் மனமும் ஒரு பக்கமே சாயும்.

ஒரே குடியில் பிறந்தவராயினும் கல்விச் சிறப்பால் தக்கவனையே அரசு அழைத்துச் சிறப்புச் செய்வான்; மூத்தவன் என்பதால் முன்னுரிமை தருவது இல்லை. கல்வித் தகுதி பற்றியே அவன் அவர்கள் அறிவுரை கேட்பான். அதை ஏற்று அவன் ஆட்சி செய்வான்.

வேறுபட்டு விளங்கும் நான்கு வகைச் சாதியினருள்ளும் கீழ் சாதிக்காரன் ஒருவன் கற்றவன் ஆயின் மேல் சாதிக்காரன் அவனுக்குப் பணிந்து ஆணை கேட்டு நடப்பான்.

அதனால் கற்பதில் சிரமங்கள் இருந்தாலும் அவற்றைப் பொருட்படுத்தாது கற்றல் நல்லது ஆகும்.

உற்றுழி உதவியும், உறு பொருள் கொடுத்தும்,
பிற்றை நிலை முனியாது, கற்றல் நன்றே:
பிறப்பு ஓர் அன்ன உடன்வயிற்றுள்ளும்,
சிறப்பின் பாலால், தாயும் மனம் திரியும்;
ஒரு குடிப் பிறந்த பல்லோருள்ளும்,
'மூத்தோன் வருக' என்னாது, அவருள்
அறிவுடையோன் ஆறு அரசும் செல்லும்;

வேற்றுமை தெரிந்த நாற்பாலுள்ளும்,
கீழ்ப்பால் ஒருவன் கற்பின்,
மேற்பால் ஒருவனும் அவன்கண் படுமே.

திணையும் துறையும் அவை.

பாண்டியன் ஆரியப் படை கடந்த நெடுஞ்செழியன் பாட்டு.

# 184. பாண்டியன் அறிவுடை நம்பி

காய்ந்து முதிர்ந்த நெல்லை அறுத்துக் கவளம் கவளமாகத் திரட்டி யானைக்கு உண்ணத் தந்தால் மா அளவினும் குறைந்த நிலத்தினது என்றாலும் அதுபல நாளுக்கு வரும்.

நூறு வயல்கள் என்றாலும் யானை தனித்துப் புகுந்து தின்றால் வாயில் புகுவதைவிடக் காலில் மிதிபட்டுப் பாழாகி விடும்.

அறிவுடை வேந்தன் நெறி வகுத்துக் கொண்டு அதன்படி மக்களிடம் பொருள் பெற்று ஆட்சி நடத்தினால் அந்த நாடு கோடிப் பொருளினை ஈட்டித் தந்து நன்கு செழித்து உயரும்.

சிற்றினத்தாரோடு சேர்ந்து இன்பக் கேளிக்கைகளை விரும்பித் தவறான வழியின் மக்களிடமிருந்து பொருளை வற்புறுத்திப் பெற்றால் யானை புகுந்த வயல் போலத் தானும் உண்ணான்; உலகமும் கெடும்.

காய் நெல் அறுத்துக் கவளம் கொளினே,
மா நிறைவு இல்லதும், பல் நாட்கு ஆகும்;
நூறு செறு ஆயினும், தமித்துப் புக்கு உணினே,
வாய் புகுவதனினும் கால் பெரிது கெடுக்கும்;
அறிவுடை வேந்தன் நெறி அறிந்து கொளினே,
கோடி யாத்து, நாடு பெரிதும் நந்தும்;
மெல்லியன் கிழவன் ஆகி, வைகலும்
வரிசை அறியாக் கல்லென் சுற்றமொடு,
பரிவு தப எடுக்கும் பிண்டம் நச்சின்,
யானை புக்க புலம் போலத்
தானும் உண்ணான்; உலகமும் கெடுமே.

திணை - பாடாண் திணை; துறை - செவியறிவுறூஉ.

பாண்டியன் அறிவுடை நம்பியுழைச் சென்ற பிசிராந்தையார் பாடியது.

## 185. தொண்டைமான் இளந்திரையன்

அரசு காவல் ஒருவகையில் பாரம்மிக்க வண்டியை ஒழுங்காகச் செலுத்துவது போன்றதுதான்.

வண்டியின் சக்கரமும் அச்சும் சரியாக வைத்துக் கொண்டு ஒழுங்காக இயக்கினால் அது செல்லும் இடம் ஒழுங்காகப் போய்ச் சேரும்.

ஆட்சியும் அத்தகையதே. ஆட்சி இயந்திரம் சரியாக இயங்க வேண்டும். அனைவர் ஒத்துழைப்பும் பெற வேண்டும்.

அவ்வாறு செய்யாவிட்டால் வண்டி வழி தவறிச் சிதைந்து விடும். அதுபோல ஆட்சியும் சிதைந்து அழியும்.

பகையாகிய சேற்றில் அகப்பட்டுக் கொண்டு தீய அழிவுகளில் சிக்கித் தடுமாற நேரும்; இடுக்கண்களைச் சந்திக்க நேரும்; தப்ப இயலாது.

ஆட்சியின் சிறப்பு ஆள்வோனைப் பொறுத்து உள்ளது.

கால் பார் கோத்து, ஞாலத்து இயக்கும்
காவற் சாகாடு உகைப்போன் மாணின்,
ஊறு இன்றாகி ஆறு இனிது படுமே;
உய்த்தல் தேற்றான்ஆயின், வைகலும்,
பகைக் கூழ் அள்ளற் பட்டு,
மிகப் பல் தீ நோய் தலைத்தலைத் தருமே.

திணை - பொதுவியல்; துறை - பொருண்மொழிக் காஞ்சி.
தொண்டைமான் இளந்திரையன் பாட்டு.

## 186. மோசி கீரனார்

மக்களுக்கு உணவாகிய நெல்லும் நீரும்தான் உயிர் வாழ்க்கைக்கு இன்றியமையாதன என்று கூற முடியாது.

நெல்லும் உயிரன்று; நீரும் உயிரன்று; மன்னன்தான் மக்களுக்கு உயிராவான். அதனால் மக்களுக்குத் தான் உயிர் என்பதை அறிந்து செயல்படுதல் வேல்மிகு சேனைகளை உடைய அரசனுக்குக் கடமையாகும். மக்கள் வாழ்க்கைக்கு அரசன் உயிர் போன்றவன் ஆவான்.

நெல்லும் உயிர் அன்றே; நீரும் உயிர் அன்றே;
மன்னன் உயிர்த்தே மலர் தலை உலகம்:
அதனால், யான் உயிர் என்பது அறிகை
வேல் மிகு தானை வேந்தற்குக் கடனே.

திணையும் துறையும் அவை.
மோசிகீரனார் பாடியது.

## 187. ஔவையார்

நிலமே நீ ஒரு பகுதியில் நாடாக விளங்குகிறாய். மற்றொரு பகுதியில் காடாக விளங்குகிறாய்.

ஒரு பகுதியில் பள்ளமாக இருக்கிறாய். ஒரு பகுதியில் மேடாக இருக்கிறாய்.

இந் நில அமைப்புகளில் வேறுபாடுகள் உள்ளன. அவற்றை வைத்துக் கொண்டு எதையும் நல்லது, தீயது என்று கூற முடியாது.

நிலப்பகுதி எதுவாயினும் எங்கே நல்லவர்கள் இருக்கின்றார்களோ அது நல்லது என்று கூற முடியும்.

நிலம் அடிப்படையன்று; மக்கள் அவர்களை வைத்துத்தான் நாட்டின் நன்மை, தீமைகள் அமைகின்றன.

நாடு ஆகு ஒன்றோ காடு ஆகு ஒன்றோ
அவல் ஆகு ஒன்றோ மிசை ஆகு ஒன்றோ
எவ் வழி நல்லவர் ஆடவர்,
அவ் வழி நல்லை; வாழிய நிலனே!

திணையும் துறையும் அவை.
ஔவையார் பாடியது.

## 188. பாண்டியன் அறிவுடைநம்பி

குறுகுறு என்று நட ந்தும், சிறுகை நீட்டி இட்டும் தொட்டும் கவ்வியும் துழந்தும், நெய் கலந்த சோறு உடம்பெல்லாம் விதிர் விதிர்த்து மகிழ்வு தருவர் மக்கள்.

மக்கள் மகிழ்வு தருகின்றனர். அவர்களைப் பெறாதவர் மிகப் பல செல்வம் படைத்தவர் ஆயினும் அவர்கள் வாழ்க்கை பொருளற்றதாகி விடுகிறது.

படைப்புப் பல படைத்துப் பலரோடு உண்ணும்
உடைப் பெருஞ் செல்வர் ஆயினும், இடைப் படக்
குறுகுறு நடந்து, சிறு கை நீட்டி,
இட்டும், தொட்டும், கவ்வியும், துழந்தும்,
நெய்யுடை அடிசில் மெய் பட விதிர்த்தும்,
மயக்குறு மக்களை இல்லோர்க்குப்
பயக் குறை இல்லைத் தாம் வாழும் நாளே.

திணையும் துறையும் அவை.

பாண்டியன் அறிவுடை நம்பி பாட்டு.

## 189. மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார்

வாழ்க்கையில் இரு எல்லைகள்; ஒருவன் பேரரசன்; பல நாடு களையும் தனக்கே உரிமையாக்க ஒய்வு ஒழிச்சல் இல்லாமல் உழைக்கிறான்.

மற்றோர் எல்லை; காட்டிலே வேடுவன்; விலங்குகளைத் தேடி அலைகிறான். இரவிலும் தூக்கமின்றிச் சுற்றி அலைகிறான். இவன் கல்வி கல்லாதவன்.

இருவருக்கும் உணவு, உடை, இருக்கை இவை பொது. அவனுக்கும் மேலாடை ஒன்று; இடுப்புக்கு ஓர் ஆடை. இவனுக்கும் அவையேதான். உண்பதிலும் உடுப்பதிலும் மிக்க வேறுபாடு இல்லை.

செல்வம் படைத்தவர் செய்யத் தக்கது ஒன்று உள்ளது; பிறர்க்கு ஈதல் அதனைச் செய்ய அவர்களால் இயலும். அதுவே அவர்களை வேறுபடுத்திக் காட்டும்; உயர்வு தருவதும் ஆகும்.

செல்வ வாழ்க்கையின் பயன் ஈதல்; நாமே உண்போம் என்றால் அவை தவறுவதற்கும் காரணங்கள் பல சேர்ந்து விடும்.

தெண் கடல் வளாகம் பொதுமை இன்றி
வெண் குடை நிழற்றிய ஒருமையோர்க்கும்,
நடு நாள் யாமத்தும் பகலும் துஞ்சான்
கடு மாப் பார்க்கும் கல்லா ஒருவற்கும்,

உண்பது நாழி; உடுப்பவை இரண்டே;
பிறவும் எல்லாம் ஓர் ஒக்கும்மே;
செல்வத்துப் பயனே ஈதல்;
துய்ப்பேம்எனினே, தப்புந பலவே.

திணையும் துறையும் அவை.

மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார் பாடியது.

## 190. சோழன் நல்லுருத்திரன்

விளையும் இடம் சிறிது ஆயினும் அங்கு எல்லாம் சென்று வளைந்த கதிரிடத்துச் சிறுகச் சிறுகத் தம் வளையில் எலி அரிசி கொண்டு சேர்க்கிறது; சேமித்து வைக்கிறது. இது ஒரு வாழ்க்கை.

இந்தச் சிற்றெலி போலச் சிறு முயற்சிகள் செய்து சிக்கனமாக வாழ்பவர் உள்ளனர். பிறர்க்கு ஈதல் இன்றி இறுக்கிப் பிடிப்பர்.

இவர்களோடு தொடர்பு கொள்வது பயனற்றதாகும்.

தறுகண்மையை உடைய காட்டுப் பன்றியைப் புலி வீழ்த்துகிறது. அது இடப்பக்கம் சாய்ந்தால் அதனைத் தொட்டு உண்ணாது.

மறுநாள் பசித்திருந்து யானையை வலப்பக்கத்தில் வீழ்த்தி அதனை உண்பதில் அது மகிழ்வு காண்கிறது.

இத்தகைய மெலிவு நீங்கிய உள்ளத்தவரோடு எம் கேண்மை பொருந்துவதாக.

விளை பதச் சீறிடம் நோக்கி, வளை கதிர்
வல்சி கொண்டு, அளை மல்க வைக்கும்
எலி முயன்றனையர் ஆகி, உள்ள தம்
வளன் வலியுறுக்கும் உளம் இலாளரொடு
இயைந்த கேண்மை இல்லாகியரோ!
கடுங் கண் கேழல் இடம் பட வீழ்ந்தென,
அன்று அவண் உண்ணாதாகி, வழி நாள்,
பெரு மலை விடரகம் புலம்ப, வேட்டு எழுந்து,
இருங் களிற்று ஒருத்தல் நல் வலம் படுக்கும்
புலி பசித்தன்ன மெலிவு இல் உள்ளத்து

உரனுடையாளர் கேண்மையொடு
இயைந்த வைகல் உள ஆகியரோ!

திணையும் துறையும் அவை.
சோழன் நல்லுருத்திரன் பாட்டு.

## 191. பிசிராந்தையார்

ஆண்டுகள் பலவாகி மூத்துவிட்டபோதும் தோற்றத்தில் முதுமையைக் காணாமல் நீவிர் நரை இல்லாமல் எப்படி வாழ இயல்கிறது என்று வினவுவீர் ஆயின்.

மனைவி மாட்சிமை மிக்கவள்; நற்குண நற்செயல்கள் நிரம்பியவள்; மக்களும் அறிவு நிரம்பியவர் ஆக உள்ளனர்.

என்னிடம் பணி செய்யும் ஏவலரும் யான் கருதுவது அறிந்து அதன்படி செயல்படுகின்றனர். நாட்டு அரசனும் தீமைகள் செய்வது இல்லை. அல்லல் விளைவிப்பது இல்லை. மக்களை நன்கு காத்தல் செய்கிறான். கவலை நீங்க வாழ வைக்கிறான்.

அதற்கு மேலும் ஒரு தனிச்சிறப்பு உள்ளது. ஆன்று அவிந்து அடங்கிய கொள்கைமிக்க சான்றோர் வாழும் ஊர் இது. இவர்கள் தக்க அறிவுரைகள் தந்து வாழ்க்கைக்கு வழிகாட்டுகின்றனர்.

'யாண்டு பல ஆக, நரை இல ஆகுதல்
யாங்கு ஆகியர்?' என வினவுதிர் ஆயின்,
மாண்ட என் மனைவியொடு, மக்களும் நிரம்பினர்;
யான் கண்டனையர் என் இளையரும்; வேந்தனும்
அல்லவை செய்யான், காக்கும்; அதன்தலை
ஆன்று அவிந்து அடங்கிய கொள்கைச்
சான்றோர் பலர், யான் வாழும் ஊரே.

திணையும் துறையும் அவை.

கோப்பெருஞ்சோழன் வடக்கிருந்தானுழைச் சென்ற பிசிராந்தையாரைக் 'கேட்கும் காலம் பலவாலோ? நரை நுமக்கு இல்லையாலோ?' என்ற சான்றோர்க்கு அவர் சொற்றது.

## 192. கணியன் பூங்குன்றனார்

எல்லைகள் எம்மைக் கட்டுப்படுத்தாது; எதுவாயினும் யாம் செல்லும் இடம் எல்லாம் எம்முடைய ஊரே யாகும். அங்குள்ளவர் யாவரும் யாம் நேசிக்கும் உறவினர் ஆவர்.

தீமைகள் நன்மைகள் இவற்றைப் பெரும்பாலும் நாமே விளைவித்துக் கொள்கிறோம். பிறர் தருவது மிகுதியாக இல்லை; நம் செயற்பாட்டை ஒட்டியே நன்மைகளும் தீமைகளும் வந்து சேர்கின்றன.

துன்பம் அதனால் பாதிப்பும் அது தணிந்து வாழ்தலும் அவற்றைப் போன்றவையே. அவையும் தாமே வருவன; பிறர் தருவன அல்ல.

சாதல் என்பது புதிய நிகழ்ச்சி அன்று. நடவாதது நடந்து விட்டது என்று அதைக் கண்டு அஞ்சத் தேவை இல்லை. வருந்தவும் தேவை இல்லை.

வாழ்தல் இனிமை தருவது என்று நினைத்துக் கொண்டு அதில் ஆழ்வதும் இல்லை. இன்பமும் ஒரு மயக்கமே; போதை தருவது. அதனால் அறிவு மங்குவதற்கு அது காரணமாகிவிடும். மேல் முயற்சி இன்றிச் சோம்பலிலும் உய்த்துவிடும். இன்பம் அது நம்மைத் தளைப்படுத்தி விடும். செயற்பாட்டைக் குறைத்துவிடும்.

வாழ்க்கையை வெறுப்பதும் இல்லை. இது இனிமையற்றது என்று வெறுத்துக் கூறுவதும் இல்லை.

வாழ்க்கை எப்படி அமைகிறதோ அதை அப்படியே ஏற்றுக் கொள்வதுதான் அறிவுடைமை; தக்கது ஆகும்.

ஆற்று நீர் வெள்ளம் அதில் மிதக்கும் படகு அதன் ஓட்டத்தில் செல்கிறது; வாழ்க்கை இயக்கத்தில் நாமும் மிதந்து செல்கிறோம். அவ்வளவுதான். உயிர்வாழ்க்கை சில ஒழுங்கு முறைகளுக்குக் கட்டுப்பட்டது. அவற்றை விட்டு நாம் விலகிச் செல்ல முடியாது. இதுதான் வாழ்க்கை நெறி என்பதை அறிஞர்கள் அறிவுறுத்தி யுள்ளனர். தெளிவான சிந்தனையுடன் வாழ்கிறோம்.

பெரியவர்களைக் கண்டு அவர்கள் சாதனையை வியந்து கொண்டிருப்பதும் இல்லை. சிறியோர்கள் எதையும் சாதிக்காத வர்கள் என்று கூறி அவர்களை இழித்துக் கூறுவதும் இல்லை; பெருமைக்கும் சிறுமைக்கும் அவர்கள் பெற்றிருக்கும் சூழ்நிலை களே காரணம் ஆகின்றன. தனிமனிதரை உயர்த்திப் பேசுவதும்

தாழ்த்திப் பேசுவதும் தக்கது அன்று. அனைவரையும் சமமாக மதிப்பதே தக்கது ஆகும். மனிதநேயம் நாம் போற்றத் தக்கது ஆகும்.

யாதும் ஊரே; யாவரும் கேளிர்;
தீதும் நன்றும் பிறர் தர வாரா;
நோதலும் தணிதலும் அவற்றோரன்ன;
சாதலும் புதுவது அன்றே; வாழ்தல்
இனிது என மகிழ்ந்தன்றும் இலமே; முனிவின்,
இன்னாது என்றலும் இலமே; 'மின்னொடு
வானம் தண் துளி தலைஇ, ஆனாது
கல் பொருது இரங்கும் மல்லல் பேர் யாற்று
நீர் வ்ழிப்படூஉம் புணை போல், ஆர் உயிர்
முறை வழிப்படூஉம்' என்பது திறவோர்
காட்சியின் தெளிந்தனம்ஆகலின், மாட்சியின்
பெரியோரை வியத்தலும் இலமே;
சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே.

திணையும் துறையும் அவை.
கணியன் பூங்குன்றன் பாட்டு.

## 193. ஓரேர் உழவர்

தோலை உரித்து அதனைப் புறம்கீழாக இட்டுப் பரப்பி வைத்தது போன்ற வெண் களர் நிலம்; வேடுவன் ஒருவன் மான் ஒன்றைத் துரத்துகிறான்; வழியில் அதனைத் தடுக்கத் தடை ஏதும் இல்லை; தளையும் இல்லை; அதனால் அது வேகமாக ஓடித் தப்பித்துக் கொள்கிறது. வழவழப்பான நிலம் அது.

வாழ்க்கையும் அப்படித்தான். மனைவி மக்கள் சுற்றம் இல்லாதவர்கள் துன்பங்கள் துரத்தும்போது ஓடிவிட முடியும்.

மற்றவர்களைப் பந்தபாசங்கள், குடும்பப் பொறுப்புகள் தளைப்படுத்துகின்றன. அவர்கள் நின்று நிலைத்துப் போராடி வெற்றி காண்பதே செய்யத்தக்கதாகும்.

அதள் எறிந்தன்ன நெடு வெண் களரின்
ஒருவன் ஆட்டும் புல்வாய் போல,

ஓடி உய்தலும் கூடும்மன்;
ஒக்கல் வாழ்க்கை தட்கும்மா காலே.

திணையும் துறையும் அவை.

ஓரேருழவர் பாட்டு

## 194. பக்குடுக்கை நன்கணியார்

ஒரு வீட்டில் நெய்தற் பறை இரக்க உணர்வை வெளிப்படுத்த ஒலிக்கிறது. சாவு அதன் விளைவு அது.

மற்றொரு வீட்டில் குளிர்ச்சி தரும் முழவு பண்ணோடு இசைக்கிறது. மகிழ்ச்சியை அது தெரிவிக்கிறது. அது மண முழக்கம்.

மண வாழ்க்கையை உடையவர் தம் தலைவரோடு வாழ்ந்து மலர்ச்சி பெறுகின்றனர். இன்பம் அடைகின்றனர். மகிழ்வுடன் வாழ்கின்றனர். கணவனைப் பிரிந்து வாழ்பவர் பொலிவிழந்து வாடுகின்றனர்.

இவ்வாறு ஒரு சிலர் மகிழ்வும் அதே சமயத்தில் ஒரு சிலர் துன்பப்பட்டும் வாழ வகுத்துத் தந்த படைப்புக் கடவுள் பண்பு இல்லாதவன் என்றுதான் கூற முடியும்.

இதைக் கண்டு தத்துவம் பேசிக் கொண்டு ஒதுங்கி வாழ்வது தக்கது அன்று

இதில் இனிமையை நீ படைக்கப் பாடுபடுவதே தக்கது ஆகும்.

ஓர் இல் நெய்தல் கறங்க, ஓர் இல்
ஈர்ந் தண் முழவின் பாணி ததும்பப்,
புணர்ந்தோர் பூ அணி அணியப், பிரிந்தோர்
பைதல் உண்கண் பனி வார்பு உறைப்பப்,
படைத்தோன் மன்ற, அப் பண்பிலாளன்!
இன்னாது அம்ம, இவ் உலகம்;
இனிய காண்க, இதன் இயல்பு உணர்ந்தோரே.

திணை - அது; துறை - பெருங் காஞ்சி.

பக்குடுக்கை நன்கணியார் பாடியது.

## 195. நரி வெரூஉத் தலையார்

சால்புமிக்க மூதறிவாளர்களே! கயல்மீன் போன்று நரை பெற்று முதிர்ந்த யாக்கை பெற்றுள்ளீர். பயனில்லாத வாழ்வு வாழ்ந்து மூப்பினை அடைந்துள்ளீர்.

எந்த உயர் நோக்கமும் இல்லாமல் வாழ்கிறீர்கள். இறுதிக் காலத்தில் அதற்காக வருந்துவீர்கள்; கூற்றுவன் வந்து உம்மை அழைத்துச் செல்ல வருவான். அவன் உங்களைப் பிணித்து இழுத்துச் செல்லும்போது வருந்துவீர். எந்த நன்மையும் யாம் செய்யாமல் இருந்து வீணே கழித்து விட்டோமே என்று வருந்துவீர்.

இனி மூப்பு அதனால் எந்த நன்மையும் செய்ய இயலாது என்று நீங்கள் பேசித் தப்பித்துக் கொள்ள நினைக்கலாம்.

உங்களால் எந்தவித நன்மையும் பிறர்க்குச் செய்ய இயலவில்லை என்றாலும் மற்றவர்களுக்குத் தீமை இழைக்காதீர் அதுவே போதுமானது. நல்ல நெறியும் ஆகும்.

பல் சான்றீரே! பல் சான்றீரே!
கயல் முள் அன்ன நரை முதிர் திரை கவுள்,
பயன் இல் மூப்பின், பல் சான்றீரே!
கணிச்சிக் கூர்ம் படைக் கடுந் திறல் ஒருவன்
பிணிக்குங்காலை, இரங்குவிர் மாதோ;
நல்லது செய்தல் ஆற்றீர்ஆயினும்,
அல்லது செய்தல் ஓம்புமின்; அதுதான்
எல்லாரும் உவப்பது; அன்றியும்,
நல் ஆற்றுப் படூஉம் நெறியும்மார் அதுவே.

திணை - அது; துறை - பொருண் மொழிக் காஞ்சி.
நரிவெரூஉத்தலையார் பாடியது.

## 196. பாண்டியன் இலவந்திகைத் துஞ்சிய நன்மாறன்

உண்டு இல்லை என்பதைத் தெளிவாகக் கூறிவிடு. அதுதான் உனக்கும் நல்லது; எங்களுக்கும் நல்லது.

இரண்டும் கெட்ட நிலையில் நீ எதுவும் கூறாமல் மழுப்புகிறாய்.

என் வீடு மிக்க வறுமையில் சூழ்ந்துள்ளது. வெறும் காற்றுத் தடுப்பாக உள்ளது; அவ்வளவுதான். என் காதல் மனைவி நாணமும் பேணிய கற்பும் துணையாக எனக்காகக் காத்து இருக்கிறாள். அவளுக்கு யான் பொருள் கொண்டு செல்ல வேண்டும்.

வெய்யில் என்று ஒதுங்க முடியாது. பனி என்று பதுங்க முடியாது. எங்காவது யாரையாவது கண்டு பொருள் பெற்றுத் தான் செல்ல வேண்டும்.

கல் நெஞ்சன் நீ ஈயாது இருத்தல் எங்களையும் வாட்டுக்கிறது; உன்னையும் தாழ்த்துகிறது. நீயும் உன் மக்களும் நன்றாக வாழுங்கள்; அது போதும். மற்றவர்களைப் பற்றி நீ எந்தக் கவலையும் கொள்ளத் தேவை இல்லை.

யான் என் பிழைப்பைத் தேடிச் செல்கிறேன். வறுமை தீரச் சுற்றி அலைவேன்; சென்று வருகிறேன்; நீ வாழ்க.

ஒல்லுவது ஒல்லும் என்றலும், யாவர்க்கும்
ஒல்லாது இல் என மறுத்தலும், இரண்டும்,
ஆள்வினை மருங்கின் கேண்மைப் பாலே;
ஒல்லாது ஒல்லும் என்றலும், ஒல்லுவது
இல் என மறுத்தலும், இரண்டும், வல்லே
இரப்போர் வாட்டல் அன்றியும், புரப்போர்
புகழ் குறைபடூஉம் வாயில்அத்தை;
அனைத்து ஆகியர், இனி; இதுவே எனைத்தும்
சேய்த்துக் காணாது கண்டனம்; அதனால்,
நோய் இலராக நின் புதல்வர்; யானும்,
வெயில் என முனியேன், பனி என மடியேன்,
கல் குயின்றன்ன என் நல்கூர் வளி மறை,
நாண் அலது இல்லாக் கற்பின் வாள் நுதல்
மெல் இயல் குறு மகள் உள்ளிச்
செல்வல்அத்தை; சிறக்க, நின் நாளே!

திணை - பாடாண் திணை; துறை - பரிசில் கடா நிலை.

பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன் பரிசில் நீட்டித்தானை ஆவூர் மூலங் கிழார் பாடியது.

# 197. சோழன் குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவன்

காற்றினும் வேகமாகச் செல்லும் குதிரைகள் பூட்டிய தேரினர் என்றோ, யானைகள் மிக்குள்ள படை வீரர்களைக் கொண்டவர் என்றோ, வெற்றிகள் கொண்டு முரசு கொட்டுபவர் என்றோ அரசர்களின் வலிமையையும், ஆற்றலையும், வெற்றிகளையும் யாம் புகழ்ந்து பேசுவது இல்லை.

மிகப் பெருந்துன்பம் வந்து எங்களை வாட்டினாலும் எம்பால் பரிவு காட்டத் தக்க நல்லுணர்வு இல்லாதவருடைய செல்வத்தை நினைக்கவும் மாட்டோம். நல்ல அறிவு உடையோம்.

முள்வேலி இட்ட தோட்டத்துள் ஆடுகள் மேய்ந்து தின்று விட்டு எஞ்சியுள்ள முஞ்ஞைக் கீரைக் களியோடு வரகுசோறு தந்து எங்களை உபசரிக்கும் சிறிய ஊர்க்கு மன்னன் ஆயினும் எம்மிடத்து எம்பெருமையை மதித்து நடப்பவரையே யாம் மதிப்போம்; அவர்கள் இல்லம் மிதிப்போம்.

எளியவர் ஆயினும் அவர்கள் நல்குரவினை மதிப்போம்; அவர்கள் வறுமையில் செம்மை உடையவர் என்பதால் அவர்களை நினைப்போம்.

வளி நடந்தன்ன வாச் செலல் இவுளியொடு
கொடி நுடங்கு மிசைய தேரினர் எனாஅக்,
கடல் கண்டன்ன ஒண் படைத் தானையொடு
மலை மாறு மலைக்கும் களிற்றினர் எனாஅ,
உரும் உரற்றன்ன உட்குவரு முரசமொடு
செரு மேம்படூஉம் வென்றியர் எனாஅ,
மண் கெழு தானை, ஒண் பூண், வேந்தர்
வெண் குடைச் செல்வம் வியத்தலோ இலமே;
எம்மால் வியக்கப்படூஉமோரே
இடு முள் படப்பை மறி மேய்ந்து ஒழிந்த
குறு நறு முஞ்ஞைக் கொழுங் கண் குற்றடகு,
புன் புல வரகின் சொன்றியொடு, பெறூஉம்,
சீறூர் மன்னர்ஆயினும், எம் வயின்
பாடு அறிந்து ஒழுகும் பண்பினாரே;

மிகப் பேர் எவ்வம் உறினும், எனைத்தும்
உணர்ச்சி இல்லோர் உடைமை உள்ளேம்;
நல் அறிவு உடையோர் நல்குரவு
உள்ளுதும், பெரும! யாம், உவந்து, நனி பெரிதே.

திணையும் துறையும் அவை.

சோழன் குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவன் பரிசில் நீட்டித்தானைக் கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக் குமரனார் பாடியது.

## 198. பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன்

*நீயும் நின் மனைவி மக்களும் வாழ்க என்று கனவிலும் உன்னையே வாழ்த்திக் கொண்டிருக்கிறேன். ஆலிலைமேல் பள்ளி கொள்ளும் திருமாலைப் போல நீ செல்வம் பெற்று வாழ்கிறாய் அதனைக் கண்டு மகிழ்கிறேன்.*

*நின் மக்களும் நின்னைப் போல் பல நாடுகளையும் வென்று உயர்வாராக. அந்நாடுகளில் உள்ள செல்வத்தைக் கொண்டு வந்து சேர்ப்பித்துப் பெருஞ் செல்வர் ஆவார் ஆகுக. அவர்களும் ஈகைத் தன்மையில் தம் முன்னோர்களைப் போல விளங்குவாராக.*

*நீயும் மிக்க செல்வத்தோடு வாழ்ந்து புகழ் இனிது விளங்க நீடுக வாழ்க! உன் மைந்தர்களோடும் பெயரர்களோடும் கடல் நீரைவிடவும் நீண்ட நாள் வாழ்வாயாக.*

*இவர் பெறும் புதல்வர்கள் உன் பெயரர்கள்; அவர்களைக் காணுந்தோறும் நீ பெருமகிழ்வு அடைவாயாக ! நீயும் மிக்க செல்வத்தோடு வாழ்ந்து புகழ் இனிது விளங்க நீடு வாழ்க!*

*யானும் முன்பின் அறியாத தேயங்களுக்குச் சென்று வாழ்வேன். அங்கு இருந்தபோதும் உன் அடியுறை வாழ்வை நினைத்து வானத்தின் மழைத் துளியை எதிர்நோக்கும் வானம்பாடி என்னும் பறவைபோல் வாழ்ந்து வருவேன். நீ என்னை மறவாமல் இருந்தால் அதுவே போதுமானது.*

'அருவி தாழ்ந்த பெரு வரை போல
ஆரமொடு பொலிந்த மார்பில் தண்டாக்,

கடவுள் சான்ற கற்பின், சேயிழை
மடவோள் பயந்த மணி மருள் அவ் வாய்க்
கிண்கிணிப் புதல்வர் பொலிக!' என்று ஏத்தித்,
திண் தேர் அண்ணல் நிற் பாராட்டிக்,
காதல் பெருமையின் கனவினும் அரற்றும் என்
காமர் நெஞ்சம் ஏமாந்து உவப்ப,
ஆல் அமர் கடவுள் அன்ன நின் செல்வம்,
வேல் கெழு குருசில்! கண்டேன்; ஆதலின்,
விடுத்தனென்; வாழ்க, நின் கண்ணி! தொடுத்த
தண் தமிழ் வரைப்பகம் கொண்டியாகப்,
பணித்துக் கூட்டு உண்ணும் தணிப்பு அருங் கடுந் திறல்
நின் ஓரன்ன நின் புதல்வர், என்றும்,
ஒன்னார் வாட அருங் கலம் தந்து, நும்
பொன்னுடை நெடு நகர் நிறைய வைத்த நின்
முன்னோர் போல்க, இவர் பெருங் கண்ணோட்டம்!
யாண்டும் நாளும் பெருகி, ஈண்டு திரைப்
பெருங் கடல் நீரினும், அக் கடல் மணலினும்,
நீண்டு உயர் வானத்து உறையினும், நன்றும்,
இவர் பெறும் புதல்வர்க் காண்தொறும், நீயும்,
புகன்ற செல்வமொடு புகழ் இனிது விளங்கி,
நீடு வாழிய! நெடுந்தகை! யானும்
கேள் இல் சேஎய் நாட்டின், எந்நாளும்,
துளி நசைப் புள்ளின் நின் அளி நசைக்கு இரங்கி, நின்
அடி நிழல் பழகிய அடியுறை;
கடுமான் மாற! மறவாதீமே.

திணையும் துறையும் அவை.

பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறனை வடம வண்ணக்கன் பேரி சாத்தனார் பாடியது.

## 199. பெரும் பதுமனார்

*கடவுள் பிரதிட்டை வைத்து வழிபடும் ஆலமரத்தை நாடி அதன் பழங்களைத் தின்னப் பறவைகள் வந்து மொய்க்கின்றன. நேற்று உண்டனம் என்று இன்று வாராமல் இருப்பது இல்லை.*

அதுபோல் பரிசில் பெற விழைபவரும் தொடர்ந்து வந்து கொண்டே இருப்பர்.

அவரை வரவேற்றுக் கொடை நல்குவோர்தம் உடைமைகள் அனைத்தும் இவ் இரவலர்தம் உடைமைகள் ஆகும். அவ்வாறே அவர் செல்வம் இன்மை இவரையும் இன்மையர் ஆக்கிவிடும். செல்வமும் வறுமையும் இரவலர்களைப் பாதிப்பன ஆகும்.

கடவுள் ஆலத்துத் தடவுச் சினைப் பல் பழம்
நெருநல் உண்டனம் என்னாது, பின்னும்
செலவு ஆனாவே, கலிகொள் புள்ளினம்;
அனையர் வாழியோ இரவலர்; அவரைப்
புரவு எதிர்கொள்ளும் பெருஞ் செய் ஆடவர்
உடைமை ஆகும், அவர் உடைமை;
அவர் இன்மை ஆகும் அவர் இன்மையே.

திணையும் துறையும்

பெரும்பதுமனார் பாட்டு.

## 200. விச்சிக்கோ

பனி படரும் மலை உச்சியில் உள்ள பலா மரத்தின் கனியைக் கவர்ந்து உண்ட கருவிரலையுடைய ஆண் குரங்கு தன் பெண் குரங்குக்கு அதனைத் தந்து அதனை அழைத்துக் கொண்டு அம்மலையின் உச்சியில் மூங்கில் மீது உறங்குகின்ற மலை நாட்டை உடையவன் நீ! களம் பல சென்று வெற்றி கொண்ட வேந்தன் நீ! விச்சிக் கோவே!

பூத்துப் பொலிவுடன் விளங்கும் முல்லைக் கொடி நாத்தழும்பு ஏறப் பாடாது எனினும் அது கொழு கொம்பு இன்றித் தவிக்கிறது என்று கருதித் தான் ஏறிச் சென்ற தேரினைக் கொள்க என்று கொடுத்த வள்ளல் பாரி அவன் செல்வ மகளிர் இவர்.

யானே பரிசில் பெற்று வாழும் புலவன்; மற்றும் அந்தணன் யான். நீயோ வாட் போரில் வல்ல அரச மரபினன். நினக்கு யான் தர அவர்களை நீ மணந்து ஏற்றுக் கொள்க.

பகைவரைக் களத்தில் வெற்றி காணும் வேந்தன் நீ; இவர்களை ஏற்றுக் கொள்வாயாக.

பனி வரை நிவந்த பாசிலைப் பலவின்
கனி கவர்ந்து உண்ட கரு விரற் கடுவன்
செம் முக மந்தியொடு சிறந்து, சேண் விளங்கி,
மழை மிசை அறியா மால் வரை அடுக்கத்துக்,
கழை மிசைத் துஞ்சும் கல்லக வெற்ப!
நிணம் தின்று செருக்கிய நெருப்புத் தலை நெடு வேல்,
களம் கொண்டு கனலும் கடுங்கண் யானை,
விளங்கு மணிக் கொடும் பூண், விச்சிக்கோவே!
இவரே, பூத் தலை அறாஅப் புனை கொடி முல்லை
நாத் தழும்பு இருப்பப் பாடாதுஆயினும்,
'கறங்கு மணி நெடுந் தேர் கொள்க!' எனக் கொடுத்த
பரந்து ஓங்கு சிறப்பின் பாரி மகளிர்;
யானே, பரிசிலன், மன்னும் அந்தணன்; நீயே,
வரிசையில் வணக்கும் வாள் மேம்படுநன்;
நினக்கு யான் கொடுப்பக் கொண்மதி-சினப் போர்
அடங்கா மன்னரை அடக்கும்
மடங்கா விளையுள் நாடு கிழவோயே!

திணை - அது; துறை - பரிசில் துறை.

பாரி மகளிரை விச்சிக் கோனுழைக் கொண்டு சென்ற கபிலர் பாடியது.

## 201. இருங்கோ வேள்

*இவர் யார் என்று வினவுவாய் ஆயின் இவர்கள் தன் ஊர்களை இரவலர்க்கு அளித்தும், தன் தேரினை முல்லைக் கொடிக்கு ஈந்தும் புகழ் ஈட்டியவனும் பறம்பு மலைத் தலைவனும் ஆகிய பாரி மகளிர் ஆவர்.*

*யானே இவர் தந்தைக்குத் தோழன்; இவர் என் பாதுகாப்பில் உள்ளனர். அதனால் என் மகளிர் ஆகின்றனர்; அந்தணன் புலவன் யான் அழைத்துக் கொண்டு வந்துள்ளேன்.*

*நீயே வடக்கே ஒரு முனிவன் வளர்த்த ஓம குண்டலத்தில் தோன்றிய உயர் பிறப்பாளன். செம்பினால் இயன்ற மதிலை உடைய துவரை நகரை நாற்பத்து ஒன்பது தலைமுறையாக ஆண்டு வரும் வேளிருள் ஒருவன்; வேளிர் குலத் தலைவன் ஆவாய்.*

*பாணர்களுக்குக் கொடை தந்து சிறப்புச் செய்யும் கொடையாளன்; புலிகடிமால்; யான் இவர்களை மணத்தில் தர நீ இவர்களை ஏற்றுக் கொள்வாயாக! மலை நாட்டுக்குத் தலைவன் நீ! படைகள் மிக்கு உடைய அரசன் ஆவாய்.*

'இவர் யார்?' என்குவைஆயின், இவரே,
ஊருடன் இரவலர்க்கு அருளித், தேருடன்
முல்லைக்கு ஈத்த செல்லா நல் இசைப்,
படு மணி யானைப், பறம்பின் கோமான்
நெடு மாப் பாரி மகளிர்; யானே
தந்தை தோழன்; இவர் என் மகளிர்;
அந்தணன், புலவன், கொண்டு வந்தனனே.
நீயே, வடபால் முனிவன் தடவினுள் தோன்றிச்,
செம்பு புனைந்து இயற்றிய சேண் நெடும் புரிசை,
உவரா ஈகைத், துவரை ஆண்டு,
நாற்பத்தொன்பது வழிமுறை வந்த
வேளிருள் வேளே! விறற் போர் அண்ணல்!
தார் அணி யானைச் சேட்டு இருங் கோவே!
ஆண் கடன் உடைமையின், பாண் கடன் ஆற்றிய
ஒலியற் கண்ணிப் புலிகடிமாஅல்!
யான் தர, இவரைக் கொண்மதி!-வான் கவித்து
இருங் கடல் உடுத்த இவ் வையகத்து, அருந் திறல்
பொன் படு மால் வரைக் கிழவ! வென் வேல்
உடலுநர் உட்கும் தானைக்,
கெடல் அருங்குரைய நாடு கிழவோயே!

திணையும் துறையும் அவை.

பாரி மகளிரை இருங்கோவேளுழைக் கொண்டு சென்ற கபிலர் பாடியது.

## 202. இருங்கோ வேள்

*புலிகடிமால்! உன் நாட்டில் உள்ள வளம்மிக்க ஊர்கள் அழிவுபட்டன; அது ஏன் தெரியுமா? சிற்றரையம், பேர் அரையம் எனும் அவ்வூர்கள் பொன்னும் மணியும் கொழித்து வேண்டிய செல்வம் உமக்கு அளித்து வந்தன. அவை கேடுற்று அழிந்து விட்டன. அதற்குக் காரணம் உன்னைப் போல் உம்மவருள்*

அறிவற்ற ஒருவன் கழாஅத்தலையார் என்னும் புலவரை இகழ்ந்தமையே!

யானும் எவ்வி குடியில் பிறந்த பாரி மகளிரைப் பற்றி உன்னிடம் பேசினேன்; அது தவறு; பொறுத்துக் கொள்.

வேங்கைப் பூ போர்த்தலால் உன் மலை நாட்டில் பாறைக் கற்கள் வரிகளையுடைய புலிபோலத் தோற்றம் அளிக்கின்றன. அத்தகைய நாட்டுக்கு உரிய தலைவன் நீ! யானும் உன் புறத்தோற்றம் கண்டு மயங்கி விட்டேன்.

புலவரை இகழ்ந்தவர் என்றும் சிறப்புற வாழ்ந்தது இல்லை. இதைமட்டும் கூறிவிட்டு யான் செல்கின்றேன். நீ நன்கு வாழ்வாயாக.

வெட்சிக் கானத்து வேட்டுவர் ஆட்டக்,
கட்சி காணாக் கடமா நல் ஏறு
கடறு மணி கிளரச், சிதறு பொன் மிளிரக்,
கடிய கதழும் நெடு வரைப் படப்பை
வென்றி நிலைஇய விழுப் புகழ் ஒன்றி,
இரு பால் பெயரிய உரு கெழு மூதூர்க்,
கோடி பல அடுக்கிய பொருள் நுமக்கு உதவிய
நீடு நிலை அரையத்துக் கேடும் கேள், இனி:
நுந்தை தாயம் நிறைவுற எய்திய
ஒலியற் கண்ணிப் புலிகடிமாஅல்!
நும் போல் அறிவின் நுமருள் ஒருவன்
புகழ்ந்த செய்யுட் கழாஅத்தலையை
இகழ்ந்ததன் பயனே; இயல் தேர் அண்ணல்!
எவ்வி தொல் குடிப் படீஇயர், மற்று, 'இவர்
கை வண் பாரி மகளிர்' என்ற என்
தேற்றாப் புன்சொல் நோற்றிசின்; பெரும!
விடுத்தனென்; வெலீஇயர், நின் வேலே! அடுக்கத்து,
அரும்பு அற மலர்ந்த கருங் கால் வேங்கை
மாத் தகட்டு ஒள் வீ தாய துறுகல்
இரும் புலி வரிப் புறம் கடுக்கும்
பெருங் கல் வைப்பின் நாடு கிழவோயே!

திணையும் துறையும் அவை.

இருங்கோவேள் பாரிமகளிரைக் கொள்ளானாகக் கபிலர் பாடியது.

# 203. சோழன் பாமுளூர் எறிந்த நெய்தலங் கானல் இளஞ்சேட்சென்னி

ஏற்கெனவே பெய்துவிட்டதால் மழை திரும்பப் பெய்யாமல் இருப்பது இல்லை; அது பெய்ய மறுப்பதும் இல்லை. அதே போல் விளைவு தந்து விட்டேன்; மறுபடியும் விளைவு தரமாட்டேன் என்று நிலம் மறுப்பதும் இல்லை.

மழையும் நிலமும் ஏற்கெனவே தந்து விட்டதாகக் கூறி மறுத்து விட்டால் உயிர் வாழ்க்கையே இருக்காது. மக்கள் உயிர் வாழ முடியாது.

புலவர்கள் வாழ்க்கையும் அத்தகையதே. ஏற்கெனவே தந்து விட்டேன் என்று மறுத்துக் கூறி விட்டால் அவர்கள் வாழ்க்கை பட்டுப்போகும். வாடி வருந்துவர்.

ஏற்பவருக்கு வறுமை என்றால் அதனால் விளையும் கொடுமை மிகவும் சிறியது. அதைவிட மறுப்பவருக்கும் ஓர் இழப்பு உண்டு. புலவர்கள் யாரும் அவர்களை விரும்ப மாட்டார்கள். அவர்களை நினைக்கவும் மாட்டார்கள். அந்த இழப்பு மிகப் பெரிது. இதனை நீ கருத்தில் கொள்க!

பகைவர் நாட்டின் மீது படை எடுக்கும் முன்பே அவர் நாட்டை உன் உடைமை ஆக்க முடியும் என்ற உறுதி உன்பால் உள்ளது. புலவர்களை மதித்து அவர்களுக்கு நல்குவதைச் சிறந்த கடமையாகக் கொள்க.

'கழிந்தது பொழிந்து' என வான் கண்மாறினும்,
'தொல்லது விளைந்து' என நிலம் வளம் கரப்பினும்,
எல்லா உயிர்க்கும் இல்லால், வாழ்க்கை;
'இன்னும் தம்' என எம்மனோர் இரப்பின்,
'முன்னும் கொண்டிர்' என, நும்மனோர் மறுத்தல்
இன்னாது அம்ம; இயல் தேர் அண்ணல்!
இல்லது நிரப்பல் ஆற்றாதோரினும்,
உள்ளி வருநர் நசை இழப்போரே;
அனையையும் அல்லை, நீயே; ஒன்னார்
ஆர் எயில் அவர்கட்டாகவும், 'நுமது' எனப்

பாண் கடன் இறுக்கும் வள்ளியோய்!
பூண் கடன், எந்தை! நீ இரவலர்ப் புரவே.

திணையும் துறையும் அவை.

சேரமான் பாமுளூர் எறிந்த நெய்தலங்கானல் இளஞ் சேட்சென்னியை ஊன்பொதி பசுங்குடையார் பாடியது.

## 204. வல்வில் ஓரி

தருக என்று கை நீட்டுவது ஒருவனுக்கு இழிவு தருவதாகும். கேட்ட பிறகு கொடுக்காமல் இருப்பது அதைவிடத் தாழ்மையானது.

வேறு வகையாகச் சொன்னால் கொள் எனக் கொடுப்பது உயர்வானது; கொடுத்தாலும் அதை ஏற்க மறுப்பது அதைவிட உயர்வானது.

உப்புக் கரிக்கும் கடல் நீர் அளவில் மிக்கது. அதனை நாடி ஒருவரும் நீர் வேட்கைக்குச் செல்வது இல்லை.

பசுவும் மற்றைய விலங்குகளும் சென்று சேறாக்கிவிடும் சிறு நீர்த் தேக்கம் என்றாலும் அதை நோக்கிப் பலரும் செல்வர்; குடிநீர் அதற்கு வழிகள் பல தானாக அமைந்து விடுகின்றன.

வள்ளியோரை நாடி உள்ளி அவர் தருவார் என்று கருதிச் செல்கின்றனர். அது தேய்ந்த பாதை. தப்பித் தவறி அங்கு எதிர்பார்த்த பரிசில் கிடைக்கவில்லை என்றாலும் அப்பரிசில் தரும் மேன் மக்களைக் குறைவு படப் பேசமாட்டார்கள்.

வழங்குபவரைக் குறை கூறுவது இல்லை. தம் சகுனம் சரி இல்லை என்று தம்மைத் தாமே தேற்றிக் கொள்வர். தாம் சென்ற நேரம் சரி அல்ல என்றுதான் பேசுவார்கள்.

மாரி போல வாரி வழங்கும் இயல்பு உன்பால் உள்ளது; அதனால் எப்பொழுதும் உன்னை வெறுப்பது என்பது இல்லை.

'ஈ' என இரத்தல் இழிந்தன்று; அதன் எதிர்,
'ஈயேன்' என்றல் அதனினும் இழிந்தன்று;
'கொள்' எனக் கொடுத்தல் உயர்ந்தன்று; அதன் எதிர்,
'கொள்ளேன்' என்றல் அதனினும் உயர்ந்தன்று;

தெண் நீர்ப் பரப்பின் இமிழ் திரைப் பெருங் கடல்
உண்ணார் ஆகுப, நீர் வேட்டோரே;
ஆவும் மாவும் சென்று உணக் கலங்கிச்,
சேற்றொடு பட்ட சிறுமைத்துஆயினும்,
உண்நீர் மருங்கின் அதர் பல ஆகும்;
புள்ளும் பொழுதும் பழித்தல் அல்லதை,
உள்ளிச் சென்றோர்ப் பழியலர்; அதனால்,
புலவேன்- வாழியர், ஓரி! விசும்பில்
கருவி வானம் போல
வரையாது சுரக்கும் வள்ளியோய்! நின்னே.

திணையும் துறையும் அவை.

வல்வில் ஓரியைக் கழைதின்யானையார் பாடியது.

## 205. கடிய நெடு வேட்டுவன்

*செல்வம் மிக்குப் படைத்த மூவேந்தர் என்றாலும் அவர்கள் விருப்பு இன்றித் தருவாரேயானால் அதனை யாம் வேண்டேம்; ஏற்கவும் மாட்டோம்.*

*செறுவரைச் சிதைக்கும் சேனையை உடையவன் நீ! முல்லைச் செடிகளை வேலியாக உடைய கோடை என்னும் சிற்றூருக்குத் தலைவன் நீ; வேகமாகப் பாய்ந்து செல்லும் நாய் கொண்டு மான் கணங்களை வேட்டையாடும் தலைவன் நீ; நோய் இன்றி வாழ்வாயாக!*

*என்றாலும் உன்னை யாம் நேசிக்கிறோம். துணிந்து யாசிக்கிறோம்; எங்கள்பால் நீ பரிவு காட்டுகிறாய்; விருப்புடன் தரும் உள்ளம் படைத்தவன்; அதனால் உன்னை யாம் வலியச் சூழ்ந்து பரிசில் பெற்றுக் கொள்வோம். நீ தரும் வரை உன்னை விடாமல் வளைத்துக் கொள்வோம்.*

*கடலை நோக்கி இடியுடன் செல்லும் மேகங்கள நீர் இன்றித் திரும்புவது இல்லை. அதுபோல உன்னிடம் யாம் வந்தால் வறிதே திரும்புவது இல்லை. நீ நோயில்லாமல் வாழ்க!*

முற்றிய திருவின் மூவர் ஆயினும்,
பெட்பின்று ஈதல் யாம் வேண்டலமே;

விறற் சினம் தணிந்த விரை பரிப் புரவி
உறுவர் செல் சார்வு ஆகிச், செறுவர்
தாள் உளம் தபுத்த வாள் மிகு தானை,
வெள் வீ வேலிக் கோடைப் பொருந!
சிறியவும் பெரியவும் புழை கெட விலங்கிய
மான் கணம் தொலைச்சிய கடு விசைக் கத நாய்,
நோன் சிலை, வேட்டுவ! நோய் இலையாகுக!
ஆர் கலி யாணர்த் தரீஇய, கால் வீழ்த்துக்
கடல்வயின் குழீஇய அண்ணல்அம் கொண்மூ
நீர் இன்று பெயராவாங்குத், தேரொடு
ஒளிறு மருப்பு ஏந்திய செம்மற்
களிறு இன்று பெயரல, பரிசிலர் கடும்பே,

திணையும் துறையும் அவை.

கடிய நெடுவேட்டுவன் பரிசில் நீட்டித்தானைப் பெருந்தலைச் சாத்தனார் பாடியது.

## 206. அதியமான் நெடுமான் அஞ்சி

*வள்ளல்களை அணுகி அவர் செவிகளில் எம் கருத்துக்களைத் தெளிவாக எடுத்துக் கூறிப் பரிசுக்காகக் காத்து நிற்பது எம் தொழில். இச் செய்தியை வாயில் காப்பவனே உன் தலைவன் அதியமான் அஞ்சிக்கு எடுத்து உரைப்பாயாக.*

*பரிசிலர்க்கு எந்நாளும் அதியன் வாயில் அடைத்தது இல்லை. அத்தகைய சிறப்புடைய அரசுக்கு வாயிலோன் நீ.*

*அவன் தன்னையே மறந்த நிலையில் அசதியாக உள்ளானோ யாம் வந்தது குறித்து ஆராயாமல் இருக்கிறானோ தெரியவில்லை; அதியனை நம்பித்தான் இவ்வுலகில் அகதிகள் வாழ்கின்றார்கள் என்ற நினைப்புப் போலும்.*

*இவ்வுலகில் அறிவும் புகழும் உடையோர் மாய்ந்து விடவில்லை. இந்த உலகம் வெற்றிடமாகி விடவில்லை. எங்களை அறிந்து பரிசில் தரப் பலபேர் உள்ளனர். யாம் எம் இசைக் கருவிகளைச் சுருக்கிட்டுப் பையில் இட்டு எடுத்துக் கொண்டோம்.*

*மரம் வெட்டும் தச்சுத் தொழில் தெரிந்தவன்; அக்குடும்பத் தில் பிறந்து வளர்ந்தவன்; கையில் கோடரி உள்ளது. அவன் எந்தக்*

காட்டுக்கும் சென்று வெட்டிப் பிழைக்கலாம். அதுபோல எங்களிடம் இசைக் கலை உள்ளது. அது எங்களோடு ஒன்றியது. எத்திசைச் சென்றாலும் எங்களுக்குச் சோறு உள்ளது. எங்களுக்குப் பிழைக்கத் தெரியும்.

வாயிலோயே! வாயிலோயே!
வள்ளியோர் செவிமுதல் வயங்குமொழி வித்தித், தாம்
உள்ளியது முடிக்கும் உரனுடை உள்ளத்து
வரிசைக்கு வருந்தும் இப் பரிசில் வாழ்க்கைப்
பரிசிலர்க்கு அடையா வாயிலோயே!
கடுமான் தோன்றல் நெடுமான் அஞ்சி
தன் அறியலன்கொல்? என் அறியலன்கொல்?
அறிவும் புகழும் உடையோர் மாய்ந்தென,
வறுந் தலை உலகமும் அன்றே; அதனால்,
காவினெம் கலனே; சுருக்கினெம் கலப்பை;
மரம் கொல் தச்சன் கை வல் சிறாஅர்
மழுவுடைக் காட்டகத்து அற்றே-
எத் திசைச் செலினும், அத் திசைச் சோறே.

திணையும் துறையும் அவை.

அதியமான் நெடுமான் அஞ்சி பரிசில் நீட்டித்தானை ஔவையார் பாடியது.

## 207. இளவெளிமான்

இனி இங்கே காத்திருந்து பயனில்லை; பார்த்தும் பார்க்காதது போல நடந்து கொள்ளும் வன் நெஞ்சர்; அவர்களை நச்சிக் காத்திருப்பவர் வெளியே சென்று பிழைக்க அறியாதவர்.

இந்த உலகம் மிகப் பெரிது; கொடுத்து உதவும் உபகாரிகள் எங்கும் பரந்து உள்ளனர்.

மறம் மிக்க ஆளிகள் அவற்றைப் போல் செம்மாந்து நடப்போம். பரந்த உலகம் இது; திறந்த வெளி; சிறந்த பரிசுகள் காத்துக் கிடக்கின்றன; உள்ளம் இல்லாத இவர்களை எதிர் பார்த்து யார் காத்திருக்க முடியும்? உளைச்சல்தான் மிச்சம். உள்ளூரக் கனிந்து வெம்பி அழுகிப் போகும் பழங்களைப் போன்றவர்கள் இவர்கள்; யாருக்கும் பயன்படமாட்டார்கள்.

எழு இனி, நெஞ்சம்! செல்கம்; யாரோ,
பருகு அன்ன வேட்கை இல்வழி,
அருகில் கண்டும் அறியார் போல,
அகம் நக வாரா முகன் அழி பரிசில்
தாள் இலாளர் வேளார் அல்லர்?
'வருக' என வேண்டும் வரிசையோர்க்கே
பெரிதே உலகம்; பேணுநர் பலரே;
மீளி முன்பின் ஆளி போல,
உள்ளம் உள் அவிழ்ந்து அடங்காது, வெள்ளென
நோவாதோன்வயின் திரங்கி,
வாயா வன் கனிக்கு உலமருவோரே.

திணையும் துறையும் அவை.

வெளிமான் துஞ்சிய பின், அவன் தம்பி இள வெளிமானைப், 'பரிசில் கொடு' என, அவன் சிறிது கொடுப்பக் கொள்ளாது, பெருஞ்சித்திரனார் பாடியது.

## 208. அதியமான் நெடுமான் அஞ்சி

*குன்றுகளையும் மலைகளையும் கடந்து பரிசில் பெற இங்கு வந்துள்ளேன். என்னைக் காணாமல் எனக்குப் பரிசு தந்து அனுப்பு கிறான். 'வந்தவர் யார்? அவர் தரம் யாது' என்பவற்றை ஆராயாமல் தரும் பரிசு இது; அது மட்டுமல்ல. நேரில் பார்த்து மதித்துத் தராதது இது.*

*காணாமல் தந்து அனுப்ப அதைப் பெற்றுக் கொள்ள யான் ஒன்றும் வாணிகப் பரிசிலன் அல்லன்; காசுக்காக அலைபவன் அல்லன்; பொருள் எனது நோக்கம் அன்று.*

*புலவர் தம் மதிப்பு அறிந்து தருவாராயின் தினையளவு தந்தாலும் அது மதிக்கத் தக்கது.*

'குன்றும் மலையும் பல பின் ஒழிய,
வந்தனென், பரிசில் கொண்டனென் செலற்கு' என
நின்ற என் நயந்து அருளி, 'ஈது கொண்டு,
ஈங்கனம் செல்க, தான்' என, என்னை
யாங்கு அறிந்தனனோ, தாங்கு அருங் காவலன்?
காணாது ஈத்த இப் பொருட்கு யான் ஓர்

வாணிகப் பரிசிலன் அல்லென்; பேணித்,
தினை அனைத்துஆயினும், இனிது - அவர்
துணை அளவு அறிந்து, நல்கினர் விடினே.

திணையும் துறையும் அவை.

அதியமான் நெடுமான் அஞ்சியுழைச் சென்ற பெருஞ்சித்திரனாரைக் காணாது, 'இது கொண்டு செல்க!' என்று அவன் பரிசில் கொடுப்பக் கொள்ளாது, அவர் சொல்லியது.

## 209. மூவன்

பொய்கையில் மேய்ந்த நாரை நெற்போரில் சென்று உறங்கும். நெய்தல் பூத்த கழனியில் நெற்கதிர் அறுக்கும் உழவர் அகன்ற ஆம்பல் இலையில் மதுவைத் தேக்கிப் பருகிப் பின் கடல் அலைகளின் ஓசையை இசையாகக் கேட்டு மயங்குவர். அத்தகைய நன்செய் நிலத்தையுடைய நாட்டுத் தலைவனே!

கனிகள் பல உண்ண விரும்பிக் ககனத்தில் பறந்து காடுமலைகளைக் கடக்கும் பறவைகள் பழம் தரும் பெரிய மரங்கள் தீர்ந்து விட்டதால் வறிதே திரும்புகின்றன.

அப்பறவைகளைப் போலப் பரிசில் பெற விரும்பி நின் இசை நுவல வந்தேன். பரிசில் பெறாமல் திரும்பிச் செல்கிறேன்.

வாள்போரில் மேம்படும் சிறப்புடையவன் நீ! பெருவீரன். நீ பரிசில் தரவில்லையாயினும் உன்பால் எனக்கு யாதும் வருத்தம் இல்லை. நீ நோய் இன்றி வாழ்க.நீ புலவனை மதித்துப் போற்றவில்லை என்பது இந்த அவைக்குத்தான் தெரியும். அழகுமிக்க மகளிர் உன்னைத் தழுவி மகிழக் காத்திருக்கும் இருக்கை இது. இவ் இருக்கையில் உள்ள ஒரு சிலர்க்கு மட்டும் இச் செய்தி தெரிந்தால் அது தவிர்க்க இயலாது. வெளியே தெரிந்தால் அது உனக்கும் பெருமை அன்று. எனக்கும் ஏற்றது அன்று.

பொய்கை நாரை போர்வில் சேக்கும்
நெய்தல் அம் கழனி, நெல் அரி தொழுவர்
கூம்பு விடு மென் பிணி அவிழ்ந்த ஆம்பல்
அகல் அடை அரியல் மாந்தித், தெண் கடல்
படு திரை இன் சீர்ப் பாணி தூங்கும்

மென் புல வைப்பின் நல் நாட்டுப் பொருந!
பல் கனி நசைஇ, அல்கு விசும்பு உகந்து,
பெரு மலை விடரகம் சிலம்ப முன்னிப்,
பழனுடைப் பெரு மரம் தீர்ந்தெனக், கையற்றுப்,
பெறாது பெயரும் புள்ளினம் போல, நின்
நசை தர வந்து, நின் இசை நுவல் பரிசிலென்
வறுவியேன் பெயர்கோ? வாள் மேம்படுந!
ஈயாய்ஆயினும், இரங்குவென் அல்லேன்;
நோய் இலை ஆகுமதி; பெரும! நம்முள்
குறு நணி காண்குவதாக- நாளும்,
நறும் பல் ஒலிவரும் கதுப்பின், தேம் மொழித்,
தெரிஇழை மகளிர் பாணி பார்க்கும்
பெரு வரை அன்ன மார்பின்,
செரு வெஞ் சேஎய்! நின் மகிழ் இருக்கையே!

திணை - அது; - பரிசில் கடா நிலை.

மூவன் பரிசில் நீட்டித்தானைப் பெருந்தலைச் சாத்தனார் பாடியது.

# 210. சேரன் குடக்கோச் சேரல் இரும்பொறை

உலக மக்களைக் காக்கும் வேந்தர்கள் உன்னைப் போல் வன்நெஞ்சர்களாக மாறி விடுகின்றனர். இவ்வாறு மாறிவிட்டால் எங்களைப் போன்ற இரவலர்கள் எவ்வாறு வாழ்வது? நாங்கள் பிறக்கவே கூடாது.

இங்குக் காத்திருப்பதால் என்ன பயன்? என்னையே நினைத்துக் கொண்டு என் வருகைக்காகக் காத்திருக்கிறாள் என் காதல் மனைவி; நான் செத்தேனா, வாழ்கிறேனா என்பதும் அறியாமல் நாளும் நாளும் அழிந்து கொண்டிருக்கிறாள். அவளைச் சென்று பார்த்து அவளுக்கு நான் உயிருடன் இருக்கிறேன் என்பதையாவது தெரிவிக்க வேண்டும்.

நீ அழிக்கும் பகைவர் அரண்களைப் போல என் வாழ்வும் சிதைந்து விட்டது. என் வறுமை என்னோடு உடன் வருகிறது. அதை முன்னே அனுப்பிவிட்டு அதனை யான் பின் தொடர் கிறேன். அவல நெஞ்சோடு யான் செல்கின்றேன்.

மன்பதை காக்கும் நின் புரைமை நோக்காது,
அன்பு கண் மாறிய அறன் இல் காட்சியொடு,
நும்மனோரும் மற்று இனையர்ஆயின்,
எம்மனோர் இவண் பிறவலர் மாதோ;
செயிர் தீர் கொள்கை எம் வெங் காதலி
உயிர் சிறிது உடையள்ஆயின், எம்வயின்
உள்ளாது இருத்தலோ அரிதே; அதனால்,
'அறன் இல் கூற்றம் திறன் இன்று துணியப்
பிறன் ஆயினன்கொல்? இறீஇயர், என் உயிர்!' என
நுவல்வுறு சிறுமையள் பல புலந்து உறையும்
இடுக்கண் மனையோள் திரிய, இந் நிலை
விடுத்தேன்; வாழியர், குருசில்!உதுக் காண்:
அவல நெஞ்சமொடு செல்வல்-நிற் கறுத்தோர்
அருங் கடி முனை அரண் போலப்
பெருங் கையற்ற என்லம்பு முந்துறுத்தே.

திணையும் துறையும் அவை.

சேரமான் குடக்கோச் சேரல் இரும்பொறை பரிசில் நீட்டித்தானைப் பெருங் குன்றூர் கிழார் பாடியது.

# 211 சேரமான் குடக்கோச் சேரல் இரும்பொறை

போர்கள் பல செய்து வெற்றிகள் கண்ட வேந்தன் நீ! உன்பால் கொடைப் பண்பும் உள்ளது என்று நினைத்துப் பரிசில் பெற உன்னை நாடி வந்தேன். வள்ளலாக இருப்பாய்; வாரி வழங்குவாய் என்னும் கற்பனையில் உன்னை வந்து சேர்ந்தேன்.

கொடுத்து அறியாத பிற கொடுமையரின் கீழ்மையையும் எடுத்து உரைத்தேன். அதனால் நீ மனம் மாறுவாய் என்று எதிர்பார்த்தேன்.

முதல்நாள் முகமன் கூறி என்னை வரவேற்றபோது முழுதும் நம்பினேன்; அளிப்பாய் என்று கருதினேன். இனிக்கப் பேசிய நீ சுளிக்க நடந்து கொள்வாய் என்று யான் எதிர்பார்க்கவே இல்லை.

அடுத்து உன்னை அடைந்து தொடுத்த புகழ்மொழியை நாணாது நீ ஏற்றாய். பொய்த்தாய் என்பதை மெய்ப்பித்தாய்.

புகழுக்கு ஏற்றவன் அல்ல நீ என்பதை அறிகிறேன்; வறிதே பெயர்கிறேன்.

என் வீட்டில் வறுமை என் பெருமையை அழிக்கிறது; அரிசி இல்லாமையால் வரிசையாக எலிகள் ஒன்றன் பின் ஒன்று செத்து மடிந்து கொண்டிருக்கின்றன.

பால்இல்லை; பலமுறை சலித்து விட்ட என் புதல்வன் முலை கொள்வதை மறந்தனன்.

அவள் வாடிக் கிடக்கும் புதல்வனொடு மனை வாழ்க்கையைத் தொலைத்துவிட்டு அதைத் தேடிக் கொண்டிருக்கிறாள். அவளை நாடி யான் செல்கிறேன்.

அஞ்சுவரு மரபின் வெஞ் சினப் புயலேறு
அணங்குடை அரவின் அருந் தலை துமிய,
நின்று காண்பன்ன நீள் மலை மிளிரக்,
குன்று தூவ எறியும் அரவம் போல,
முரசு எழுந்து இரங்கும் தானையொடு தலைச்சென்று,
அரைசு படக் கடக்கும் உரைசால் தோன்றல்! நின்
உள்ளி வந்த ஓங்கு நிலைப் பரிசிலென்,
'வள்ளியை ஆதலின் வணங்குவன் இவன்' எனக்,
கொள்ளா மாந்தர் கொடுமை கூற, நின்
உள்ளியது முடித்தோய் மன்ற; முன் நாள்
கை உள்ளது போல் காட்டி, வழி நாள்
பொய்யொடு நின்ற புறநிலை வருத்தம்
நாணாய் ஆயினும், நாணக் கூறி, என்
நுணங்கு செந் நா அணங்க ஏத்திப்,
பாடப் பாடப் பாடுபுகழ் கொண்ட நின்
ஆடு கொள் வியன் மார்பு தொழுதனென் பழிச்சிச்
செல்வல் அத்தை, யானே- வைகலும்,
வல்சி இன்மையின் வயின்வயின் மாறி,
இல் எலி மடிந்த தொல் சுவர் வரைப்பின்,
பாஅல் இன்மையின் பல் பாடு சுவைத்து,
முலைக்கோள் மறந்த புதல்வனொடு,
மனைத் தொலைந்திருந்த என் வாணுதற் படர்ந்தே.

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

# 212. கோப்பெருஞ்சோழன்

*நீ மதித்துப் போற்றும் தலைவன் யார் என்று வினவினால் அவன் யார் என்பதைக் கூறுகிறேன் கேட்பீராக!*

*அவன் நாட்டுக் களமர்கள் வடிகட்டிய கள்ளை ஆமை இறைச்சியோடு சேர்த்து வேட்கை தீரப் பருகுவர். ஆரல்மீனைச் சுட்டு அச்சூட்டோடு தம் கதுப்பில் இட்டு அதுக்குவர். கள் மயக்கத்தில் செய் தொழிலை மறந்து மகிழ்வில் ஆழ்வர். விழாக்கள் மிக்க நாடு அது.*

*அவன் தன்னை நாடி வரும் பாணர்க்கு விருந்து தந்து பசியைப் போக்குபவன்; பாணர் பசிக்குப் பகைவன். அவன் கோழியூரில் வாழ்பவன்; கோழியூர்ச் சோழன் என்று அவனைக் குறிப்பிடுவர். பொத்தியார் என்னும் புலவரோடு நகைத்துப் பேசி நட்புக் கொண்டாடி நலமு டன் வாழ்கிறான். அவனே யான் போற்றும் தலைவன் ஆவான்.*

'நும் கோ யார்?' என வினவின், எம் கோக்
களமர்க்கு அரித்த விளையல் வெங் கள்
யாமைப் புழுக்கின் காமம் வீட ஆரா,
ஆரல் கொழுஞ் சூடு அம் கவுள் அடாஅ,
வைகு தொழில் மடியும் மடியா விழவின்
யாணர் நல் நாட்டுள்ளும், பாணர்
பைதல் சுற்றத்துப் பசிப் பகை ஆகிக்,
கோழியோனே, கோப்பெருஞ்சோழன்-
பொத்து இல் நண்பின் பொத்தியொடு கெழீஇ,
வாய் ஆர் பெரு நகை வைகலும் நக்கே.

திணை - அது; துறை - இயன்மொழி
கோப்பெருஞ்சோழனைப் பிசிராந்தையார் பாடியது.

# 213. கோப் பெருஞ்சோழன்

*உன் மக்கள் இருவரோடு போர் செய்யப் படை கொண்டு போர்க்களம் செல்ல முனைந்துள்ளாய்; உன்னை எதிர்க்கப் போகின்றவர் யார்? சற்றுச் சிந்தித்துப் பார். தொன்று தொட்டு அவர்கள் உன் பகைவராகிய சேர, பாண்டியர் அல்லர். வேற்றார் அல்லர். நீயும் அவர்க்குப் பழம் பகையும் அல்லை.*

நீ மேல் உலகம் அடைகின்றாய் என்று வைத்துக் கொள். அப்பொழுது இந்த ஆட்சி உரிமை யாருக்குப் போய்ச் சேரும்? அவர் தாமே உனக்கு வாரிசுகள் ஆவர்.

வேறு வகையாக நினைத்துப் பார். நீ போர்க் களத்தில் அவர்களைக் கொன்று விட்டால் உன் ஆட்சியை யாருக்குத் தரப் போகிறாய்.

தப்பித் தவறி நீ தோற்று விடுகிறாய் என்று வைத்துக் கொள். பிள்ளைகளிடம் தோற்று விட்டாய் என்ற இழிச் சொல் உன்னை வந்து சேராதா? தோல்வியை உன்னால் தாங்கிக் கொள்ள முடியுமா?

அதனால் உன் உயிர்க்கு உறுதி தேடிக் கொள்; அற வாழ்க்கை ஏற்றுப் போர் ஒழிந்து விலகி விடு; அதுவே உனக்கு மறுமைக்கு வழி யும் ஆகும். வானுலகம் உன்னை நல் விருந்தாக ஏற்றுக் கொள்ளும்.

மண்டு அமர் அட்ட மதனுடை நோன் தாள்,
வெண்குடை விளக்கும், விறல் கெழு வேந்தே!
பொங்கு நீர் உடுத்த இம் மலர் தலை உலகத்து,
நின்தலை வந்த இருவரை நினைப்பின்,
தொன்று உறை துப்பின் நின் பகைஞரும் அல்லர்,
அமர் வெங் காட்சியொடு மாறு எதிர்ப்பு எழுந்தவர்;
நினையும்காலை, நீயும் மற்றவர்க்கு
அனையை அல்லை; அடு மான் தோன்றல்!
பரந்து படு நல் இசை எய்தி; மற்றுநீ
உயர்ந்தோர் உலகம் எய்திப்; பின்னும்
ஒழித்த தாயம் அவர்க்கு உரித்தன்றே:
அதனால், அன்னது ஆதலும் அறிவோய்! நன்றும்
இன்னும் கேண்மதி, இசை வெய்யோயே!
நின்ற துப்பொடு நிற் குறித்து எழுந்த
எண் இல் காட்சி இளையோர் தோற்பின்,
நின் பெருஞ் செல்வம் யார்க்கு எஞ்சுவையே?
அமர் வெஞ் செல்வ! நீ அவர்க்கு உலையின்,
இகழுநர் உவப்பப், பழி எஞ்சுவையே;
அதனால், ஒழிகதில் அத்தை, நின் மறனே! வல் விரைந்து

எழுமதி; வாழ்க, நின் உள்ளம்! அழிந்தோர்க்கு
ஏமம் ஆகும் நின் தாள் நிழல் மயங்காது
செய்தல் வேண்டுமால், நன்றே-வானோர்
அரும் பெறல் உலகத்து ஆன்றவர்
விதும்புறு விருப்பொடு விருந்து எதிர் கொளற்கே.

திணை - வஞ்சி; துறை - துணைவஞ்சி.

அவன் மக்கள்மேல் சென்றானைப் புல்லாற்றூர் எயிற்றியனார் பாடியது.

## 214. கோப்பெருஞ் சோழன்

*யான் வடக்கிருக்கத் துணிந்தேன். இது அரிய தவம்தான். இதனைச் செய்வது தக்கதா இல்லையா என்று ஐயுறுவோர் பலர். இஃது அரிய தவம். இதனால் விளையும் நன்மைகள் யாவை?*

*யானையை வேட்டையாடச் செல்வோர் உயர் நோக்கம் கொண்டவர்; நிச்சயம் அதில் வெற்றியடைவர். 'குறும்பூழ்' மிகச் சிறிய பறவை; அதனைப் பெற வேட்டையில் சென்று வலை விரிப்பர். அது பெறாமல் திரும்பி விடுவர். அவர் நோக்கம் சிறியது. அவர் ஊக்கமும் சிறியது. ஆக்கமும் சிறியது ஆகும்.*

*உள்ளுவது எல்லாம் உயர்வு உள்ளுக. அது தள்ளினும் தளராமல் தொடரத் தக்கது. உயர்வு உள்ளிச் செயல்படுபவர் நிச்சயம் உயர்வையே அடைவர்.*

*அவர்கள் துறக்க வாழ்வை எய்துவர். அது இல்லை எனில் பிறவாமை ஆகிய உயர்நிலை அடைவர். அது கூடாதாயின் இவ்வுலகில் அவர் புகழ் இமயத்தைப் போல் உச்ச நிலை அடையும். இம்மூன்று நன்மைகள் அவர்களுக்குக் காத்திருக்கின்றன. எனவே தவம் செய்வார் உயர்வு அடைவது உறுதி. வடக்கிருப்பது இது கருதியே ஆகும்.*

'செய்குவம்கொல்லோ, நல்வினை?' எனவே
ஐயம் அறாஅர், கசடு ஈண்டு காட்சி
நீங்கா நெஞ்சத்துத் துணிவு இல்லோரே;
யானை வேட்டுவன் யானையும் பெறுமே;
குறும்பூழ் வேட்டுவன் வறுங் கையும் வருமே:

அதனால், உயர்ந்த வேட்டத்து உயர்ந்திசினோர்க்குச்,
செய்வினை மருங்கின் எய்தல் உண்டு எனின்,
தொய்யா உலகத்து நுகர்ச்சியும் கூடும்;
தொய்யா உலகத்து நுகர்ச்சி இல்எனின்,
மாறிப் பிறப்பின் இன்மையும் கூடும்;
மாறிப் பிறவார்ஆயினும், இமயத்துக்
கோடு உயர்ந்தன்ன தம் இசை நட்டுத்,
தீது இல் யாக்கையொடு மாய்தல் தவத் தலையே.

திணை - பொதுவியல்; துறை - பொருண்மொழிக் காஞ்சி.
அவன் வடக்கிருந்தான் சொற்றது.

# 215. கோப் பெருஞ்சோழன்

வரகுச் சோற்றை வேளை வெண்பூ இட்டு ஆயர் மகள் படைத்த புளிக்குழம்பு அதனை அவரை பயிரிடுவோர் பசி தீர உண்பர். அத்தகையோர் வாழும் பொதிகை மலையை உடையது பாண்டிய நாடு.

அந்நாட்டில் பிசிர் என்னும் சிற்றூரில் வாழ்ந்து கொண்டிருக்கிறான்; அவன் என் ஆருயிர் நண்பன் ஆவான். செல்வம் உற்றபோது அவன் வாராமல் இருக்கலாம்; துன்பப் படுங் காலத்தில் அவன் அங்குத் தங்க மாட்டான். என்னைக் காணத் தாமதம் செய்யான்; உடனே வருவது உறுதி.

கவைக் கதிர் வரகின் அவைப்புறு வாக்கல்
தாது எரு மறுகின் போதொடு பொதுளிய
வேளை வெண் பூ வெண் தயிர்க் கொளீஇ,
ஆய்மகள் அட்ட அம் புளி மிதவை
அவரை கொய்யுநர் ஆர மாந்தும்
தென்னம் பொருப்பன் நல் நாட்டுள்ளும்
பிசிரோன் என்ப, என் உயிர் ஓம்புநனே;
செல்வக் காலை நிற்பினும்,
அல்லற் காலை நில்லலன்மன்னே.

திணை - பாடாண் திணை; துறை - இயன்மொழி.

கோப்பெருஞ்சோழன், 'பிசிராந்தையார் வாரார்' என்ற சான்றோர்க்கு 'அவர் வருவார்' என்று சொல்லியது.

# 216. கோப்பெருஞ் சோழன்

''உன் நண்பன் உன்னைப் பற்றிச் செவி வழி அறிந்திருக்கிறானே'' தவிர நேரில் கண்டது இல்லை. ஆண்டுகள் ஒருசேரப் பழகியவர் ஆயினும் சிலசமயம் துன்பத்தைக் கேட்டு வராமல் இருப்பவரும் உளர். இது உலக இயல்பு.

அப்படி இருக்க ஆந்தையார் எப்படி வருவார்''என்று நீங்கள் ஐயம் கொள்கின்றீர்.

அவன் என்னை என்றும் இகழ்ந்து பேசியது இல்லை. இனியன்; நெருங்கிய நண்பன்; புகழைக் கெடுக்கும் பொய்ம்மை அவனிடம் என்றும் இருந்தது இல்லை.

உன் பெயர் யாது? என்று யாராவது கேட்டால் தன் பெயர் சோழன் என்று எளியனாகிய என் பெயரைத் தான் கூறுவான். அத்தகைய கெழுதகை நண்பன் அவன். அது மட்டுமல்ல; இத்தகையதோர் காலத்தில் அவன் அங்கு நிற்க மாட்டான். இப்பொழுதே வந்து சேர்வான். அவனுக்கு என்று இடம் ஒதுக்கி வைப்பீராக!

உணர்ச்சி நட்பைத் தரும்; நாளும் பழகத் தேவையே இல்லை.

'கேட்டல் மாத்திரை அல்லது, யாவதும்
காண்டல் இல்லாது யாண்டு பல கழிய,
வழு இன்று பழகிய கிழமையர் ஆயினும்,
அரிதே, தோன்றல்! அதற்பட ஒழுகல்' என்று,
ஐயங் கொள்ளன்மின், ஆர் அறிவாளீர்!
இகழ்விலன்; இனியன்; யாத்த நண்பினன்;
புகழ் கெட வரூஉம் பொய் வேண்டலனே;
தன் பெயர் கிளக்கும்காலை, 'என் பெயர்
பேதைச் சோழன்' என்னும், சிறந்த
காதற் கிழமையும் உடையன்; அதன்தலை,
இன்னது ஓர் காலை நில்லலன்;
இன்னே வருகுவன்; ஒழிக்க, அவற்கு இடமே!

திணையும் துறையும் அவை.

அவன் வடக்கிருந்தான், 'பிசிராந்தையார்க்கு இடன் ஒழிக்க!' என்றது.

# 217. கோப்பெருஞ் சோழன்

*ஒருவரைப் பற்றி ஒருவர் கேள்விப்பட்டிருக்கின்றனர். அதன் காரணமாக நட்புக் கொண்டவர்கள் இவர்கள். இத்தகைய சந்தர்ப்பத்தில் இங்கு இவன் வருவது போற்றத் தக்கதாக உள்ளது. நட்பை அடிப்படையாகக் கொண்டு வந்திருக்கிறான்.*

*வருவான் என்று துணிந்து சொன்ன அரசனது பெருமையும், அது பழுது ஆகாமல் வந்தவன் அறிவும் வியக்கும்தோறும் அது முடிவு அற்றதாக உள்ளது. வியப்புக்கு அளவே இல்லை.*

*அதனால் தன் ஆட்சி இயங்காத மற்றொரு தேசத்தில் வாழும் சான்றோனின் நெஞ்சில் இடம் பெற்று அதனால் புகழ் மிக்கவன் ஆயினான். அவனை இழந்த இவ்வுலகம் இதனை எவ்வாறு தாங்கும்? இரங்கத் தக்கது.*

நினைக்கும்காலை மருட்கை உடைத்தே,
எனைப் பெருஞ் சிறப்பினோடு ஈங்கு இது துணிதல்;
அதனினும் மருட்கை உடைத்தே, பிறன் நாட்டுத்
தோற்றம் சான்ற சான்றோன் போற்றி,
இசை மரபு ஆக, நட்புக் கந்து ஆக,
இனையது ஓர் காலை ஈங்கு வருதல்;
'வருவன்' என்ற கோனது பெருமையும்,
அது பழுது இன்றி வந்தவன் அறிவும்,
வியத்தொறும் வியத்தொறும் வியப்பு இறந்தன்றே;
அதனால், தன் கோல் இயங்காத் தேயத்து உறையும்
சான்றோன் நெஞ்சுறப் பெற்ற தொன்று இசை
அன்னோனை இழந்த இவ் உலகம்
என் ஆவதுகொல்? அளியது தானே!

திணை - பொதுவியல்; துறை - கையறுநிலை.

அவன் வடக்கிருந்தானுழைச் சென்ற பிசிராந்தையாரைக் கண்டு பொத்தியார் பாடியது.

# 218. கோப்பெருஞ் சோழன்

*பொன்னும், பவழமும், முத்தும், மணியும் பிறக்கும் இடங்கள் ஒன்றுக்கு ஒன்று சேய்மைய ஆகும். கடலில் பிறப்பவை முத்தும் பவழமும்; மலையில் கிடைப்பவை பொன்னும் மணியும்; ஒவ்வொன்றும் வெவ்வேறு இடத்திலிருந்து பெறுபவை.*

மதிப்புமிக்க நன்கலம் அமைக்கும் காலத்தில் அவை ஒரே இடத்தில் வந்து ஒன்று சேர்கின்றன. அதுபோலச் சான்றோர் வெவ்வேறு சேய்மை இடங்களில் வாழ்ந்தாலும் ஒருங்கு கூடுகின்றனர். சான்றோர்கள் சான்றோர்களோடு கலக்கின்றனர். சால்பு இல்லாத கீழோர் சால்பு இல்லாத கீழ் மக்களோடு சேர்கின்றனர். இனம் இனத்தோடு சேரும் என்பது உண்மையாகிறது.

பொன்னும், துகிரும், முத்தும், மன்னிய
மா மலை பயந்த காமரு மணியும்,
இடைபடச் சேயஆயினும், தொடை புணர்ந்து,
அரு விலை நன் கலம் அமைக்கும்காலை,
ஒரு வழித் தோன்றியாங்கு - என்றும் சான்றோர்
சான்றோர் பாலர் ஆப;
சாலார் சாலார் பாலர் ஆகுபவே.

திணையும் துறையும் அவை.

பிசிராந்தையார் வடக்கிருந்தாரைக் கண்ட கண்ணகனார் பாடியது.

## 219. கோப்பெருஞ் சோழன்

ஆற்றிடைக் குறையுள் புள்ளிகளை நிழலாக உடைய மரத்தின் கீழ் நீ தசை வாட நாளும் மெலிந்து உயிர் விட்டாய்.

நீ இருந்த இந்த இடத்திற்குப் பல சான்றோர்கள் வந்து கூடி உன்னோடு உயிர் விட்டனர். அவர்கள் தம் கடமைகளைச் செய்தனர்.

காலம் கடந்து வந்த யான் உன்னோடு சேர்ந்து உயிர் விடும் பேற்றினைப் பெறவில்லை. அதனால் நீ என்னை வெறுக்கிறாயோ? மாறுபட நோக்குகிறாயோ?

உள் ஆற்றுக் கவலைப் புள்ளி நீழல்,
முழூஉ வள்ளூரம் உணக்கும் மள்ள!
புலவுதி மாதோ நீயே-
பலரால் அத்தை, நின் குறி இருந்தோரே.

திணையும் துறையும் அவை.

அவன் வடக்கிருந்தானைக் கருவூர்ப் பெருஞ் சதுக்கத்துப் பூதநாதனார் பாடியது.

## 220. கோப்பெருஞ் சோழன்

நாளும் சோறு இட்டுப் பல ஆண்டுகள் பேணிக் காத்த யானை அது இறந்துபட அது கட்டப்பட்டிருந்த கம்பத்தைக் கண்டு அது வெறிச் சென்று இருக்க அதனால் கலங்கி நிற்கிறான் அதன் பாகன்.

அதுபோல் நீ உயிர் துறந்து நீங்கிவிட இவ்வூர் புகழ்மிக்க மன்றத்தைக் கண்டு அது வெறிச்சிடுவதைக் காண்கிறேன்; கலக்கம் பெரிது அடைகின்றேன்.

பெருஞ் சோறு பயந்து, பல் யாண்டு புரந்த
பெருஞ் களிறு இழந்த பைதற் பாகன்
அது சேர்ந்து அல்கிய அழுங்கல் ஆலை,
வெளில் பாழாகக் கண்டு கலுழ்ந்தாங்குக்,
கலங்கினென் அல்லனோ, யானே-பொலந் தார்த்
தேர் வண் கிள்ளி போகிய
பேர் இசை மூதூர் மன்றம் கண்டே?

திணையும் துறையும் அவை.

அவன் வடக்கிருந்தானுழைச் சென்று மீண்டும் வந்து உறையூர் கண்ட பொத்தியார் அழுது பாடியது.

## 221. கோப்பெருஞ் சோழன்

பாடுவோர்க்குக் கொடுத்துப் பல்புகழ் ஈட்டியவன்; ஆடுவோர்க்குத் தந்து அவர்கள்பால் பேரன்பு செலுத்தியவன்; அறவோர் புகழ்ந்த செங்கோல் ஆட்சி உடையவன்; நல்திறம் உடைய சான்றோர்கள்பால் உறுதியுடன் அன்பு காட்டியவன்; மகளிர்க்கு மென்மையானவன்;வலிமைமிக்க ஆடவர்க்கு வலிமை காட்டியவன்; அவர்கள் அவனை எதிர்கொள்ள இயலாமல் தோற்றனர். கல்வி கேள்விகளில் சிறந்தவர்கள் அவன் ஆதரவு பெற்றனர். இத்தகைய சிறப்புகள் மிக்கவன் என்பதையும் பாராமல் கூற்று அவன் உயிரைக் கொண்டு சென்று விட்டது.

இவ்வுலகு துக்கமுற அழியாத நல்ல புகழை நிலைநாட்டி விட்டு நடுகல் ஆயினன்.

கவிதையில் சிறந்த புலவர்களே! நம் வருத்தமிகு சுற்றத்தை அழைத்துக் கொண்டு அக்கூற்றினைப் பழித்துக் கூறுவோம்; 'ஒழிக' என்று உரத்துக் கூவுவோம்.

பாடுநர்க்கு ஈத்த பல் புகழன்னே;
ஆடுநர்க்கு ஈத்த பேர் அன்பினனே;
அறவோர் புகழ்ந்த ஆய் கோலன்னே;
திறவோர் புகழ்ந்த திண் அன்பினனே;
மகளிர் சாயல்; மைந்தர்க்கு மைந்து;
துகள் அறு கேள்வி உயர்ந்தோர் புக்கில்;
அனையன் என்னாது, அத் தக்கோனை,
நினையாக் கூற்றம் இன் உயிர் உய்த்தன்று;
பைதல் ஒக்கல் தழீஇ, அதனை
வைகம் வம்மோ-வாய்மொழிப் புலவீர்-
'நனந் தலை உலகம் அரந்தை தூங்கக்,
கெடு இல் நல் இசை சூடி,
நடுகல் ஆயினன் புரவலன்' எனவே.

திணையும் துறையும் அவை.
அவன் நடுகற் கண்டு அவர் பாடியது.

## 222. கோப் பெருஞ்சோழன்

அன்று நான் உன்னுடன் இருந்து வடக்கிருக்க விரும்பினேன். உயிர்விட வந்திருந்தேன்.

நீ என்னைப் பொறுக்க என்று உரைத்தாய். நிழல் போல் நீங்காத உன் மனைவியுடன் வாழ்ந்து புகழ்மிக்க ஒரு புதல்வனைப் பெற்றபின் நீ இங்கு வந்து இருக்க என்று உரைத்தாய்.

நீ இட்ட பணி தட்ட இயலவில்லை. மகனும் பிறந்து ஆகிவிட்டது.

இனி யான் உன்னில் கலக்க விரும்புகிறேன். சான்றோர்கள் காட்டும் வழியைப் பின்பற்றி யானும் வடக்கிருக்க வந்துள்ளேன்.

நீ இப்பொழுதும் என்னைப் பற்றித்தான் சிந்தித்துக் கொண்டிருப்பாய். அது எனக்குத் தெரியும். எனக்கு இருக்க இடம் யாது? அதனைச் சுட்டி உரைக்க என்று வேண்டுகிறேன் என்னை ஏற்றுக் கொள்க.

'அழல் அவிர் வயங்கு இழைப் பொலிந்த மேனி,
நிழலினும் போகா, நின் வெய்யோள் பயந்த
புகழ்சால் புதல்வன் பிறந்த பின் வா' என,
என் இவண் ஒழித்த அன்பிலாள!
எண்ணாது இருக்குவை அல்லை;
என் இடம் யாது?- மற்று இசை வெய்யோயே!

திணையும் துறையும் அவை.

அவனைத் தன் மகன் பிறந்த பின் பெயர்த்துச் சென்று, பொத்தியார், 'எனக்கு இடம் தா' என்று சொற்றது.

# 223. கோப் பெருஞ் சோழன்

*நிழலாக வாழ்ந்த உனக்கு உன் நினைவாகக் கல் எடுத்துள்ளனர்.*

*மறுமை உலகு அடைவதற்கு உரிமை உனக்கு உள்ளது. அதுவரை உன்னை இங்கு இறுத்தி நடுகல் ஆக்கி உள்ளனர்.*

*உனக்குத் தரப்பட்டுள்ள இடம் மிகச் சிறியதுதான் எனினும் அதில் உன் ஆருயிர் நண்பர்க்கு என்றும் இடம் ஒதுக்கித் தருகிறாய். இவ்வகையில் இறந்தும் நீ கொடைப் பண்பு உடையவன் என்பதைக் காட்டிக் கொண்டாய்? செத்தும் கொடுத்த வள்ளல் நீ!.*

பலர்க்கு நிழல் ஆகி, உலகம் மீக்கூறித்,
தலைப்போகன்மையின் சிறு வழி மடங்கி,
நிலை பெறு நடுகல் ஆகியக்கண்ணும்,
இடம் கொடுத்து அளிப்ப, மன்ற - உடம்போடு
இன் உயிர் விரும்பும் கிழமைத்
தொல் நட்புடையார் தம்முழைச் செலினே.

திணையும் துறையும் அவை.

கல்லாகியும் இடம் கொடுத்த கோப்பெருஞ்சோழனை வடக்கிருந்த பொத்தியார் பாடியது.

# 224. சோழன் கரிகால் பெருவளத்தான்

*பலர்க்கு அவன் வாழ்வு சாதனை மிக்கது. போர்களில் வெற்றி கண்டு பகைவரை அழித்தான்; புகழை விளைவித்தான்.*

பாணர்தம் பசி தீர்த்தவன்; அவர்கள் அருந்தக் கள் ஈந்தான். அச் சுற்றத்தினர்தம் வறுமையைப் போக்கி வளமான வாழ்வு அளித்தான்.

மறையவர்கள் காட்டிய வழி நின்று தம் குல மகளிரோடு நலம் பயக்கும் வேள்விகளை நடத்தினான். அவற்றின் நினைவுச் சின்னமாகத் தூண்கள் பல எழுப்பினான்.

சாதனை மிக்க வாழ்வு; அது சரித்திரம் கண்டது. சாவு அவனை இழுத்துக் கொண்டது. அமர வாழ்வு அவனை அணைத்துக் கொண்டது.

அவன் உரிமை மகளிர், பசுக்களுக்குத் தழைகள் தர இடையர்கள் கோடைக் காலத்தில் வெட்டி வீழ்த்தும் வேங்கை மரம் பூக்களை உதிர்ப்பதுபோல் வளையல்களையும், பிற ஆபரணங்களையும் களைந்து நீக்கிப் பொலிவு இழந்தனர்.

அருப்பம் பேணாது அமர் கடந்ததூஉம்;
துணை புணர் ஆயமொடு தசும்பு உடன் தொலைச்சி,
இரும் பாண் ஒக்கற் கடும்பு புரந்ததூஉம்;
அறம் அறக் கண்ட நெறி மாண் அவையத்து,
முறை நற்கு அறியுநர் முன்னுறப் புகழ்ந்த
தூ இயல் கொள்கைத் துகள் அறு மகளிரொடு,
பருதி உருவின் பல் படைப் புரிசை,
எருவை நுகர்ச்சி, யூப நெடுந் தூண்,
வேத வேள்வித் தொழில் முடித்ததூஉம்;
அறிந்தோன் மன்ற அறிவுடையாளன்:
இறந்தோன் தானே; அளித்து இவ் உலகம்!
அருவி மாறி, அஞ்சு வரக் கருகிப்,
பெரு வறங் கூர்ந்த வேனிற் காலைப்,
பசித்த ஆயத்துப் பயன் நிரை தருமார்,
பூ வாட் கோவலர் பூவுடன் உதிரக்
கொய்து கட்டு அழித்த வேங்கையின்,
மெல் இயல் மகளிரும் இழை களைந்தனரே.

திணையும் துறையும் அவை.

சோழன் கரிகாற் பெருவளத்தானைக் கருங்குழலாதனார் பாடியது.

# 225. சோழன் நலங்கிள்ளி

*சோழன் நலங்கிள்ளியின் படைப் பெருமையை நுவல வேண்டுமா?*

*தலைப் படையினர் பனம் நுங்கின் இனிய நீரைப் பருகுவர். இடைப் படையினர் பழத்தின் கனிந்த பகுதியை உண்பர். கடைப் படையினர் பனங்கிழங்கு சுடப்பட்டது அதனைப் பிய்த்து உண்பர். நீள் படை அவனுடையது. ஆற்றல் மிக்கது அவன் படை; அது நடந்து சென்றால் காலம் நீட்டிக்கும்.*

*அத்தகைய பெரும் படையைப் படைத்தவன் இன்று கள்ளி முளைத்துள்ள களர் நிலம்; முள்ளுடைய இடுகாடு அதில் அவன் உறங்குகிறான். அவன் கிடத்தப்பட்டுள்ளான்.*

*நலங்கிள்ளி வாழ்ந்த காலத்தில் ஞாலம் காவலர் பொழுது விடிந்தால் இன்னிசைப் பறை கொண்டு இசைப்பதையும், தூக்கணங்குருவியின் கூட்டைப் போன்ற வலம்புரிச் சங்கை முழங்குவதையும் தவிர்த்தனர். இவ்விசை ஒலிகள் அவன் செவியில் பட்டால் அவன் எழுந்து வருவான்; படை கொண்டு தாக்குவான் என்று அஞ்சி இருந்தனர்.*

*அவன் மறைந்த பிறகு இப்பறையும் சங்கும் எங்காவது பள்ளி எழுச்சிகளில் எழுப்பினால் அவை என் நெஞ்சை நடுக்குறச் செய்கின்றன. அவன் நினைவுகள் தோன்றி என்னை அழிக் கின்றன. வீரன் ஒருவன் அவன் மறைவு அதனை நினைவுப் படுத்துகிறது.*

தலையோர் நுங்கின் தீம் சேறு மிசைய,
இடையோர் பழத்தின் பைங் கனி மாந்தக்,
கடையோர் விடு வாய்ப் பிசிரொடு சுடுகிழங்கு நுகர,
நில மலர் வையத்து வல முறை வளைஇ,
வேந்து பீடு அழித்த ஏந்து வேல் தானையொடு,
'ஆற்றல்' என்பதன் தோற்றம் கேள், இனிக்;
கள்ளி போகிய களரிஅம் பறந்தலை,
முள்ளுடை வியன் காட்டதுவே-'நன்றும்

சேட்சென்னி நலங்கிள்ளி கேட்குவன்கொல்?' என,
இன் இசைப் பறையொடு வென்றி நுவலக்,
தூக்குணங்குரீ இத் தூங்கு கூடு ஏய்ப்ப
ஒரு சிறைக் கொளீஇய திரி வாய் வலம்புரி,
ஞாலங் காவலர் கடைத்தலைக்,
காலைத் தோன்றினும் நோகோ யானே.

திணையும் துறையும் அவை.

சோழன் நலங்கிள்ளியை ஆலத்தூர் கிழார் பாடியது.

# 226. சோழன் குளமுற்றத் துஞ்சிய கிள்ளி வளவன்

*மிக்கு எழுந்த போரில் வெற்றிகள் காணும் சேனையை உடைய திண்தேர் வளவனைக் கூற்றம் உயிர் கொண்டு விட்டது.*

*அது நிச்சயமாக நேரில் சென்று அவன் உயிரை வாங்கி இருக்க முடியாது. சினமோ, வெறுப்போ காட்டி முன் சென்று அவனைப் பணிய வைத்து அவன் உயிரை வாங்கி இருக்க முடியாது.*

*பாடுபவரைப் போலச் சென்று கை தொழுது ஏத்தி இரந்துதான் அவன் உயிரைப் பெற்றிருக்க வேண்டும்.*

*போரில் அவனை யாரும் வெல்ல முடியாது. இரந்துதான் உயிர்ப் பிச்சை கேட்டிருக்க முடியும்.*

செற்றன்றுஆயினும், செயிர்த்தன்று ஆயினும்,
உற்றன்றுஆயினும், உய்வு இன்றுமாதோ;
பாடுநர் போலக் கைதொழுது ஏத்தி,
இரந்தன்றாகல் வேண்டும்- பொலந் தார்
மண்டு அமர் கடக்கும் தானைத்
திண் தேர் வளவற் கொண்ட கூற்றே.

திணையும் துறையும் அவை.

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனை மாறோக்கத்து நப்பசலையார் பாடியது.

# 227. சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன்

*கூற்றமே! நல்லது எது கெட்டது எது என்று அறியாத மடமை நின்பால் உள்ளது. உன் அறிவு குறைந்து விட்டது. விதைக்காக வைத்திருக்கும் நெல்லை உண்டு விட்டாய். நான் சொல்வது நன்கு விளங்கவில்லையா? விளக்குகிறேன் கேள்.*

*இதுவரை இவன் யானை குதிரை காலாள் இப்படைகளைக் கொன்று குவித்தான்; வீரர்களையும் அவித்தான். நின்னை வாட்டும் பசியை இவன் இவ்வுயிர்களை அழித்து ஆற்றி வந்தான். நீ செய்ய வேண்டிய தொழிலை இவனே செய்து முடித்தான். இனி யார் உன் பழியைத் தீர்ப்பார். ஆற்றல்மிக்க அடுநனை நீ உன்னுடன் கொண்டு விட்டாயே!*

நனி பேதையே, நயன் இல் கூற்றம்!
விரகு இன்மையின் வித்து அட்டு உண்டனை;
இன்னும் காண்குவை, நன் வாய் ஆகுதல்;
ஒளிறு வாள் மறவரும், களிறும், மாவும்,
குருதி அம் குரூஉப் புனற் பொரு களத்து ஒழிய,
நாளும் ஆனான் கடந்து அட்டு, என்றும் நின்
வாடு பசி அருத்திய வசை தீர் ஆற்றல்
நின் ஓர் அன்ன பொன் இயற் பெரும் பூண்
வளவன் என்னும் வண்டு மூசு கண்ணி
இனையோற் கொண்டனை ஆயின்,
இனி யார், மற்று நின் பசி தீர்ப்போரே?

திணையும் துறையும் அவை.

அவனை ஆடுதுறை மாசாத்தனார் பாடியது.

# 228. சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன்

*இம்மூதூரில் தாழி செய்யும் வேட்கோவே; சோழ அரசன் மண்ணுலக வாழ்க்கை நீத்து அவன் தேவர் உலகத்தை அடைந்து விட்டான்.*

அவன் புகழ் உடம்பு அது விண்ணையும் கடந்தது. திசை எட்டும் பரவியது. அதனை அடக்கி வைக்க நீ எவ்வாறு தாழியைச் செய்ய இயலும்?

இந்தப் பெரிய நிலம் சக்கரமாகவும், இதன் கண் உள்ள பெரிய மலைகள் மண்ணாகவும் கொண்டுதான் உன்னால் தாழி அமைக்க முடியும். அது உன்னால் இயலாது.

கலம் செய் கோவே! கலம் செய் கோவே!
இருள் திணிந்தன்ன குரூஉத் திரள் பரூஉப் புகை
அகல் இரு விசும்பின் ஊன்றும் சூளை,
நனந் தலை மூதூர்க் கலம் செய் கோவே!
அளியை நீயே; யாங்கு ஆகுவைகொல்?
நிலவரை சூட்டிய நீள் நெடுந் தானைப்
புலவர் புகழ்ந்த பொய்யா நல் இசை,
விரி கதிர் ஞாயிறு விசும்பு இவர்ந்தன்ன
சேண் விளங்கு சிறப்பின், செம்பியர் மருகன்-
கொடி நுடங்கு யானை நெடுமாவளவன்-
தேவர் உலகம் எய்தினன் ஆதலின்,
அன்னோற் கவிக்கும் கண் அகன் தாழி
வனைதல் வேட்டனைஆயின், எனையதூஉம்
இரு நிலம் திகிரியாப், பெரு மலை
மண்ணா வனைதல் ஒல்லுமோ, நினக்கே?

திணை - அது; துறை - ஆனந்தப்பையுள்.
அவனை ஐயூர் முடவனார் பாடியது.

# 229. சேரமான் யானைக்கட் சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை

நட்சத்திரங்களுக்கு இடையே வானத்துமீன் ஒன்று மாநிலத்தில் விழ அது கண்டு அன்றே யாம் அஞ்சினோம். கேடு ஒன்று வரும் என்று எங்கள் ஏடுகள் உரைத்தன.

ஏழாம் நாள் அதன்படியே நடந்துவிட்டது. படை வன்மையும் கொடை வன்மையும் உடைய வேந்தன்; அவன் எங்களிடமிருந்து விடை பெற்றுக் கொண்டான்.

அவன் இல்லாமல் இங்கு அவன் படைகள் செயலிழந்து விட்டன. யானைகள் தரையில் படுத்து உறங்குகின்றன. முரசு அடிப்பாரின்றிக் கிழிந்து கிடக்கிறது; குடை சாய்ந்து கிடக்கிறது. குதிரைகள் ஓட்டம் இன்றி வாட்டம் உற்றுக் கிடக்கின்றன.

அவன் உரிமை மகளிர் அவர்கள் தனிமையில் கிடக்க அவர்களை விட்டுப் பிரிந்து வானத்துத் தெய்வ மகளிருடன் புது உறவு கொண்டு அவர்களுக்குத் துணைவனாகி விட்டான்.

ஆடு இயல் அழல் குட்டத்து
ஆர் இருள் அரை இரவில்,
முடப் பனையத்து வேர் முதலாக்
கடைக் குளத்துக் கயம் காயப்,
பங்குனி உயர் அழுவத்துத்,
தலை நாள்மீன் நிலை திரிய,
நிலை நாள்மீன் அதன் எதிர் ஏர்தரப்,
தொல் நாள்மீன் துறை படியப்,
பாசிச் செல்லாது, ஊசித் துன்னாது,
அளக்கர்த் திணை விளக்காகக்
கனை எரி பரப்பக், கால் எதிர்பு பொங்கி,
ஒரு மீன் வீழ்ந்தன்றால், விசும்பினானே;
அது கண்டு, யாமும் பிறரும் பல் வேறு இரவலர்,
'பறை இசை அருவி நல் நாட்டுப் பொருநன்
நோய் இலன்ஆயின் நன்றுமன் தில்' என
அழிந்த நெஞ்சம் மடிஉளம் பரப்ப,
அஞ்சினம்; எழு நாள் வந்தன்று, இன்றே;
மைந்துடை யானை கை வைத்து உறங்கவும்,
திண் பிணி முரசம் கண் கிழிந்து உருளவும்,
காவல் வெண்குடை கால் பரிந்து உலறவும்,
கால் இயற் கலி மாக் கதி இல வைகவும்,
மேலோர் உலகம் எய்தினன்; ஆகலின்,
ஒண் தொடி மகளிர்க்கு உறு துணை ஆகித்,
தன் துணை ஆயம் மறந்தனன்கொல்லோ-
பகைவர்ப் பிணிக்கும் ஆற்றல், நசைவர்க்கு
அளந்து கொடை அறியா ஈகை,
மணி வரை அன்ன மாஅயோனே?

திணையும் துறையும் அவை.

கோச் சேரமான் யானைக்கட்சேஎய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை இன்ன நாளில் துஞ்சும் என அஞ்சி, அவன் துஞ்சிய இடத்துக் கூடலூர் கிழார் பாடியது.

# 230. அதியமான் எழினி

அவன் ஆட்சி நாட்டில் செயல்பட்டபோது கன்றுடன் கூடிய பசுக் கூட்டத்துக்குக் காவலே தேவை இல்லை.

வழிபறிக் கொள்ளையர்தம் அழிபயம் இன்றி வழிநடை நடந்தனர் புதியவர்கள்.

நெற்களத்தில் குவித்து வைக்கப்பட்ட நெல் குவியல் அதற்குக் காவலே தேவைப்படவில்லை.

காட்டு விலங்குகளால் ஏற்படும் உயிர் அச்சம் முற்றும் நீங்கியவராய் வாழ்ந்தனர்.

இத்தகு செங்கோல் ஆட்சியும், வையகம் புகழும் போர் வெற்றிகளும் உடையவனாகத் திகழ்ந்தவன் எழினி. அவன் பொருது களத்தில் விழுந்து மடிந்தான்.

பெற்றவள் கைவிட்ட குழந்தையைப் போல அவன் சுற்றத்தவர் பலரும் வருந்தி உழன்று வாடுகின்றனர். துன்பத்தில் உழல் கின்றனர்.

இவர்களைவிடக் கூற்றுவனே! நீதான் மிகவும் இழந்து இருக் கிறாய். விதைக்கு வைத்திருந்த நெல்லை அவசரப்பட்டு ஆக்கிச் சமைத்து அழிக்கிறான் ஓர் உழவன்; வாடுவது அவன்; அவ் அறிவற்ற உழவனாக நீயும் செயல்பட்டு விட்டாய். போர்க் களத்தில் பகைவர்கள் தம் உயிர்களை அவன் ஒருவனே கவர்ந்தான். இனி யார் உனக்கு இந்தப் பணியைச் செய்ய வல்லார்?

கன்று அமர் ஆயம் கானத்து அல்கவும்,
வெங் கால் வம்பலர் வேண்டு புலத்து உறையவும்
களம் மலி குப்பை காப்பு இல வைகவும்,
விலங்கு பகை கடிந்த கலங்காச் செங்கோல்,
வையகம் புகழ்ந்த வயங்கு வினை ஒள் வாள்,

பொய்யா எழினி பொருது களம் சேர—
ஈன்றோள் நீத்த குழவி போலத்,
தன் அமர் சுற்றம் தலைத்தலை இனையக்,
கடும் பசி கலக்கிய இடும்பை கூர் நெஞ்சமொடு
நோய் உழந்து வைகிய உலகினும், மிக நனி
நீ இழந்தனையே, அறன் இல் கூற்றம்!
வாழ்தலின் வரூஉம் வயல் வளன் அறியான்
வீழ் கூடி உழவன் வித்து உண்டாஅங்கு
ஒருவன் ஆர் உயிர் உண்ணாய்ஆயின்,
நேரார் பல் உயிர் பருகி,
ஆர்குவை மன்னோ, அவன் அமர் அடு களத்தே.

திணை - அது; துறை - கையறு நிலை
அதியமான் தகடூர் பொருது வீழ்ந்த எழினியை அரிசில் கிழார் பாடியது

# 231. அதியமான் நெடுமான் அஞ்சி

*கொல்லை நிலத்தில் எரித்துச் சுட்டுக் குறவன் விட்டுச் செல்லும் மரத் துண்டுகள் போல நறுக்கி அடுக்கப்பட்ட விறகுக் கட்டைகள் அவற்றில் தீயிட்டு ஈம அழல் எழுப்பி அவனை வைத்து எரிக்கத் தொடங்கி உள்ளனர்.*

*அந்த ஈம ஒள்ளழல் குறுகட்டும் அல்லது நீள எரியட்டும். அவன் உடம்பைத் தான் அது எரிக்க முடியும்.*

*திங்களைப் போன்ற வெண் கொற்றக் குடையையும், ஞாயிறு போல் ஒளியையும் உடைய அவன் புகழ் என்றும் மாயாது. அதனை அழிக்க முடியாது. நிலைத்து நிற்கும்.*

எறி புனக் குறவன் குறையல் அன்ன
கரி புற விறகின் ஈம ஒள் அழல்,
குறுகினும் குறுகுக; குறுகாது சென்று,
விசும்புற நீளினும் நீள்க-பசுங் கதிர்த்
திங்கள் அன்ன வெண்குடை
ஒண் ஞாயிறு அன்னோன் புகழ் மாயலவே.

திணையும் துறையும் அவை.
அதியமான் நெடுமான் அஞ்சியை ஔவையார் பாடியது.

## 232. அதியமான் நெடுமான் அஞ்சி

அவன் இல்லாமல் இந்தக் காலைப் பொழுது தேவையற்றது; அது இல்லையாகிப் போகட்டும். அதேபோல என் வாழ்நாளும் இல்லையாகிப் போகட்டும். யான் இனி வாழ்ந்து என்ன பயன்?

அவன் வாழ்ந்த காலத்தில் சிகரத்தை உடைய மலைகள் கொண்ட நாட்டை அவனிடம் கொடுத்தாலும் ஏற்க மறுப்பான்; அதனைக் கொள்ள மாட்டான்; அத்தகைய பேராண்மை உடையவன்; இவர்கள் நடுகல் நட்டு அதற்குப் பீலி சூட்டி நாரால் வடிக்கப்பட்ட கள்ளைச் சிறு கலத்தில் வைக்க அவன் அதனை எங்கே ஏற்கப் போகிறான்!

இல்லாகியரோ, காலை மாலை!
அல்லாகியர், யான் வாழும் நாளே!
நடுகல் பீலி சூட்டி, நார் அரி
சிறு கலத்து உகுப்பவும் கொள்வன்கொல்லோ-
கோடு உயர் பிறங்கு மலை கெழீஇய
நாடு உடன் கொடுப்பவும் கொள்ளாதோனே?

திணையும் துறையும் அவை.
அவனை அவர் பாடியது.

## 233. வேள் எவ்வி

''பாணர்களின் சுற்றத்தவரைப் பேணிக் காக்கும் தலைவன் போர்ப் படைமிக்க எவ்வி, மார்பில் வேல் பாய்ந்து விழுப்புண் எய்தினான்; சாகக் கிடக்கிறான்'' என்று விடியல் பொழுதில் செய்திகள் பரப்பி உள்ளனர். அவை உண்மையாக இல்லாமல் இருக்க வேண்டும்.

இதுபோல் முன்பு ஒரு காலத்தில் பேரரசர்கள், ''அகுதை என் பானிடத்துப் பொன் திகிரி உள்ளது; அது இருக்கும் வரை அவனை யாரும் ஒன்றும் செய்ய முடியாது'' என்று செய்தி பரப்பி இருந்தனர். அவன் மறைவிற்குப் பின் அது வெறும் பொய்; தவறான செய்தி என்று அறிந்தனர்.

*அதுபோல இந்தச் செய்தியும் பொய் ஆகிவிட வேண்டும். இதுதான் யான் வேண்டுவது.*

பொய்யாகியரோ! பொய்யாகியரோ!
பா அடி யானை பரிசிலர்க்கு அருகாச்
சீர் கெழு நோன் தாள் அகுதைகண் தோன்றிய
பொன் புனை திகிரியின் பொய்யாகியரோ!-
'இரும் பாண் ஒக்கல் தலைவன், பெரும் பூண்,
போர் அடு தானை, எவ்வி மார்பின்
எஃகுறு விழுப்புண் பல' என
வைகுறு விடியல், இயம்பிய குரலே.

திணையும் துறையும் அவை.

வேள் எவ்வியை வெள்ளெருக்கிலையார் பாடியது.

## 234. வேள் எவ்வி

*அடையா நெடுங்கதவு கொண்ட பெருமனையில் பாணர் சுற்றத்தினர் பலருடன் உண்ட பார் வேந்தன் இன்று தன் காதல் மனைவி பிடியின் கால் அடி அளவு உள்ள சிறிய இடத்தை மெழுகிப் புல்மேல் வைத்த சிறிய உணவை எவ்வாறு உண்பான்?*

*இந்தக் கொடிய காட்சியைக் காணும் என் நெடிய வாழ்நாள் கெடுவதாக;யான் மடிவதாக!*

நோகோ யானே? தேய்கமா காலை!
பிடி அடி அன்ன சிறு வழி மெழுகித்,
தன் அமர் காதலி புல் மேல் வைத்த
இன் சிறு பிண்டம் யாங்கு உண்டனன்கொல்-
உலகு புகத் திறந்த வாயில்
பலரோடு உண்டல் மரீஇயோனே?

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

## 235. அதியமான் நெடுமான் அஞ்சி

*அவன் வாழ்ந்த நாட்கள் அவற்றை நினைவு கூர்கிறேன்.*

*கள் சிறிது மட்டும் பெறுகிறான் என்றால் அவன் தான் அதைப் பருகாமல் எனக்குத் தந்து மகிழ்வான்.*

கள் மிகுதி பெற்றால் யான் பாடத் தானும் எங்களுடன் சேர்ந்து உண்டு மகிழ்வான்.

உண்பதில் அவன் இவ்வாறே பகிர்ந்து கொள்வான். சிறுசோறு என்றாலும் உள்ளதை எங்களுக்குப் பங்கிட்டுத் தந்துதான் உண்பான். பெருஞ்சோறு என்றாலும் அப்படித்தான்.

எலும்பும் கறியும் என்றால் அவற்றை எங்கள் முன் வைப்பான். அம்பும் வேலும் என்றால் அவற்றைத் தான் தாங்கிப் போருக்குச் செல்வான். உண்பது யாம்; உழைப்பது அவன்.

நரந்தம்பூ மணம் நாறும் தன் கையால் புலவு நாறும் என் தலையை அவன் தடவிக் கொடுப்பான். அந்தக் காலம் எல்லாம் மறைந்து விட்டது. நினைத்தால் அது துயரத்தைத் தருகிறது.

அவன் மார்பில் பாய்ந்த வேல் அது அவன் மார்பில் மட்டும் பாயவில்லை;அவனை நச்சி வாழ்ந்த பாணர் கைப் பாத்திரத்தில் பாய்ந்து ஊடுருவிச் சென்று, இரப்பவர் கையுள்ளும் சென்று அவனால் போற்றப் படும் சுற்றத்தவர் கண்களில் சோகத்தைப் பெருக்கிவிட்டு அஞ்சொல் நுண் தேர்ச்சிப் புலவர் நாவிலும் சென்று தைத்து விட்டது.

இனிப் பாடுவோரும் இல்லை; பாடுவோர்க்கு ஒன்று ஈவோரும் இல்லை.

நீர்த்துறையில் தோன்றும் பகன்றைப் பூ அதைச் சூடுவாரும் இல்லை; நாடுவாரும் இல்லை; அதைப் போலப் பிறர்க்குப் பயன்படாமல் வாழ்கின்றவர் பலர் உள்ளனர். அவர்களால் யாருக்கும் எந்தப் பயனும் இல்லை.

சிறிய கள் பெறினே, எமக்கு ஈயும்; மன்னே!
பெரிய கள் பெறினே,
யாம் பாடத், தான் மகிழ்ந்து உண்ணும்; மன்னே!
சிறு சோற்றானும் நனி பல கலத்தன்; மன்னே!
பெருஞ்சோற்றானும் நனி பல கலத்தன் மன்னே!
என்பொடு தடி படு வழி எல்லாம் எமக்கு ஈயும்; மன்னே!
அம்பொடு வேல் நுழை வழி எல்லாம் தான் நிற்கும்; மன்னே!
நரந்தம் நாறும் தன் கையால்,
புலவு நாறும் என் தலை தைவரும்; மன்னே!

அருந் தலை இரும் பாணர் அகல் மண்டைத் துளை உரீஇ,
இரப்போர் கையுளும் போகிப்,
புரப்போர் புன்கண் பாவை சோர,
அம் சொல் நுண் தேர்ச்சிப் புலவர் நாவில்
சென்று வீழ்ந்தன்று, அவன்
அரு நிறத்து இயங்கிய வேலே!
ஆசு ஆகு எந்தை யாண்டு உளன்கொல்லோ?
இனிப், பாடுநரும் இல்லை;
பாடுநர்க்கு ஒன்று ஈகுநரும் இல்லை
பனித் துறைப் பகன்றை நறைக் கொள் மாமலர்
சூடாது வைகியாங்குப், பிறர்க்கு ஒன்று
ஈயாது வீயும் உயிர் தவப் பலவே!

திணையும் துறையும் அவை.

அதியமான் நெடுமான் அஞ்சியை ஔவையார் பாடியது.

## 236. வேள் பாரி

முசுக்கலை பறித்து உண்டு கிழித்து எறியும் பலாப்பழம் குறவர்க்குப் பலநாள் வைத்து உண்ணும் உணவு ஆகும். அத்தகைய வளம் மிக்க மலை நாட்டுத் தலைவன் நீ; வள்ளல் பாரி.

வாழும்போது கலந்து பழகிய உறவை நீ எவ்வாறு அடியோடு மறந்து விட்டாய்? என்னை ஏன் வெறுத்து ஒதுக்கி விட்டாய். நீ மட்டும் உயிர் பிரிந்து உலக வாழ்வை நீத்து விட்டாய். அதுதான் புலப்படவில்லை.

ஆண்டுகள் பல எனக்கு வேண்டிய உதவிகள் செய்து காத்தாய். ஆதரித்தாய்.

பெருமை மிக்க நட்பு அதனை எவ்வாறு மறந்து விட்டாய் ''என்னோடு உடன் நீ வராதே! நிற்க'' என்று கூறி என்னைத் தடுத்துவிட்டாய்.

வாழ்வில் இயைந்த நான் உன் சாவில் கலக்க இடம் அளிக்க மறுத்து விட்டாய். உனக்கு வேண்டாதவன் ஆகிவிட்டேன்.

ஊழ் மறுபடியும் இந்தப் பிறவியில் ஒன்று சேர்ந்து வாழ வைத்தது; அதுபோல் மறுமையில் ஒன்று சேர்த்து வைப்பதாக.

அடுத்த பிறவியிலாவது நாம் மறுபடியும் ஒன்று கூடுவோம்; அதற்கு ஊழ் உதவுவதாக.

கலை உணக் கிழிந்த, முழவு மருள், பெரும் பழம்
சிலை கெழு குறவர்க்கு அல்கு மிசைவு ஆகும்
மலை கெழு நாட! மா வண் பாரி!
கலந்த கேண்மைக்கு ஒவ்வாய், நீ; எற்
புலந்தனை ஆகுவை-புரந்த ஆண்டே
பெருந் தகு சிறப்பின் நட்பிற்கு ஒல்லாது,
ஒருங்கு வரல் விடாது, 'ஒழிக' எனக் கூறி,
இனையைஆதலின் நினக்கு மற்று யான்
மேயினேன் அன்மையானே: ஆயினும்,
இம்மை போலக் காட்டி, உம்மை
இடை இல் காட்சி நின்னோடு
உடன் உறைவு ஆக்குக, உயர்ந்த பாலே!

திணை - அது; துறை - கையறுநிலை.

வேள் பாரி துஞ்சியவழி, அவன் மகளிரைப் பார்ப்பார்ப் படுத்து, வடக்கிருந்த கபிலர் பாடியது.

## 237. இள வெளிமான்

'நீடு வாழ்க' என்று யான் நெடிய வாயிலை அடைந்து வெளிமானைப் பாடி நின்ற பசி நாட்களில் அவன் கோடைக் காலத்துப் பெய்யும் மழையைப் போல் பொய்க்காமல் தந்து உதவியவன்.

அத்தகைய மேலோனை நாடி அவன் தரும் பரிசுக்காகக் காத்துக் கிடக்கிறோம்.

இந்தப் பரிசிலர் தம் பசி தீர்ந்து உண்ணட்டும் என்று விட்டு வைக்காமல் பாழுங் கூற்றம் அவனை அழைத்துக் கொண்டது. அறன் அற்ற கூற்றம் எங்கள் வாழ்க்கையை வறன் உறச் செய்து விட்டது.

அவன் மனைவியரும் வாயிலும் வயிற்றிலும் அடித்துக் கொண்டு கதறி அழ அவர்களைத் தனிமையில் ஆழ்த்திவிட்டது.

ஆக்கி வைத்த சோறு அதைத் திறந்து பார்த்தபோது சோறு இல்லை; வெறும் நெருப்புதான் கிளம்பியது. நச்சி வந்த அவனைக் காணவில்லை. நச்சு போன்ற இளையன் நீ தான் கிடைத்தாய்.

அண்ணனைக் காண வந்த இடத்தில் அவன் தம்பி நீ இருக்கிறாய்;

அவன் உயிர் பறித்த கூற்று வாழட்டும்!

அவன் மறைந்த பிறகு இனியாம் இங்கு இருந்து கொண்டு நீ இடும் சிறு பரிசிலைப் பெற்றுக் கொண்டு வாழ விரும்போம்.

யானை வேட்டைக்குச் செல்லும் புலி அது பசித்தாலும் எலியை நாடிச் செல்லாது. அதுபோல யாமும் பெரும் பரிசில் பெறச் செல்வோமே அன்றிச் சிறுமதி படைத்தவரை அண்டிக் கையேந்த மாட்டோம்.

நெஞ்சே! கடலை நோக்கிப் பாயும் ஆறுபோல யாம் செல்வோம். தக்கவனை அடைந்து மிக்க பரிசிலைப் பெறுவோம். சோர்ந்து கிடக்க வேண்டாம் . இங்கு இருந்து யாதும் பயனில்லை.

'நீடு வாழ்க!' என்று, யான் நெடுங் கடை குறுகிப்,
பாடி நின்ற பசி நாட்கண்ணே,
'கோடைக் காலத்துக் கொழு நிழல் ஆகிப்,
பொய்த்தல் அறியா உரவோன் செவிமுதல்
வித்திய பனுவல் விளைந்தன்று நன்று' என
நச்சி இருந்த நசை பழுதாக,
அட்ட குழிசி அழற் பயந்தாஅங்கு,
'அளியர்தாமே ஆர்க' என்னா
அறன் இல் கூற்றம் திறன் இன்று துணிய,
ஊழின் உருப்ப எருக்கிய மகளிர்
வாழைப் பூவின் வளை முறி சிதற,
முது வாய் ஒக்கல் பரிசிலர் இரங்கக்,
கள்ளி போகிய களரிஅம் பறந்தலை,
வெள் வேல் விடலை சென்று மாய்ந்தனனே:
ஆங்கு அது நோய் இன்றாக; ஓங்கு வரைப்

புலி பார்த்து ஒற்றிய களிற்று இரை பிழைப்பின்,
எலி பார்த்து ஒற்றாதாகும்; மலி திரைக்
கடல் மண்டு புனலின் இழுமெனச் சென்று
நனியுடைப் பரிசில் தருகம்,
எழுமதி, நெஞ்சே! துணிபு முந்துறுத்தே.

திணையும் துறையும் அவை.

வெளிமானுழைச் சென்றார்க்கு, அவன் துஞ்ச, இள மெளிமான் சிறிது கொடுப்ப, கொள்ளாது, பெருஞ்சித்திரனார் பாடியது.

## 238. வெளிமான்

கழுகின் சேவலும், பொகுவல் என்னும் பறவையும் தாழிப் பானையின் மீது அமர்ந்திருக்கின்றன. காக்கையும், பேராந்தையும் சேர்ந்து திரிகின்றன. பேய் நடமாட்டம் மிக்குள்ள சுடுகாட்டை நோக்கி வெளிமான் சேர்ந்து விட்டான். இன்று அவனுக்குக் கள் வழிபாடு செய்கின்றனர்.

அவன் காதல் மனைவியர் வளையல்கள் நீங்கப் பெற்றுப் பழைய அழகு வாடி வருத்தத்தில் ஆழ்ந்துள்ளனர். பாடும் சுற்றம் வருந்தி மெலிந்து விட்டனர். இவர்கள் பெரு வருத்தம் அடைய அவன் இவர்களை விட்டுப் பிரிந்து சென்று விட்டான்.

முரசங்கள் ஒரு காலத்தில் வரிசையாக நிறுத்தப்பட்டிருந்தன. அவை கிழிபட்டுக் கிடக்கின்றன. யானைகள் பாகர் மேலே அமர்தல் இன்றித் தனிமை உற்றன. மருப்புகள் இழந்து விட்டன.

வெம்மைமிக்க கொடிய கூற்றம் அவன் உயிரைப் பருகி விட்டது என்பது அறியாமல் யான் இங்கு வந்து சேர்ந்தேன். உள்ளம் தடுமாகிறேன். கலங்குகிறேன். கண்ணில்லாத ஊமன் கடலில் கலம் கவிழ விழுந்தால் கலங்குவான் அதைப் போல இச்சுற்றத்தினரைக் காக்க வழி தெரியாமல் அவலத்தில் சூழ்ந்துள்ளேன்.

கவி செந் தாழிக் குவி புறத்து இருந்த
செவி செஞ் சேவலும் பொகுவலும் வெருவா,
வாய் வன் காக்கையும் கூகையும் கூடிப்,
பேஎய் ஆயமொடு பெட்டாங்கு வழங்கும்

காடு முன்னினனே, கள் காமுறுநன்;
தொடி கழி மகளிரின் தொல் கவின் வாடிப்,
பாடுநர் கடும்பும் பையென்றனவே;
தோடு கொள் முரசும் கிழிந்தன, கண்ணே;
ஆள் இல், வரை போல், யானையும் மருப்பு இழந்தனவே;
வெந் திறல் கூற்றம் பெரும் பேதுறுப்ப,
எந்தை ஆகுதல் அதன் படல் அறியேன்;
அந்தோ! அளியேன் வந்தனென்; மன்ற
என் ஆகுவர்கொல், என் துன்னியோரே?
மாரி இரவின், மரம் கவிழ் பொழுதின்,
ஆர் அஞர் உற்ற நெஞ்சமொடு, ஓராங்குக்
கண் இல் ஊமன் கடற் பட்டாங்கு,
வரை அளந்து அறியாத் திரை அரு நீத்தத்து,
அவல மறு சுழி மறுகலின்,
தவலே நன்றுமன்; தகுதியும் அதுவே.

திணையும் துறையும் அவை.

வெளிமான் துஞ்சிய பின் அவர் பாடியது.

## 239. நம்பி நெடுஞ்செழியன்

புகழ்பட வாழ்ந்தவன் இவன். அவனை வாளால் இரு கூறுபடுத்தித்தான் அவனுக்குச் சிறப்புச் செய்ய வேண்டும் என்பது இல்லை. அவனைஅப்படியே புதைத்தாலும் ஒன்றுதான். தலைவேறு ஆக இருகூறுபடச் சிதைத்தாலும் ஒன்றுதான். அவன் சாதித்தவை பல. சுட்டு எரித்தாலும் அவன் உடம்பு மண்ணில் மறையலாம்; அவன் புகழ் என்றும் நிலைத்திருப்பது.

அவன் வாழ்ந்த காலம் அவன் செயல்பாடுகள் இவை. அவன் தோள் தொடி அணியப் பெற்றுப் பொலிவுடனே திகழ்ந்தவன். மணம்மிக்க சோலைகளுக்குச் சென்று பூப்பறித்து அவற்றைச் சூடிக் கொண்டவன். மணம் கமழும் சாந்தினைத் தன் மார்பில் பூசிக் கொண்டவன். தன்னுடன் மாறுபட்டு எதிர்த்தவரை அவர் கிளைகளுடன் அழித்தவன். தன்னிடம் நட்புப் பாராட்டுபவரை உயர்த்திப் பேசியவன்; தம்மினும் வலியர் என்பதால் அவர்கள் பின்சென்று புகழ்ந்து பேசாதவன். தம்மினும் எளியர் என்பதால் அவர்களிடம் தன் மிகுதியைப் பேசாதவன்.

பிறரைத் தான் அடைந்து இரப்பது அறியான். இரப்பவர்க்கு மறுத்து அறியான். அரசர்கள் கூடி இருக்கும் அவையத்தில் மிக்க புகழை வெளிப்படுத்தியவன்.

தன்னை எதிர்நோக்கி வரும் படையைத் தடுத்து நிறுத்தியவன். தான் எதிர்த்துப் போராடும் படைகளைப் புறம் காணும்படி செய்தவன். அவர்கள் உயிர் தப்பி ஓட வைத்தவன்.

குதிரைகளை விரைவாக ஓடச் செலுத்தியவன். களிறுகள் ஊர்ந்தவன். நெடுந் தெருக்களில் தேர்கள் செலுத்தியவன். இன்சுவை மிக்க கட்குடங்களைப் பலருக்கும் பகிர்ந்து அளித்தவன். பாணர்கள் மகிழ்வு அடைய அவர்கள் பசி தீர்த்தவன். நடுநிலை பிறழாது எதையும் பேசியவன்; அவன் பேச்சில் தெளிவு இருந்தது.

அவன் வாழ்ந்த நாட்களில் உலகுக்குச் செய்ய வேண்டிய நன்மைகள் யாவற்றையும் செம்மையுறச் செய்தான். அவன் வாழ்வு முழுமை கண்டது; நிறைவு உடையது. சாதனை மிக்கது. அவன் புகழ் என்றும் நிலைத்து நிற்பதாகும். அவன் வாழ்வு முழுமை பெற்றதாகும். வெற்றி கண்டது.

தொடியுடைய தோள் மணந்தனன்;
கடி காவில் பூச் சூடினன்;
தண் கமழும் சாந்து நீவினன்;
செற்றோரை வழிதபுத்தனன்;
நட்டோரை உயர்பு கூறினன்;
'வலியர்' என, வழிமொழியலன்;
'மெலியர்' என, மீக்கூறலன்;
பிறரைத் தான் இரப்ப அறியலன்;
இரந்தோர்க்கு மறுப்பு அறியலன்;
வேந்துடை அவையத்து ஓங்கு புகழ் தோற்றினன்;
வருபடை எதிர் தாங்கினன்;
பெயர்படை புறங்கண்டனன்;
கடும் பரிய மாக் கடலினன்;
நெடுந் தெருவில் தேர் வழங்கினன்;
ஓங்கு இயல களிறு ஊர்ந்தனன்;
தீம் செறி தசும்பு தொலைச்சினன்;

பாண் உவப்பப் பசி தீர்த்தனன்;
மயக்குடைய மொழி விடுத்தனன்; ஆங்குச்
செய்ப எல்லாம் செய்தனன் ஆகலின்-
இடுக ஒன்றோ! சுடுக ஒன்றோ!
பழி வழிப் படுக, இப் புகழ் வெய்யோன் தலையே!

திணையும் துறையும் அவை.
நம்பி நெடுஞ்செழியனைப் பேரெயின் முறுவலார் பாடியது.

## 240. ஆய் அண்டிரன்

குதிரையும் களிறும் தேரும் வளம்மிக்க நாடும் ஊரும் புலவர்க்கு பரிசிலாகத் தந்தவன் ஆய் அண்டிரன். அவன் மாண்டு ஒழிய அவனோடு அவன் துணைவியரும் ஒருங்கு மாய்ந்தனர். அவன் துறக்கம் அடைந்தனன்.

மரப் பொந்தில் தங்கி வாழும் ஆந்தை 'சுட்டுக்குவி' என்று கத்தி ஓசை எழுப்பும் இடுகாட்டில் அவன் சென்று மறைந்து விட்டான். அவனை இட்டுப் புதைத்து விட்டனர்.

அவனை நச்சி வாழ்ந்த புலவர்கள் இனிச் செய்வது யாது? புரவலரைத் தேடி அங்கங்குச் செல்ல முற்பட்டு விட்டனர். கல்லென் சுற்றத்தோடு வாடிய பசியினராகிப் புரவலரை நாடிப் பல திக்குகளுக்கு இனிச் செலவை மேற்கொண்டவர் ஆயினர். பிறர் நாடுகள் நோக்கிச் செலவை மேற்கொள்வார் ஆயினர்.

ஆடு நடைப் புரவியும், களிறும், தேரும்,
வாடா யாணர் நாடும் ஊரும்,
பாடுநர்க்கு அருகா ஆஅய் அண்டிரன்
கோடு ஏந்து அல்குல், குறுந் தொடி மகளிரொடு,
காலன் என்னும் கண்ணிலி உய்ப்ப,
மேலோர் உலகம் எய்தினன் எனாஅப்,
பொத்த அறையுள் போழ் வாய்க் கூகை,
'சுட்டுக் குவி' எனச் செத்தோர்ப் பயிரும்
கள்ளி அம் பறந்தலை ஒரு சிறை அல்கி,
ஒள் எரி நைப்ப உடம்பு மாய்ந்தது;
புல்லென் கண்ணர் புரவலர்க் காணாது,

கல்லென் சுற்றமொடு கையழிந்து, புலவர்
வாடிய பசியராகிப், பிறர்
நாடு படு செலவினர்ஆயினர், இனியே.

திணையும் துறையும் அவை.

ஆயைக் குட்டுவன் கீரனார் பாடியது.

## 241. ஆய் அண்டிரன்

திண்ணிய தேர்களை இரவர்க்குத் தந்த புகழ்மிக்க ஆய் அண்டிரன் வருகிறான் என்பதால் விண்ணுலகில் இந்திரன் கோயிலுள் முரசம் பேரொலி செய்ய ஆரவாரம் எழுகிறது. அவனைத் தேவர்கள் வரவேற்கக் காத்திருக்கின்றனர். வாழ்வாங்கு வாழ்ந்தவன்; அதனால் அவனுக்குத் துறக்க வாழ்வு காத்துக் கிடக்கிறது. வானவர் அவனைப் போற்றி வரவேற்பர்.

'திண் தேர் இரவலர்க்கு, ஈத்த, தண் தார்,
அண்டிரன் வரூஉம்' என்ன, ஒண் தொடி
வச்சிரத் தடக் கை நெடியோன் கோயிலுள்,
போர்ப்புறு முரசம் கறங்க,
ஆர்ப்பு எழுந்தன்றால், விசும்பினானே.

திணையும் துறையும் அவை.

அவனை உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் பாடியது.

## 242. ஒல்லையூர் கிழான் மகன் பெருஞ்சாத்தன்

எதிரிகளைக் கொன்று தன் ஆண்மையை வெளிப்படுத்திய வீரன் சாத்தன் மாய்த்து விட்டான்.

இளைய வீரர் இனிப் பூச்சூடிக் கொள்ளப் போவது இல்லை. மகளிர் இனிப் பூக்களைக் கொய்யப் போவது இல்லை; யாழ் மீட்டி இசை கூட்டி இனிப் பாணர் பூச்சூடிக் கொண்டு பாடப் போவது இல்லை; பாடினியும் பூ அணிந்து கொண்டு பொலிவோடு விளங்கப் போவது இல்லை.

*ஒல்லையூர் நாட்டின் முல்லையே நீ பூத்து என்ன பயன்? உன்னால் மட்டும் எவ்வாறு பூக்க முடிகிறது? உன்னை இத்துயர் வாட்டவில்லையா?*

இளையோர் சூடார்; வளையோர் கொய்யார்;
நல் யாழ் மருப்பின் மெல்ல வாங்கிப்,
பாணன் சூடான்; பாடினி அணியாள்;
ஆண்மை தோன்ற ஆடவர்க் கடந்த
வல் வேல் சாத்தன் மாய்ந்த பின்றை
முல்லையும் பூத்தியோ, ஒல்லையூர் நாட்டே?

திணையும் துறையும் அவை.

ஒல்லையூர் கிழான் மகன் பெருஞ்சாத்தனைக் குடவாயிற் கீரத்தனார் பாடியது.

## 243. ஒல்லையூர் கிழான் மகன் பெருஞ்சாத்தன்

*இனி நினைத்துப் பார்த்தால் கழிந்த நாட்கள் மீண்டும் வரப் போவது இல்லை; அதை நினைத்துப் பார்த்தால் இரங்கத்தான் வேண்டி உள்ளது.*

*மணலில் பாவைக்குப் பூப் புனைந்து குளத்தில் நீர் ஆடிய மகளிர். அவர்களோடு கை கோத்துத் தழுவிக் கொண்டும் ஓடி விளையாடியும், ஓய்ந்து கதைகள் பேசியும் கள்ளங் கபடமற்றுப் பழகினோம். அச்சிறுமியரோடு மருத மரத்தின் கிளை மீது ஏறிக் கிணற்றில் நீரில் துடுமெனப் பாய்ந்து கரையவர் மருளவும் நீர்த்திரை பிதிரவும் குளித்து மணல் கொண்ட அந்தக் கல்லா இளமை யாண்டு சென்று மறைந்ததோ தெரியவில்லை.*

*இனிப் பூண் பூட்டிய தடியை ஊன்றிக் கொண்டு நடுக்குற்று இருமல் இடையே சில சொற்களைப் பேசும் மூதாளர் ஆகிவிட்டோம்.*

இனி நினைந்து இரக்கம் ஆகின்று: திணி மணல்
செய்வுறு பாவைக்குக் கொய் பூத் தைஇத்,
தண் கயம் ஆடும் மகளிரொடு கை பிணைந்து,
தழுவுவழித் தழீஇத், தூங்குவழித் தூங்கி,
மறை எனல் அறியா மாயம் இல் ஆயமொடு

உயர் சினை மருதத் துறை உறத் தாழ்ந்து,
நீர் நணிப் படி கோடு ஏறிச், சீர் மிகக்,
கரையவர் மருளத், திரையகம் பிதிர,
நெடு நீர்க் குட்டத்துத் துடுமெனப் பாய்ந்து,
குளித்து மணற் கொண்ட கல்லா இளமை
அளிதோதானே! யாண்டு உண்டு கொல்லோ-
தொடித் தலை விழுத் தண்டு ஊன்றி, நடுக்குற்று,
இரும் இடை மிடைந்த சில சொல்
பெரு மூதாளரேம் ஆகிய எமக்கே?

திணையும் துறையும் அவை.

தொடித் தலை விழுத்தண்டினார் பாடியது. ஒல்லையூர் கிழான் மகன் பெருசாத்தானாரிடம் உரையாடல்.

## 244. கையறு நிலை

*பாணர் தம் சென்னியில் பூக்கள் சூடிக் கொள்ளவில்லை; அதனால் வண்டுகளும் சென்று ஊதவில்லை.*

*விறலியரும் தன் முன் கையில் தொடிகளை அணிந்து கொண்டிலர். இரவலர்களும் பாடிச் சென்று பரிசில் பெறச் செல்வது இல்லை.*

பாணர் சென்னியும் வண்டு சென்று ஊதா;
விறலியர் முன்கையும் தொடியின் பொலியா;
இரவலர் மாக்களும் .... .... .....

திணையும் துறையும் அவை.

## 245. சேரமான் கோட்டம் பலத்துத் துஞ்சிய மாக்கோதை

*பிரிவின் துக்கம் அதற்கு எல்லை காதலி இறந்தால் உடன் உயிர் விடவேண்டும் என்பது, அதைச் செய்து முடிக்காமல் இன்னும் உயிர் வாழ்ந்து கொண்டிருக்கிறேன். வேதனை தருகிறது.*

*கள்ளிச் செடி காடாக வளர்ந்துள்ளது. இந்தச் சுடுகாட்டில் இங்கே பலரும் காண விறகுக்கு எரியிட்டு அதில் அவளைப் பள்ளி*

கொள்ளச் செய்து விட்டனர். அவள் பற்றி எரிகிறாள். நாங்கள் சுற்றி நிற்கிறோம்.

இதுவா உறவு? உடன் உயிர் விடாத பிணைப்பு; அதற்காக வெட்கப்படுகிறேன். இன்னும் உயிர்வாழ்ந்து கொண்டிருக்கிறேன். இது என்ன பிழைப்பு!

யாங்குப் பெரிதுஆயினும், நோய் அளவு எனைத்தே,
உயிர் செகுக்கல்லா மதுகைத்து அன்மையின்?
கள்ளி போகிய களரியம் பறிந்தலை
வெள்ளிடைப் பொத்திய விளை விறகு ஈமத்து,
ஒள்-அழற் பள்ளிப் பாயல் சேர்த்தி,
ஞாங்கர் மாய்ந்தனள், மடந்தை;
இன்னும் வாழ்வல்; என் இதன் பண்பே!

திணையும் துறையும் அவை.

சேரமான் கோட்டம்பலத்துத் துஞ்சிய மாக்கோதை தன் பெருங்கோப்பெண்டு துஞ்சிய காலைச் சொல்லிய பாட்டு.

# 246. பூத பாண்டியன் தேவி பெருங்கோப் பெண்டு

இங்குக் குழுமி உள்ள சான்றோர்களே! உங்கள் போக்கு மாறுபட்டு உள்ளது. சூழ்ச்சி மிக்கது போல் தெரிகிறது. ''செல்க'' என்று என்னை அனுப்பி இருக்க வேண்டும. ''தவிர்க'' என்று கூறி என்னைத் தடுத்து விட்டீர்.

கைம்பெண் மகளிர் அவர் விடும் கண்ணீர் நீர் அறியாதது இல்லை.

வெந்தும் வேகாததுமான வேளைக்கீரை கலந்த சோறு வெள்ளை எள்ளும் புளியும் இட்டு அட்டது; அணில் வரி போன்ற வெள்ளரிக்காயின் விதை போன்ற சோற்றுத் திரள் நறு நெய் கலவாதது. நீர் ஊற்றிக் கையால் பிழிந்து உண்ணுகின்றனர். படுக்கப் பாய் இல்லை. பருக்கைக் கற்கள் மிக்க கட்டாந்தரை. இதில் படுத்து உறங்க வேண்டும். இது காலத்திற்கும் கைம்பெண்கள் படும் வேதனை.

கணவனை இழந்து இவ்வாறு தனித்து வாழ்வதைவிட அவன் எரியும் அழலில் விழுந்து யானும் உயிர் விடுவதே மேலானது ஆகும். எங்களுக்கு அந்த நெருப்பும் தாமரைப் பொய்கையும் ஒன்றுதான். இதை அறிவீராக!

பல் சான்றீரே! பல் சான்றீரே!
'செல்க' எனச் சொல்லாது, 'ஒழிக' என விலக்கும்,
பொல்லாச் சூழ்ச்சிப் பல் சான்றீரே!
அணில் வரிக் கொடுங் காய் வாள் போழ்ந்திட்ட
காழ் போல் நல் விளர் நறு நெய் தீண்டாது,
அடை இடைக் கிடந்த கை பிழி பிண்டம்,
வெள் எள் சாந்தொடு, புளிப் பெய்து அட்ட
வேளை வெந்தை, வல்சி ஆகப்,
பரல் பெய் பள்ளிப் பாய் இன்று வதியும்
உயவல் பெண்டிரேம் அல்லேம் மாதோ;
பெருங் காட்டுப் பண்ணிய கருங் கோட்டு ஈமம்
நுமக்கு அரிதாகுகதில்ல; எமக்கு எம்
பெருந் தோள் கணவன் மாய்ந்தென, அரும்பு அற
வள் இதழ் அவிழ்ந்த தாமரை
நள் இரும் பொய்கையும் தீயும் ஓரற்றே!

திணை - அது; துறை - ஆனந்தப்பையுள்.

பூத பாண்டியன் தேவி பெருஞ்கோப்பெண்டு தீப் பாய்வாள் சொல்லியது.

## 247. பூத பாண்டியன் தேவி பெருங்கோப்பெண்டு

யானை சுமந்து எடுத்துக் கொண்டு வரும் விறகைக் காட்டில் வாழும் குடிவாசிகள் மூட்டும் நெருப்பு ஒளியில் மான் கூட்டம் வந்து துயில அதை மந்தி சீண்டி எழுப்புகிறது. இத்தேவியின் கோயில் முற்றத்தில் சுடுகாடு நோக்கி விரித்த கூந்தலோடு தனியாக எரியழல் நோக்கி நடக்கிறாள்.

இவள் அரண்மனையில் வாழ்ந்திருந்த காலத்தில் தன் கணவன் தாமதமாக வந்தாலும் அவளால் தாங்கிக் கொள்ள முடியாது. நடுக்கமுற்றவள்; அப்படி அஞ்சியவள் இன்று தன் இளமையை ஒதுக்கி வைத்துவிட்டுத் துணிவோடு புறங்காடு நோக்கிச் செல்கிறாள். தனியாகச் செல்கிறாள்.

யானை தந்த முளி மர விறகின்
கானவர் பொத்திய ஞெலி தீ விளக்கத்து,
மட மான் பெரு நிரை வைகு துயில் எடுப்பி,
மந்தி சீக்கும் அணங்குடை முன்றிலில்,
நீர் வார் கூந்தல் இரும் புறம் தாழப்,
பேர் அஞர்க் கண்ணள், பெருங் காடு நோக்கித்,
தெருமரும் அம்ம தானே- தன் கொழுநன்
முழவு கண் துயிலாக் கடியுடை வியல் நகர்ச்
சிறு நனி தமியள்ஆயினும்,
இன் உயிர் நடுங்கும் தன் இளமை புறங்கொடுத்தே!

திணையும் துறையும் அவை.

அவள் தீப் பாய்வாளைக் கண்டு மதுரைப் பேராலவாயார் சொல்லியது.

## 248. ஒக்கூர் மாசாத்தனார்

*இந்தச் சிறிய ஆம்பல் இரங்கத்தக்கது ஆகும். இளமைக் காலத்தில் யாம் உடுத்துக் கொள்ளத் தழை ஆகியது. இனி வளம் நிரம்பிய வாழ்க்கையைத் தந்த கொழுநன் மாய்ந்து விட்டதால். இனிமையல்லா வைகறைப் பொழுதில் ஒவ்வொரு நாளும் உண்ண ஆம்பல புல்லரிசி உதவுகிறது.*

அளியதாமே, சிறு வெள் ஆம்பல்!-
இளையமாகத் தழை ஆயினவே; இனியே,
பெரு வளக் கொழுநன் மாய்ந்தெனப், பொழுது மறுத்து,
இன்னா வைகல் உண்ணும்
அல்லிப் படூஉம் புல் ஆயினவே.

திணை - அது; துறை - தாபத நிலை.

ஒக்கூர் மாசாத்தனார் பாடியது.

## 249. தும்பைச் சொகினனார்

*நெல்கதிர் முனைபோலும் மூக்கை உடைய ஆரல் மீன் கீழ்ச் சேற்றில் ஒளித்துக் கொள்கிறது; வாளை மீன் நீர்மேல் பிறழுகிறது;*

வயல்களில் ஆமைகள் பிறழுகின்றன. சினை முதிர்ந்த வராலையும், கயல் மீனையும் முகந்து எடுத்துக் கொள்கின்றனர்.

அத்தகைய அகன்ற நாட்டை உடைய தலைவன் நேற்றைய நாள் பகுத்து உண்ணப் பலரையும் கூட்டி உணவு உட்கொள்ளப் பேரிடத்தைத் தேர்ந்து எடுத்தான். இன்று உயர்நிலை உலகம் புக அவன் துணைவி புழுதி படிந்த முறம் அளவு சிறிய இடத்தைச் சுத்தம் செய்து அழுத கண்ணளாய்ச் சாணம் கொண்டு அந்த இடத்தை மெழுகுவாள் ஆயினாள்.

கதிர் மூக்கு ஆரல் கீழ்ச் சேற்று ஒளிப்பக்,
கணைக் கோட்டு வாளை மீநீர்ப் பிறழ,
எரிப் பூம் பழனம் நெரித்து உடன் வலைஞர்
அரிக் குரல் தடாரியின் யாமை மிளிரப்,
பனை நுகும்பு அன்ன சினை முதிர் வராலொடு,
உறழ் வேல் அன்ன ஒண் கயல் முகக்கும்,
அகல் நாட்டு அண்ணல் புகாவே, நெருநைப்
பகல் இடம் கண்ணிப் பலரொடும் கூடி,
ஒருவழிப்பட்டன்று; மன்னே! இன்றே,
அடங்கிய கற்பின், ஆய் நுதல் மடந்தை,
உயர் நிலை உலகம் அவன் புக வார
நீறு ஆடு சுளகின் சீறிடம் நீக்கி,
அழுதல் ஆனாக் கண்ணள்,
மெழுகும், ஆப்பி கண் கலுழ் நீரானே.

திணையும் துறையும் அவை.

..... தும்பி சேர் கீரனார் பாடியது.

## 250. தாயங் கண்ணியார்

ஒரு காலத்தில் 'குய்' என்ற ஓசையுடன் கொழுந் துவையலு டன் கூடிய சோறு இரவலரைத் தடுத்து நிறுத்தியது. தன்னால் புரக்கப்படுவாரது கண்ணீர் மாற்றிய அத்தகைய குளிர்ந்த நறிய பந்தலில் இன்று அவன் துணைவி கூந்தல் களையப் பெற்று வளையலை நீக்கி விட்டுப் புல்லரிசி உண்கிறாள்.

அவன் வாழ்ந்த காலத்தில் அவன் புதல்வர்கள் சோறு வயிறார உண்பர்; அதன் பின் பருகச் சுவைமிக்க பால் வேண்டுவர்.

*எப்பொழுதும் ஏதாவது கேட்டு வெறுப்புக் காட்டுவர். இவ்வாறு வாழ்ந்த வாழ்க்கை அது.*

*இன்று அவன் புறங்காட்டை அடைந்து விட்டான். அதனால் அந்த வீடு பொலிவிழந்து விட்டது.*

குய் குரல் மலிந்த கொழுந் துவை அடிசில்
இரவலர்த் தடுத்த வாயில், புரவலர்
கண்ணீர்த் தடுத்த தண் நறும் பந்தர்,
கூந்தல் கொய்து, குறுந் தொடி நீக்கி,
அல்லி உணவின் மனைவியொடு, இனியே
புல்லென்றனையால் - வளம் கெழு திரு நகர்!-
வான் சோறு கொண்டு தீம் பால் வேண்டும்
முனித்தலைப் புதல்வர் தந்தை
தனித் தலைப் பெருங் காடு முன்னியபின்னே.

திணையும் துறையும் அவை.
தாயங்கண்ணியார் பாடியது.

## 251. மாரிப் பித்தியார்

*மூங்கில் தழைக்கும் நெடிய மலையில் அருவி யாடி அதன் பின் காட்டு யானை தந்த விறகைக் கொண்டு வேள்விச் செந்தீ எழுப்பி முதுகு புறத்தில் தாழும் சடையை இன்று உலர்த்துகிறான். இவன் இன்று தவசியாகச் செயல்படுகிறான்.*

*ஓவியம் போல் அழகுமிக்க வீட்டில் கொல்லிப் பாவை போல் விளங்கிய இளம் பெண்கள் இவனைக் கண்டு இவனை அடையப் பெறாமையால் மெலிந்து வளையல்களை நெகிழ்த்தனர். அது ஒரு காலம். மகளிரைக் கவர்ந்த அழகன்; இவன் இப்பொழுது தவசியாக மாறிவிட்டான். இது வியப்பைத் தருகிறது.*

ஓவத்து அன்ன இடனுடை வரைப்பில்,
பாவை அன்ன குறுந் தொடி மகளிர்
இழை நிலை நெகிழ்த்த மள்ளற் கண்டிகும்;
கழைக் கண் நெடு வரை அருவி ஆடிக்,
கான யானை தந்த விறகின்

கடுந் தெறல் செந் தீ வேட்டுப்,
புறம் தாழ் புரி சடை புலர்த்துவோனே!

திணை - வாகை; துறை - தாபத வாகை
மாரிப்பித்தியார் பாடியது.

## 252. மாரிப் பித்தியார்

ஒலிக்கும் வெள்ளருவி நீர் அதனை ஏற்றுக் கொண்டதால் அவன் சடை நிறம் மாறித் தில்லந்தளிர் போலப் புன்மை அடைந்து கிடக்கிறது. இன்று இவன் தாளி இலையைப் பறித்துக் கொண்டிருக்கிறான்.

இதற்குமுன் இல் வழங்கும் இள மயில் போன்ற தன் மனைவி மடந்தையைப் பிணிக்கும் சொல்வலை வேட்டுவனாக விளங்கினான். இனிது இல்லறம் நடத்தியவன்; இன்று தவ வாழ்க்கையை மேற்கொண்டிருக்கிறான். இது வியக்கத் தக்கது.

கறங்கு வெள் அருவி ஏற்றலின், நிறம் பெயர்ந்து,
தில்லை அன்ன புல்லென் சடையோடு,
அள் இலைத் தாளி கொய்யுமோனே—
இல் வழங்கு மட மயில் பிணிக்கும்
சொல் வலை வேட்டுவன் ஆயினன்,முன்னே!

திணையும் துறையும் அவை.
அவனை அவர் பாடியது.

## 253. குளம்பந்தாயனார்

போருக்குச் செல்லும் வீரர்கள் இளைஞர்கள் பெருமிதத்துடனும் மகிழ்வுடனும், விளங்குகின்றனர். அவர்களோடு ஒருவனாக நீ விளங்க வேண்டியவன் நீ; உயிருக்கு ஓய்வு தந்து சாவினைச் சந்தித்து விட்டாய்.

நீ எனக்கு என்ன சொல்லப் போகிறாய். ''அழாதே! நீ நம் ஊர்ச் சுற்றத்துக்கு என் இறப்பினை எடுத்து உரை; வயிற்றிலும் வாயிலும் அடித்துக் கொண்டு இச் செய்தியைக் கொண்டு செல்க.

*கை வளையல்கள் நீங்க விதவைக் கோலத்துடன் ஊர்போய்ச் சேர்க! அவலம் கொள்ளாதே'' என்று உரைக்கப் போகின்றாய்.*

*இன்னும் யான் உயிர் விடாமல் இருக்கிறேன். அது கொடிது.*

என் திறத்து அவலம் கொள்ளல், இனியே;
வல் வார் கண்ணி இளையர் திளைப்ப,
'நகா அல்' என வந்த மாறே, எழா நெல்
பைங் கழை பொதி களைந்தன்ன விளர்ப்பின்,
வளை இல், வறுங் கை ஓச்சிக்,
கிளையுள் ஒய்வலோ? கூறு நின் உரையே!

திணை - பொதுவியல்; துறை - முதுபாலை
குளம்பந்தாயனார் பாடியது.

## 254. கயமனார்

*உன்னோடு சேர்ந்து வந்தவர்கள் இளைஞர்கள் முதியவர்கள்; அவர்கள் மட்டும் போர் முடிந்து வேற்றுப் புலம் நோக்கிச் சென்று கொண்டு இருக்கின்றனர்.*

*நீ ஒருவன் மட்டும் மண்ணில் கிடந்து மேல் ஏழ மறுக்கிறாய்; தட்டிப் பார்க்கிறேன்; விட்டு எங்களைப் பிரிந்து விட்டாய்.*

*இனிய வளையல் நீங்கிய என் விளர்த்த கையை மேலே தூக்கி இந்தச் செய்தியைச் சுற்றத்தவர்க்கு யான் எப்படி அறிவிப்பேன்.*

*உன் அன்னை அவளுக்கும், சுற்றத்தவர்க்கும் நீ ஆலமரம் போல இருந்தாய். பழங்கள் முற்றிய ஆலமரம் பறவைகள் உண்ண மொய்க்கின்றன. அதைப் போல் அவர்களை நீ வளமுடன் வாழ வைத்தாய்.*

*உன்னையே புகழ்ந்து பேசி உன்னையே நினைந்து நீ தான் கதி என்று வாழும் உன் தாய்க்கு நீ வழியில் கிடந்து விழி திறக்காமல் இருக்கிறாய் என்பதை யான் எவ்வாறு கூறுவேன்! அதற்கு வழி கூறுக. அவள் இரங்கத் தக்கவள்.*

இளையரும் முதியரும் வேறு புலம் படர,
எடுப்ப எழாஅய், மார்பம் மண் புல்ல,
இடைச் சுரத்து இறுத்த மள்ள! விளர்த்த
வளை இல் வறுங் கை ஓச்சிக், கிளையுள்,
'இன்னன் ஆயினன்; இளையோன்'என்று,
நின் உரை செல்லும்ஆயின், 'மற்று
முன் ஊர் பழுனிய கோளி ஆலத்துப்,
புள் ஆர் யாணர்த்தற்றே, என் மகன்
வளனும் செம்மலும் எமக்கு' என நாளும்
ஆனாது புகழும் அன்னை
யாங்கு ஆகுவள்கொல்? அளியள் தானே!

திணையும் துறையும் அவை.

..... கயமனார் பாடியது.

## 255. வன்பரணர்

துடித்துக் கிடக்கிற உன்னை எடுத்துச் செல்வது எப்படி? 'அய்யோ' என்று அலறுவேன்; புலிக்கு அஞ்சுகிறேன்.

உன்னை வாரி அணைத்து எடுத்துச் செல்ல முனைகிறேன். உன் மார்பினை எடுக்கும் ஆற்றல் என்பால் இல்லை.

யான்படும் வேதனை இது; உன்னை இவ்வாறு ஆக்கிய அறன் இல்லாத கூற்றும் இத்துயரினை அடையட்டும்.

என்ன செய்வது? இங்குக் கிடப்பதால் பயன் இல்லை; கையைப் பற்றிக்கொண்டு சிறிது மெல்ல நடந்து வருக. மலை நிழலில் சற்றுத் தங்கி இளைப்பாறுவோம்.

'ஐயோ!' எனின், யான் புலி அஞ்சுவலே;
அணைத்தனன் கொளினே, அகல் மார்பு எடுக்கவல்லேன்;
என்போல் பெரு விதிர்ப்புறுக, நின்னை
இன்னாது உற்ற அறன் இல் கூற்றே!
நிரை வளை முன் கை பற்றி-
வரை நிழல் சேர்கம் - நடத்திசின் சிறிதே!

திணையும் துறையும் அவை.

வன்பரணர் பாடியது.

## 256. தனிமகள் புலம்பிய முதுபாலை

தாழி செய்யும் வேட்கோவே! அச்சு உடைய வண்டி அதன் ஆரத்தில் பொருந்திய சிறு வெண் பல்லி போல இவரோடு பாதைகள் பலவும் கடந்து உடன் வந்த எனக்கும் சேர்த்து ஒரு பெரிய தாழியை இந்த ஈமச் சுடுகாட்டில் வைக்கச் செய்து கொடுப்பாயாக.

இவ்வூரில் காலம் காலமாகக் கலம் செய்யும் கோவே; இதனை வனைந்து கொடு.

> கலம் செய் கோவே! கலம் செய் கோவே!
> அச்சுடைச் சாகாட்டு ஆரம் பொருந்திய
> சிறு வெண் பல்லி போலத், தன்னொடு
> சுரம் பல வந்த எமக்கும் அருளி,
> வியல் மலர் அகன் பொழில் ஈமத் தாழி
> அகலிதாக வனைமோ-
> நனந்தலை மூதூர்க் கலம் செய் கோவே!

திணையும் துறையும் அவை.

## 257. உண்டாட்டு

பசு நிரை மீட்டு வரச் சென்ற வெட்சி வீரன் இவன். செருப்பிடைச் சிறுபரற் கல் இருப்பதுபோலப் பகைவர்க்கு இவன் துன்பம் விளைவித்தவன். திரண்ட கணைக்கால்; அழகிய வயிறு; அகன்ற மார்பு; பசிய கண்கள்; குச்சுப் புல் போன்று அடர்த்தியாக விளங்கும் கரிய தாடி; செவி மறைக்கும் தாழ்ந்த மயிர்முடி; வில்லோடு விளங்குகிறான் இவன்; முன்பின் அறியப்படாதவன்.

இவன் ஊரைவிட்டு இதற்குமுன் வெளியே சென்றது இல்லை. பகைவர்க்கு அஞ்சிக் காட்டை அரணாகக் கொண்டு மறைந்து கொண்டதும் இல்லை. போர்ப் பயிற்சி இவன் முறை யாகப் பெறாதவன்.

விடியற்காலை பகைவர் பசுநிரைகளைக் கொண்டு செல்வதைப் பார்த்தான்; அவ்வளவுதான். அவசரப்படவில்லை. சூழ்ந்து எண்ணிச் செயல்பட்டான். பகை வீரர்கள் பசுநிரையை

விட்டு ஓடினர். அவற்றை மடக்கிக் கொண்டு வந்தான். அவை மிகப்பல; அவற்றைத் தான் வைத்துக் கொள்ளவில்லை; பொழுதுவிடியத் தம் மகளிரை மத்தொலி எழுப்பச் செய்திருக்கலாம். அவ்வாறு இன்றி ஊரவர்க்குப் பங்கிட்டுத் தந்தான். இது வியப்புக்குரியது.

செருப்பு இடைச் சிறு பரல் அன்னன்; கணைக் கால்,
அவ் வயிற்று அகன்ற மார்பின், பைங் கண்,
குச்சின் நிரைத்த குரூஉ மயிர் மோவாய்,
செவி இறந்து தாழ்தரும் கவுளன், வில்லொடு,
யார்கொலோ, அளியன்தானே! தேரின்
ஊர் பெரிது இகந்தன்றும் இலனே; அரண் எனக்
காடு கைக் கொண்டன்றும், இலனே; காலைப்,
புல்லார் இன நிரை செல் புறம் நோக்கி,
கையின் சுட்டிப் பையென எண்ணிச்,
சிலையின் மாற்றியோனே; அவைதாம்
மிகப் பலவாயினும், என் ஆம்-எனைத்தும்
வெண் கோள் தோன்றாக் குழிசியொடு,
நாள் உறை மத்து ஒலி கேளாதோனே.

திணை - வெட்சி; துறை - உண்டாட்டு.

................................................

## 258. உலோச்சனார்

முள்ளை உடைய காரைப் பழத்தைப் போல் புளித்துச் சுவைக்கும் கள்ளைப் பசுநிரைகள் தந்து பெறுவான். அதற்குத் துணையாக வெந்ததும் வேகாததுமான இறைச்சியைத் தின்று முடிப்பதற்கு முன் மற்றோர் புலத்தை நோக்கிச் செல்வான்.

தான் ஒருமுறை தின்று முடிப்பதற்குள் ஊர்ப்புறத்தில் பல பசுநிரைகளைக் கொண்டு வந்து நிறுத்தி விடுவான்.

அவன் பசுநிரையோடு உடம்பெல்லாம் துகள் படிய வருவான். அவனுக்காகக் கள்சாடியைப் பத்திரப்படுத்தி வைக்கவும். மற்றுஎவருக்கும் தாராமல் காப்பாற்றி வைக்கவும். கள் இல்லை என்றால் அவன் காய்வான்; கள் வெறியன் அவன்.

முட் கால் காரை முது பழன் ஏய்ப்பத்
தெறிப்ப விளைந்த தேம் கந்தாரம்
நிறுத்த ஆயம் தலைச் சென்று உண்டு,
பச்சூன் தின்று, பைந் நிணம் பெருத்த
எச்சில் ஈர்ங் கை விற்புறம் திமிரிப்,
புலம் புக்கனனே, புல் அணற் காளை;
ஒரு முறை உண்ணாஅளவைப், பெரு நிரை
ஊர்ப்புறம் நிறையத் தருகுவன்; யார்க்கும்
தொடுதல் ஓம்புமதி, முது கட் சாடி;
ஆ தரக் கழுமிய துகளன்,
காய்தலும் உண்டு, அக் கள் வெய்யோனே!

திணையும் துறையும் அவை.

.....................................

# 259. கோடை பாடிய பெரும் பூதனார்

*வெட்சிப் படைவீரர் பசுநிரைகளைக் கவர்ந்து சென்று உள்ளனர். அவை முன்னே செல்ல அதன்பின் வில் ஏந்திய மறவர்கள் இலை புதை பெருங்காட்டுள் மறைந்து ஒதுங்கி இருப்பர்.*

*மறவனே! அவசரப்பட்டு அங்குச் செல்வது தவிர்க! தெய்வம் உற்ற புலை மகள்போலத் தாவித் தெறித்துச் செல்லும் பசுநிரை நோக்கி நீ செல்வதைத் தவிர்க; சூழ்ந்து எண்ணிச் செயல்படுக. உன் ஊக்கம் குறைவு பெறாமல் செயல்படுக.*

ஏறுடைப் பெரு நிரை பெயர்தரப், பெயராது,
இலை புதை பெருங்காட்டுத் தலை கரந்து இருந்த
வல் வில் மறவர் ஒடுக்கம் காணாய்;
செல்லல், செல்லல், சிறக்க, நின் உள்ளம்,
முருகு மெய்ப் பட்ட புலைத்தி போலத்
தாவுபு தெறிக்கும் ஆன்மேல்-
புடை இலங்கு ஒள் வாள் புனை கழலோயே!

திணை - கரந்தை; துறை - செரு மலைதல், பிள்ளைப் பெயர்ச்சியும் ஆம்.

கோடை பாடிய பெரும்பூதனார் பாடியது.

# 260. வடமோதங்கிழார்

*யாழின் இனிய இசையை எழுப்பாமல் தளரும் நெஞ்சத்தோடு ஊக்கம் குன்றி இருக்கிறாய்.*

*மனையோள் ஒருத்தி யாரோ விரித்த கூந்தலோடு எதிரே வர அது அபசகுனமாக அமைந்து விட்டது.*

*அத் தீய சகுனத்துக்கு அஞ்சிக் களர் நிலத்தில் கள்ளி மரத்து நிழலில் உள்ள தெய்வத்தை வாழ்த்திவிட்டுப் பசியுடன் வாடும் வயிற்றினை உடையாய்; நீ கசிந்து கைதொழுது ''எம் தலைவனைக் காண்பேனோ'' என்று ஏக்கத்தோடு வினவுகின்றாய்.*

*பாணனே கேட்பாயாக! பிழைப்பது எப்படி? அதைப் பற்றித் தானே உன் சிந்தனை? உன் கையிருப்பு; அது அவன் தந்தது. அதை வைத்துக் கொண்டு காலம் கடத்துக! இல்லை இரத்தல்தான் வழி என்றால் அதனைத் தொடங்குக. வேறு பிறரை நாடுக. இவை தவிர வேறு வழியில்லை.*

*நீ தேடும் தலைவன் அவன் கதை சொல்லுகிறேன் கேள். அடுத்த ஊர்க்காரர்கள். அவர்களை எதிர்த்து அவர்கள் கொண்டு சென்ற பசுநிரையைக் கொண்டு வந்து சேர்த்தான். அரவுக் கோள்பட்ட திங்களை மீட்பது போல் பசுவையும் கன்றையும் மீட்டுக் கொண்டு வந்து சேர்த்தான். அரவு தன் தோலை உரித்து அதனைக் களைந்து போடுவதுபோலத் தன் உடலை மண்மீது போட்டு விட்டு அவன் விண்ணுலக வாழ்வை அடைந்தான்.*

*காட்டுச் சிற்றாறு; அதன் கரையில் உள்ள கம்பம் காற்று அடித்துச் சாய்வது போல அவன் அம்புகள் தைக்கப்பட்டு அங்கேயே அப்போரின் கண் சாய்ந்து மறைந்தான்.*

*அவன் பெயரும் புகழும் எழுதிப் பீலி சூட்டிப் பிறர் நடமாட்டம் இல்லாத சிறு இடத்தில் பந்தல் எழுப்பி நடுகல் வைத்துள்ளனர். அதோ அந்தக் கல் இருக்கிறது. வேண்டுமானால் சென்று காண்க.*

வளரத் தொடினும், வெளவுபு திரிந்து,
விளரி உறுதரும் தீம் தொடை நினையாத்,
தளரும் நெஞ்சம் தலைஇ, மனையோள்

உளரும் கூந்தல் நோக்கிக், களர
கள்ளி நீழற் கடவுள் வாழ்த்திப்,
பசி படு மருங்குலை, கசிபு, கைதொழாஅக்,
'காணலென்கொல்?' என வினவினை வரூஉம்
பாண! கேண்மதி, யாணரது நிலையே:
புரவுத் தொடுத்து உண்குவை ஆயினும், இரவு எழுந்து
எவ்வம் கொள்குவைஆயினும், இரண்டும்,
கையுள போலும்; கடிது அண்மையவே
முன் ஊர்ப் பூசலின் தோன்றித், தன் ஊர்
நெடு நிரை தழீஇய மீளியாளர்
விடு கணை நீத்தம் துடி புணை ஆக,
வென்றி தந்து, கொன்று கோள் விடுத்து,
வையகம் புலம்ப வளைஇய பாம்பின்
வை எயிற்று உய்ந்த மதியின், மறவர்
கையகத்து உய்ந்த கன்றுடைப் பல் ஆன்
நிரையொடு வந்த உரையன் ஆகி,
உரி களை அரவம் மானத், தானே
அரிது செல் உலகில் சென்றனன்; உடம்பே,
கானச் சிற்றியாற்று அருங் கரைக் கால் உற்றுக்,
கம்பமொடு துளங்கிய இலக்கம்போல,
அம்பொடு துளங்கி ஆண்டு ஒழிந்தன்றே;
உயர் இசை வெறுப்பத் தோன்றிய பெயரே,
மடம்சால் மஞ்ஞை அணி மயிர் சூட்டி,
இடம் பிறர் கொள்ளாச் சிறு வழிப்,
படம் செய் பந்தர்க் கல் மிசையதுவே.

திணை - அது; துறை - கையறு நிலை; பாண்பாட்டும் ஆம்.

வடமோதங் கிழார் பாடியது.

## 261. ஆவூர் மூலங்கிழார்

*இத் தலைவனின் முற்றம் அடையாத வாயிலைக் கொண்டு விளங்கி இருந்தது. இன்று அது வற்றிய ஆற்றில் தனித்து விடப்பட்ட ஓடம் போல வெறிச்சிட்டுக் கிடக்கிறது. பாழ்பட்டு விட்டது. இதைப் பார்க்கும் என் விழிகள் குருடு ஆகிப் போகட்டும். இது கொடுமைமிக்கது.*

இது ஒரு காலத்தில் வருவார் போவார் திகைப்பு அடையும் நிலையில் நெய்யில் ஆட்டு இறைச்சி வறுக்கும் ஓசை கேட்டுக் கொண்டே இருக்கும். புதியவர்கள் இதைக் கண்டு கண் பூப்பர். வியப்பில் ஆழ்வர்.

இன்று அவ்வீட்டுத் தலைவன் ஆநிரைகளை மீட்டு வரக் கரந்தை சூடிச் சென்றான். அதனை மீட்டுத் தந்தான். அதில் உயிரையும் தந்தான். அவன் நடுகல் ஆயினான்.

அந்த முற்றம் கணவனை இழந்த கைம்பெண் போலப் பொலிவு இழந்து கிடக்கிறது.

அந்தோ! எந்தை அடையாப் பேர் இல்!
வண்டு படு நறவின் தண்டா மண்டையொடு
வரையாப் பெருஞ் சோற்று முரி வாய் முற்றம்,
வெற்று யாற்று அம்பியின் எற்று? அற்று ஆகக்
கண்டனென், மன்ற; சோர்க, என் கண்ணே;
வையம் காவலர் வளம் கெழு திரு நகர்,
மையல் யானை அயாஉயிர்த்தன்ன
நெய் உலை சொரிந்த மை ஊன் ஓசை
புதுக்கண் மாக்கள் செதுக்கண் ஆரப்
பயந்தனை, மன்னால், முன்னே! இனியே
பல் ஆ தழீஇய கல்லா வல் வில்
உழைக் குரற் கூகை அழைப்ப ஆட்டி,
நாகு முலை அன்ன நறும் பூங் கரந்தை
விரகறியாளர் மரபின் சூட்ட,
நிரை இவண் தந்து, நடுகல் ஆகிய
வென் வேல் விடலை, இன்மையின் புலம்பிக்,
கொய்ம் மழித் தலையொடு கைம்மையுறக் கலங்கிய
கழி கல மகடூஉப் போலப்
புல்லென்றனையால், பல் அணி இழந்தே.

திணையும் துறையும் அவை.

ஆவூர் மூலங்கிழார் பாடியது.

## 262. மதுரைப் போராலவாயார்

பகைவர் தம் படைகளை முருக்கி அவர்களை விரட்டி விட்டுப் பெருநிரை கொண்டு வந்த என் தலைவனும் அவனுடன்

சென்ற வீரர்களும் திரும்புகின்றனர். மிக்குக் களைத்து வந்துள்ள அவர்கள் இளைப்பாற அவர்களுக்குப் பந்தல் எழுப்பி மணல் பரப்பி வையுங்கள்; மது அவர்கள் குடிக்கப் பிழிந்து வைக்கவும். இறைச்சி அவர்கள் தின்ன ஆட்டுக்கிடாய்களை வெட்டி வீழ்த்துங்கள். அவர்கள் வேட்கை தணிய அவர்கள் குடித்து மகிழட்டும்.

நறுவும் தொடுமின்; விடையும் வீழ்மின்;
பாசுஅவல் இட்ட புன் காற் பந்தர்ப்
புனல் தரும் இள மணல் நிறையப் பெய்ம்மின்-
ஒன்னார் முன்னிலை முருக்கிப், பின் நின்று,
நிரையொடு வரூஉம் என்னைக்கு
உழையோர் தன்னினும் பெருஞ் சாயலரே.

திணை - வெட்சி; துறை - உண்டாட்டு; தலைத்தோற்றமும் ஆம்.
மதுரைப் பேராலவாயார் பாடியது.

## 263. கையறு நிலை

பசுக் கூட்டத்தைப் பெயர்த்துச் சென்றவரை எதிர்த்து நின்றான். இவன் உடன்சென்ற இளைஞர்கள் ஒதுங்கிவிடத் தான் தனியனாகச் சென்று அவற்றை மீட்டுக் கொணர்ந்தான். எதிரிகளின் வில் உமிழ்ந்த அம்புகளில் மூழ்கி ஆற்று வெள்ளத்தைத் தடுக்கும். கற்சிறை போன்று நின்றான்; அவன் கல் ஆயினான்.

களிற்றின் கால் அடி போல் தோன்றும் ஓர்றைக் கண் உடைய பறையை உடைய இரவலனே! நடுகல்லைக் கண்டால் நீ தொழாது செல்லற்க; தொழுதால் வறண்ட வழிப்பாதையும் சோலை வனம் ஆகும். நன்மைகள் பெருகும்.

பெருங் களிற்று அடியின் தோன்றும் ஒரு கண்
இரும் பறை இரவல! சேறி ஆயின்,
தொழாதனை கழிதல் ஓம்புமதி; வழாது,
வண்டு மேம்படூஉம், இவ் வறநிலை ஆறே-
பல் ஆத் திரள் நிரை பெயர்தரப் பெயர்தந்து,
கல்லா இளையர் நீங்க நீங்கான்,

வில் உமிழ் கடுங் கணை மூழ்கக்,
கொல் புனல் சிறையின் விலங்கியோன் கல்லே.

திணை - கரந்தை; துறை - கையறு நிலை

.....................................

## 264. உறையூர் இளம் பொன் வாணிகனார்

*பரல் கற்கள் உடைய மேட்டு நிலத்தில் மரல் பூ கொண்டு பூ மாலை தொடுத்து அதனைச் சார்த்திப் பீலி சூட்டிப் பெயர் பொறித்து இனி அவனுக்குக் கல் நட்டுள்ளனர். அவன் நடுகல் ஆயினான்.*

*கன்றுகளுடன் பசுக்களைக் கொண்டு வந்து நிறுத்திப் பகைவரை ஓட்டி நெடுந்தகை கழிந்தது அறியாமல் இன்றும் அவனை நாடிப் பாணரது சுற்றம் வந்து கொண்டிருக்கின்றது. கொடை மிக்கவன் அவன்.*

பரலுடை மருங்கின் பதுக்கை சேர்த்தி,
மரல் வகுந்து தொடுத்த செம் பூங் கண்ணியொடு,
அணி மயிற் பீலி சூட்டிப், பெயர் பொறித்து,
இனி நட்டனரே, கல்லும், கன்றொடு
கறவை தந்து பகைவர் ஓட்டிய
நெடுந்தகை கழிந்தமை அறியாது
இன்றும் வரும்கொல், பாணரது கடும்பே?

திணையும் துறையும் அவை.

உறையூர் இளம்பொன் வாணிகனார் பாடியது.

## 265. சோணாட்டு முகையலூர் சிறு கருத்தும்பியார்

*ஊருக்கு வெளியே முரம்பு நிலத்தில் வேங்கைப் பூவைப் பனம் நாரில் மாலையாகத் தொடுத்துப் பசு மேய்க்கும் கோவலர்கள் வழிபாடு செய்யக் கல் ஆயினாய்.*

*நீ கல் ஆயினாய் என்பதில் இழப்புகள் இரண்டு; ஒன்று பரிசில் பெற்று வந்த இரவலர்கள் ஒரு கொடையாளியை இழந்து*

விட்டது. அவர்கள் செல்வம் இழந்தனர். அடுத்தது போரில் தனக்கு அவ்வப்பொழுது உதவி வந்த வீரனை அவன் உதவியை நாடி வந்த பேரரசர்கள் இழந்தது. அவர்கள் வெற்றியை இழந்தனர்.

ஊர் நனி இறந்த பார் முதிர் பறந்தலை,
ஓங்கு நிலை வேங்கை ஒள் இணர் நறுவீப்
போந்தை அம் தோட்டின் புனைந்தனர் தொடுத்துப்,
பல் ஆன் கோவலர் படலை சூட்டக்,
கல் ஆயினையே - கடுமான் தோன்றல்!-
வான் ஏறு புரையும் நின் தாள் நிழல் வாழ்க்கைப்
பரிசிலர் செல்வம் அன்றியும், விரி தார்க்
கடும் பகட்டு யானை வேந்தர்
ஒடுங்கா வென்றியும், நின்னொடு செலவே.

திணையும் துறையும் அவை.

..........சோணாட்டு முகையலூர் சிறு கருந் தும்பியார் பாடியது.

## 266. சோழன் உருவப் பஃறேர் இளஞ்சேட்சென்னி

மழை பெய்யாது அதனால் வற்றிச் சேறாகக் கிடக்கும் கோடைக் காலத்திலும் ஆம்பல் இலையின் நிழலில் நந்து அதில் ஏறி இளைய சங்கோடு மணம் கொள்ளும் நீர் வளம்மிக்க கழனிகளை உடைய நாடு உனது.

சான்றோர் கூடிய அவையத்துக்குச் சென்று நீதி வழங்குக என்று முறையிடுபவரைப்போல் யான் உன்பால் முறையிடு கின்றேன். விருந்து வந்தால் அவர்களை வரவேற்க முடியாத வறுமை என்னை வாட்டுகிறது. அதனை மாற்றுக என்று முறையிடு கிறேன். என் வறுமையைப் போக்கி அருளுக.

பயம் கெழு மா மழை பெய்யாது மாறிக்,
கயம் களி முளியும் கோடைஆயினும்,
புழற்கால் ஆம்பல் அகல் அடை நீழல்,
கதிர்க் கோட்டு நந்தின் சுரி முக ஏற்றை
நாகு இள வளையொடு பகல் மணம் புகூஉம்
நீர் திகழ் கழனி நாடு கெழு பெரு விறல்

வான் தோய் நீள் குடை, வய மான் சென்னி!
சான்றோர் இருந்த அவையத்து உற்றோன்,
'ஆசு ஆகு' என்னும் பூசல் போல,
வல்லே களைமதி அத்தை - உள்ளிய
விருந்து கண்டு ஒளிக்கும் திருந்தா வாழ்க்கைப்,
பொறிப் புணர் உடம்பில் தோன்றி என்
அறிவு கெட நின்ற நல்கூர்மையே!

திணை - பாடாண் திணை; துறை - பரிசில் கடாநிலை.

சோழன் உருவப் பல் தேர் இளஞ் சேட்சென்னியைப் பெருஞ்குன்றூர் கிழார் பாடியது.

**(267, 268 பாட்டுகள் பிரதிகளில் காணப்படவில்லை)**

## 269. ஔவையார்

*குயிலின் அலகு போன்ற அதிரல் முகையைக் கரிய முடியில் சூட்டிக் கொண்டு புதிய அகலில் பெய்த புலிக்கண் போன்ற வெம்மை தரும் மதுவை ஒரு முறைக்கு இருமுறை இருந்து பருகினாய்; வீரர்களும் உடன் இருந்தனர். அடுத்த முறை பருக எடுத்து வைத்தனர். கள் முன்னே வைக்கப்படுகிறது; துடியனின் பறை ஒலி கேட்கிறது. கரந்தையரை எதிர்த்துப் போர் என்ற செய்தி அழைக்கிறது.*

*கள்ளா? வாளா? நீ வாளைத் தேர்ந்து எடுத்தாய்.*

*கரந்தையரை வென்று ஆநிரையை மீட்டுத் தந்தாய். உன் வாள் அது தந்த வெற்றி இது.*

குயில் வாய் அன்ன கூர்முகை அதிரல்
பயிலாது அல்கிய பல் காழ் மாலை
மை இரும் பித்தை பொலியச் சூட்டிப்,
புத்தகல் கொண்ட புலிக் கண் வெப்பர்
ஒன்று இரு முறை இருந்து உண்ட பின்றை,
உவலைக் கண்ணித் துடியன் வந்து எனப்,
பிழி மகிழ் வல்சி வேண்ட, மற்று இது

கொள்ளாய் என்ப, கள்ளின் வாழ்த்தி;
கரந்தை நீடிய அறிந்து மாறு செருவில்
பல் ஆன் இன நிரை தழீஇய வில்லோர்க்,
கொடுஞ் சிறைக் குரூஉப் பருந்து ஆர்ப்பத்,
தடிந்து மாறு பெயர்த்தது, இக் கருங் கை வாளே.

திணை - வெட்சி; துறை - உண்டாட்டு
ஔவையார் பாடியது.

## 270. கழாத் தலையார் (கையறு நிலை)

*இடியேறு போல ஒலிக்கும் முரசினையும், யானைக் கூட்டத்தையும் உடையவராகி நிலத்தை ஆட்சி செய்யும் வேந்தர் பெரு மக்களும் மற்றும் பல சான்றோர்களும் போர்க்களத்தில் வந்து கூடி இவனுக்காகக் கண்ணீர் வடிக்கின்றனர்.*

*இவ்வீரர்களின் தாயே! மூதில் மகளே! இதை வந்து பார்; எம் நெஞ்சு பதறுகிறது. கண்டு துயரத்தில் ஆழ்கிறது.*

*போர்ப் பறை கேட்டு விருப்புற்று வந்து குழுமும் இவ்விளைஞர்களுக்கு வெற்றி அவர்கள் குறிக்கோள்; மன்றத்தினர் பாராட்டு அவர்கள் விரும்பும் பரிசு; அதனால் பேரமர்க்கு வந்து குழுமியுள்ளனர்.*

*இப்போர்க் களத்தில் கோடரி பாய்ந்த மரம் போல் வாள்மிசை கிடக்கின்றான். இந்த ஆண்மையோர் இவனைப் பாராட்டிச் சிறப்புச் செய்ய வந்தது காண்க.*

பல் மீன் இமைக்கும் மாக விசும்பின்
இரங்கு முரசின், இனம்சால் யானை,
நிலம் தவ உருட்டிய நேமியோரும்
சமங்கண் கூடித் தாம் வேட்பவ்வே-
நறு விரை துறந்த நாறா நரைத் தலைச்
சிறுவர் தாயே! பேரிற் பெண்டே!
நோகோ யானே; நோக்குமதி நீயே;
மறப் படை நுவலும் அரிக் குரற் தண்ணுமை
இன் இசை கேட்ட துன் அரு மறவர்
வென்றி, தரு வேட்கையர், மன்றம் கொண்மார்,

பேர் அமர் உழந்த வெருவரு பறந்தலை,
விழு நவி பாய்ந்த மரத்தின்,
வாள் மிசைக் கிடந்த ஆண்மையோன் திறத்தே.

திணை - கரந்தை; துறை - கையறு நிலை.

(கண்டார் தாய்க்குச் சொல்லியது)

கழாத்தலையார் பாடியது.

# 271. வெறி பாடிய காமக் கண்ணியார்

*நீர் மிக்க நிலத்தில் விளையும் கரு நிறத்து நொச்சித் தழை அது மெல்லியல் மகளிர் உடுத்தும் தொடலை ஆவதை இதற்குமுன் பார்த்திருக்கின்றோம்;.*

*இனி ஒரு புதிய காட்சி; அது அஞ்சத் தகும் குருதியோடு கலந்து உருமாறித் துணிபட்ட மாலையாக விளங்குகிறது. அதனை ஊன் தசை எனக் கருதிப் பருந்து ஒன்று கொண்டு மேலே எடுத்துச் செல்ல யாம் கண்டனம். மறமிகு மைந்தன் மலைந்த செய்தி அதனை நொச்சித் துண்டு சொல்லிக் கொண்டு இருக்கிறது.*

நீர் அறவு அறியா நிலமுதற் கலந்த
கருங் குரல் நொச்சிக் கண் ஆர் குரூஉத் தழை,
மெல் இழை மகளிர் ஐது அகல் அல்குல்,
தொடலை ஆகவும் கண்டனம்; இனியே,
வெருவரு குருதியொடு மயங்கி, உருவு கரந்து,
ஒறுவாய்ப் பட்ட தெரியல் ஊன் செத்துப்,
பருந்து கொண்டு உகப்ப யாம் கண்டனம்-
மறம் புகல் மைந்தன் மலைந்தமாறே!

திணை - நொச்சி; துறை - செருவிடை வீழ்தல்.

வெறி பாடிய காமக்கண்ணியார் பாடியது.

# 272. மோசி சாத்தனார்

*நீலமணி கொத்துக் கொத்தாக உள்ளதுபோல் உள்ள நொச்சியே! பூக்கள் மலரும் பல மரங்களுள் நீ பெரிதும் விரும்பப்படுகிறாய்.*

காவல் மிக்க நகரத்தில் பெண்கள் உடுக்கும் தழையாக நீ உள்ளாய். அவர்களுக்கு நீ அழகைத் தருகிறாய்.

அதே போலப் பகைவர்கள் அரண்களைத் தாக்கச் செல்லும் மறவர்கள் அவர்கள் சென்னிகளில் சூடிக் கொள்வதும் உன்னையே. அவர்களுக்கு நீ வெற்றியைத் தருகிறாய்.

மணி துணர்ந்தன்ன மாக் குரல் நொச்சி!
போது விரி பல் மரனுள்ளும் சிறந்த
காதல் நல் மரம் நீ; நிழற்றிசினே!-
கடியுடை வியல் நகர்க் காண்வரப் பொலிந்த
தொடியுடை மகளிர் அல்குலும் கிடத்தி;
காப்புடைப் புரிசை புக்கு மாறு அழித்தலின்,
ஊர்ப் புறங்கொடாஅ நெடுந்தகை
பீடு கெழு சென்னிக் கிழமையும் நினதே.

திணையும் துறையும் அவை.

மோசி சாத்தனார் பாடியது.

## 273. எருமை வெளியனார்

குதிரை வாராது; களம் சென்று போர் செய்யச் சென்ற குதிரை இனி திரும்ப வரப் போவது இல்லை.

மற்றைய வீரர்கள் ஊர்ந்து சென்ற குதிரைகள் திரும்பி விட்டன. இந்தப் புல்லுளைக் குடுமிச் சிறுவன் தந்தை ஊர்ந்து சென்ற குதிரை திரும்பி வரவில்லை.

இரு பேர் யாறுகள் சந்திக்கும் கூடலில் குறுக்கே அணையிடும் பெருமரம்போல் அவன் ஏறிச் சென்று மலைந்த குதிரை பட்டு விழுந்து விட்டதோ! இன்னும் வந்து சேரவில்லை.

மா வாராதே; மா வாராதே;
எல்லார் மாவும் வந்தன எம் இல்,
புல் உளைக் குடுமிப் புதல்வன் தந்த
செல்வன் ஊரும் மா வாராதே-
இரு பேர் யாற்ற ஒரு பெருங் கூடல்
விலங்கிடு பெரு மரம் போல,
உலந்தன்றுகொல், அவன் மலைந்த மாவே?

திணை - தும்பை; துறை - குதிரை மறம்.

எருமை வெளியனார் பாடியது.

## 274. உலோச்சனார்

நீல நிறத்துக் கச்சும், பூத்தொழில் செய்யப்பட்ட ஆடையும் உடுத்தி மயிற் பீலியைக் கண்ணியாகச் சூடியுள்ள பெருந்தகை மறவன் தன்னையே நோக்கி வரும் யானைமீது வேலினைப் பாய்ச்சிப் பின் தன்னையே இழப்பான்போல் தோன்றுகிறது.

வேல் தாங்கிய வீரர் குதிரை மீது வருகிறவர் இவனைச் சென்று அணுக இவன் அவர்களைக் கையால் தழுவிக் கீழே தள்ளி அவர்களோடு மோதி அவர்கள் உடம்பை மேலே தூக்கி எறியப் பற்றினான். இவன் மறம் வியத்தற்கு உரியது.

நீலக் கச்சைப், பூ ஆர் ஆடைப்,
பீலிக் கண்ணிப் பெருந்தகை மறவன்
மேல் வருங் களிற்றொடு வேல் துரந்து, இனியே,
தன்னும் துரக்குவன் போலும் - ஒன்னலர்
எஃகுடை வலத்தர் மாவொடு பரத்தரக்,
கையின் வாங்கித், தழீஇ,
மொய்ம்பின் ஊக்கி, மெய்க் கொண்டனனே!

திணையும் துறையும் அவை.

உலோச்சனார் பாடியது.

## 275. ஒரூ உத்தனார்

வளைவுமிக்க மாலையைத் தலையில் அணிந்துள்ளான். வளைந்து திரைத்த ஆடையை உடுத்தி உள்ளான். வேந்தன் கருதியது அறிந்து செயல்படும் சிந்தையன். எதிரியின் முன்னணிப் படையைப் பிளந்து கொண்டு முன் செல்கிறான். மற்றவர்கள் அவனைத் தடுக்க முயன்றும் அவன் அவர்களை மீறிக் கொண்டு உள்ளே பாய்கின்றான். வேலை முகத்தில் தூக்கிப் பிடித்துக் கொண்டு தனியே உள்ளே புகுகின்றான்.

வீரர்கள் பலர் செல்லற்க எனக் கூறித் தடுத்தபோதும், இறந்துபடுபவரின் குடல்கள் காலில் தடுத்து நிறுத்தவும். கன்றைக் காக்கும் பசுவைப் போல் ஆவேசத்தோடு போர்க்களத்தில் அகப்பட்ட தன் தோழனைக் காக்கச் செல்கிறான்.

கோட்டங் கண்ணியும், கொடுந்திரை ஆடையும்,
வேட்டது சொல்லி வேந்தனைத் தொடுத்தலும்,
ஒத்தன்று மாதோ, இவற்கே; செற்றிய
திணி நிலை அலறக் கூழை போழ்ந்து, தன்
வடி மாண் எஃகம் கடிமுகத்து ஏந்தி,
'ஓம்புமின், ஓம்புமின், இவண்!' என, ஓம்பாது,
தொடர் கொள் யானையின் குடர் கால் தட்பக்,
கன்று அமர் கறவை மான,
முன் சமத்து எதிர்ந்த தன் தோழற்கு வருமே.

திணையும் துறையும் அவை.

ஒரூஉத்தனார் பாடியது.

## 276. மதுரைப் பூதன் இள நாகனார்

*வயது முதிர்ந்த தாய் நரை மூதாட்டி; இலவ மரத்தின் விதை போன்ற கண்ணை உடைய வற்றிய முலயினள் அவள் தன் காதல் மகன் படைக்குள் புகுந்து அவனே முதன்மை வகிக்கிறான்.*

*ஆய மகள் குடப் பாலில் தெறிக்கும் புரை மோர்த் துளிபோல் அப் படையை அவன் ஒரு கலக்குக் கலக்குவிக்கின்றான். எதிரியின் படை சிதறி ஓடுவதற்கு இவனே காரணம் ஆகின்றான்.*

நறு விரை துறந்த நரை வெண் கூந்தல்,
இரங் காழ் அன்ன திரங்கு கண் வறு முலைச்,
செம் முது பெண்டின் காதல்அம் சிறாஅன்,
மடப் பால் ஆய்மகள் வள் உகிர்த் தெறித்த
குடப் பால் சில் உறை போலப்,
படைக்கு நோய் எல்லாம் தான் ஆயினனே.

திணையும் துறையும் அவை.

மதுரைப் பூதன் இளநாகனார் பாடியது.

## 277. பூங்கண் உத்திரையார்

*மீன் உண்ணும் கொக்கின் தூவி போன்ற நரைத்த கூந்தலை உடைய முதியவளின் மகன் களிறு எறிந்து தானும் பட்டனன் என்ற*

செய்தி அவளுக்குப் பேருவகை அளித்தது. அவள் அடைந்த பேரு வகை ஈன்ற ஞான்றினும் பெரிது ஆகும்.

மூங்கில் செறிந்த மலையின்கண் அதில் படும் மழைத்துளி போல அவள் உவகைக் கண்ணீர் பலவாகும். அக்காட்சி மகிழ்வு தருவதாகும்.

'மீன் உண் கொக்கின் தூவி அன்ன
வால் நரைக் கூந்தல் முதியோள் சிறுவன்
களிறு எறிந்து பட்டனன்' என்னும் உவகை
ஈன்ற ஞான்றினும் பெரிதே; கண்ணீர்
நோன் கழை துயல்வரும் வெதிரத்து
வான் பெயத் தூங்கிய சிதரினும் பலவே

திணையும் துறையும் அவை.
பூங்கண் உத்திரையார் பாடியது.

## 278. காக்கை பாடினியார் நச்செள்ளையார்

நரம்பு மேல் எழுந்து உலர்ந்து மெலிந்த தோள்களையும், தாமரை இலை போன்ற அடி வயிற்றினையும் உடைய முதியவளின் மகன் அவன் படைக்குத் தோற்றுப் புறமுதுகு இட்டான் என்று பலர் சொல்ல அதைக் கேட்டு ''அடர்த்துச் செய்யும் போர்க்கு அவன் உடைந்து விட்டான்; தோற்று ஓடினான் என்பது உண்மையாயின் அவனுக்குப் பால் தந்த என் முலையை அறுத்து எறிவேன்'' என்று சொல்லியவளாய்க் கையில் வாளேந்திக் கொண்டு போர்க் களம் அடைந்தாள். அங்கே துழவித் தன் மகன் சிதைந்து வேறாகக் காணப்பட அவன் இறந்துபட்ட நிலையில் அவன் உடலைக் கண்டாள். அவன் பிறந்தநாள் தான் அடைந்த மகிழ்ச்சியைவிட அவள் பெரிது உவந்தனள்.

'நரம்பு எழுந்து உலறிய நிரம்பா மென் தோள்,
முளரி மருங்கின், முதியோள் சிறுவன்
படை அழிந்து, மாறினன்' என்று பலர் கூற,
'மண்டு அமர்க்கு உடைந்தனன்ஆயின், உண்ட என்
முலை அறுத்திடுவென், யான்' எனச் சினைஇக்,

கொண்ட வாளொடு படு பிணம் பெயராச்,
செங்களம் துழவுவோள், சிதைந்து வேறு ஆகிய
படு மகன் கிடக்கை காணூஉ,
ஈன்ற ஞான்றினும் பெரிது உவந்தனளே!

திணையும் துறையும் அவை.

காக்கைபாடினியார் நச்செள்ளையார் பாடியது.

## 279. ஒக்கூர் மாசாத்தியார்

இது மிகவும் கொடியது; அவள் துணிவு மிகக் கடுமையானது.

'மூதின் மகள்' என்ற சிறப்புக்கு இவள் மிகவும் பொருத்தமானவளே.

முதல் நாட்போரில் இவள் தந்தை யானை எறிந்து களத்தில் ஒழிந்தான்.

நேற்று நடந்த போரில் இவள் கொழுநன் பசு நிரைகளை மீட்கச் சென்றவன் ஆண்டு இறந்து பட்டான்.

இன்றும் போர்ப் பறை கேட்டு விருப்புற்று மயங்கி வேலைக் கையில் தந்து வெளிது விரித்து உடுத்திப் பரட்டைத் தலை மயிர் முடியை எண்ணெய் இட்டு வாரி முடித்துக் குடிக்கு ஓரே மகன் அவனைச் செருமுகம் நோக்கிச் செல்க என்று அனுப்பி வைக்கிறாள்.

கெடுக சிந்தை; கடிது இவள் துணிவே;
மூதில் மகளிராதல் தகுமே:
மேல்நாள் உற்ற செருவிற்கு இவள் தன்னை,
யானை எறிந்து, களத்து ஒழிந்தனனே;
நெருநல் உற்ற செருவிற்கு இவள் கொழுநன்,
பெரு நிரை விலங்கி, ஆண்டுப் பட்டனனே;
இன்றும், செருப் பறை கேட்டு, விருப்புற்று, மயங்கி,
வேல் கைக் கொடுத்து, வெளிது விரித்து உடீஇப்,
பாறு மயிர்க் குடுமி எண்ணெய் நீவி,
ஒரு மகன் அல்லது இல்லோள்,
'செருமுகம் நோக்கிச் செல்க' என விடுமே!

திணை - வாகை; துறை - மூதில் முல்லை.

ஒக்கூர் மாசாத்தியார் பாடியது.

# 280. மாறோக்கத்து நப்பசலையார்

*என் தலைவன் மார்பில் பட்டுள்ள புண்ணும் கொடுமை மிக்கது. நண்பகலில் வந்து வண்டுகளும் மொய்த்து ஒலிக்கின்றன. நெடு மனையில் ஏற்றி வைத்த விளக்கும் நின்று எரியாது. விரைவில் அணைந்து விடும். தூக்கம் நீங்கிய என் கண்கள் தூக்கத்தைத் தழுவுகின்றன. அச்சம் விளைவிக்கும் கூகையும் கடுமையாகக் குரல் எடுக்கிறது. நெல்லும் நீரும் தெளித்து விரிச்சி கூறும் செம்முது பெண்டும் அழி சொல்லே கூறுகிறாள். அவள் சொற்களில் நம்பிக்கை தோன்றவில்லை.*

*துடியனே! பாணனே! பாடல் வல்ல விறலியே! இனி நீவிர் என்ன ஆவீரோ? உமக்கும் இங்கு உறைந்து வாழ்வது இயலாது. யானும் சிறு வெள் ஆம்பல் அரிசி உண்டு வளையல் நீக்கி வாழும் கைம்மை மகளிர் போலத் துயருற்று வாழ வேண்டியதுதான். அனைவரையும் துயரத்தில் ஆழ்த்தி விட்டான். இனி யான் தனித்து உயிர் வாழ்வது இயலாது; அது மிகவும் கொடியது.*

என்னை மார்பில் புண்ணும் வெய்ய;
நடு நாள் வந்து தும்பியும் துவைக்கும்;
நெடு நகர் வரைப்பின் விளக்கும் நில்லா;
துஞ்சாக் கண்ணே துயிலும் வேட்கும்;
அஞ்சுவரு குராஅல் குரலும் தூற்றும்;
நெல் நீர் எறிந்து விரிச்சி ஓர்க்கும்
செம் முது பெண்டின் சொல்லும் நிரம்பா;
துடிய! பாண! பாடு வல் விறலி!
என் ஆகுவிர்கொல்? அளியிர்; நுமக்கும்
இவண் உறை வாழ்க்கையோ, அரிதே! யானும்
மண்ணுறு மழித் தலைத் தெண் நீர் வாரத்,
தொன்று தாம் உடுத்த அம் பகைத் தெரியல்
சிறு வெள் ஆம்பல் அல்லி உண்ணும்
கழி கல மகளிர் போல,
வழி நினைந்திருத்தல், அதனினும் அரிதே!

திணை - பொதுவியல்; துறை - ஆனந்தப்பையுள்

மாறோக்கத்து நப்பசலையார் பாடியது.

# 281. அரிசில் கிழார்

*நாட்டு அரசன் அவன் நலிவு பெறாமல் இருக்க விழுப்புண் பட்டான். வீரன் அவன் உற்ற புண்ணைக் காக்கத் தோழீ! நாம் பூசை வழிபாடுகள் செய்வோம் வருக.*

*வீட்டு முகப்பில் இனிய கனிகளைத் தரும் இரவமொடு வேப்பம் இலைகளைச் செருகியும், அவனுக்கு மையிட்டும் வெண் சிறு கடுகு தூவியும், ஆம்பலம் குழல் ஊதியும், மணி ஒசை எழுப்பியும், வீடு முழுதும் நறுமணம் புகை பரப்பியும் இவ்வீரன் பட்ட புண்ணைக் காப்போமாக; பேய் தொட்டு அவனை வருத்தாமல் காப்போமாக.*

தீம் கனி இரவமொடு வேம்பு மனைச் செரீஇ,
வாங்கு மருப்பு யாழொடு பல் இயம் கறங்கக்,
கை பயப் பெயர்த்து மை இழுது இழுகி,
ஐயவி சிதறி, ஆம்பல் ஊதி,
இசை மணி எறிந்து, காஞ்சி பாடி,
நெடு நகர் வரைப்பில் கடி நறை புகைஇக்,
காக்கம் வம்மோ- காதல்அம் தோழி!-
வேந்துறு விழுமம் தாங்கிய
பூம் பொறிக் கழற் கால் நெடுந்தகை புண்ணே.

திணை- காஞ்சி; துறை - பேய்க்காஞ்சி.
அரிசில் கிழார் பாடியது.

# 282. சேரமான் பாலை பாடிய பெருங்கடுங்கோ

*வேல் மார்பில் பாய்ந்து தன் தலைவனுக்காக் உயிர் விட்ட வீரனை யாங்குளன் என்று வினவுவாய் ஆயின்,*

*பகை வீரர்கள் விட்ட கணைகள் அவன் மார்பைத் துளைத்து அவன் உடலைச் சிதைத்து விட்டன. அவன் தோற்றமே இல்லாமல் அவனைக் கிழித்துச் சிதைத்து விட்டனர். அழித்து விட்டனர்.*

அவன் உடம்பு அழிந்தது. அவன் புகழ் அழியாது. அவன் தன் புகழை நிலை நிறுத்திப் புலவர் நாவில் அவன் நிலை பெற்று விட்டான். புலவர்கள் பாடும் புகழ் அவனை நாடி வந்துள்ளது.

எஃகு உளம் கழிய, இரு நில மருங்கின்,
அருங் கடன் இறுத்த பெருஞ் செய்ஆளனை,
'யாண்டு உளனோ?'' என, வினவுதிஆயின்,

........................................................

வரு படை தாங்கிய கிளர் தார் அகலம்
அருங் கடன் இறுமார் வயவர் எறிய,
உடம்பும் தோன்றா உயிர் கெட்டன்றே;
மலையுநர் மடங்கி மாறு எதிர் கழியத்

........................................................

அலகை போகிச் சிதைந்து வேறாகிய
பலகை அல்லது, களத்து ஒழியாதே;
சேண் விளங்கு நல் இசை நிறீஇ,
நா நவில் புலவர் வாய் உளானே.

திணை - ......................

பாலை பாடிய பெருங்கடுங்கோ பாடியது.

# 283. அண்டர் நெடுங் கல்லினார்

செங் குரலிக் கொடி நிறைந்த நீர் நிலையைக் கலக்கி நீர் நாய் வாளையை உணவாகப் பெறுகிறது; அங்கு உகளும் நீர்ப் பாம்புகளை வரால் என மயங்குகிறது; அதில் உள்ள ஆமைகளோடும் மாறி மாறிப் பொருகிறது. இத்தகைய சிறப்பு உடைய ஊர் அழும்பில் என்பது.

இவ் அழும்பில் வீரன் தன் நண்பனுக்காகக் கோசர் அவைக்கண் சென்று பொருகிறான். தன் நண்பன் அடிபட்டுத் துடிக்கின்ற செய்தி கேட்டு அவனை மீட்க இவன் ஓடுகிறான்.

கழன்று விழுந்த வண்டியின் சக்கரம் அதன் நடுக்குடத்தில் பதிந்துள்ள ஆரைகளைப் போல இவன் மார்பில் வேல்கள் தைத்துக் கிடக்கின்றன.

களம் சென்ற இவ் அழும்பில் வீரன் அவன் விழுப்புண் பட்டு வேதனை உறுகிறான். தெற்றி ஆடும் இளம் பெண்கள்

*இவனைப் பேணிக் காக்கின்றனர். இவன் தும்பையைத் தலைமாலையாகச் சூடியுள்ளான். அது கலையாமல் இவனுக்கு அழகு சேர்க்கிறது.*

ஒண் செங் குரலித் தண் கயம் கலங்கி,
வாளை நீர்நாய் நாள் இரை பெறூஉப்
பெறாஅ உறை அரா வரா அலின்,
மாறு கொள் முதலையொடு ஊழ் மாறு பெயரும்
அழும்பிலன் அடங்கான் தகையும் என்றும்,
வலம் புரி கோசர் அவைக் களத்தானும்,
மன்றுள் என்பது கெடதானே பாங்கற்கு
ஆர் சூழ் குறட்டின் வேல் நிறத்து இலங்க,
உயிர் புறப்படாஅ அளவைத் தெறுவரத்,
தெற்றிப் பாவை திணி மணல் அயரும்
மென் தோள் மகளிர் நன்று புரப்ப,
இமிழ்ப்புற நீண்ட பாசிலைக்
கவிழ் பூந் தும்பை நுதல் அசைத்தோனே.

திணை - தும்பை; துறை - பாண் பாட்டு.

அடை நெடுங் கல்வியார் பாடியது.

## 284. ஓரம் போகியார்

*வருக போருக்கு என்று தூதுவர் வந்து இசைக்க நூலால் கட்டிய மாலையைத் தலையில் சூடிக் கொண்டு காலால் நடந்து களத்துக்குச் செல்கிறான் முதுகுடிப் பிறந்த வீரன்.*

*தன்னை எதிர்க்க வரும் யானையை வேல் கொண்டு தாக்கி வீழ்த்துகிறான். வேல் கோணல் பெற அக்கோணலை இறந்து வீழ்ந்த களிற்றின் மருப்பில் இட்டு நிமிர்த்துகிறான். மறுபடியும் வேலைக் கையில் தாங்கி நிற்கத் தோற்றவன் அஞ்சிப் புறமுதுகு இடுகிறான்.*

*அஞ்சி ஓடும் அவனைப் பார்த்து இவன் நகைத்துத் தன் வெற்றியைப் புலப்படுத்துகிறான். இவ்வீரன் பாராட்டுக்கு உரியவன் ஆகிறான்.*

'வருகதில் வல்லே; வருகதில் வல்' என,
வேந்து விடு விழுத் தூது ஆங்கு ஆங்கு இசைப்ப,
நூலரி மாலை சூடிக், காலின்,
தமியன் வந்த மூதிலாளன்
அருஞ் சமம் தாங்கி, முன் நின்று எறிந்த
ஒரு கை இரும் பிணத்து எயிறு மிறையாகத்
திரிந்த வாய் வாள் திருத்தாத்,
தனக்கு இரிந்தானைப் பெயர்புறம் நகுமே.

திணையும் துறையும் அவை.
ஓரம்போகியார் பாடியது.

## 285. அரிசில் கிழார்

*பாசறையில் திரளாகக் கூடியுள்ள பெருமக்களே!*

*எம் தலைவன் போரில் விழுப்புண் பட்டுத் தரையில் கிடக்கின்றான். அவன் தாங்கி இருந்த வேல் துடியன் கையில் உள்ளது. கேடயம் யாழ் இசைக்கும் பாணன் கையில் உள்ளது. அவன் சூடிய மாலையும் வாடி விட்டது. அரசன் தன் அமைச்சர் சுற்றமொடு நகரை அடைந்தான்.*

*அம்பு பட்டு குருதி கொட்ட அவன் நிலத்தில் விழுந்தான்; அவன் தான் வாழுங் காலத்தில் தன் நன்செய் நிலங்களைக் கொடுத்து விட்டதால் அப்பொழுதும் வந்து நின்ற இரவலர் தலைவனுக்கு எஞ்சியிருந்த கரம்பு உடைய புன் செய் நிலம் மிக்க சிற்றூரைத் தந்தான்.*

*இச்செய்தியைப் பாராட்டிப் புலவர்கள் பேச அப் புகழுரை கேட்டு அவன் தலை குனிந்து கொண்டான்; நாணி நின்றான். அவன் சால்பு பாராட்டத் தக்கது.*

பாசறையீரே! பாசறையீரே!
துடியன் கையது வேலே; அடி புணர்
வாங்கு இரு மருப்பின் தீம் தொடைச் சீறியாழ்ப்

பாணன் கையது தோலே; காண்வரக்
கடுந் தெற்று மூடையின் ..............
வாடிய மாலை மலைந்த சென்னியன்;
வேந்து தொழில் அயரும் அருந் தலைச் சுற்றமொடு
நெடு நகர் வந்தென, விடு கணை மொசித்த
மூரி வெண் தோல் ................
சேறுபடு குருதிச் செம்மலுக்கோஓ
மாறு படு நெடு வேல் மார்பு உளம் போக,
நிணம் பொதி கழலொடு நிலம் சேர்ந்தனனே;
அது கண்டு, பரந்தோர் எல்லாம் - புகழத் தலை பணிந்து
இறைஞ்சியோனே, குருசில்; பிணங்கு கதிர்
அலமருங் கழனித் தண்ணடை ஒழிய,
இலம்பாடு ஒக்கல் தலைவற்கு ஓர்
கரம்பைச் சீறூர் நல்கினன் எனவே.

திணை - வாகை; துறை - ......... முல்லை,
அரிசில் கிழார் பாடியது.

## 286. ஔவையார்

வெள்ளாட்டுக் கிடாய்கள் போல் வரிசையாக வீரர்கள் பலர் இருக்க அவர்களை விட்டுவிட்டு இவனுக்கு மட்டும் நாட்டு அரசன் தனித்துச் சிறப்பித்துக் கள் அளித்தான். அதுதான் ஒரு வீரனைக் காலில்லாத கட்டில் ஆகிய பாடையில் கிடத்தி வெள்ளை ஆடையை மேலே போர்த்திச் சிறப்புச் செய்வதற்குக் காரணம் ஆவது; தன் தலைவனுக்காக வீர மரணம் அடைவது பெருமை தருவது; அதனை இன்னும் அவன் அடையாமல் இருப்பது வருத்தத்தைத் தருகிறது.

வெள்ளை வெள் யாட்டுச் செச்சை போலத்
தன் ஓர் அன்ன இளையர் இருப்பப்,
பலர் மீது நீட்டிய மண்டை என் சிறுவனைக்
கால் கழி கட்டிலில் கிடப்பித்,
தூ வெள் அறுவை போர்ப்பித்திலதே!

திணை - கரந்தை; துறை - வேத்தியல்.
ஔவையார் பாடியது.

## 287. சாத்தந்தையார்

*துடி அடிப்பவனே! பறை அறைவோனே! நீவிர் இதை அறிந்து கொள்ளுங்கள்.*

*இந்த வீரர்கள் களத்தில் பொருகிறார்கள்; உயிரும் தருகிறார்கள். ஏன்? எதற்காக?*

*அம்புகள் வந்து தைத்தாலும், வேல்கள் வந்து பாய்ந்தாலும், யானைகள் தம் மருப்புக் கொண்டு தாக்கினாலும், இவர்கள் புறங்கொடுத்து ஓடாதவர்கள்; மறம் மிக்கவர்கள்.*

*நாட்டு அரசன் இவர்களுக்குத் தரும் நன்செய் நிலங்களுக்காக அல்ல; பொருட் கொடை கருதி இவர்கள் உயிர்க் கொடை தருவது என்பது இல்லை.*

*வெற்றிகள் விளைவித்துப் புகழ் நாட்டுவது இவர்கள் குறிக்கோள். வீரமரணம் அடைந்தால் இவர்களுக்குச் சுவர்க்கம் காத்திருக்கிறது. வரவேற்கத் தேவ மகளிர் காத்து இருக்கின்றனர். அவர்களைத் தழுவி நீடித்த இன்பம் இவ்வீரர் அடைகின்றனர். அதனால்தான் அரசனின் சேனை வீரர்கள் மேல் விழுந்து இங்கு வந்து சேர்கின்றனர். அவற்றைக் காண்பீராக!*

துடி எறியும் புலைய!
எறி கோல் கொள்ளும் இழிசின!
கால மாரியின் அம்பு தைப்பினும்,
வயற் கெண்டையின் வேல் பிறழினும்,
பொலம் புனை ஓடை அண்ணல் யானை
இலங்கு வால் மருப்பின் நுதி மடுத்து ஊன்றினும்,
ஓடல் செல்லாப் பீடுடையாளர்
நெடு நீர்ப் பொய்கைப் பிறழிய வாளை
நெல்லுடை நெடு நகர்க் கூட்டுமுதல் புரளும்,
தண்ணடை பெறுதல் யாவது? படினே,
மாசு இல் மகளிர் மன்றல் நன்றும்,
உயர் நிலை உலகத்து நுகர்ப; அதனால்
வம்ப வேந்தன் தானை
இம்பர் நின்றும் காண்டிரோ, வரவே!

திணை - கரந்தை; துறை - நீண்மொழி.
சாத்தந்தையார் பாடியது.

## 288. கழாத் தலையார்

கூர்மை மிக்க கொம்புகளை உடைய எருதுகள் அவற்றை மோதவிட்டு வெல்லும் எருதின் தோலைக் கொண்டு போர்த்திய முரசு போர்க் களத்தில் முழங்க நடந்த போரில் நெடுவேல் பாய்ந்து விட்டது. அது ஏளனத்துக்குரியது என்று நாணம் உற்ற வீரன் தரையில் கிடக்கிறான். அருகு சென்று வீட்டு மனையாள். அவள் பெருமிதம் கொண்டு அவனைத் தழுவ விழைகிறாள். அதனைத் தடுத்து நிறுத்துகிறது மேல் வட்டமிட்டு வந்து மொய்க்கும் பருந்து என்னும் பறவை.

மண் கொள வரிந்த வைந் நுதி மருப்பின்
அண்ணல் நல் ஏறு இரண்டு உடன் மடுத்து,
வென்றதன் பச்சை சீவாது போர்த்த
திண் பிணி முரசம் இடைப் புலத்து இரங்க,
ஆர் அமர் மயங்கிய ஞாட்பின், தெறுவர,
நெடு வேல் பாய்ந்த நாணுடை நெஞ்சத்து,
அருகுகை .............................. மன்ற
குருதியொடு துயல்வரு மார்பின்
முயக்கிடை ஈயாது மொய்த்தன, பருந்தே.

திணை - தும்பை; துறை - மூதில் முல்லை.

கழாத்தலையார் பாடியது.

## 289. கழாத் தலையார்

வளம்மிக்க வயல் தனது விளைச்சளைத் தரும் என்றாலும் உழுகின்ற உழவன் பல எருதுகளுக்குள்ளே சிறந்ததையே தேர்ந்து எடுப்பான்.

அதுபோல வீரர்கள் பலர் உளர். ஆயினும் இவனையே சிறப்பித்துக் கள் தந்து நாட்டு அரசன் ஊக்குவித்தான். பெருமைப் படுத்தினான். இவனுக்கே மதுவினைத் தருக என்று கூறுகிறான்.

இதைக் கண்டு வியக்கின்றாய்; பாணனே! அதோ 'பூக்கொள்க' என்று பறை அறைந்து தெரிவிக்கும் போர்ச் செய்தி அதனைக் கேள். அவனுக்குக் கள் பெரிது அன்று; களம்தான் பெரிது.

ஈரச் செவ்வி உதவினஆயினும்,
பல் எருத்துள்ளும் நல் எருது நோக்கி,
வீறு வீறு ஆயும் உழவன் போலப்,
பீடு பெறு தொல் குடிப் பாடு பல தாங்கிய
மூதிலாளருள்ளும், காதலின்
தனக்கு முகந்து ஏந்திய பசும் பொன் மண்டை,
'இவற்கு ஈக!' என்னும்; அதுவும் அன்றிசினே;
கேட்டியோ வாழி - பாண! பாசறைப்,
'பூக் கோள் இன்று' என்று அறையும்
மடி வாய்த் தண்ணுமை இழிசினன் குரலே?

திணை - ......; துறை - ........ முல்லை.

கழாத்தலையார் பாடியது.

## 290. ஔவையார்

*இவனுக்கு முதலில் கள்ளை வார்த்துக் கொடு; தலைவனே! உன் தந்தைக்குத் தந்தைக்காக இவன் பாட்டன் போரில் கண் இமைக்காமல் பகைவர் எறிந்த வேல்களைத் தாங்கிப் போரில் உயிர் விட்டான். ஆரைச் சக்கரத்தின் குடம்போல் அவன் அம்புகளைத் தாங்கி உயிர் விட்டான்.*

*அன்று பாட்டன் செய்கை அது ; இவன் மழையைத் தடுக்கும் பனை ஓலைக் குடை போல உன்னை நோக்கி வரும் பகைவர்தம் வேல்களைத் தான் தாங்கிக் கொண்டு மறைப்பான். உனக்கு இவன் மெய்க் காவலனாக விளங்குவான்.*

*குடி மரபு இது; அவ்வழியில் வந்தவன் இவன். இவனுக்கு நீ முதலில் சிறப்புச் செய்க; கள் வார்த்துக் கொடு.*

இவற்கு ஈத்து உண்மதி, கள்ளே; சினப் போர்
இனக் களிற்று யானை, இயல் தேர்க் குருசில்!
நுந்தை தந்தைக்கு இவன் தந்தை தந்தை,
எடுத்து எறி ஞாட்பின் இமையான், தச்சன்
அடுத்து எறி குறட்டின், நின்று மாய்ந்தனனே;
மறப் புகழ் நிறைந்த மைந்தினோர்ன் இவனும்,

உறைப்புழி ஓலை போல,
மறைக்குவன் - பெரும! நிற் குறித்து வரு வேலே.

திணை - கரந்தை; துறை - குடிநிலை உரைத்தல்
ஔவையார் பாடியது.

## 291. நெடுங்கழுத்துப் பரணர்

*துடி அடிக்கும் சிறுவர்களே! பறை அடிக்கும் பாணர்களே! முதலில் அவனை மொய்த்துக் கொண்டிருக்கும் பறவைகளை ஓட்டி விலக்குவீராக! அதற்கு உங்கள் துடியும் பறையும் பயன் படட்டும். யான் விளரிப் பண்ணில் பாடி அவ்வோசையால் குறுநரியை விரட்டுவேன்.*

*அரசன் தன் மார்பில் அணிந்திருந்த மணி மாலையை இவனுக்கு அளித்து அவன் அணிந்திருந்த மாலை ஒன்றனைத் தான் அணிந்து கொண்டான். இவன் விழுப்புண்பட்ட நிலை அறிந்தால் அரசன் என்னைப்போல் பேரதிர்ச்சி அடைவான். அவனுக்காக இரங்கித் தவிப்பான்; அவனால் இத்துயரைக் தாங்க இயலாது.*

சிறாஅஅர்! துடியர்! பாடு வல் மகாஅஅர்!
தூ வெள் அறுவை மாயோற் குறுகி,
இரும் புள் பூசல் ஓம்புமின்; யானும்,
விளரிக் கொட்பின், வெள் நரி கடிகுவென்;
என் போல் பெரு விதுப்புறுக, வேந்தே-
கொன்னும் சாதல் வெய்யோற்குத் தன் தலை
மணி மருள் மாலை சூட்டி, அவன் தலை
ஒரு காழ் மாலை தான் மலைந்தனனே!

திணை - அது; துறை - வேத்தியல்.
நெடுங்கழுத்துப் பரணர் பாடியது.

## 292. விரிச்சியூர் நன்னாகனார்

*'வேந்தன் வாழ்க' என்று கூறி மதுவைத் தன் கலத்தில் பலர்க்கும் தந்து வார்க்க இவன் மட்டும் தனக்கு முதலில் தரும்படி கேட்பது முறைகேடு என்று கூறுவீர் ஆயின் நீங்கள் கூறுவது*

தவறு. அவன் முனைப்பையே இது காட்டுகிறது. குடித்துவிட்டு உடனே செல்ல வேண்டும் என்பது அவன் ஆர்வம். வாளை அவன் கையில் ஏந்தி விட்டான்.

போர்க் களத்தில் எதிரிகள் தாக்க வரும்போது தன் முறை வரட்டும் என்று இவன் காத்திருப்பது இல்லை. மற்றவர்களை முந்திக் கொண்டு போர் முனையில் நிற்கிறான். அதுபோலத்தான் இப்பொழுதும் அவசரப்படுகிறான். குடிக்கிறான்; வாள் எடுக்கிறான்.

இதைப் புரிந்து கொள்ளாத அற்பர்கள் தாம் இதில் குறை காண்பர்; அவனைப் பழித்துப் பேசுவர்.

வேந்தற்கு ஏந்திய தீம் தண் நறவம்
யாம் தனக்கு உறுமுறை வளாவ, விலக்கி,
'வாய் வாள் பற்றி நின்றனன்' என்று,
சினவல் ஓம்புமின், சிறு புல்லாளர்!
ஈண்டே போல வேண்டுவன ஆயின்,
என் முறை வருக என்னான், கம்மென
எழு தரு பெரும் படை விலக்கி,
ஆண்டும் நிற்கும் ஆண் தகையன்னே;

திணை - வஞ்சி; துறை - பெருஞ்சோற்றுநிலை.
விரிச்சியூர் நன்னாகனார் பாடியது

## 293. நொச்சி நியமம் கிழார்

யானைகளின் மீது இருந்து வள்ளுவன் போர்ச் செய்தியை ஊருக்குத் தெரிவிக்கிறான். ''போருக்குப் புறப்படப் பூவினை வந்து பெறுங்கள்'' என்று அறிவிக்கிறான்.

ஏவலைக் கேட்டுக் காவலுக்கு வீரர்கள் செல்வர். தனிமை உற்ற வீரர் தம் மனைவியர் பூவினை ஏற்கார் என்று தெரிந்து பூவிலையாட்டி இம்மனைகளை விட்டுப் பிற மனைகளுக்குச் செல்கிறாள். இவள் நிலைமை இரங்கத்தக்கது.

நிறப் படைக்கு ஒல்கா யானை மேலோன்
குறும்பர்க்கு எறியும் ஏவல் தண்ணுமை

நாண் உடை மாக்கட்கு இரங்கும்ஆயின்,
எம்மினும் பேர் எழில் இழந்து, வினை எனப்
பிறர் மனை புகுவள்கொல்லோ-
அளியன் தானே, பூவிலைப் பெண்டே!

திணை - காஞ்சி; துறை - பூக்கோட் காஞ்சி.
நொச்சி நியமங் கிழார் பாடியது.

## 294. பெருந்தலைச் சாத்தனார்

*வெண் கொற்றக் குடை போல் மதியம் வானில் நின்று ஒளி செய்யக் கடல்போல் பரந்த பாசறையினின்று புதிய படைக் கருவிகளை ஏந்தியவராய்க் களம் புகும் வீரர்கள் இரு திறத்தவரும் கண்முன் எதுவும் தோன்றாமல் யார் எவர் என்று பாராமல் தாக்கிக் கொள்கின்றனர்.*

*''உம் அரசர் யார் என்பதையும் அவன் பெயரையும் சொல்லி நும்முள் வாழ்நாள் முடிந்தவர் எம்முன் வருக'' என்று வீரர்களைக் கூவி அழைத்து முழக்கம் செய்கிறான் போருக்குச் சென்று உள்ள வீரன்.*

*அரவு உமிழ்ந்த மணியை யாரும் துணிந்து சென்று தொடுவது இல்லை. அதுபோல் அவனை அணுக யாரும் வந்திலர். அவன் போர்ச் செயல் இது. அவ்வீரன் தான் உன் கணவன்; நீ பெருமை கொள்க*

'வெண்குடை மதியம் மேல் நிலாத் திகழ்தரக்,
கண்கூடு இறுத்த கடல் மருள் பாசறைக்,
குமரிப் படை தழீஇய கூற்று வினை ஆடவர்
தமர் பிறர் அறியா அமர் மயங்கு அழுவத்து,
இறையும் பெயரும் தோற்றி, நுமருள்
நாள் முறை தபுத்தீர் வம்மின், ஈங்கு' எனப்,
போர் மலைந்து ஒரு சிறை நிற்ப, யாவரும்
அரவு உமிழ் மணியின் குறுகார்-
நிரை தார் மார்பின் நின் கேள்வனைப், பிறரே

திணை - தும்பை; துறை - தானைமறம்
பெருந்தலைச் சாத்தனார் பாடியது.

## 295. ஔவையார்

கடல் போல் பரந்த பாசறை அடுத்த போர்க் களத்தில் தன் படைத் தொகுதியை முன்னால் அனுப்பித் தானும் அதில் முன்னணியில் நின்றான். வருபடை விலக்கியும், தன் இதர படை வீரருடன் சென்று பொருதான். அவன் அப்போர் நடுவே சிதைக்கப்பட்டான்.

வீரமரணம் அடைந்த தன் மகனைக் கண்ட தாய் அவள் அடைந்த மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை. வற்றிக் கிடந்த அவள் முலை பால் சொரிந்தது; தாய்மை பூரிப்புக் கொண்டது; பேருவகை அடைந்தாள்.

கடல் கிளர்ந்தன்ன கட்டூர் நாப்பண்,
வெந்து வாய் மடித்த வேல் தலைப் பெயரித்,
தோடு உகைத்து எழுதரூஉத், துரந்து எறி ஞாட்பின்,
வரு படை போழ்ந்து வாய்ப் பட விலங்கி,
இடைப் படை அழுவத்துச் சிதைந்து வேறாகிய,
சிறப்புடையாளன் மாண்பு கண்டருளி,
வாடு முலை ஊறிச் சுரந்தன-
ஓடாப் பூட்கை விடலை தாய்க்கே.

திணை - அது; துறை - உவகைக் கலுழ்ச்சி
ஔவையார் பாடியது

## 296. வெள்ளை மாளர்

பகை வேந்தனைத் தாக்கி உயிரைப் போக்கி அது முடிந்தபின்பே திரும்புவது என்று போர் செய்கிறான் போலும்; அதனால் தான் நெடுந்தகையாகிய வீரனின் தேர் காலந்தாழ்த்தி வீடு திரும்புகிறது.

வேம்பின் ஒண் தளிர் பறித்து வருவோரும், காஞ்சிப் பண் பாடுவோரும் ஆக விளங்குகின்றனர். நெய்யுடைக் கையராகி வெண் சிறு கடுகு தூவுகின்றனர். எல்லா வீட்டினரும் கல் என்று ஒலி எழுப்புகின்றனர்.

வேம்பு சினை ஒடிப்பவும், காஞ்சி பாடவும்,
நெய்யுடைக் கையர் ஐயவி புகைப்பவும்,

எல்லா மனையும் கல்லென்றவ்வே;
வேந்து உடன்று எறிவான்கொல்லோ-
நெடிது வந்தன்றால் நெடுந்தகை தேரே.

திணை - வாகை; துறை - ஏறாண் முல்லை.

வெள்ளைமாளர் பாடியது.

## 297. உண்டாட்டு

எருமையின் கொம்புகளைப் போல் விளையும் நெற்றுகளையுடைய பயிறு விளையும் கரம்பு நிலம்; மற்றும் கன்றுகளுடன் மரைப்பசு துயில் கொள்ளும் சீறூர் அவனுக்குப் புரவு நிலமாகத் தரவேண்டாம்; இது சிறப்புடையது அன்று.

கள் அவனுக்கு மிகுதியாகத் தந்து நீர்த்துறை அடுத்துள்ள புதர்களில் கம்புள்கோழி முட்டையிடும் மருத நிலத்து ஊர்களைத் தருவதே அவனுக்குச் சிறப்புச் செய்வது ஆகும். மடலை உடைய பனை மரம் போல் நெடுவேல் பாய்ந்து விழுப்புண் பட்ட மார்பினன் அவன்.

பெரு நீர் மேவல் தண்ணடை எருமை
இரு மருப்பு உறழும் நெடு மாண் நெற்றின்
பைம் பயறு உதிர்த்த கோதின் கோல் அணைக்,
கன்றுடை மரையாத் துஞ்சும் சீறூர்க்
கோள் இவண் வேண்டேம், புரவே; நார் அரி
நனை முதிர் சாடி நறவின் வாழ்த்தித்,
துறை நனி கெழீஇக் கம்புள் ஈனும்
தண்ணடை பெறுதலும் உரித்தே - வைந் நுதி
நெடு வேல் பாய்ந்த மார்பின்,
மடல் வன் போந்தையின், நிற்குமோர்க்கே.

திணை - வெட்சி; துறை - உண்டாட்டு.

.................................................

## 298. ஆவியார்

வேந்தன் இதற்கு முன் மகிழ்வு தரும் உயரிய மதுக்கலங்கலை எமக்குத் தருவான்; தான் எளிய தேறல் மதுவை உண்பான். போர்க்குச் செல்க என்று எம்மை ஏவுவான்.

இன்று அவன் மடிந்து சோம்பி இருக்கிறான். போர் இல்லாமல் இருப்பது எங்களுக்கு மகிழ்வு தருவதாக இல்லை. எப்பொழுது மறுபடியும் கள்ளைத் தந்து களத்துக்கு அனுப்புவானோ தெரியவில்லை. ''பகைவர் எயிலை முற்றுக; நீ முந்திச் செல்க'' என்று கூறாமல் இருக்கிறான். இது வியப்பாக உள்ளது.

எமக்கே கலங்கல் தருமே; தானே
தேறல் உண்ணும்மன்னே; நன்றும்
இன்னான் மன்ற வேந்தே, இனியே-
நேரார் ஆர் எயில் முற்றி,
வாய் மடித்து உரறி, 'நீ முந்து' என்னானே.

திணை - கரந்தை; துறை - நெடுமொழி.

ஆவியார் பாடியது.

## 299. பொன் முடியார்

பருத்தி மரத்தை வேலியாக உடைய சீறூர் மன்னனின் குதிரை உழுந்தின் சக்கையைத் தின்று தளர்ந்துள்ளது; எனினும் அது கடலைப் பிளந்து செல்லும் தோணி போல எதிரிகளின் படை முகம் சென்று பிளவுபடுத்துகிறது.

வளம்மிக்க மருத நிலத்துப் பேரரசர்களின் கொழுத்து உண்டு செழித்து வளர்ந்த குதிரைகள் முருகன் திருக்கோயிலில் கலங்களைத் தொடுவதற்கு இல்லாமல் மாதவிலக்குப் பெற்ற மகளிரைப் போல் போர்க்கு அஞ்சி விலகி நிற்கின்றன.

பருத்தி வேலிச் சீறூர் மன்னன்
உழுத்ததர் உண்ட ஓய் நடைப் புரவி,
கடல் மண்டு தோணியின், படை முகம் போழ-
நெய்ம்மிதி அருந்திய, கொய் சுவல் எருத்தின்,
தண்ணடை மன்னர், தாருடைப் புரவி,
அணங்குடை முருகன் கோட்டத்துக்
கலம் தொடா மகளிரின், இகழ்ந்து நின்றவ்வே.

திணை - நொச்சி; துறை - குதிரை மறம்.

பொன்முடியார் பாடியது.

# 300. அரிசில் கிழார்

கேடயத்தைக் கொடு கேடயத்தைக் கொடு என்று கேட்டுக் கொண்டிருக்கிறாய். கேடயத்தோடு துறுகல் கொண்டு உன்னைக் காத்துக் கொண்டாலும் நீ உயிருடன் திரும்ப மாட்டாய்.

நேற்று நீ வேல் எறிந்து கொன்றாயே அவன் தம்பி இவன். அகலில் பெய்த குன்றி மணிபோலச் சுழலும் கண்ணனாய்ப் பேரூரில் காய்ச்சிய கள்ளைக் குடிப்பதற்கு வீடு ஒன்றில் புகுந்து ஒரு கலயத்தைத் தேடுவதுபோல உன்னைத் தேடுகிறான். நீ உயிர் தப்புவது அரிது.

'தோல் தா; தோல் தா' என்றி; தோலொடு
துறுகல் மறையினும் உய்குவை போலாய்;
நெருநல் எல்லை நீ எறிந்தோன் தம்பி,
அகல் பெய் குன்றியின் சுழலும் கண்ணன்,
பேர் ஊர் அட்ட கள்ளிற்கு
ஓர் இல் கோயில் தேருமால் நின்னே.

திணை - தும்பை; துறை - தானை மறம்.
அரிசில் கிழார் பாடியது.

# 301. ஆவூர் மூலங்கிழார்

குமரிப் பெண்ணின் கூந்தலைப் போல நெருங்குவதற்கு அரிய வேலிகளை உடைய பாசறையில் பதுங்கி உள்ள படை வீரர்களே! நீங்கள் உம் அரசனைப் பாதுகாத்துக் கொள்ளுங்கள். உம் களிறுகளைக் காத்துக் கொள்ளுங்கள். எத்தனை நாள் இந்தப் போர் நீடிப்பது; ஆயினும் தம்மை எதிர்க்காதவரை இவன் எதிர் சென்று தாக்குதல் செய்யான். அவன் கருதுவது யாது?

படை வன்மை உமக்கு உள்ளது என்று தாக்குதல் ஒழிவீர்! அவனை எதிர்க்க நீங்கள் அனைவரும் ஒன்று சேர்ந்தாலும் வெல்ல இயலாது.

அவன் நீள் நெறி கடந்து குதிரையில் வந்து தன் பாசறையுள் புகுந்துள்ளான். ஓர் இரவு அது கழிந்தது; அவன் உங்களைச் சந்திப்பான்.

*நீங்கள் அவனுக்கு ஒரு பொருட்டு அன்று; உம் அரசனை அனுப்பி வைக்கவும். அவனே இவனுக்கு நேர் எதிரி; அப்பொழுதுதான் இவன் போர் செய்வான்.*

பல் சான்றீரே! பல் சான்றீரே!
குமரி மகளிர் கூந்தல் புரைய,
அமரின் இட்ட அரு முள் வேலிக்
கல்லென் பாசறைப் பல் சான்றீரே!
முரசு முழங்கு தானை நும் அரசும் ஓம்புமின்;
ஒளிறு ஏந்து மருப்பின் நும் களிறும் போற்றுமின்;
எனை நாள் தங்கும் நும் போரே, அனை நாள்
எறியார் எறிதல் யாவணது? எறிந்தோர்
எதிர் சென்று எறிதலும் செல்லான்; அதனால்
அறிந்தோர் யார், அவன் கண்ணிய பொருளே?
'பலம்' என்று இகழ்தல் ஓம்புமின்; உதுக் காண்
நிலன் அளப்பன்ன நில்லாக் குறு நெறி,
வண் பரிப் புரவிப் பண்பு பாராட்டி,
எல்லிடைப் படர்தந்தோனே; கல்லென
வேந்து ஊர் யானைக்கு அல்லது,
ஏந்துவன் போலான், தன் இலங்கு இலை வேலே.

திணையும் துறையும் அவை.

ஆவூர் மூலங் கிழார் பாடியது.

## 302. வெறியாடிய காமக் கண்ணியார்

*இப்படைத் தலைவன் தலைமை தாங்க இவனுக்குத் துணையாகச் சென்று போர் செய்த வீரர்களின் குதிரைகள் வளைத்துவிடப்பட்ட மூங்கில் நிமிர்ந்து தாவுவதைப் போலத் தாவிச் சென்று போர் செய்தன. வெற்றி விளைவித்தனர்.*

*விறலியர் பூ பெற்றனர்; யாழிசைப் பாணர்கள் கரம்பை நிலம் கொண்ட சிற்றூர்களைப் பரிசிலாகப் பெற்றனர்.*

*கொடைமிக்க இப்படைத் தலைவன் இத்தகைய போர்களில் எறிந்து வீழ்த்திய களிறுகளை எண்ணினால் வானத்து மீன்களும் பொழியும் மழைத்துளிகளும் நிகர் ஆகா. அவற்றினும் இவை மிகுதிப்பட்டன.*

வெடி வேய் கொள்வது போல ஓடித்,
தாவுபு உகளும், மாவே; பூவே,
விளங்குஇழை மகளிர் கூந்தற் கொண்ட;
நரந்தப் பல் காழ்க் கோதை சுற்றிய
ஐது அமை பாணி வணர் கோட்டுச் சீறியாழ்க்
கை வார் நரம்பின் பாணர்க்கு ஓக்கிய,
நிரம்பா இயல்பின் கரம்பைச் சீறூர்;
நோக்கினர்ச் செகுக்கும் காளை ஊக்கி,
வேலின் அட்ட களிறு பெயர்த்து எண்ணின்,
விண் இவர் விசும்பின் மீனும்,
தண் பெயல் உறையும், உறை ஆற்றாவே.

திணை - அது; துறை - குதிரை மறம்.

வெறி பாடிய காமக்கண்ணியார் பாடியது.

## 303. எருமை வெளியனார்

*நேற்று நடந்த போரில் பகைவேந்தனை நோக்கிக் கடலைப் பிளந்து செல்லும் தோணியைப் போல் சென்று பெண் யானைகள் வெட்கித் தனிமையுற்று வருந்தக் களிறுகளைத் தாக்கிக் கொன்றேன். அதனால் பகைகொண்டு திருப்பித் தாக்க என்னை எதிர்க்க இன்று கடுஞ் செலவினை உடைய குதிரை மீது எதிரிப் படைஞன் ஒருவன் வேலைச் சுழற்றி ஏந்தி என் மார்பில் ஏவிப் புண்படுத்த வருகின்றான்; அவனை யான் எதிர்ப்பேன்.*

நிலம் பிறக்கிடுவது போலக் குளம்பு குடையூஉ,
உள்ளம் அழிக்கும் கொட்பின் மான்மேல்
எள்ளுநர்ச் செகுக்கும் காளை கூர்த்த
வெந் திறல் எஃகம் நெஞ்சு வடு விளைப்ப
ஆட்டிக் காணிய வருமே - நெருநை,
உரைசால் சிறப்பின் வேந்தர் முன்னர்க்,
கரை பொரு முந்நீர்த் திமிலின் போழ்ந்து, அவர்
கயந்தலை மடப் பிடி புலம்ப,
இலங்கு மருப்பு யானை எறிந்த எற்கே,

திணையும் துறையும் அவை.

எருமை வெளியனார் பாடியது.

## 304. அரிசில் கிழார்

*''ஏவலனே! குழை அணிந்த மகளிர் உனக்கு மாலை சூட்டிப் பின் அவர்கள் வார்த்துத் தரக் குளிர் நீங்கக் கள் பருகுக; குதிரையை அலங்கரித்து வைக்க'' என்று ஏவலர்க்கு ஆணையிட்டு உள்ளான்.*

*தான் உணவும் உண்ணாமல் போருக்குக் குதிரைகளை ஆராய்ந்து கொண்டிருக்கிறான்.*

*''எம் முன்னைவனைக் கொன்றவனையும் அவன் தம்பியையும் ஒருசேர நாளைக்கு அமரில் கொல்வேன்'' என்று அவர்பால் சூள் உரைத்து இருக்கிறான்.*

*இந்தச் செய்தியை ஒற்றர் அறிந்து வந்து கூற அதனைக் கேட்டுப் பகை வேந்தனின் வீரர்கள் பாசறையில் ''அவன் சொல் பிழையான்; செயல்படுத்துவான்'' என்று கூறியவராய் நடுங்குகின்றனர்.*

கொடுங் குழை மகளிர் கோதை சூட்டி,
நடுங்கு பனிக் களைஇயர் நார் அரி பருகி,
வளி தொழில் ஒழிக்கும் வண் பரிப் புரவி
பண்ணற்கு விரைதி, நீயே; நெருநை,
எம்முன் தப்பியோன் தம்பியொடு, ஓராங்கு
நாளைச் செய்குவென் அமர்' எனக் கூறிப்,
புன் வயிறு அருத்தலும் செல்லான், பல் மான்
கடவும் என்ப, பெரிதே; அது கேட்டு,
வலம் படு முரசின் வெல் போர் வேந்தன்
இலங்கு இரும் பாசறை நடுங்கின்று -
'இரண்டு ஆகாது அவன் கூறியது' எனவே.

திணையும் துறையும் அவை.

அரிசில் கிழார் பாடியது.

## 305. மதுரை வேளாசான்

*வயலைக் கொடிபோல வாடிய இடுப்பினை உடைய பார்ப்பன இளைஞன் இரவின்கண் மெல்ல இயங்கும் ஊர்தியில்*

வந்து நில்லாது நேரே உள்ளே சென்று கொல்லிய சொற்கள் சிலவே ஆகும்.

அதன் பயனாக ஏணியையும், சீப்பையும் நீக்கிப் போர் செய்ய நிறுத்தப்பட்ட யானைகளின் மணிகளையும் பகை அரசன் களைந்து விட்டான்.

வயலைக் கொடியின் வாடிய மருங்குல்,
உயவல் ஊர்திப் பயலைப் பார்ப்பான்
எல்லி வந்து நில்லாது புக்குச்,
சொல்லிய சொல்லோ சிலவே; அதற்கே
ஏணியும் சீப்பும் மாற்றி,
மாண் வினை யானையும் மணி களைந்தனவே.

திணை - வாகை; துறை - பார்ப்பன வாகை.

மதுரை வேளாசான் பாடியது.

# 306. அள்ளூர் நன்முல்லையார்

யானைகள் படிந்து நீரைக் கலக்குகின்றன. குறைந்த நீர் உடையது. அத்தகைய நீர் நிலைகளையும் கழல் கொடியால் அமைந்த முள்வேலிகளையும் உடையது; அவ் அழகிய சிற்றூர். இதில் முன்னோருக்கு என்று வைத்த நடுகல்லை வீட்டுக் கிழத்தி தொழுது வழிபடுகின்றனள் . அவள் வழிபாடு இது.

''நாளும் விருந்தினர் வருக''என்றும், ''என் தலைவன் வேந்தனோடு சென்று பல போர்களைச் சந்திக்க''என்றும் கூறி வழிபடுகிறாள்.

களிறு பொரக் கலங்கு, கழல் முள் வேலி,
அரிது உண் கூவல், அம் குடிச் சீறூர்
ஒலி மென் கூந்தல் ஒள் நுதல் அரிவை
நடுகல் கை தொழுது பரவும், ஒ டியாது;
விருந்து எதிர் பெறுகதில் யானே; என்ஐயும்
ஒ ... ... ... ... ... ... ... ... வேந்னொடு
நாடுதரு விழுப் பகை எய்துக எனவே.

திணை - அது; துறை - மூதில் முல்லை.

அள்ளூர் நன்முல்லையார் பாடியது.

# 307. களிற்றுடன் நிலை

அதோ ஒரு புதிய வீரன். அணில் வால் போல் காட்சி அளிக்கும் ஊகம் புல்லின் பூவைச் சூடிப் பொலிவுற விளங்குகிறான். முடம்பட்ட எருதினை உமணர் தடம்பட்ட வழியில் ஒரு மூலையில் விட்டுச் செல்ல உணவு இன்றித் தவிக்கிறது. அது தன் சுற்றிலும் உள்ள புல்லைப் பற்றி எட்டிய மட்டும் கறித்துத் தின்கிறது. அதுபோல இவ்வீரன் களிறு வீழ்த்தி அதனோடு விழுந்தவன் தன் சுற்றிலும் உள்ளவரைச் சாய்த்து வெட்டி வீழ்த்துகிறான். இவன் வீரம் வியக்கத்தக்கது.

இவ்விளைய வீரன் ஆற்றும் போரைக் கண்டு இதுவல்லவா வீரம். இவனைப் போல் யானும் பொருவேன்; அதனால் புலவர் பாடும் புகழும் பெறுவேன்; சரித்திரம் செய்வேன் என்று கூறி உயிர்மேல் பற்று அற்றுக் களத்தில் வேந்தனும் போரிட்டான். களிறைச் சாய்த்துத் தானும் உடன் விழுந்தான். அவன் என்ன ஆனான்? அவன் நிலை யாது; எங்களுக்கு எல்லாம் பற்றாக இருந்த எம் தலைவன் எங்கே உள்ளானோ! அறியேன்.

ஆசு ஆகு எந்தை யாண்டு உளன்கொல்லோ?
குன்றத்து அன்ன களிற்றொடு பட்டோன்;
வம்பலன் போலத் தோன்றும்; உதுக்காண்!
வேனல் வரி அணல் வாலத்து அன்ன,
கான ஊகின் கழன்று உகு முது வீ
அரியல் வான் குழல் சுரியல் தங்க,
நீரும் புல்லும் ஈயாது, உமணர்
யாரும் இல் ஒரு சிறை முடத்தொடு துறந்த
வாழா வான் பகடு ஏய்ப்பத், தெறுவர்
பேர் உயிர் கொள்ளும்மாதோ; அது கண்டு,
வெஞ் சின யானை வேந்தனும், 'இக் களத்து,
எஞ்சலின் சிறந்தது பிறிது ஒன்று இல்' எனப்,
பண் கொளற்கு அருமை நோக்கி,
நெஞ்சு அற வீழ்ந்த புரைமையோனே.

திணை - தும்பை; துறை - களிற்றுடனிலை.

.............................................

# 308. கோவூர் கிழார்

*இசை வழங்கும் பாணனே இந்தப் புதுமையை நீ கேட்பாயாக!*

*சீறூர் வாழும் மன்னன் ஏவிய வேல் பேரூர் மன்னனின் யானையின் முகத்தில் சென்று பாய்ந்தது.*

*அவ்வாறே அப்பேரூர் மன்னன் திரும்ப ஏவிய வேல் இச் சிற்றூர் மன்னனின் மார்பில் பாய்ந்தது; அவன் மார்பைக் கிழித்தது.*

*அவன் தன் மார்பில் பதிந்த வேலைப் பிடுங்கி அவ்யானையை நோக்கி ஏவினான். அவ்வளவுதான் அதன் பெண் யானை நாணம் அடையப் பேரரசன் யானைகள் எல்லாம் அஞ்சிப் புறங்கொடுத்தன.*

பொன் வார்ந்தன்ன புரி அடங்கு நரம்பின்,
மின் நேர் பச்சை, மிஞிற்றுக் குரற் சீறியாழ்
நன்மை நிறைந்த நய வரு பாண!
சீறூர் மன்னன் சிறியிலை எஃகம்
வேந்து ஊர் யானை ஏந்து முகத்ததுவே;
வேந்து உடன்று எறிந்த வேலே, என்னை
சார்ந்து ஆர் அகலம் உளம் கழிந்தன்றே;
உளம் கழி சுடர்ப் படை ஏந்தி, நம் பெருவிறல்
ஒச்சினன் துரந்த காலை, மற்றவன்
புன் தலை மடப் பிடி நாணக்,
குஞ்சரம் எல்லாம் புறக்கொடுத்தனவே.

திணை - வகை; துறை - மூதில் முல்லை.
கோவூர் கிழார் பாடியது.

# 309. மதுரை இளங்கண்ணிக் கௌசிகனார்

*இரும்பு வேல் கொண்டு அதன் முனை மழுங்கப் பகைவர்களைக் கொன்று வெற்றி பெறுவது யாவரும் ஆற்றக் கூடியது.*

*என் தலைவன் அவன் பெயரைச் சொன்னாலே நடுங்குவர் எதிரிகள். அரவு உறையும் புற்று என்றும், கொல்லேறு திரிந்து சுழலும் மன்றம் எனவும் அவன் உறைவிடத்தை நினைப்பர்.*

*எப்பொழுது வந்து தாக்குவானோ என்ற அச்சம் அவர்களை அலைவுறுத்திக் கொண்டே இருக்கும். அத்தகைய புகழ் ஒளி என் தலைவன் மாட்டு உள்ளது.*

இரும்பு முகம் சிதைய நூறி, ஒன்னார்
இருஞ் சமம் கடத்தல் ஏனோர்க்கும் எளிதே;
நல் அரா உறையும் புற்றம் போலவும்,
கொல் ஏறு திரிதரு மன்றம் போலவும்,
மாற்று அருந் துப்பின் மாற்றோர், 'பாசறை
உளன்' என வெரூஉம் ஓர் ஒளி
வலன் உயர் நெடு வேல் என்னைகண்ணதுவே.

திணை - தும்பை; துறை - நூழிலாட்டு.
மதுரை இளங்கண்ணிக் கௌசிகனார் பாடியது.

## 310. பொன் முடியார்

*சிறுவன்; கிண்ணத்தில் பால் ஊற்றிக் குடிக்கத் தருவேன்; அவன் குடிக்க மறுப்பான். கையில் கோல் ஒன்று வைத்துக் கொண்டு அடிப்பது போல் நடிப்பேன்; அவன் அதற்கு அஞ்சிக் குடிப்பான். இவன் எதிர்காலத்தில் என்ன செய்யப் போகிறான் என்று அஞ்சிக் கவலைப்பட்டது உண்டு.*

*இன்று அவன் களிறு எறிந்தான். தரனும் விழுப்புண் பட்டுக் கிடக்கிறான். தோல்மீது படுத்திருக்கிறான். தன் மார்பில் அம்புபட்ட புண்; அதை யான் அறியேன். ''எனக்கே தெரியாது'' என்று கூறுகிறான். அவன் தானா இவன்! நினைத்துப் பார்த்தால் வியப்பாக இருக்கிறது. பெருமிதம் கொள்கிறேன். மறக்குடியில் பிறந்த மகன்! அவன் செயல் வியப்புக்கு உரியது.*

பால் கொண்டு மடுப்பவும் உண்ணான்ஆகலின்
செறாஅது ஓச்சிய சிறுகோல் அஞ்சி,
உயவொடு வருந்தும் மன்னே! இனியே
புகர் நிறம் கொண்ட களிறு அட்டு ஆனான்,
முன்நாள் வீழ்ந்த உரவோர் மகனே,
உன்னிலன் என்னும், புண் ஒன்று அம்பு-

மான் உளை அன்ன குடுமித்
தோல் மிசைக் கிடந்த புல் அணலோனே.

திணையும் துறையும் அவை.
பொன்முடியார் பாடியது.

## 311. ஔவையார்

புலைத்தி வெளுத்துத் தரும் தூய வெள்ளை ஆடையை உடுத்தியவன். தெருவில் எருப் புழுதி பட அது அழுக்குப் படியுமே என்று கவலைப்படாமல் பலர்க்கு உறுகுறைகளைத் தீர்த்து வருபவன். இன்று செருக் களத்தில் சினம் மிக்கவனாய்க் கேடயத்தைக் கொண்டு எதிரிகள் விடும் அம்புகளைத் தடுத்துக் கொண்டிருக்கிறான்.

அவன் ஒருவனே இருந்து பகைவர்கள் விடும் அம்பைத் தடுத்துப் போராடுகிறான். அவனுக்குத் துணையாவார் யாவரும் இல்லை.

களர்ப் படு கூவல் தோண்டி, நாளும்,
புலைத்தி கழீஇய தூ வெள் அறுவை.
தாது எரு மறுகின் மாசுண இருந்து,
பலர் குறை செய்த மலர் தார் அண்ணற்கு
ஒருவரும் இல்லைமாதோ, செருவத்துச்;
சிறப்புடைச் செங் கண் புகைய, ஓர்
தோல் கொண்டு மறைக்கும் சால்பு உடையோனே.

திணை - அது; துறை - பாண்பாட்டு
ஔவையார் பாடியது.

## 312. பொன் முடியார்

மகனைப் பெற்று உலகுக்குத் தருவது தாய் என் கடமையாகும்.

அவனை நற்குண நற்செயல்கள் மிக்கவனாக வளர்ப்பது தந்தையின் கடமையாகும்.

*வேல் வடித்துக் கொடுப்பது கொல்லனின் கடமை ஆகும்.*

*அவனுக்கான போர்ப் பயிற்சி கற்றுத் தருவது வேந்தனின் கடமையாகும்.*

*அமரில் வாள் ஏந்திச் சென்று களிற்றினை எறிந்து திரும்புதல் இளம் வீரனுக்குக் கடமையாகும்.*

ஈன்று புறந்தருதல் என் தலைக் கடனே;
சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடனே;
வேல் வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே;
தண்ணடை நல்கல் வேந்தற்குக் கடனே,
ஒளிறு வாள் அரும் சமம் முருக்கிக்,
களிறு எறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே.

திணை - வாகை; துறை - மூதில்முல்லை.

பொன்முடியார் பாடியது.

## 313. மாங்குடி கிழார்

*வழிப்பாதைகள் மிக்க நாட்டுக்குத் தலைவன் அவன்; கைப் பொருள் அவனிடம் எப்பொழுதும் இருப்பது இல்லை.*

*அவனை நாடி இரவல் மக்கள் சென்றால் களிற்றொடு நெடுந்தேர் வேண்டினாலும் தந்து சிறப்பிப்பான்.*

*உப்பங் கழியில் குவித்து வைக்கும் உப்புக் குவியல் போன்றது அவன் செல்வம்; அள்ள அள்ளக் குறையாது.*

அத்தம் நண்ணிய நாடு கெழு பெருவிறல்
கைப் பொருள் யாதொன்றும் இலனே; நச்சிக்
காணிய சென்ற இரவல் மாக்கள்
களிறொடு நெடுந் தேர் வேண்டினும், கடன்;
உப்பு ஒய் சாகாட்டு உமணர் காட்ட
கழி முரி குன்றத்து அற்றே,
எள் அமைவு இன்று, அவன் உள்ளிய பொருளே.

திணை - அது; துறை - வல்லாண் முல்லை.

மாங்குடி கிழார் பாடியது.

# 314. ஐயூர் முடவனார்

*மனைக்கு விளக்கம் தருபவளாகிய மனைவிக்குக் கணவன்; போரில் முந்தி நின்று தன் படை வீரர்களைக் காக்கும் வீரன்; அவன் நடுகற்கள் மிக்கு உள்ள பாழிடங்களையும், நெல்லி மரங்களையும் உடைய வன்புலச் சீறூரில் வாழும் குடிமகனும் ஆவான்.*

*தன் அரசனுக்கு ஏதாவது துன்பம் நிகழ்வதாயின் தம் சேனை நிலை கெட்ட நிலையில் தாக்க வந்த பகைவரைத் தடுத்து நிறுத்தும் கற்சிறையாவான்.*

மனைக்கு விளக்கு ஆகிய வாணுதல் கணவன்,
முனைக்கு வரம்பு ஆகிய வெல் வேல் நெடுந் தகை,
நடுகல் பிறங்கிய உவல் இடு பறந்தலைப்,
புன் காழ் நெல்லி வன் புலச் சீறூர்க்
குடியும் மன்னும் தானே; கொடி எடுத்து
நிறை அழிந்து எழுதரு தானைக்குச்
சிறையும் தானே- தன் இறை விழும்உறினே.

திணையும் துறையும் அவை.

ஐயூர் முடவனார் பாடியது.

# 315. அதியமான் நெடுமான் அஞ்சி

*உள்ளதைப் பலருக்கும் பகிர்ந்து அளித்து உண்பான்; வேறு சிலருக்குத் தரக் கடமைப்பட்டிருந்தாலும் முதலில் தன்னை அணுகி இரப்பவருக்கே தந்து உதவுவான். பழகுதற்கு இனியன். எளியவருடன் பழகுவதில் இனிமை காண்பவன். இது இவன் கொடைப் பண்பு.*

*வீட்டில் சொருகி வைக்கும் தீக் கடை கோலைப் போல் அடங்கிக் கிடப்பான். மற்று அது எரியும் காலத்து வெளிப்படும் நெருப்புப் போலத் தான் வெளிப்படுங்காலத்துப் பகைவர்க்கு அழிவாக அமைவான். இது இவன் வீரச் செயல்.*

உடையன் ஆயின் உண்ணவும் வல்லன்;
கடவர் மீதும் இரப்போர்க்கு ஈயும்;

மடவர் மகிழ் துணை; நெடு மான் அஞ்சி
இல் இறைச் செரீஇய ஞெலிகோல் போலத்,
தோன்றாது இருக்கவும் வல்லன்; மற்றதன்
கான்று படு கனை எரி போலத்,
தோன்றவும் வல்லன் - தான் தோன்றுங்காலே.

திணையும் துறையும் அவை.

நெடுமான் அஞ்சியை ஔவையார் பாடியது.

## 316. மதுரைக் கள்ளிற் கடையத்தன் வெண்ணாகனார்

*கள் மயக்கத்தில் உலர்ந்த சருகுகளின் தூசு படிந்த தன் வீட்டு முற்றத்தில் தூங்குகின்றான். விடிய விடியத் தூங்குகிறான். அவன் என் தலைவன்; யாம் அவன் பாணன்.*

*நேற்று அவனைத் தேடி வந்த விருந்தினர்க்கு உணவு தரத் தன் வாளை அடகு வைத்தான்.*

*இன்று அவனிடம் யாதும் இல்லையென்று கருதாதீர். எதையாவது அடகு வைத்து எப்படியாவது நம்மை உபசரிப்பான். இது உண்மை; யாழ் மீது ஆணை; நீயும் நின் விறலியும் எம்முடன் வருக; விறலி இழையணி பெறுவாள். நாம் கள் பெற்று மகிழ்வோம்.*

*சென்று நம் வாய் சிவந்து வருவோம்; பசி பறந்து போகும்.*

*யானை மீது வந்த அரசனை வீழ்த்திவிட்டு அவன் களிப்புடன் உறங்குகின்றான்.*

*அவன்பால் பரிசில் பெறுவது உறுதி; எம் யாழின் மீது ஆணை.*

கள்ளின் வாழ்த்திக், கள்ளின் வாழ்த்திக்,
காட்டொடு மிடைந்த சீயா முன்றில்,
நாட் செருக்கு அனந்தர்த் துஞ்சுவோனே.
அவன் எம் இறைவன்; யாம் அவன் பாணர்;
நெருதை வந்த விருந்திற்கு மற்றுத் தன்

இரும் புடைப் பழ வாள் வைத்தனன்; இன்று இக்
கருங் கோட்டுச் சீறியாழ் பணையம்; இது கொண்டு
ஈவதிலாளன் என்னாது, நீயும்,
வள்ளி மருங்குல் வயங்கு இழை அணியக்,
கள்ளுடைக் கலத்தேம் யாம் மகிழ் தூங்கச்,
சென்று வாய் சிவந்து மேல் வருக
சிறு கண் யானை வேந்து விழும்உறவே.

திணையும் துறையும் அவை.

மதுரைக் கள்ளிற் கடையத்தன் வெண்ணாகனார் பாடியது.

## 317. வேம்பற்றூர்க் குமரனார்

*முற்றத்தில் நன்கு குடித்து விட்டு மயங்கிக் கிடக்கிறான். எமக்கும் பிறர்க்கும் யாவர்க்கும் தந்துவிட்டுத் துயில் கொள் கின்றான்.*

*அவன் படுத்து உறங்க ஏதாவது மான் தோல் இருக்குமாயின் தருக; அல்லது ஓலையால் முடையப்பட்ட பாய் இருந்தாலும் எடுத்துத் தருக. அவன் மகிழ்வுடன் உறங்கட்டும்.*

*எமக்கும் பிறர்க்கும் கொடுத்துக் கொடுத்து அது முடித்த பின்னே அவன் துயில்கிறான்.*

வெல் வேல் .................... நது
முன்றில் கிடந்த பெருங் களியாற்கு
அதள் உண்டாயினும், பாய் உண்டாயினும்,
யாது உண்டாயினும், கொடுமின் வல்லே;
வேட்கை மீளப ............
.................... கும், எமக்கும், பிறர்க்கும்,
யார்க்கும், ஈய்ந்து, துயில் ஏற்பினனே.

திணையும் துறையும் அவை.

வேம்பற்றூர்க் குமரனார் பாடியது.

## 318. பெருங்குன்றூர் கிழார்

*வீட்டு இறைகளில் கூடு கட்டி வாழும் குருவிகளில் ஆண் குருவி தன் பெடைக்குச் செந்நெல் அரிசி கொண்டு வந்து உண்ணச் செல்கிறது. புது வருவாய் உடையது வேந்தனது ஊர்.*

அதன் வேந்தன் போர்க் களத்தில் உழந்து வருந்துகின்றான். அதனால் அந்த ஊர் மக்கள் வருந்தி வாடுகின்றனர். உணவு உண்ண மறுக்கின்றனர்.

வீட்டு மனையோள் பறித்து வைத்த கீரை இலைகளை அப்படியே விட்டு வைத்துள்ளாள். அவை வாடி வதங்குகின்றன. அடுப்பு எரிக்கக் கொண்டு வந்த விறகுகள் காய்ந்து உலர்ந்து சருகு ஆகின்றன. அவ்வூரே இவ்வாறு பசியால் வாடுகின்றது. வளம் மிக்க ஊர்; உளம் மதிக்கும் வேந்தன் துயர் உற்றதால் இவர்கள் அயர்வுற்றனர்.

கொய் அடகு வாடத், தரு விறகு உணங்க,
மயில்அம் சாயல் மாஅயோ ளொடு
பசித்தன்று அம்ம, பெருந்தகை ஊரே
மனை உறை குரீஇக் கறை அணற் சேவல்,
பாணர் நரம்பின் சுகிரொடு, வய மான்
குரல் செய் பீலியின் இழைத்த குடம்பைப்,
பெருஞ் செய் நெல்லின் அரிசி ஆர்ந்து, தன்
புன் புறப் பெடையொடு வதியும்
யாணர்த்து ஆகும் - வேந்து விழும்உறினே.

திணையும் துறையும் அவை.

பெருஞ் குன்றூர் கிழார் பாடியது.

# 319. ஆலங்குடி வங்கனார்

அறிவு முதிர்ந்த பாணனே! ஊற்று நீரை முகந்து வைத்தது சாடியில் உள்ளது. மற்றும் உலர வைத்த தினையும் உள்ளது; புறவுக் கறியும் இதர பறவையின் கறிகளும் வேண்டுமானாலும் தர முடியும். பொழுது மறையும் நேரம். அவற்றைச் சமைக்கப் பொழுது காணாது. அதனால் முயற்கறியைச் சுட்டுத் தருகிறோம்;எம் வீட்டில் தங்கி இருந்து அவற்றை உண்டு மகிழ்க.

வளைந்த கொம்பினை உடைய ஆமானின் இளங் கன்றைப் பிடித்து வந்து தேரில் பூட்டிச் சிறுவர் விளையாடும் சிற்றூர் எம் ஊர்.

எம் சிற்றூர் ஊர் தலைவனாகிய மன்னன் நாட்டு வேந்தன் பணித்த தொழிலை ஏற்றுப் போர் செய்யச் சென்றுள்ளான்.

விரைவில் வெற்றி தந்து வேண்டிய பொருள் பெற்று வருவான்; அப்பொழுது உன் பாடினி அணியப் பொன்மாலை தருவான். உனக்கும் பொற்றா மரை சூட்டிச் சிறப்பிப்பான். இப்பொழுது நீ இருந்து உண்டு செல்க.

பூவற் படுவில் கூவல் தொடீஇய
செங் கண் சில் நீர் பெய்த சீறில்
முன்றில் இருந்த முது வாய்ச் சாடி
யாம் கஃடு உண்டென, வறிது மாசு இன்று;
படலை முன்றில் சிறு தினை உணங்கல்
புறவும் இதலும் அறவும் உண்கெனப்
பெய்தற்கு எல்லின்று பொழுதே; அதனான்,
முயல் சுட்டஆயினும் தருகுவேம்; புகுதந்து
ஈங்கு இருந்தீமோ, முது வாய்ப் பாண!
கொடுங் கோட்டு ஆமான் நடுங்கு தலைக் குழவி
புன் தலைச் சிறாஅர் கன்று எனப் பூட்டும்
சீறூர் மன்னன் நெருநை ஞாங்கர்,
வேந்து விடு தொழிலொடு சென்றனன்; வந்து, நின்
பாடினி மாலை அணிய,
வாடாத் தாமரை சூட்டுவன் நினக்கே.

திணையும் துறையும் அவை.

ஆலங்குடி வங்கனார் பாடியது.

# 320. வீரை வெளியனார்

வேந்தன் தரும் பொருள் அதனைக் கொண்டு பரிசிலர்க்கு வழங்கும் புகழ்மிக்க தலைவன் வாழும் ஊரில் பாணனே நீ வேட்டுவன் மனைவி தரும் உணவினை உண்டு தங்கிச் செல்வாயாக.

பலா மரத்தில் முன்னைக் கொடியும், முசுண்டைக் கொடியும் தவழும். அதன் நறுநிழலில் யானை வேட்டுவன் அயர்ந்து துயில் கொள்கிறான். அவன் பிடித்து வைத்த பார்வை மான்; அது பெண் மான் அது தனித்து இருக்கிறது. அவ்வழிச் செல்லும் ஆண் மான் அதனோடு கூடித் திளைத்து இன்புறுகிறது.

இதனை அவன் காதல் மனைவி பார்க்கிறாள். தன் கணவன் துயில்கின்றான். அவனைத் துயில் எழுப்பவும் விரும்பவில்லை;

அம் மான் இணைக்கு அதிர்ச்சி தரவும் கூடாது; அதனால் நடமாடுவதை நிறுத்திக் கொண்டு ஒருபுறம் ஒதுங்குகிறாள்.

இதுதான் வாய்ப்பு என்று அவள் மான் தோலில் உலர்த்தி வைத்த தினை அரிசியைக் காட்டுக் கோழியும், சிதல் பறவையும் சத்தமிட்டுக் கொத்தித் தின்கின்றன. அவற்றை அவள் தடுத்து நிறுத்தவில்லை; பிடித்துத் தடியவும் விரும்பவில்லை.

அவள் தரும் விருந்து சந்தனக் கட்டையில் சுட்ட மான் இறைச்சியும் மீன் வறுவலும் கொண்டது; பாணனே! நீ உன் சுற்றத்தோடு அதனைத் தின்று மகிழ்வுடன் தங்கிச் செல்வாயாக!

முன்றில் முஞ்ஞையொடு முசுண்டை பம்பிப்,
பந்தர் வேண்டாப் பலாத் தூங்கு நீழல்,
கைம்மான் வேட்டுவன் கனை துயில் மடிந்தெனப்,
பார்வை மடப் பிணை தழீஇப், பிறிது ஓர்
தீர் தொழில் தனிக் கலை திளைத்து விளையாட,
இன்புறு புணர்நிலை கண்ட மனையோள்
கணவன் எழுதலும் அஞ்சிக், கலையே
பிணைவயின் தீர்தலும் அஞ்சி, யாவதும்,
இல் வழங்காமையின், கல்லென ஒலித்து,
மான் அதள் பெய்த உணங்கு தினை வல்சி
கானக் கோழியோடு இதல் கவர்ந்து உண்டென,
ஆர நெருப்பின், ஆரல் நாறத்,
தடிவு ஆர்ந்திட்ட முழு வள்ளூரம்
இரும் பேர் ஒக்கலொடு ஒருங்கு இனிது அருந்தித்,
தங்கினை சென்மோ, பாண! - தங்காது,
வேந்து தரு விழுக் கூழ் பரிசிலர்க்கு என்று
அருகாது ஈயும் வண்மை
உரைசால் நெடுந் தகை ஓம்பும் ஊரே.

திணையும் துறையும் அவை.
வீரை வெளியனார் பாடியது.

## 321. உறையூர் மருத்துவன் தாமோதரனார்

பூழ்ச் சேவல் முறத்தில் உலர்த்தி வைத்த மேல் தோல் களையப் பட்டவெள் எள்ளினை உண்டு விட்டு வரப்பெலியைப்

*பிடித்துத் தின்னத் தாவுகிறது. அது அதற்கு அகப்படாமல் தப்பிச் சென்று வரகுக் கதிர்களிடையே ஒளிந்து கொள்கின்றது.*

*அத்தகைய வரப்புகளை உடையது அவ்வூர். அவ்வூர்த் தலைவன் சென்னி போர்களில் வெற்றிகள் கண்டு புகழ் படைத்தவன்.*

*பாணனே! நீ அங்குச் சென்றால் சுவை மிக்க பழங்கள் மிகவும் பெறுகுவை. பசி தீர உண்ணத் தருவான்.*

பொறிப் புறப் பூழின் போர் வல் சேவல்
மேந் தோல் களைந்த தீம் கோள் வெள் எள்
சுளகிடை உணங்கல் செவ்வி கொண்டு, உடன்
வேனில் கோங்கின் பூம் பொகுட்டு அன்ன
குடந்தை அம் செவிய கோட்டு எலி ஆட்ட,
கலி ஆர் வரகின் பிறங்கு பீள் ஒளிக்கும்,
வன் புல வைப்பினதுவே சென்று
தின் பழம் பசீஇ ............னனோ, பாண!
வாள் வடு விளங்கிய சென்னிச்
செரு வெங் குருசில் ஓம்பும் ஊரே.

திணையும் துறையும் அவை.
உறையூர் மருத்துவன் தாமோதரனார்.

## 322. ஆவூர் கிழார்

*காளை எருதின் கொம்பு போல் கவைத்த முள்ளையுடைய கள்ளி மரத்தின் அடியில் துள்ளி விளையாடும் சிறுவர்கள் வரகுத் தாளில் பதுங்கி இருக்கும் கருப்பு எலிகளை வேட்டையாட அம்பு ஏவுகின்றனர். அவ்ஒலி குறுமுயல்களை விரட்டி அடிக்க அவை மட்கலங்களை உருட்டித் தள்ளி விட்டு மன்றங்களில் ஓடுகின்றன. இத்தகைய வளம் குறைந்த வன்புலத்தில் வாழ்பவன் இவன்.*

*கரும்பு ஆலைகளில் எழும் ஒலி அடுத்துள்ள வாளைகளைப் பிறழச் செய்யும் குளிர்ந்த மருத நிலத்துக்கு உரிய பெரு நிலமன்னர் களை நடுங்க வைக் கின்றான். அத்தகைய போர்த் தலைவன்இவன்.*

உழுது ஊர் காளை ஊழ் கோடு அன்ன
கவை முள் கள்ளிப் பொரி அரைப் பொருந்திப்,

புது வரகு அரிகால் கருப்பை பார்க்கும்
புன் தலைச் சிறாஅர் வில் எடுத்து ஆர்ப்பின்,
பெருங் கண் குறு முயல் கருங் கலன் உடைய
மன்றில் பாயும் வன் புலத்ததுவே-
கரும்பின் எந்திரம் சிலைப்பின், அயலது.
இருஞ் சுவல் வாளை பிறழும் ஆங்கண்,
தண் பணை ஆளும் வேந்தர்க்குக்
கண் படை ஈயா வேலோன் ஊரே.

திணையும் துறையும் அவை.

ஆவூர் கிழார் பாடியது.

## 323 வல்லாண் முல்லை

*பரிசிலர்க்கு வாரி வழங்கும் கொடையோன்; வேல் ஏந்திச் செய்யும் போர் என்றால் யானை வந்து எதிர்ப்பட்டால்தான் வேல் ஏந்துவான்; எடுப்பான். அத்தகைய தறுகண்மை உடையவன் வாழும் ஊர் அது; மற்றும் புலியின்பால் மான்பட்டுவிட அதன் கன்றினுக்கு முதியப் பசு தன் பாலைத் தந்து காக்கிறது. அத்தகைய சிறப்பு உடையது.*

புலிப்பாற் பட்ட ஆமான் குழவிக்குச்
சினம் சுழி மூதாக் கன்று மடுத்து ஊட்டும்
கா .. .. .. .. .பரிசிலர் க்கு
உள்ளியது சுரக்கும் ஓம்பா ஈகை,
வெள் வேல் ஆவம்ஆயின், ஒள் வாள்
கறையடி யானைக்கு அல்லது
உறை கழிப்பு அறியா, வேலோன் ஊரே.

திணையும் துறையும் அவை

................. கிழார் பாடியது.

## 324. ஆலத்தூர் கிழார்

*வெருக்குப் போன்ற வெருண்ட நோக்கு உடைய சிறுவர்கள் வேல மரத்தில் முள்ளை ஊகம் புல்லில் செருகி அம்பாக*

*அமைத்து வளர் நாரால் பிணிக்கப்பட்ட வில்லில் வைத்துப் பருத்தி மர வேலியின் கீழ்ப் பதுங்கி உள்ள எலிகளை வீழ்த்தக் குறிபார்ப்பர். அத்தகைய புன்செய் நிலத்தில் வாழ்பவர்க்குத் தலைவன். மற்றும் குமிழம் பழத்தை உண்டு வெள்ளாடுகள் எருவாய் வழியாக வெளிப் படுத்திய வெள்ளை நிறத்துக் கொட்டைகள் பிழுக்கைகளாகப் பரந்து கிடக்கும் இடத்தில் பந்தலில்கீழ் இடையர் பொத்திய சிறு தீ விளக்கத்து ஒளியில் அவன் பாணரோடு அளவளாவும் இயல்பினன். அத்தகையோன் வளம் மிக்க பேரரசனுக்கு உற்றுழி உதவும் நெஞ்சு ஆர்ந்த துணைவன் ஆவான்.*

வெருக்கு விடை அன்ன வெருள் நோக்குக் கயந் தலை,
புள் ஊன் தின்ற புலவு நாறு கய வாய்,
வெள் வாய் வேட்டுவர் வீழ் துணை மகாஅர்
சிறியிலை உடையின் சுரையுடை வால் முள்
ஊக நுண் கோல் செறித்த அம்பின்,
வலாஅர் வல்வில் குலாவரக் கோலிப்,
பருத்தி வேலிக் கருப்பை பார்க்கும்
புன் புலம் தழீஇய அம் குடிச் சீறூார்,
குமிழ் உண் வெள்ளை பகு வாய் பெயர்த்த
வெண் காழ் தாய வண் காற் பந்தர்,
இடையன் பொத்திய சிறு தீ விளக்கத்துப்,
பாணரொடு இருந்த நாணுடை நெடுந்தகை
வலம் படு தானை வேந்தர்க்கு
உலந்துழி உலக்கும் நெஞ்சு அறி துணையே.

திணையும் துறையும் அவை.

ஆலத்தூர் கிழார் பாடியது.

## 325. உறையூர் முதுகண்ணன் சாத்தனார்

*கரம்பை நிலம் அதில் பன்றி கிளர்த்திட்டகுழி அதில் மழைநீர் நிரம்ப அதனைப் பசுவும் கன்றும் குடித்துவிட எஞ்சிய கலங்கல் நீர் அதனைக் குடித்து நிறைவு பெறாத வாழ்க்கையர்.*

*வழக்கமாக முள்ளம் பன்றியைக் கொன்று பழக்கப்பட்டவர் கள் உடும்பினைக் கொன்று அதனைக் கூறுபடுத்தி ஓடுவங் கழி*

கொண்டு சார்த்தப்பட்ட மறைவினை உடைய முற்றத்தில் அதனைக் கொள்ளியில் இட்டுச் சுட அதன் நாற்றம் தெரு மன்றங்களில் பரவும்.

அம் மன்றங்களில் உலர்ந்த இலந்தி மரங்களின் நிழலில் அக்கானவர் சிறுவர்கள் அம்புகள் எய்து விளையாடுவர். அத்தகைய வன்புல இருக்கை அவர்களது; வேந்தர்களே தன்னை எதிர்த்து வந்தாலும் தடுத்து நிறுத்தும் ஆற்றலும், ஈகைப் பண்பும் உடைய எம் தலைவன் வாழும் ஊர் அதுவாகும்.

களிறு நீறு ஆடிய விடு நில மருங்கின்,
வம்பப் பெரும் பெயல் வரைந்து சொரிந்து இறந்தெனக்,
குழி கொள் சில் நீர் குராஅல் உண்டலின்,
சேறு கிளைத்திட்ட கலுழ் கண் ஊறல்
முறையின் உண்ணும் நிறையா வாழ்க்கை,
முளவு மாத் தொலைச்சிய முழுச்சொல்-ஆடவர்
உடும்பு இழுது அறுத்த ஒடுங் காழ்ப் படலைச்
சீறில் முன்றில் கூறுசெய்திடுமார்,
கொள்ளி வைத்த கொழு நிண நாற்றம்
மறுகுடன் கமழும் மதுகை மன்றத்து,
அலந்தலை இரத்தி அலங்குபடு நீழல்,
கயந் தலைச் சிறாஅர் கணை விளையாடும்
அரு மிளை இருக்கையதுவே- வென் வேல்
வேந்து தலைவரினும் தாங்கும்,
தாங்கா ஈகை, நெடுந்தகை ஊரே.

திணையும் துறையும் அவை.

உறையூர் முதுகண்ணன் சாத்தனார் பாடியது.

## 326. தங்கால் பொற் கொல்லனார்

ஊரில் பழைய வேலியின்கண் தங்கியுள்ள வெருகுப் பூனை அது இருளில் விழித்துப் பார்க்க அதற்கு அஞ்சிய பெடைக் கோழி பருத்தி நூற்கும் பெண் ஒருத்தியின் விளக்கு நிழலில் சேவற்கோழியைக் கண்டு அச்சம் தணிகிறது. அத்தகைய காவற் காடு சூழ்ந்த இருக்கை அது.

அவ்வூர்த் தலைவன் மனைவியும் வேட்டை ஆடும் சிறுவர் சேண் தூரம் செல்லாது மடுக்கரையில் பிடித்து வந்த குறுந்தாளை

உடைய உடும்பின் கொழுப்புக் கலந்த இறைச்சியைச் சமைத்து அதனோடு தயிர் பெய்த சோற்றையும், புதிதாகக் கிடைத்த வேறு நல்ல உணவுகளையும் பாணர்களுக்கும் அவர்களோடு வரும் சுற்றத்தினர்க்கும் விருந்து அளித்து உதவும் வாழ்க்கையினள். அவள் கணவன் பேரரசர்களுக்காகப் போர்களுக்குச் சென்று பெரு யானைகளைக் கொணர்ந்து அவற்றை அப் பாணர்க்குப் பரிசிலாகத் தருகிறான்.

ஊர் முது வேலிப் பார் நடை வெருகின்
இருட் பகை வெரீஇய நாகு இளம் பேடை
உயிர் நடுக்குற்றுப் புலா விட்டு அரற்றச்,
சிறையும் செற்றையும் புடையுநள் எழுந்த
பருத்திப் பெண்டின் சிறு தீ விளக்கத்துக்,
கவிர்ப் பூ நெற்றிச் சேவலின் தணியும்
அரு மிளை இருக்கையதுவே- மனைவியும்,
வேட்டச் சிறாஅர் சேண் புலம் படராது,
படப்பைக் கொண்ட குறுந் தாள் உடும்பின்
விழுக்கு நிணம் பெய்த தயிர்க் கண் விதவை,
யாணர் நல்லவை பாணரொடு, ஒராங்கு
வரு விருந்து அயரும் விருப்பினள்; கிழவனும்,
அருஞ் சமம் ததையத் தாக்கிப், பெருஞ் சமத்து
அண்ணல் யானை அணிந்த
பொன் செய் ஓடைப் பெரும் பரிசிலனே.

திணை - வாகை; துறை - மூதில் முல்லை.
தங்கால் பொற்கொல்லனார் பாடியது.

## 327. மூதில் முல்லை

எருதுகளைக் கொண்டு கடாவிடாமல் இளைஞர்களே தம் காலால் மிதித்து வேறுபடுத்திய வரகு; மிக்க விளைவு இல்லாதது; அது மிகச்சிறிய அளவினது; அதனைக் கடன் வாங்கியவருக்குச் செலுத்தி மிச்சம் மீதி இருந்தால் அதனைப் பசித்து வந்த பாணர்க்கு உண்ணத் தருவான்; அதுவும் தீர்ந்து விட்டால் பசித்த அவன் சுற்றத்துக்கு உணவு தரக் கையிருப்பு இல்லாததால் கடன் கொடுக்கும் அற்பர்களிடம் அவரை அணுகி வரகு கடன் பெற்று வருவான்.

போர் வந்தால் பெரு நில மன்னர்க்காகப் போரிட்டு எதிர்க்கும் தொழிலை அவன் மேற்கொள்கிறான். அந்த நம்பிக்கை அவனுக்கு உள்ளது. கொண்டு வருவதைக் கொண்டு அவன் வாங்கிய கடனைத் தீர்ப்பான்.

எருது கால் உறாஅது, இளைஞர் கொன்ற
சில் விளை வரகின் புல்லென் குப்பை,
தொடுத்த கடவர்க்குக் கொடுத்த மிச்சில்
பசித்த பாணர் உண்டு, கடை தப்பலின்
ஒக்கல் ஒற்கம் சொலியத், தன் ஊர்ச்
சிறு புல்லாளர் முகத்து அளவ கூறி,
வரகு கடன் இரக்கும் நெடுந் தகை
அரசு வரின் தாங்கும் வல்லாளன்னே.

திணையும் துறையும் அவை.

.....................................

# 328. மூதில் முல்லை

முல்லை நிலம் அதனால் அங்கு நெற் பயிர் விளையாது. வரகும் தினையும் உள்ளவற்றை எல்லாம் இரவல் மாக்களுக்குக் கொடுத்துத் தீர்த்துவிட்டான்.

தாளி மரத்தில் படரும் முன்னைக் கொடியை முயல் வந்து கறிக்கும் முற்றத்தை உடைய சீறூர் மன்னன் அவன்; அவனைப் பாடினையாகி அவனிடம் சென்றால் பாணனே உறையிட்ட தயிர், புளித்த கள், நெய் கலந்த கறிசோறு இவற்றை உண்ணத் தருவான். பின்பு நீ வேண்டுவன தருவான்.

புல்லென் அடை முதல் புறவு சேர்ந்திருந்த
புன் புலச் சீறூர், நெல் விளையாதே;
வரகும் தினையும் உள்ளவை எல்லாம்
இரவல் மாக்களுக்கு ஈயத் தொலைந்தன;
............ டு அமைந்தனனே;
அன்னன் ஆயினும், பாண! நன்றும்
வள்ளத்திடும் பாலுள் உறை தொடரியொடு.
களவுப் புளி அன்ன விளைகள்

.................. வாடு ஊன் கொழுங் குறை
கொய் குரல் அரிசியோடு நெய் பெய்து அட்டுத்,
துடுப்போடு சிவணிய களிக் கொள் வெண் சோறு
உண்டு, இனிது இருந்த பின்றை
................ தருகுவன் மாதோ-
தாளி முதல் நீடிய சிறு சிறு முஞ்ஞை
முயல் வந்து கறிக்கும் முன்றில்.
சீறூர் மன்னனைப் பாடினை செலினே.

திணையும் துறையும் அவை.

பங்கு .......................... பாடியது.

# 329. மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனார்

*கள்ளை அட்டு உண்பர்; வீடுகள் சிலவே உள்ள சிற்றூர் அது. நட்டகல்லுக்கு நாளும் பலியிடுவர்; அதற்கு நன்னீர் ஆட்டுவர். நெய் விளக்கு எழுப்பும் புகை தெருவில் எங்கும் பரவுகிறது. அது படை இருக்கை என்றாலும் அது அரவு உறையும் புற்றுப் போன்றது.*

*அதில் வாழும் தலைவன் தனக்குப் பொருள் தரும் பெரு மன்னனின் கட்டளைக்கு முதலிடம் தாரான்; புலவர்களின் துயர் களைவதற்கு முந்திக் கொள்வான். புகழ் அமைந்த தலைமை அவன்பால் உள்ளது. அவன் காக்கும் ஊர் அத்தகையது.*

இல் அடு கள்ளின் சில் குடிச் சீறூர்ப்
புடை நடு கல்லின் நாட் பலி ஊட்டி,
நல் நீராட்டி, நெய்ந் நறைக் கொளீ இய,
மங்குல் மாப் புகை மறுகுடன் கமழும்,
அரு முனை இருக்கைத்துஆயினும், வரி மிடற்று
அரவு உறை புற்றத்து அற்றே-நாளும்
புரவலர் புன்கண் நோக்காது, இரவலர்க்கு
அருகாது ஈயும் வண்மை,
உரைசால், நெடுந்தகை ஓம்பும் ஊரே

திணையும் துறையும் அவை.

மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனார் பாடியது.

# 330. மதுரைக் கணக்காயனார்

பெரு வேந்தனின் அரியபடை போர் முனையில் அழிவு பெற அவர்களைத் தாக்க இவன் தனி ஒருவனாக வாளொடு சென்று விலக்கி இவன் பெருங் கடலுக்குக் கரையைப் போல விளங்குகிறான்.

புரவு வரியும் செலுத்த இயலாத நிலைமையன்; மற்றும் இவன் பாடிச் சென்ற புலவர்க்கு வாரி வழங்கவும் பொருள் வளம் இல்லாதவனாக விளங்குகிறான்.

சிற்றூர்த் தலைவன் அவன் காலம் காலமாக பெருங் கொடை யாளனாக விளங்கியவன்.

வேந்துடைத் தானை முனை கெட நெரிதர,
ஏந்து வாள் வலத்தன் ஒருவன் ஆகித்,
தன் இறந்து வாராமை விலக்கலின், பெருங் கடற்கு
ஆழி அனையன்மாதோ என்றும்
பாடிச் சென்றோர்க்கு அன்றியும், வாரிப்
புரவிற்கு ஆற்றாச் சீறூர்த்
தொன்மை சுட்டிய வண்மையோனே

திணையும் துறையும் அவை.

மதுரைக் கணக்காயனார் பாடியது.

# 331. உறையூர் முது கூத்தனார்

கல்லை உடைத்துக் கிணறுகள் படைக்கும் சீறூர்; அதில் வில்லை ஏற்றி வேட்டை ஆடும் தொழிலை உடையவன்.

வறிய நிலை உற்று உண்ணச் சிறிதும் அவன்பால் இல்லை என்றால் கல்லா இடையன் தீக்கடை கோலில் சிறு தீ உண்டாக்குவது போல் இல்லாததைப் படைக்கவும் வல்லவன் ஆகிறான்.

உள்ளது மிகச் சிறிது என்றாலும் வீட்டுப் பந்தலில் கூடி இருப்பார் மிக்கு இருந்தாலும் வாட்டும் பசியைப் போக்கும் மனைக் கிழத்தி போல் பலருக்கும் உள்ளதைப் பகிர்ந்து அளிக்கவும் வல்லன்; பொருள் மிக்கு இருந்தால் காவல் மன்னர்கள்

பலரும் உண்ணக் களத்தில் கண் கொட்டிக் குவிக்கும் பலிச் சோறு போலத் தூவவும் வல்லான் வாரி வழங்குமிடத்து.

கல் அறுத்து இயற்றிய வல் உவர்க் கூவல்,
வில் ஏர் வாழ்க்கைச் சீறூர் மதவலி
நனி நல்கூர்ந்தனன் ஆயினும், பனி மிகப்,
புல்லென் மாலைச் சீறு தீ ஞெலியும்
கல்லா இடையன் போல, குறிப்பின்
இல்லது படைக்கவும் வல்லன்; உள்ளது
தவச் சிறிது ஆயினும் மிகப் பலர் என்னாள்,
நீள் நெடும் பந்தர் ஊண் முறை ஊட்டும்
இற் பொலி மகடூஉப் போலச், சிற் சில
வரிசையின் அளிக்கவும் வல்லன்; உரிதினின்
காவலர் மன்னர் கடைமுகத்து உகுக்கும்
போகு பலி வெண் சோறு போலத்
தூவவும் வல்லன், அவன் தூவுங்காலே.

திணையும் துறையும் அவை.
உறையூர் முது கூத்தனார் பாடியது.

## 332. விரியூர் நக்கனார்

இவ்வூர் மறவனது வேல் மற்றவர்கள் வேலைப் போன்றது அன்று.

இதன் இரும்புப் பகுதி துகள் படிந்து எங்கோ மூலையில் குடிசையின் கூரையில் செருகப்பட்டிருக்கும். இருக்கிற இடமே தெரியாது.

இதற்கு விழா எடுக்கும் காலத்து மங்கல முழவு ஒலிக்க இசைப்பாடுவோர் தொடர நீராட்டுப் பெறும்; வீதி வலம் வருவதும் செய்யும்.

போர்க் களத்துக்குச் சென்று எதிரி அரசன் கடல் போன்ற சேனையில் உள்ள களிறுகளின் முகத்திலும் சென்று பாயும்.

பிறர் வேல் போலாதாகி, இவ் ஊர்
மறவன் வேலோ பெருந் தகை உடைத்தே;
இரும் புறம் கூரைக் கிடக்கினும் கிடக்கும்;

மங்கல மகளிரொடு மாலை சூட்டி,
இன் குரல் இரும் பை யாழொடு ததும்பத்,
தெண் நீர்ப் படுவினும் தெருவினும் திரிந்து,
மண் முழது அழுங்கச் செல்லினும் செல்லும்; ஆங்கு,
இருங் கடல் தானை வேந்தர்
பெருங் களிற்று முகத்தினும் செலவு ஆனாதே.

திணையும் துறையும் அவை.

விரியூர் நக்கனார் பாடியது.

## 333. மூதில் முல்லை

மழைநீர் மொக்குள் போன்ற கண்களையும், கரிய பிடரிமயிரினையும், நெடிய செவியினையும் உடைய முயல் குறுகிய புதரிடைத் துள்ளி விளையாடும் மன்றத்துக்கு அருகே சென்றால் 'உண்க' என்று அழைத்து வரவேற்று இன்னுரை கூறும் நிலையில் அவர்கள் இல்லை. அதனால் சிறிது மன வருத்தம் ஏற்படலாம். அவர்கள் வரவேற்பு அதனை எதிர்பார்க்க வேண்டாம். புலவர்களே நீங்கள் அங்குத் தங்கிச் செல்லலாம்.

ஏற்கனவே அவ்வீட்டுக்குரியவள் தம்மிடத்து இருந்த தினையையும், வரகையும் யாவற்றையும் இரவலர்க்கு 'உண்க' எனக் கூறித் தந்துவிட்டவள்; என்ன செய்வாள்! கடன் கேட்டுப் பெற முயல்கிறாள். அதனை அவள் பெற இயலவில்லை; அதனால் விதைக்கு என வைத்திருக்கும் தினையை உரலில் பெய்து உணவு இடுவாள். உங்களைக் காயும் பசியோடு அனுப்பமாட்டாள்.

தேரைச் செலுத்துவோருடன் அரசனும் தன்பால் வந்தனன் ஆயினும் அவர்களுக்கும் இவ்வரகும் தினையுமே உண்ணத் தருவர். உள்ளது அது; இல்லை என்று கூறமாட்டார்கள்.

அவன் ஈட்டும் பொருள் எல்லாம் பசி வாட்டும் இரவலர்க்கே தருவான்.

நீருள் பட்ட மாரிப் பேர் உறை
மொக்குள் அன்ன பொகுட்டு விழிக் கண்ண,
கரும் பிடர்த் தலைய, பெருஞ் செவிக் குறு முயல்

உள் ஊர்க் குறும் புதல் துள்ளுவன உகளும்
தொள்ளை மன்றத்து ஆங்கண் படரின்,
'உண்க' என உணரா உயவிற்றுஆயினும்,
தங்கினிர் சென்மோ, புலவிர்! நன்றும்;
சென்றதற்கொண்டு, மனையோள் விரும்பி,
வரகும் தினையும் உள்ளவை எல்லாம்
இரவல் மாக்கள் உணக்கொளத் தீர்ந்தெனக்,
குறித்து மாறு எதிர்ப்பை பெறாஅமையின்,
குரல் உணங்கு விதைத் தினை உரல் வாய்ப் பெய்து,
சிறிது புறப்பட்டன்றோ இலளே; தன் ஊர்
வேட்டக் குடிதொறும் கூட்டு ..................
...................... உடும்பு செய்
பாணி நெடுந் தேர் வல்லரோடு ஊரா,
வம்பு அணி யானை வேந்து தலைவரினும்,
உண்பது மன்னும் அதுவே;
பரிசில் மன்னும், குரிசில் கொண்டதுவே.

திணையும் துறையும் அவை.

.........................................

## 334. மதுரைத் தமிழ்க் கூத்தனார்

*சண்பகக் கோரை போன்ற தூயமயிரும், நெடுஞ்செவியும், குறுந்தாளும் உடைய முயல் அவ்வூர்ச் சிறுவர்கள் மன்றங்களில் ஆரவாரிக்கும் பேரொலிக்கு அஞ்சி வைக்கோல் போருக்குள் பதுங்கி ஒளியும். அத்தகைய ஊரின் கண்ணே இல்லக்கிழத்தி வருகின்ற பாணர்க்கும், பரிசிலர்க்கும் உணவு இடுவாள்; அவ் உணவு ஒலி ஆரவாரம் கேட்டுக் கொண்டே இருக்கும். அவள் கணவனும் பகைக் களத்திலிருந்து கொணரும் யானைகளைப் பரிசிலர்க்கு வரையாது கொடுத்து உதவுவான்.*

காமரு பழனக் கண்பின் அன்ன
தூ மயிர்க் குறுந் தாள் நெடுஞ் செவிக் குறு முயல்,
புன் தலைச் சிறாஅர் மன்றத்து ஆர்ப்பின்,
படப்பு ஒடுங்கும்மே .......... பின்பு .........

................. ஊரே மனையோள்
பாணர் ஆர்த்தவும், பரிசிலர் ஓம்பவும்,
ஊன் ஒலி அரவமொடு கைதூவாளே;
உயர் மருப்பு யானைப் புகர் முகத்து அணிந்த
பொலம் புனை ஓமை ........................... ப்
பரிசில் பரிசிலர்க்கு ஈய,
உரவு வேல் காளையும் கை தூவானே.

திணையும் துறையும் அவை.
மதுரைத் தமிழக் கூத்தனார் பாடியது.

## 335. மாங்குடி கிழார்

பூக்கள் என்றால் குரவு, தளவு, குருந்து, முல்லை என்று இவற்றையே சிறப்பாகக் குறிப்பிடுவர்.

உணவு என்றால் வரகு, தினை, கொள், அவரை இவற்றைத் தான் சிறப்பாகக் குறிப்பிடுவர்.

பழங்குடியினர் என்றால் துடியன், பாணன், பறையன், கடம்பன் என்று இந்நால்வரைத் தான் குறிப்பிடுவர்.

களிறு எறிந்து விழுந்த காளைக்கு எழுப்பப்படும் நடுகல்; இதுதான் அவர்கள் பரவும் கடவுள் ஆகும்; இதைத் தவிர வழி படுவதற்கு உகந்த கடவுளாக அவர்கள் வேறு எதனையும் ஏற்பது இல்லை; வீரர்கள் வழிபாடுதான் தெய்வ வழிபாடு என்று கொள்பவர் அவர்கள் ஆவார். இதனையே சிறப்பாகக் கொள்வர்.

அடல் அருந் துப்பின் ...............
குரவே தளவே குருந்தே முல்லை என்று
இந் நான்கு அல்லது பூவும் இல்லை;
கருங் கால் வரகே, இருங் கதிர்த் தினையே,
சிறு கொடிக் கொள்ளே, பொறி கிளர் அவரையொடு,
இந் நான்கு அல்லது உணாவும் இல்லை;
துடியன், பாணன், பறையன், கடம்பன், என்று
இந் நான்கு அல்லது குடியும் இல்லை;
ஒன்னாத் தெவ்வர் முன் நின்று விலங்கி,

ஒளிறு ஏந்து மருப்பின் களிறு எறிந்து வீழ்ந்தெனக்,
கல்லே பரவின் அல்லது,
நெல் உகுத்துப் பரவும் கடவுளும் இலவே.

திணையும் துறையும் அவை.

மாங்குடி கிழார் பாடியது.

## 336. மகட்பாற் காஞ்சி

*மணம் விரும்பிக் கேட்ட வேந்தனும் அடங்காச் சினத்தினனாக உள்ளான்.*

*இவளை மணம் முடித்துத் தரத் தந்தையும் இசையான்; அவன் மறுத்து நிற்கின்றான்.*

*போர்மூண்டு எழுந்து விட்டது; யானைகள் கட்டு அவிழ்த்து விடப்பட்டுள்ளன. இரு திறத்து வீரர்களும் ஒருவரோடு மற்றொருவர் பேசாமல் வாய் திறக்காமல் இருக்கின்றனர். வாத்திய முழக்கங்கள் பேரிரைச்சல் செய்து கொண்டிருக்கின்றன. காவல் மிக்க இவ்வூர் மிகவும் அச்சத்தில் ஆழ்ந்துள்ளது. வேங்கை மரம் மிக்க மலையில் பூக்கும் கோங்கம் முகை போன்ற இளமுலையள் அவள் வனப்பும் புன்னகையும் காரணம் ஆகும். அதனோடு அவள் தாய் விட்டுக்கொடுக்காத கோட்பாடும் பகை வளர்வதற்குக் காரணம் ஆகிறது. மறப் பண்பே அவள்பால் மிக்கு உள்ளது.*

வேட்ட வேந்தனும் வெஞ் சினத்தினனே;
கடவன கழிப்பு இவள் தந்தையுஞ் செய்யான்;
ஒளிறு முகத்து ஏந்திய வீங்கு தொடி மருப்பின்
களிறும் கடிமரம் சேரா; சேர்ந்த
ஒளிறு வேல் மறவரும் வாய் மூழ்த்தனரே;
இயவரும் அறியாப் பல் இயம் கறங்க,
அன்னோ, பெரும் பேதுற்றன்று, இவ் அருங் கடி மூதூர்;
அறன் இலள் மன்ற தானே-விறல் மலை
வேங்கை வெற்பின் விரிந்த கோங்கின்
முகை வனப்பு ஏந்திய முற்றா இளமுலைத்
தகை வளர்த்து எடுத்த நகையொடு,
பகை வளர்த்திருந்த இப் பண்பு இல் தாயே.

திணை - காஞ்சி; துறை - மகட்பாற் காஞ்சி

பரணர் பாடியது.

# 337. மகட்பாற் காஞ்சி

*சோழ நாட்டுத் தலைவன் இவன்; ஆரவாரம் மிகப்பெரியதாக உள்ளது; இவனைப் பற்றிய பேச்சு எங்கும் எதிர் ஒலிக்கிறது.*

*பிறர் பார்வைக்கு அகப்படாமல் கொடை வளம் மிக்க பாரியின் பனிச்சுனைத் தெளிந்த நீரைப்போல் இவள் ஒதுக்கப்பட்டு மனையில் செறித்து வைக்கப்பட்டிருக்கிறாள்.*

*இவள் தமையன்மார்கள் குருதி படிந்த தலைமுடியினராய் வேலும் கையுமாகத் திரிந்து வருகின்றனர். களம் காணும் மறவராக விளங்குகின்றனர்.*

*இவளைத் தேடி வருகின்ற அரசர்கள் தம் நகர்களில் அவர்கள் செய்ய வேண்டிய கடமைகளைத் துறந்து இங்கு வந்து காத்திருக்கின்றனர்; அவர்கள் யானைகளுக்குக் கவளம் இட்டுக் காத்தவராக இவளை வந்து வளைத்துக் கொண்டிருக்கின்றனர்.*

*யார் இவளை வந்து அடையப் போகிறார்களோ! இவள் இளமுலை யாருக்குத் தழுவ உரியது ஆகப் போகிறதோ! இந்த முற்றுகைகள் எங்கே சென்று முடியப் போகின்றனவோ! இவள் ஏந்திய கை யாருக்கு மாலையிடப் போகிறதோ தெரியாமல் இருக்கிறது.*

ஆர்கலியினனே, சோணாட்டு அண்ணல்;
கவி கை மண் ஆள் செல்வர் ஆயினும்,
வாள் வலத்து ஒழியப் பாடிச் சென்றாஅர்,
வரல்தோறு அகம் மலர்பு
ஈதல் ஆனா விலங்கு தொடித் தடக் கைப்
பாரி பறம்பின் பனிச் சுனைபோலக்
காண்டற்கு அரியள் ஆகி, மாண்ட
பெண்மை நிறைந்த பொலிவொடு, மண்ணிய
துகில் விரி கடுப்ப நுடங்கித், தண்ணென
அகில் ஆர் நறும் புகை ஐது சென்று அடங்கிய
கபில நெடு நகர்க் கமழும் நாற்றமொடு.
மனைச் செறிந்தனளே, வாணுதல்; இனியே
அற்றன்றுஆகலின், தெற்றெனப் போற்றிக்,

காய் நெல் கவளம் தீற்றிக், காவுதொறும்
கடுங்கண் யானை காப்பனர் அன்றி,
வருதல் ஆனார் வேந்தர்; தன்னையர்
பொரு சமம் கடந்த உரு கெழு நெடு வேல்
குருதி பற்றிய வெருவரு தலையர்;
மற்று இவர் மறனும் இற்றால்; தெற்றென
யார் ஆகுவர்கொல் தாமே- நேரிழை
உருத்த பல் சுணங்கு அணிந்த
மருப்பு இள வன முலை ஞெமுக்குவோரே?

திணையும் துறையும் அவை.

கபிலர் பாடியது.

## 338. மகட்பாற் காஞ்சி

*நெடுவேள் ஆதனின் வளம்மிக்க ஊராகிய போந்தை போன்ற செழிப்பும் வனப்பும் கொண்டவள் அவள்.*

*அவள் செல்வமகள்; மதில் சூழ்ந்த மனையில் வாழ்பவள். அவளை வேம்பு, ஆத்தி, பனை சூடிய மூவேந்தராயினும் பணிந்து வணங்கி வந்து கேட்டால்தான் அவளை அடைய முடியும். படை கொண்டு அச்செல்வ மகளை யாராலும் அடைய முடியாது. வணங்காதவர்க்கு அவன் இணங்காதவன் ஆவான்.*

*கடலில் கரையில் ஒதுக்கப்பட்ட மரக்கலத்தைப் போலத் தனித்துக் காட்சி தரும் ஓரே மதிலை உடைய அரண்மனையில் வாழும் மன்னன் ஓரே மகள் இவள் ஆவாள்.*

ஏர் பரந்த வயல், நீர் பரந்த செறுவின்,
நெல் மலிந்த மனை, பொன் மலிந்த மறுகின்,
படு வண்டு ஆர்க்கும் பல் மலர்க் காவின்,
நெடு வேள் ஆதன் போந்தை அன்ன,
பெருஞ் சீர் அருங் கொண்டியளே; கருஞ் சினை
வேம்பும் ஆரும் போந்தையும் மூன்றும்
மலைந்த சென்னியர், அணிந்த வில்லர்,
கொற்ற வேந்தர் வரினும், தன் தக
வணங்கார்க்கு ஈகுவன்அல்லன்-வண் தோட்டுப்

பிணங்கு கதிர்க் கழனி நாப்பண், ஏமுற்று
உணங்கு கலன் ஆழியின் தோன்றும்
ஓர் எயில் மன்னன் ஒரு மட மகளே.

திணையும் துறையும் அவை.

குன்றூர் கிழார் மகனார் பாடியது.

## 339. மகட்பாற் காஞ்சி

*பசுக்களை மேய்க்கும் ஆயர் சிறுவர் முல்லைப் பூ பறிப்பர்; குறுங்கோல் கொண்டு துரத்தப்பட்ட குறுமுயல் நீரில் உள்ள வாளை மீன்களோடுஅவற்றை ஒப்பத் துள்ளித்தாவும்; தொடியணிந்த மகளிர் கடலில் பாய்ந்து பின் கயத்தில் ஆடிக் கழியின் கண் உள்ள நெய்தல் பூவினைப் பறிப்பர். இத்தகு சிறப்புகள் உடையது அவ்வூர்.*

*இளையள்; பருவம் எய்தாத உருவ நங்கை; அவள் மறம்மிக்க பேரரசன் தம் உள்ளத்தைக் கொள்ளை கொண்டுவிட்டாள். அவர்களை அவளுக்காக போர் செய்யத் தூண்டுபவள் ஆகிறாள்.*

வியன் புலம் படர்ந்த பல் ஆ நெடு ஏறு
மடலை மாண் நிழல் அசைவிடக், கோவலர்
வீ ததை முல்லைப் பூப் பறிக்குந்து;
குறுங் கோல் எறிந்த நெடுஞ் செவிக் குறுமுயல்
நெடு நீர்ப் பரப்பின் வாளையொடு உகளுந்து;
தொடலை அல்குல் தொடித் தோள் மகளிர்
கடல் ஆடிக் கயம் பாய்ந்து,
கழி நெய்தல் பூக்குறூஉந்து;
பைந் தழை துயல்வரும் செறு வில் ததைந்த
................................கலத்தின்
வளர வேண்டும், அவளே, என்றும் -
ஆர் அமர் உழப்பதும் அமரியளாகி,
முறம் செவி யானை வேந்தர்
மறம் கெழு நெஞ்சம் கொண்டு ஒளித்தோளே.

திணையும் துறையும் அவை.

..........................................

# 340. மகட்பாற் காஞ்சி

*தழை அணிந்து அழகுடன் விளங்குகிறாள்; செம்மணி போன்று குன்றிமணிக் கொத்துகளைத் தொடுக்கும் இவ் இளையோள் யார் என்று வினவுகின்றாய்; கேள்.*

*வீரம் மிக்க மைந்தர்களின் தந்தை தன்மகளைக் கரந்தைக் கொடி மிக்க வயலின்கண் யானைகளை வீழ்த்தி வெற்றி கொள்ளும் பேரரசனுக்கே தருவான். அரசர் வந்து மணக்கும் தகுதி அவள் பால் உள்ளது. வீரம் மிக்க மன்னர்க்கே அவள் தாரம் ஆவாள்.*

அணித் தழை நுடங்க ஓடி, மணிப் பொறிக்
குரல் அம் குன்றி கொள்ளும் இளையோள்,
மா மகள் .....................
யார் மகள் கொல் என வினவுதி, கேள், நீர்;
எடுப்பவெடாஅ ...............................
................................. மைந்தர் தந்தை
இரும் பனை அன்ன பெருங் கை யானை
கரந்தை அம் செறுவின் பெயர்க்கும்
பெருந் தகை மன்னர்க்கு வரைந்திருந்தனனே.

திணையும் துறையும் அவை.

அள்ளூர் நன்முல்லையார் பாடியது.

# 341. மகட்பாற் காஞ்சி

*வேந்தன் பணிந்து பாவையைப் பெற விழைந்தான். சிலம்பு அணிந்தவள்; தழை அணிந்த மெல்லியலாள் தந்தை மறுத்தான்.*

*இருவருக்கும் போர் என்ற பேச்சு எழுந்தது; மறவர்களைப் போருக்குப் பணித்தான். தானும் போருக்குப் புறப்பட நீரில் முழுகச் சென்றான்.*

*மகள் கேட்ட மன்னன் அவனும் போருக்கு நின்றான். ஒன்று அவளை மணந்து மகிழ்வது; அன்றிப் பொருது விண்ணுலகம் சேர்வது என்று சூள் உரைத்தான்.*

*இருவருக்கும் இடையில் இந்தச் சிற்றூர் என்ன பாடுபடப் போகிறதோ? களிறு படிந்து கலங்கும் நீர்த்துறை போலக் கலக்கம் உற்றது அவ்வூர்.*

*கழனிகள் மிக்க அவ்வூர் இனிக் கவின் இழக்கப் போகிறது.*

*இந்த மகள் காரணமாக ஊரே அழிவில் வந்து நிற்கிறது. மறவர் மகள் அதனால் வந்த சீர்குலைவு இது.*

வேந்து குறையுறவும் கொடாஅன், ஏந்து கோட்டு
அம் பூந் தொடலை அணித் தழை அல்குல்,
செம் பொறிச் சிலம்பின் இளையோள் தந்தை,
எழு விட்டு அமைத்த திண் நிலைக் கதவின்
அரை மண் இஞ்சி நாட் கொடி நுடங்கும்
..................................................
புலிக் கணத்து அன்ன கடுங் கண் சுற்றமொடு,
மாற்றம் மாறான், மறலிய சினத்தன்,
'பூக் கோள்'என ஏஎய்க், கயம் புக்கனனே;
விளங்குஇழைப் பொலிந்த வேளா மெல் இயல்,
சுணங்கு அணி வன முலை, அவளொடு நாளை
மணம் புகு வைகல் ஆகுதல் ஒன்றோ
ஆர் அமர் உழக்கிய மறம் கிளர் முன்பின்,
நீள் இலை எஃகம் மறுத்த உடம்பொடு,
வாரா உலகம் புகுதல் ஒன்று எனப்
படை தொட்டனனே, குருசில்; ஆயிடைக்
களிறு பொரக் கலங்கிய தண் கயம் போலப்,
பெருங் கவின் இழப்பதுகொல்லோ,
மென் புனல் வைப்பின் இத் தண் பணை ஊரே!

திணையும் துறையும் அவை.

பரணர் பாடியது.

## 342. மகட்பாற் காஞ்சி

*காக்கைச் சிறகு போன்ற இருள் வாசிப் பூவால் தொடுக்கப் பட்ட கண்ணிமாலையை உடைய இவ்வழகி இவள் மறக்குலத்து அல்லாத பிறகுலத்துப் பெண் என்று கருதி இவள் யார்? என்று வினவுகின்ற வேலவனே! கேள்.*

*திருமகள் போன்ற அருங்குணம் படைத்த இவள் மறவனுக்கே உரியள் அன்றிப் பிறவர்க்கு அரியள் ஆவாள்.*

*வளம் மிக்க மருத நிலத்துத் தலைவர் இவள் தந்தை ஆவார்.*

*வேந்தர்கள் மகள் கேட்டு மறுத்துவிட்டதால் அவர்கள் பொறுத்துக் கொள்ளாமல் போரில் இறங்கிவிட்டனர்.*

*நாளும் அவள் தமையன்மார் இயற்றும் வாட் போரை இந்த ஊர் சந்தித்துக் கொண்டிருக்கிறது யானைகள் எருதுகளாகப் பிணங்களைப் புரட்டி மிதிக்கின்ற நிலைக்கு இந்த ஊர் தள்ளப்பட்டுவிட்டது.*

'கானக் காக்கைக் கலிச் சிறகு ஏய்க்கும்
மயிலைக் கண்ணிப், பெருந் தோள் குறுமகள்,
ஏனோர் மகள்கொல் இவள்?' என விதுப்புற்று,
என்னொடு வினவும் வெல்வேல் நெடுந்தகை!
திரு நயத்தக்க பண்பின் இவள் நலனே
பொருநர்க்கு அல்லது, பிறர்க்கு ஆகாதே;
பைங் காற் கொக்கின் பகு வாய்ப் பிள்ளை
மென் சேற்று அடைகரை மேய்ந்து உண்டதற்பின்,
ஆரல் ஈன்ற ஐயவி முட்டை,
கூர் நல் இறவின் பிள்ளையொடு பெறூஉம்
இவள் தந்தையும்; வேந்தரும்
பெறாஅமையின் பேர் அமர் செய்தலின்,
கழி பிணம் பிறங்கு போர்பு அழி களிறு எருதா,
வாள் தக வைகலும் உழக்கும்
மாட்சியவர், இவள் தன்னைமாரே.

திணையும் துறையும் அவை.

அரிசில் கிழார் பாடியது.

## 343. மகட்பாற் காஞ்சி

*மீனை விற்று நெற்குவியல்களைச் வீடுகளில் கொண்டு வந்து சேர்த்துக் குவிக்கின்றனர்.*

*வீட்டில் குவித்த வைத்த மிளகு மூடைகளை வெளி ஊர்களுக்கு ஏற்றி அனுப்பிக் கடற்கரையில் கொண்டு வந்து சேர்க்கின்றனர்.*

கலங்களில் கொண்டு வந்த பொன் குவியலைக் கழிகளில் இயங்கும் படகுகளில் கொண்டு சென்று கரை சேர்க்கின்றனர்.

மலைபடு பொருளும் அலைபடு பொருளும் தன்னிடம் வருவார்க்கு வழங்கும் குட்டுவனின் கள் வளம் மிக்க முசிறி என்னும் மாநகர்.

இந்த முசிறிபோல அடுக்கி வந்த பொன்னையும் பொருளையும் கொண்டு வந்து குவித்தாலும் இவள் தந்தை தன் மகளைக் கொடுக்க மறுக்கிறான்.

அவர்களும் பொறுக்காதவராகி அவளை அடைவது என்பதில் உறுதி கொண்டு உள்ளனர்.

ஏணிகள் அமைத்து மதில்களில் ஏறத் தொடங்கிவிட்டனர். இனி இந்த ஊர் கலக்கம் அடையப் போகிறது. ஊரே அல்லலில் ஆழப் போகிறது.

'மீன் நொடுத்து நெல்குவைஇ,
மிசை அம்பியின் மனை மறுக்குந்து;
மனைக் குவைஇய கறி மூடையால்,
கலிச் சும்மைய கரை கலக்குறுந்து;
கலம் தந்த பொற் பரிசம்
கழித் தோணியான், கரை சேர்க்குந்து;
மலைத் தாரமும் கடல் தாரமும்
தலைப் பெய்து, வருநர்க்கு ஈயும்
புனல்அம் கள்ளின் பொலந் தார்க் குட்டுவன்
முழங்கு கடல் முழவின் முசிறி அன்ன,
நலம்சாம் விழுப் பொருள் பணிந்து வந்து கொடுப்பினும்,
புரையர் அல்லோர் வரையலள், இவள்' எனத்
தந்தையும் கொடா அன்ஆயின் - வந்தோர்,
வாய்ப்பட இறுத்த ஏணி ஆயிடை
வருந்தின்றுகொல்லோ தானே - பருந்து உயிர்த்து
இடை மதில் சேக்கும் புரிசை,
படை மயங்கு ஆர் இடை, நெடு நல் ஊரே?

திணையும் துறையும் அவை.

பரணர் பாடியது.

# 344. மகட்பாற் காஞ்சி

காட்டு மயில் வீட்டு நெல்லை உண்ண அதனை மகளிர் ஓட்டித் துரத்த அவை நீர்த்துறை அடுத்த மருத நிலத்தில் ஏறி அமரும்; அத்தகைய மருதநில ஊர்களோடு வேண்டிய பொருள் களைத் தந்து மகளைப் பெறுவர்; இது ஒரு வழி; மறுத்தால் அங்குப் போர்; இது மற்றோர் வழி.

இரண்டில் ஒன்று நடப்பது உறுதி; காஞ்சித் தளிரையும் ஆத்திமாலையும் சூடிய சுடர்க் கொடி அவளை அவர்கள் அடைவது உறுதி; அல்லது அவர்கள் அடைவது இறுதி.

செந்நெல் உண்ட பைந் தோட்டு மஞ்ஞை,
செறி வளை மகளிர் ஓப்பலின், பறந்து எழுந்து,
துறை நணி மருதத்து இறுக்கும் ஊரொடு,
நிறைசால் விழுப்பொருள் தருதல் ஒன்றோ-
புகை படு கூர் எரி பரப்பிப் பகை செய்து,
பண்பு இல் ஆண்மை தருதல் ஒன்றோ -
இரண்டினுள் ஒன்று ஆகாமையோ அரிதே,
காஞ்சிப் பனிமுறி ஆரங் கண்ணி.............
கணி மேவந்தவள் அல்குல் அவ் வரியே.

திணையும் துறையும் அவை.

அடைநெடுங் கல்வியார் பாடியது.

# 345. மகட்பாற் காஞ்சி

நங்கையை நயந்தோர் பலர் ஆவர். அவர்கள் வந்து குழுமுவதால் சோலைகள் அழிவு பெறுகின்றன. யானைகள் அவற்றை அழிக்கின்றன. தேர் ஓடத் தெருவில் புழுதி நிறைகிறது. குதிரைகள் மிதித்து வழிப்பாதைகள் குழிப்படுகின்றன. மரக் கலங்களைத் கழுவுவதால் நீர்த்துறைகள் கலக்குற்றன.

தையலின் மையலில் அரசர்கள் வந்து கூடுகின்றனர். செல்வம் தந்து அச்செல்வியை அவர்கள் பெற முடியாது. போர் தொடுக்க எண்ணினால் இவள் தந்தையும் எதிர்ப்பது உறுதி. தனக்கு நிகர் அல்லாதவர்க்குத் தருவது இல்லை என்று மறுப்பான். மறப்பண்பு மிக்கவன்; இவ்வூர் போரில் சிக்கிப் பொலிவு இழப்பது உறுதி.

களிறு அணைப்பக் கலங்கின, காஅ;
தேர் ஓடத் துகள் கெழுமின, தெருவு;
மா மறுகலின் மயக்குற்றன, வழி;
கலம் கழாஅலின், துறை கலக்குற்றன;
தெறல் மறவர் இறை கூர்தலின்,
பொறை மலிந்து நிலன் நெளிய,
வந்தோர் பலரே, வம்ப வேந்தர்,
பிடி உயிர்ப்பு அன்ன கை கவர் இரும்பின்
ஓவு உறழ் இரும் புறம் காவல் கண்ணிக்,
கருங் கண் கொண்ட நெருங்கல் வெம் முலை,
மையல் நோக்கின், தையலை நயந்தோர்
அளியர்தாமே; இவள் தன்னைமாரே
செல்வம் வேண்டார், செருப் புகல் வேண்டி,
'நிரல் அல்லோர்க்குத் தரலோ இல்' எனக்;
கழிப் பிணிப் பலகையர், கதுவாய் வாளர்,
குழாஅம் கொண்ட குருதிஅம் புலவொடு
கழாஅத் தலையர், கருங் கடை நெடு வேல்
இன்ன மறவர்த்துஆயினும், அன்னோ!
என் ஆவதுகொல் தானே-
பன்னல் வேலி இப்பணை நல்ஊரே!

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

## 346. மகட்பாற் காஞ்சி

*தாய் முலைப் பால் அவளுக்குத் திகட்டி விட்டால் வேறு பசும் பால் வள்ளத்தில் ஊட்டி வளர்த்தவள்.*

*உடன் பிறந்தவன் கல்வி கற்றவன்; அதனால் நன்மை தீமை அறிந்தவன்.*

*தந்தையும் போரில் வல்லவன்; வீரம் மிக்கவன்.*

*பாசம் மிக்கவள் தாய்; அறிவு மிக்கவன் உடன் பிறந்தவன்; வீரம் மிக்கவன் தந்தை.*

அதனால் இவர்கள் விட்டுக் கொடுக்க மாட்டார்கள். போர் நிகழ்வது உறுதி; பலர் சாவதும் தவிர்க்க இயலாது. எஞ்சி நிற்பவர் தம்மைக் காப்பவர் இன்மையால் மனம் கலங்குவர்.

இவள் நலன் இத்தகைய அழிவுகளை மிகுதியாகச் செய்யும்.

பிறங்கிலை இனிஉள பால் என மடுத்தலின்
ஈன்ற தாயோ வேண்டாள் அல்லள்;
கல்வியென் என்னும், வல் ஆண் சிறாஅன்;
ஒள்வேல் நல்லன், அது வாய் ஆகுதல்-
அழிந்தோர் அழிய, ஒழிந்தோர் ஒக்கல்
பேணுநர்ப் பெறாஅது விளியும்
புன் தலைப் பெரும் பாழ் செயும், இவள் நலனே.

திணையும் துறையும் அவை.
அண்டர் மகன் குறுவழுதி பாடியது.

## 347. மகட்பாற் காஞ்சி

நா சிவக்கப் பல்லிடுக்கில் அகப்படும் இறைச்சித் துணுக்குகளை எடுப்பர். அச் சிவந்த நாவினைப் போன்று குருதி படிந்த வாளினையும், தும்பை மாலையினையும், வேலினையும் ஏந்திப் போர் செய்யும் வீரம் மிக்க அகுதை என்பானது கூடல் நகரைப் போன்ற அழகி; இவளை அடையப் போர் செய்ய மன்னர்கள் குவிவர். அவர்கள் கொண்டு வந்து யானைகளைக் கட்டும் காவல் மரங்கள் அவற்றைத் தாங்காமல் முறிபடும்; வேர்கள் அறுபடும்.

இனி இந்த ஊர் இவள் பொருட்டுப் போரைச் சந்திக்க இருக்கிறது. இது இவள்பால் கொண்ட வேட்கை; காஞ்சியின் விளைவு.

உண்போன் தான் நறுங் கள்ளின் இடச் சில
நா இடைப் பல் தேர்பு கோலச் சிவந்தாங்கு
ஒளிறு ஒள் வாள்அடக் குழைந்த பைந்தும்பை,
எறிந்து இலை முறிந்த கதுவாய் வேலின்,
மணம் நாறு மார்பின், மறப் போர் அகுதை,
குண்டு நீர் வரைப்பின், கூடல் அன்ன
குவை இருங்கூந்தல் வரு முலை சேப்ப,
.................................................

என் ஆவதுகொல் தானே? நன்றும்
விளங்குறு பராரைய ஆயினும், வேந்தர்
வினை நவில் யானை பிணிப்ப,
வேர் துளங்கின, நம் ஊருள் மரனே.

திணையும் துறையும் அவை.

கபிலர் பாடியது.

# 348. மகட்பாற் காஞ்சி

*உழவர் தண்ணுமை ஒலி கேட்டுத் தேனீக்கள் மேலே கிளம்ப அக்கூட்டிலிருந்து குயவர்கள் சிறுவர்கள் தேன் எடுப்பர். அக்குயவர் சேரியும், சிறு மீன்களைப் பிடித்து உண்ணும் பாண்சேரியும் உள்ள தழும்பன் என்பானின் ஊரைப் போன்று நலன் உடையவள் இவ்வூர் மகள்; இவளை இவள் தாய் பெறாமல் இருந்திருந்தால் இந்த ஊர் இக்கேட்டுக்கு உள்ளாகி இருக்காது.*

*இவள் பிறந்து வளர்ந்து வனப்புற்று விளங்குவதால் இம் மன்னர்கள் தமக்கு உரிய களிறுகளை இங்குக் கொண்டு வந்து நிறுத்தி உள்ளனர். காவல் மரங்கள் முறிபடுகின்றன. நிழல் இருக்கும் இடம் எல்லாம் தேர்களைக் கொண்டு வந்து நிறுத்தியுள்ளனர்.*

*எல்லாம் இந்த ஊர் மகள் அவள் வனப்பு; வளர்ப்பு; தந்தையின் மறுப்பு.*

வெண்ணெல் அரிஞர் தண்ணுமை வெரீஇக்,
கண் மடற்கொண்ட தீம் தேன் இரியக்,
கள் அரிக்கும் குயம், சிறு சில்
மீன் சீவும் பாண் சேரி,
வாய்மொழித் தழும்பன் ஊணூர் அன்ன,
குவளை உண்கண் இவளைத், தாயே
ஈனாளாயினள் ஆயின், ஆனாது
நிழல்தொறும் நெடுந் தேர் நிற்ப, வயின்தொறும்,
செந் நுதல் யானை பிணிப்ப,
வருந்தலமன்-எம் பெருந் துறை மரனே!

திணையும் துறையும் அவை.

பரணர் பாடியது.

## 349. மகட்பாற் காஞ்சி

வேல்முனை கொண்டு நெற்றி வியர்வையைத் துடைக்கும் வேந்தனும் கடுமையான சொற்களையே பேசுகிறான். அவளை அடைவது உறுதி என்று உரைக்கின்றான்.

அவளைப் பெற்றவனும் நெடுமொழி பேசி அலைக் கழிக்கின்றான். பணிமொழி பேசி இணங்குதல் செய்யான்.

முளை இள நெருப்பு அது தோற்றுவிக்கும் மரத்தையே அழிக்கிறது. அதுபோல் வளர் நலம் உடைய இவள் பிறந்ததால் இந்த ஊருக்கு இவள் அழிவு ஆயினள். இவளால் இந்த ஊரே அழியக் காத்திருக்கிறது.

நுதி வேல் கொண்டு நுதல் வியர் துடையாக்,
கடிய கூறும், வேந்தே; தந்தையும்
நெடிய அல்லது, பணிந்து மொழியலனே;
இஃது இவர் படிவம்: ஆயின், வை எயிற்று,
அரி மதர் மழைக் கண், அம் மா அரிவை,
மரம் படு சிறு தீப் போல
அணங்கு ஆயினள், தான் பிறந்த ஊர்க்கே

திணையும் துறையும் அவை.

மதுரை மருதன் இளநாகனார் பாடியது.

## 350. மகட்பாற் காஞ்சி

ஏற்கனவே இந்த ஊரின் அகழி தூர்ந்து கிடக்கிறது; மதில் உறுப்புகள் சிதைந்து சீர் அழிந்து உள்ளன. போர்கள் பல கண்டது இம் மூதூர்.

இனி இந்த ஊரைச் சுற்றிச் சுற்றி வருகின்றனர் முரசினை உடைய பெரு நிலவேந்தர்; இவர்கள் போர் செய்யாமல் இருக்கப் போவது இல்லை.

இவள் தமையன்மாரும் கண் சிவந்து மண் சிவக்கப் போருக்கு நிற்கின்றனர்.

*எல்லாம் யாரால் வந்தது? இந்த ஊரில் பிறந்த மகள்; அவள் பெருவனப்பு; அவள் மார்பில் தோன்றிய சுணங்கு; இதுதான் இந்தப் போருக்குத் தூண்டுதல் ஆகும். அவள் கண்கள் அவன் தமையன்மார் ஏந்திய வேல் போன்று கூரியது; சிவந்தது.*

தூர்ந்த கிடங்கின், சோர்ந்த ஞாயில்,
சிதைந்த இஞ்சிக், கதுவாய் மூதூர்
யாங்கு ஆவதுகொல் தானே, தாங்காது?
படு மழை உருமின் இரங்கு முரசின்
கடு மான் வேந்தர் காலை வந்து, எம்
நெடு நிலை வாயில் கொட்குவர் மாதோ;
பொருதாது அமைகுவர் அல்லர்-போர் உழந்து,
அடு முரண் முன்பின் தன்னையர் ஏந்திய
வடிவேல் எஃகின் சிவந்த உண்கண்,
தொடி பிறழ் முன்கை, இளையோள்
அணி நல் ஆகத்து அரும்பிய சுணங்கே.

திணையும் துறையும் அவை.

மதுரை ஓலைக் கடைக் கண்ணம் புகுந்தாராயத்தானார் பாடியது.

## 351. மகட்பாற் காஞ்சி

*வள்ளன்மை மிக்க எயினன் என்பானின் வாகை என்னும் ஊரைப் போன்ற நலம் உடையவள் இந்தப் பெண்.*

*இவள் நலம் வேண்டிப் புலம் பெயர்ந்து படை வலிமை மிக்க மன்னர்கள் வந்துள்ளனர். இவள் தந்தை ஒப்புதல் தந்து செப்புதல் செய்யான். மறுப்பு அவன்பால் தோன்றும்.*

*பொய்கையில் மீன்களை உண்டு பின் மருதமரம் ஏறி அதனை வெறுத்தால் காஞ்சி மரம் ஏறி மகிழ்வுடன் விளங்கும் நாரைகள் உடையது இவ்வூர்; அமைதி கொழிக்கும் இவ்வூர் நிம்மதி இழக்க மக்கள் துயர் உழக்க வருந்தப்போகிறது.*

படு மணி மருங்கின பணைத் தாள் யானையும்,
கொடி நுடங்கு மிசைய தேரும், மாவும்.
படை அமை மறவரொடு, துவன்றிக் கல்லெனக்,
கடல் கண்டன்ன கண் அகன் தானை
வென்று எறி முரசின் வேந்தர், என்றும்,

வண் கை எயினன் வாகை அன்ன
இவள் நலம் தாராது அமைகுவர் அல்லர்;
என் ஆவதுகொல் தானே- தெண் நீர்ப்
பொய்கை மேய்ந்த செவ் வரி நாரை
தேங் கொள் மருதின் பூஞ் சினை முனையின்,
காமரு காஞ்சித் துஞ்சும்
ஏமம்சால் சிறப்பின், இப் பணை நல் ஊரே?

திணையும் துறையும் அவை.
மதுரைப் படை மங்க மன்னியார் பாடியது.

## 352. மகட்பாற் காஞ்சி

வள்ளன்மை மிக்க தித்தன் என்பானின் நெல் வளம் மிக்க உறந்தை போல அணிகலன்களைக் கொண்டு வந்து குவித்துத் தந்தாலும் இவள் தந்தை கொள்ளான்.

இவளே வேங்கையின் மலர் போலச் சுணங்கினை உடைய முலையினள். இவள் பேரழகு அப்பெருநில மன்னர்களை மயக்கி அவர்களைத் தூண்டுகிறது.

இவள் தமையனும் விட்டுக் கொடுத்து விலகி நிற்கும் இயல்பினன் அல்லன்; கட்டுக் குலையாத ஆண்மையுடன் போர் ஏற்று எதிர்த்து நிற்பான்.

தேஎம் கொண்ட வெண் மண்டையான்,
வீங்கு முலை ......................................... கறக்குந்து;
அவல் வகுத்த பசுங் குடையான்,
புதல் முல்லைப் பூப் பறிக்குந்து;
ஆம்பல் வள்ளித் தொடிக் கை மகளிர்
குன்று ஏறிப் புனல் வரை பாய்ந்து
.......................... நொடை நறவின்
மா வண் தித்தன் வெண்ணெல் வேலி
உறந்தை அன்ன உரைசால் நன் கலம்
கொடுப்பவும் கொளா அன் நெடுந்தகை இவளே
விரிசினைத்துணர்ந்த நாகு இள வேங்கையின்,

கதிர்த்து ஒளி திகழும் நுண் பல் சுணங்கின்
மாக் கண் மலர்ந்த முலையள்; தன்னையும்
சிறு கோல் உளையும் புரவியொடு
............................................ யாரே.

திணையும் துறையும் அவை.

பரணர் பாடியது.

## 353. மகட்பாற் காஞ்சி

*மேகலை அணிந்த அல்குலை உடைய செல்வமகள் இவள். இவளை இவள் வீட்டு முற்றத்தில் மணல் பரப்பில் கண்டு மயங்கி வைத்த கண்ணை எடுக்காத தலைமை மிக்கவனே! இவள் யார் என்று தேரை விட்டு இறங்கி வினவுகின்றாய்; சொல்கிறேன் கேள்.*

*அரசர்கள் பலர் இங்கு வந்து முட்டி மோதி முரண்கொண்டு பின்நோக்கிச் சென்றுள்ளனர் பலர்; நெல் வளம் மிக்க மருத நிலத்து மன்னன் மகள் இவள். இவள் தமையன்மார் மன்னர்களை எதிர்த்து வேல் நுனி மழுங்கவும் விழுப்புண் பட்டு அவற்றைத் துடைக்கும் பஞ்சினையும் உடையவர்.*

*வீண் விருப்பு எதற்கு? மறுப்பு உள்ளது. அதனால் போர்தான் எஞ்சும்.*

ஆசு இல் கம்மியன் மாசு அறப் புனைந்த
பொலம் செய் பல் காசு அணிந்த அல்குல்,
ஈகைக் கண்ணி இலங்கத் தைஇத்,
தருமணல் இயல்வோள் சாயல் நோக்கித்,
தவிர்த்த தேரை, விளர்த்த கண்ணை,
வினவல் ஆனா வெல் போர் அண்ணல்!
'யார் மகள்?' என்போய்; கூறக் கேள், இனி;
குன்று கண்டன்ன நிலைப் பல் போர்பு
நாள் கடா அழித்த நனந் தலைக் குப்பை
வல்வில் இளையர்க்கு அல்கு பதம் மாற்றாத்
தொல் குடி மன்னன் மகளே; முன்நாள்
கூறி வந்த மா முது வேந்தர்க்கு
............................................
செருவாய் உழக்கிக் குருதி ஓட்டிக்,

கதுவாய் போகிய துதி வாய் எஃகமொடு,
பஞ்சியும் களையாப் புண்ணர்,
அஞ்சுதகவு உடையர், இவள் தன்னைமாரே.

திணையும் துறையும் அவை.

காவிரிப் பூம் பட்டினத்துக் காரிக்கண்ணனார் பாடியது.

## 354. மகட்பாற் காஞ்சி

*பெருநில வேந்தர் எதிர்க்கவும் அடங்காது போர் செய்யும் ஊர்த்தலைவன். தன் வேலினை நீரில் குளிப்பாட்டி வழிபாடு செய்வதற்கு முனைந்தான். வீரர்கள் ஒன்று திரண்டனர். போர் மூளப்போகிறது.*

*இனி இந்த ஊர் அமைதி இழக்கப் போகிறது. கயல் மீனை உண்ணும் நாரை வாளையைத் துரத்த அது அங்கு நீரில் விளையாடிக் கொண்டிருந்த இளம் பெண்கள் கண்ணில்பட அவர்கள் அவற்றைப் பிடித்துச் சென்று தம் வளமனைக்குக் கொண்டு சேர்ப்பர். இத்தகைய வளம்மிக்க ஊர் தன் அழகை இழக்கப் போகிறது.*

*காரணம் தேமல் படர்ந்த முலையள்; மூங்கில் போன்ற தோளினள். பிணைமான் கண்ணள்; அவளுடைய மான் பிணை அன்ன மதர்த்த நோக்கு; இவ் அழிபாதைக்குக் கொண்டு சென்று விட்டது.*

அரைசு தலைவரினும் அடங்கல் ஆனா
நிரை காழ் எஃகம் நீரின் மூழ்கப்
புரையோர் சேர்ந்தெனத், தந்தையும், பெயர்க்கும்;
வயல் அமர் கழனி வாயிற் பொய்கைக்,
கயல் ஆர் நாரை உகைத்த வாளை
புனலாடு மகளிர் வள மனை ஒய்யும்
ஊர் கவின் இழப்பவும் வருவது கொல்லோ -
சுணங்கு அணிந்து எழிலிய அணந்து ஏந்து இள முலை.
வீங்கு இறைப் பணைத்தோள், மடந்தை
மான் பிணை அன்ன மகிழ் மடநோக்கே?
.................................................

திணையும் துறையும் அவை.

பரணர் பாடியது.

## 355. மகட்பாற் காஞ்சி

*இந்த ஊர்மதில் ஞாயில் இன்றிக் கிடக்கிறது. அகழி நீர் இன்றிக் கிடக்கிறது. அங்குக்கன்றுகள் மேய்ந்து திரிகின்றன.*

*ஊரது நிலைமை இது; இதனை எண்ணிப் பார்க்காமல் மகளது தந்தை மறப் பண்பில் அறிவு மயங்கிக் கிடக்கிறான். போரை ஏற்கிறான். இந்த ஊர் என்ன ஆகும்? அழிவுக்கு வழி கோலியுள்ளான். அவள் தமையன்மாரும் வீறிட்டு எழுவர்.*

மதிலும் ஞாயில் இன்றே; கிடங்கும்,
நீஇர் இன்மையின், கன்று மேய்ந்து உகளும்;
ஊரது நிலைமையும் இதுவே மற்றே
எண்ணா மையலன் தந்தை தன்னையர்
கண்ணார் கண்ணிக் கடுமான் கிள்ளி

திணையும் துறையும் அவை.

## 356. பெருங் காஞ்சி

*கள்ளிச் செடி மிக்க களர் நிலம் இது; இந்தச் சுடுகாட்டில் பகலிலும் கூகை குழறுகிறது. ஈம விளக்கின் ஒளியில் பேய்கள் கூத்து ஆடுகின்றன. புகை தவழும் சுடுகாடு இது.*

*காதல் நெஞ்சு உடையவர் ஓவுதல் இன்றி அழுத கண்ணீர் சுட்ட சாம்பலைத் தணிவிக்கும்; இந்தச் சுடுகாடு பலர் முதுகைத் தான் கண்டு உள்ளது.*

*இது யாருக்கும் எப்பொழுதும் தோற்றுப் புறமுதுகு இட்டது இல்லை. மானுடர்க்கு எல்லாம் முடிவிடமாக இது விளங்குகிறது.*

களரி பரந்து, கள்ளி போகிப்,
பகலும் கூஉம் கூகையொடு, பிறழ்பல்,
ஈம விளக்கின், பேஎய் மகளிரொடு
அஞ்சு வந்தன்று, இம் மஞ்சுபடு முதுகாடு;
நெஞ்சு அமர் காதலர் அழுத கண்ணீர்
என்பு படு சுடலை வெண்ணீறு அவிப்ப,
எல்லார் புறனும் தான் கண்டு, உலகத்து

மன்பதைக்கு எல்லாம் தானாய்த்,
தன்புறம் காண்போர்க்குக் காண்பு அறியாதே.

திணையும் துறையும் அவை.
நாயங் கண்ணனார் பாடியது.

## 357. மறக்காஞ்சி

மூவேந்தர்க்கும் உரிய நாடுகளைப் பொது என்று இல்லாமல் தனி ஒருவனாக இருந்து ஆண்ட பேரரசர்க்கும் நாள் முடிந்துதான் போகிறது. இறப்பினின்று யாரும் தப்புவது இல்லை. ஈட்டி வைக்கும் செல்வத்துக்கும் அதனைத் தடுத்து நிறுத்தும் ஆற்றல் இல்லை.

விதைக்கும் அறவினை அத்தகையது அன்று; செல்லும் உலகத்துக்கும் அது துணையாக அமைவது. நிலைத்து நிற்பது. அறத்தைக் கைவிட்டவர்க்கு இந்த உலகத்தைவிட்டு மறுமை உலகத்தைக் காண்பது அரிது; கிளையினர் அழுது அலற இவர்கள் உதிர்ந்து அழிவர்.

குன்று தலை மணந்த மலை பிணித்து யாத்த மண்,
பொதுமை சுட்டிய மூவர் உலகமும்,
பொதுமை இன்றி ஆண்டிசினோர்க்கும்,
மாண்ட அன்றே, யாண்டுகள்; துணையே
வைத்தது அன்றே வெறுக்கை; வித்தும்
அறவினை அன்றே விழுத்துணை; அத்துணைப்
புணை கைவிட்டோர்க்கு அரிதே, துணை அழத்
தொக்கு உயிர் வெளவும்காலை,
இக்கரை நின்று இவர்ந்து உக்கரை கொளலே.

திணை - அது; துறை; மறக்காஞ்சி; பெருங்காஞ்சியும் ஆம்.
பிரமனார் பாடியது.

## 358. மனையறமும் துறவறமும்

சூரியன் சூழ்ந்து வரும் இந்த உலகம் ஒரே நாளில் ஏழு அரசர்களையும் காண்கிறது. வாழ்க்கை நிலையற்றது.

வையமும் தவத்தையும் ஒப்பிட்டு அளவிட்டுப் பார்த்தால் தவத்துக்கு இந்த உலக வாழ்க்கை வெண்சிறு கடுகு அளவும் நிகர் ஆகாது. அதனால் வீட்டைக் காதலிப்பவர் இவ் உலக வாழ்வைக் கைவிட்டனர்.

பற்றுகளை விட்டவரைத் திருமகள் விடாள்; விடாதவரை அவள் துறப்பது உறுதி. உலக வாழ்க்கையில் கிடந்து அவர்கள் உழல்வர்.

பருதி சூழ்ந்த இப் பயம் கெழு மா நிலம்
ஒரு பகல் எழுவர் எய்தியற்றே;
வையமும் தவமும் தூக்கின், தவத்துக்கு
ஐயவி அனைத்தும் ஆற்றாது ஆகலின்,
கைவிட்டனரே காதலர்; அதனால்
விட்டோரை விடாஅள், திருவே;
விடாஅதோர் இவள் விடப்பட்டோரே.

திணை - அது; துறை - மனையறம் , துறவறம்
வான்மீகியார் பாடியது.

## 359. பெருங் காஞ்சி

கூகை குரல் எழுப்புகிறது; குறுநரி பிணங்களைக் கடித்துத் தின்கின்றது. பேய்கள் பிணங்களைப் பிய்த்துக் தின்கின்றன. இத்தகைய சுடுகாட்டை நாட்டை ஆளும் மன்னரும் அடைகின்றனர். நீ மட்டும் அதற்கு விதி விலக்கு ஆக முடியாது. உனக்கும் அதே கதிதான்.

நிலைப்பவை யாவை? உன்னைச் சுற்றி எழுந்த வசையும் இசையும்தான். அதனால் வசை நீங்க வழிவகை செய்க. ஆசைக்கு உட்பட்டுத் தீமைகளுக்கு ஆளாகாதே; நன்மொழி பேசுக; களிறுகளையும் தேர்களையும் பரிசிலர்க்கு நல்கினையாகுக. ஆண்டுகள் பலகழிந்தாலும் புகழ் நீண்டு நிலைத்து நிற்கும். புகழ்பட வாழ்பவரே வாழ்ந்தவர் என்று மதிக்கப்படுவர்.

பாறுபடப் பறைந்த பல் மாறு மருங்கின்,
வேறு படு குரல வெவ் வாய்க் கூகையொடு,
பிணம் தின் குறு நரி நிணம் திகழ் பல்ல,

பேஎய் மகளிர் பிணம் தழூஉப் பற்றி,
விளர் ஊன் தின்ற வெம் புலால் மெய்யர்,
களரி மருங்கின் கால் பெயர்த்து ஆடி,
ஈம விளக்கின் வெருவரப் பேரும்
காடு முன்னினரே, நாடு கொண்டோரும்;
நினக்கும் வருதல் வைகல் அற்றே;
வசையும் நிற்கும்; இசையும் நிற்கும்;
அதனால், வசை நீக்கி இசை வேண்டியும்,
நசை வேண்டாது நன்று மொழிந்தும்,
நிலவுக் கோட்டுப் பல களிற்றொடு,
பொலம் படைய மா மயங்கிட.
இழை கிளர் நெடுந் தேர் இரவலர்க்கு அருகாது,
'கொள்' என விடுவை ஆயின், வெள்ளென,
ஆண்டு நீ பெயர்ந்த பின்னும்,
ஈண்டு நீடு விளங்கும், நீ எய்திய புகழே.

திணை - அது; துறை - பெருங்காஞ்சி
அந்துவன் கீரனைக் காவட்டனார் பாடியது.

## 360. பெருஞ் காஞ்சி

*மீதூண் விரும்பார்; சினம் கொள்ளார்; சில சொற்கள் பேசித் தாம் கருதுவதைத் தெளிவாக அறிவுறுத்துவர்; சொல்லாற்றல் மிக்கவர்.*

*கேள்விக்கு மதிப்புத் தருபவர்; பிறர் சொல்லப் பொறுமையாகக் கேட்டுத் தம் அறிவைப் பெருக்கிக் கொள்வர். நுண்ணுணர்வு உடையவர்; பிறர் துன்பம் எளிதில் அறிந்து செயல்படுவர். அதனால் பெருங் கொடையினராக விளங்குவர்.*

*ஈத்து உவக்கும் இன்பம் அறிந்தவர்; சுவைமிக்க உணவைப் பிறர்க்குத் தந்து மகிழ்விப்பர். பருகக் கள்ளும் பகிர்ந்தளிப்பர். அவர்கள் பேசத் தெரிந்தவர்கள்; பணிந்த மொழியால் கனிந்த சொற்களை வெளியிடுவர். பயனுள்ள செயல்கள் ஆற்றி நயன்மிக்கவராய் விளங்குவர்.*

*இத்தகைய பண்புகளும் செயலும் மிக்கவர் நன்முறையில் இந் நானிலத்தை ஆண்டுள்ளனர். நற்புகழும் அடைந்தனர்.*

*அவர்களை உலகம் மதிக்கிறது. ஒரு சிலரே இவ்வாறு உலகம் போற்றும் உயர்நிலை அடைகின்றனர்.*

*பலர் வாழும் வகை அறியாதவர்களாக உள்ளனர். அவர்கள் போற்றிக் காக்கும் செல்வமும் நிலைத்து இருப்பது இல்லை; அவை அழிந்து விடுகின்றன.*

*இதனை நன்கு அறிந்து நாளும் நல்லொழுக்கத்தில் நிலை பெறுக; நற்புகழ் எய்துக. இல்லை என்பார்க்கு ஈதல் செய்க. நச்சி வருபவர்க்கு நயந்து தருக; மெச்சி உன்னைப் புகழ மேலோன் ஆகுக.*

*வாழ்க்கையின் முடிவு சுடுகாடு; அங்குப் புலையன் படைக்க அவ் எளிய உணவை உண்கின்றனர். அழல்வாய் அடுக்கப்படு கிறான். இதுதான் முடிவு; இதை அறிந்த பின்பு நெறி அறிந்து வாழ்பவர் ஒருசிலரே.*

பெரிது ஆராச் சிறு சினத்தர்,
சில சொல்லான் பல கேள்வியர்,
நுண் உணர்வினால் பெருங் கொடையர்,
கலுழ் நனையான் தண் தேறலர்,
கனி குய்யான் கொழுந் துவையர்,
தாழ் உவந்து தழூஉ மொழியர்,
பயன் உறுப்பப் பலர்க்கு ஆற்றி,
ஏமம் ஆக இந் நிலம் ஆண்டோர்
சிலரே; பெரும! கேள், இனி: நாளும்,
பலரே, தகையஃது அறியாதோரே;
அன்னோர் செல்வமும் மன்னி நில்லாது;
இன்னும் அற்று, அதன் பண்பே; அதனால்,
நிச்சமும் ஒழுக்கம் முட்டிலை; பரிசில்
நச்சுவர் கையின் நிரப்பல் ஓம்புமதி; அச்சு வரப்
பாறு இறை கொண்ட பறந்தலை, மாறுதகக்
கள்ளி போகிய களரி மருங்கின்,
வெள்ளில் நிறுத்த பின்றைக், கள்ளொடு
புல்லகத்து இட்ட சில் அவிழ் வல்சி,
புலையன் ஏவப், புல்மேல் அமர்ந்து உண்டு,
அழல் வாய்ப் புக்க பின்னும்,
பலர் வாய்த்து இராஅர், பகுத்து உண்டோரே.

திணையும் துறையும் அவை.

தந்துமாறனைச் சங்கவருணர் என்னும் நாகரையர் பாடியது.

# 361. பெருஞ் காஞ்சி

உயிர்களைக் கவ்வும் கூற்றமே உன் வருகைக்கு இவன் அஞ்சுவது இல்லை. சாவைக் கண்டு இவன் கலங்கப் போவது இல்லை.

அறநெறி தவறாது வாழ்பவன். அவனுக்கு இறப்புக் கண்டு அஞ்சத் தேவை இல்லை. சிறக்க அவன் உயர்வு அடைவது உறுதி.

கேள்வி முற்றிய வேள்வி அந்தணர்களுக்குப் பொன் கலன் அணிகளை நீர் வார்த்துத் தந்திருக்கிறான்.

தன்னைப் பாடுவோர்க்கு தாயினும் அன்பினன் யானையும் குதிரையும் பல தந்திருக் கிறான். புலவர்களுக்குத் தேர்கள் தந்துள்ளான். பாடினிக்குப் பொன்மாலை, பாணனுக்குப் பொற்றாமரை தந்துள்ளான். மனை யுறை கற்பினள் அவளோடு இனிது வாழ்ந் தவன். மகளிர் பொற் கலத்தில் தேறல் தரப் பருகி மகிழ்ந்தவன். அவன் மகிழ்விலும் அறத்தை இகழ்வு செய்தது இல்லை. அவனுக்கு அறத்தைப் பற்றி அறிவிக்கத் தேவை இல்லை.

கார் எதிர் உருமின் உரறிக், கல்லென,
ஆர் உயிர்க்கு அலமரும் ஆராக் கூற்றம்!
நின் வரவு அஞ்சலன் மாதோ; நன் பல
கேள்வி முற்றிய வேள்வி அந்தணர்க்கு,
அருங் கலம் நீரொடு சிதறிப், பெருந்தகைத்
தாயின் நன்று பலர்க்கு ஈத்துத்
தெருள் நடை மா களிறொடு தன்
அருள் பாடுநர்க்கு நன்கு அருளியும்,
உருள் நடைப் பல்தேர் ஒன்னார் கொன்றதன்
தாள் சேருநர்க்கு இனிது ஈத்தும்,
புரிமாலையர் பாடினிக்குப்
பொலந் தாமரைப் பூம் பாணரொடு
கலந்து அளைஇய நீள் இருக்கையால்
பொறையொடும் மலிந்து கற்பின் மான் நோக்கின்,
வில் என விலங்கிய புருவத்து, வல்லென
நல்கின் நா அஞ்சும் முள் எயிற்று, மகளிர்
அல்குல் தாங்கா அசைஇ, மெல்லெனக்
கலங்கலம் தேறல் பொலங்கலத்து ஏந்தி,

அமிழ்து என மடுப்ப மாந்தி, இகழ்விலன்,
நில்லா உலகத்து நிலையாமை நீ
சொல்ல வேண்டா தோன்றல் முந்தறிந்த
முழுது உணர் கேள்வியன் ஆகலின்

.................. விரகினானே.

கயமனார் பாடியது.

## 362. பெருங் காஞ்சி

போர் செய்யும் வீரர்கள் ஆரவாரம்; அவர்கள் எழுப்பும் வெற்றிக் கொடி; கூற்றுவனைப்போல் மாற்றாரை இவன் சென்று வீழ்த்துதல் இவை எல்லாம் ஏன்? கடும் போரினை இவன் ஆற்றுவது ஏன்?

இதற்கு விடை அந்தணாளர் அறிவிக்கும் அருளறத்தில் காணமுடியாது. அருள் காரணமாக யாரும் போர் தொடுப்பதில்லை.

அறநூல்கள் ஒழுக்கத்தை அறிவிக்கின்றன. இவ்வீர விளையாட்டு ஒழுக்க நூலில் பேசப்படுவது இல்லை; மாற்றாரைக் கொல்வது மறம் ஆகுமேயன்றி அது அறம் ஆகாது; அறத்துப் பாலிலும் இதற்கு இடமில்லை.

பின் இது எங்கே பேசப்படுகிறது? பொருட்பாலைச் சார்ந்தது; சாதனைகள் இவற்றின் செயற்பாடுகள்; போர் என்றால் பொருள் கிடைக்கிறது. அது கொண்டு பசித்தவர்க்கு உணவு தரமுடிகிறது. அந்தணர்க்குக் கொடை வழங்கப்படுகிறது. பரிசிலர்க்குப் பொருள் வழங்கப்படுகிறது.

இதுவே போர் செய்வதன் பொருள் ஆகும். பிறரை வாழ வைக்கவே போர்களை மேற்கொள்கின்றனர்.

அதுமட்டுமன்று உயிர் மீது பற்று இல்லாமல் எப்பொழுதும் தம்மை இழக்கத் துணிகின்றான். வீர மரணம் அவன் குறிக்கோள் சுற்றத்தார் இடுகாட்டில் அழுது பின் தம் வீடு திரும்புவதற்கு அன்று. வான் புகழ் அடைதல் அவன் நோக்கம்; துறக்க வாழ்வு அவன் எட்டிப் பிடிப்பது.

வாழ்க்கை அதற்குப் பொருள் உண்டு. ஈதல் இசைபட வாழ்தல் இதுவே உயிர்க்கு ஊதியம் ஆகும்.

ஞாயிற்று அன்ன ஆய் மணி மிடைந்த
மதி உறழ் ஆரம் மார்பில் புரளப்,
பலி வெறு முரசம் பாசறைச் சிலைப்பப்,
பொழிலகம் பரந்த பெருஞ்செய் ஆடவர்
செருப் புகன் றெடுக்கும் விசய வெண் கொடி
அணங்கு உருத்தன்ன கணம் கொள் தானை,
கூற்றத்து அன்ன மாற்று அரு முன்பின்,
தாக் குரல் கேண்மின் அந்தணாளிர்
நான்மறைக் குறித்தன்று அருள் ஆகாமையின்
அறம் குறித்தன்று; பொருள் ஆகுதலின்
மருள் தீர்ந்து, மயக்கு ஒரிஇக்,
கை பெய்த நீர் கடற் பரப்ப,
ஆம் இருந்த அடை நல்கிச்,
சோறு கொடுத்து, மிகப் பெரிதும்
வீறு சால் நன்கலமே வீசி நன்றும்
சிறு வெள் என்பின் நெடு வெண் களரின்,
வாய் வன் காக்கை கூகையொடு கூடிப்
பகலும் கூவும் அகலுள் ஆங்கண்,
காடு கண் மறைத்த கல்லென் சுற்றமொடு,
இல் என்று இல்வயின் பெயர, மெல்ல
இடம் சிறிது ஒதுங்கல் அஞ்சி,
உடம்பொடும் சென்மார், உயர்ந்தோர் நாட்டே.

திணை - பொதுவியல்; துறை - பெருங்காஞ்சி.
அவனைச் சிறுவெண்டேரையார் பாடியது.

## 363. பெருங் காஞ்சி

கடல் சூழ்ந்த இவ்வுலகத்தைத் தானே முழுதும் ஆண்டவர்கள் முடிவில் மாண்டு ஒழிகின்றனர். அவர்கள் தம் ஆட்சியை யாரோ முன் பின் அறியாதவர்க்குத் தந்து சுடுகாட்டில் சென்று ஒய்வு கொள்கின்றனர். வாழ்க்கை முடிவு அதுதான்.

அதனால் நீயும் யான் கூறுவதைச் சற்றுச் செவி கொடுத்துக் கேட்பாயாக.

*உடம்பொடு நிலைத்து நின்ற உயிர் யாண்டும் இல்லை; அது மறைவது உறுதி.*

*இந்தச் சுடுகாடு உனக்குத் தரும் மரியாதை யாது? மதிப்பு யாது?*

*கள்ளிச் செடிமிக்க முள்நிறைந்தது. வெட்ட வெளியில் உன்னை நீட்டி வைக்கின்றனர். உப்பில்லாத சோற்றுப் புழுக்கல் அதனைக் கைக் கொண்டு பின்புறம் திரும்பிப் பார்க்காமல் இழிபிறப்பினன் தரையே பாத்திரமாக அமையப் பலிச்சோறு எனத் தருகிறான். அதனை உனக்குப் படைக்கின்றான். இத்தகைய கசந்த நாள் வருவதற்கு முன் நீ நினைத்து நல்வாழ்வைத் தேடிக் கொள்க. கடல் சூழ்ந்த நில உலகத்தை முற்றிலும் துறந்து தூய துறவினை மேற்கொள்க; உன்னை எந்த இழிவும் தாழ்வும் பற்றா; உயர் உலகம் உனக்காகக் காத்திருக்கிறது.*

இருங் கடல் உடுத்த இப் பெருங் கண் மா நிலம்
உடையிலை நடுவணது இடை பிறர்க்கு இன்றி,
தாமே ஆண்ட ஏமங் காவலர்
இடு திரை மணலினும் பலரே; சுடு பிணக்
காடு பதி ஆகிப் போகித், தம்தம்
நாடு பிறர் கொளச் சென்று மாய்ந்தனரே;
அதனால், நீயும் கேண்மதி அத்தை! வீயாது
உடம்பொடு நின்ற உயிரும் இல்லை;
மடங்கல் உண்மை மாயமோ அன்றே;
கள்ளி வேய்ந்த முள்ளிஅம் புறங்காட்டு,
வெள்ளியல் போகிய வியலுள் ஆங்கண்,
உப்பு இலாஅ அவிப் புழுக்கல்
கைக்கொண்டு, பிறக்கு நோக்காது,
இழி பிறப்பினோன் ஈயப் பெற்று,
நிலம் கலனாக, இலங்கு பலி மிசையும்
இன்னா வைகல் வாராமுன்னே,
செய் நீ முன்னிய வினையே,
முந்நீர் வரைப்பகம் முழுது உடன் துறந்தே.

திணையும் துறையும் அவை.

.......... ஐயாதிச் சிறுவெண்டேரையார் பாடியது.

# 364. பெருங் காஞ்சி

*பாடினிக்குப் பொன்மலை தந்தும் பாணனுக்குப் பொற்றாமரை தந்தும் சிறப்புச் செய்க! ஆட்டு இறைச்சியை நெருப்பிலிட்டுக் கொளுத்திச் சூட்டோடு வாயிலிட்டு நாக்கில் புரட்டுக. கள்ளுண்ட செவ்வாயில் இவ் இறைச்சியை அதுக்குக.*

*உண்டும் தின்றும் இரப்போர்க்கு ஈந்தும் மறப்போர் வீரனே மகிழ்வோம் வருக.*

*நாளைக்குச் சுடுகாட்டில் மரப் பொந்தில் கூகை இருந்து கூவும்; தாழிகளையுடைய சுடுகாட்டுக்குப் போகும் நாளில் இவற்றை நாம் துய்க்க இயலாது. அதனால் இருக்கிறவரையும் மகிழ்வுடன் வாழ்வோமாக.*

வாடா மாலை பாடினி அணியப்,
பாணன் சென்னிக் கேணி பூவா
எரி மருள் தாமரைப் பெரு மலர் தயங்க.
மை விடை இரும் போத்துச் செந் தீச் சேர்த்திக்,
காயம் கனிந்த கண் அகன் கொழுங் குறை
நறவு உண் செவ் வாய் நாத் திறம் பெயர்ப்ப,
உண்டும், தின்றும், இரப்போர்க்கு ஈய்ந்தும்,
மகிழ்கம் வம்மோ, மறப் போரோயே!
அரியஆகலும் உரிய, பெரும!-
நிலம் பக வீழ்ந்த அலங்கற் பல் வேர்
முது மரப் பொத்தின் கதுமென இயம்பும்
கூகைக் கோழி ஆனாத்
தாழிய பெருங் காடு எய்திய ஞான்றே.

திணையும் துறையும் அவை.
அவனைக் கூகைக் கோழியார் பாடியது.

# 365. பெருங் காஞ்சி

*விசும்பு முகமாகவும், திங்களும் ஞாயிறும் இரு கண்களாகவும் உடையவள் நிலமகள்.*

*அவள் பார்த்திருக்கும் போதே சீரும் சிறப்பும் மிக்க உலகை ஆண்ட பெருவேந்தர்கள் எல்லாம் இறந்து ஒழிகின்றனர்.*

*மண்ணின் மைந்தர்கள் பலரும் விண் உலகு அடைந்து விடுகின்றனர்.*

*நிலமகள் மட்டும் விலை நாலப் பெண்டிரைப் போல் தனித்து விடப் படுகிறாள். அவள் தனித்து அழும் காஞ்சியும் உண்டு என்று அறிஞர்கள் கூறுகின்றனர்.*

'மயங்கு இருங் கருவிய விசும்பு முகன் ஆக,
இயங்கிய இரு சுடர் கண் எனப், பெயரிய
வளி இடை வழங்கா வழக்கு அரு நீத்தம்,
வயிரக் குறட்டின் வயங்கு மணி ஆரத்துப்
பொன்அம் திகிரி முன் சமத்து உருட்டிப்,
பொருநர்க் காணாச் செரு மிகு முன்பின்
முன்னோர் செல்லவும், செல்லாது, இன்னும்
விலை நலப் பெண்டிரின் பலர் மீக்கூற,
உள்ளேன் வாழியர், யான்' எனப் பல் மாண்
நிலமகள் அழுத காஞ்சியும்
உண்டு என உரைப்பரால், உணர்ந்திசினோரே.

திணை - காஞ்சி; துறை - பெருங் காஞ்சி.

மார்க்கண்டேயனார் பாடியது.

## 366. பெருங் காஞ்சி

*உலக முழுவதும் ஒரு குடைக்கீழ் வைத்து ஆட்சி செய்தவரும் ஒரு நாள் மண்ணோடு மண்ணாய் மறைந்து ஒழிந்தனர்.*

*அறவழிவந்தவன் உன் தந்தை; மறம் மிக்க செல்வன் நீ! உனக்கு ஒன்று உணர்த்த விரும்புகிறேன். இதைக் கேட்டு நடந்து கொள்வாயாக!*

*உன் வலிமையைப் பிறர் அறியாதவாறு காத்துக் கொள்க; பிறர் கூறுவதைப் பொறுமையுடன் கேட்டு அறிந்து கொள்க.*

*பகற் பொழுதில் ஆள்வினைக்கு உதவுக! இரவுப் பொழுது நாளை நடப்பவற்றைப் பற்றிச் சிந்திக்க!*

*உழவுத் தொழிலை முடித்துவிட்டுப் பின் வைக்கோலைத் தின்னும் எருது போல உழைத்துக் களைத்துப் பின் மகிழ்வு கொள்க.*

*மகளிரோடு மகிழ்ந்து உரையாடுக! அவர்கள் தெளிவான கள்ளை ஊற்றித் தர அதனை உண்டு மகிழ்க! ஆட்டுக் கிடாயின் சுட்ட இறைச்சியையும், சோற்றையும் வேண்டுபவர்க்கு நல்குக!*

*பலி ஆடுகள் அவை வெட்டப்படுவது உறுதி; அதுபோல வாழ்நாள் முடிவு அடைவதும் உறுதியாகும். நிலையாமை அறிந்து உளநாளைப் பயன்பட வாழ்ந்து காட்டுக!*

விழுக் கடிப்பு அறைந்த முழுக் குரல் முரசம்
ஒழுக்குடை மருங்கின் ஒரு மொழித்து ஆக,
அரவு எறி உருமின் உரறுப சிலைப்ப,
ஒரு தாம் ஆகிய பெருமையோரும்,
தம் புகழ் நிறீஇச் சென்று மாய்ந்தனரே;
அதனால், அறவோன் மகனே! மறவோர் செம்மால்!
நின் ஒன்று உரைப்பக் கேண்மதி;
நின் ஊற்றம் பிறர் அறியாது,
பிறர் கூறிய மொழி தெரியா,
ஞாயிற்று எல்லை ஆள்வினைக்கு உதவி,
இரவின் எல்லை வருவது நாடி,
உரைத்திசின் பெரும நன்றும்
உழவு ஒழி பெரும் பகடு அழி தின்றாங்குச்,
செங் கண் மகளிரொடு சிறு துனி அளைஇ,
அம் கட் தேறல் ஆய் கலத்து உகுப்பக்,
கெடல் அருந் திருவ! உண்மோ!
மடை வேண்டுநர்க்கு இடை அருகாது,
அவிழ் வேண்டுநர்க்கு இடைஅருளி
விடை வீழ்த்துச் சூடு கிழிப்ப,
நீர் நிலை பெருத்த வார் மணல் அடை கரைக்,
காவுதொறு இழைத்த வெறி அயர் களத்தின்
இடங்கெடத் தொகுத்த இடையில்
மடங்கல் உண்மை மாயமோ அன்றே

திணையும் துறையும் அவை.

தருமப்புத்திரனைக் கோதமனார் பாடியது.

## 367. வாழ்த்தியல்

*நாட்டாளும் மன்னர்கள் அவர்கள் தாம் ஆளும் உலகம் மிகப் பெரிது. என்றாலும் அவர்கள் இறக்கும் போது அதனை உடன் கொண்டு செல்வது இல்லை; அதை விட்டு விட்டுத் தான் போக வேண்டும்.*

அந்த ஆட்சி அவர் வாரிசுக்கே போகிறது என்று கூறமுடியாது. யார் கொடுத்து வைத்திருக்கிறார்களோ கூற முடியாது. வேற்று நாட்டவர்க்கும் அது சென்று போய்ச் சேர்ந்து விடுகிறது.

வாழும் போது வாழ்த்து உரைக்கும் அந்தணர்க்கு ஈக; மகளிர் பொற் கலத்தில் தேறல் தர அதை ஏற்றுப் பருகி மகிழ்க! இரவலர்க்குப் பொன் ஆபரணங்களைத் தந்து அவர்களைச் சிறப்பிக்க.

இதுவரை நீங்கள் இயற்றிய நல்வினைகள் உங்களுக்கு உற்ற துணையாகும்; அதனால் இறுதிவரை அறச் செயல்களை உறுதி யுடன் இயற்றுக. இதைத்தான் யான் உமக்கு அறிவுறுத்த இயலும்.

நீ வானத்துத் தோன்றும் மீன்களைப் போலவும், மழைத் துளிகளைப் போலவும் பல ஆண்டுகள் ஒளி பெற்றுப் பிறர்க்குப் பயன்பட்டு வாழ்வாயாக.

நாகத்து அன்ன பாகு ஆர் மண்டிலம்
தமவேஆயினும் தம்மொடு செல்லா;
வேற்றோர் ஆயினும் நோற்றோர்க்கு ஒழியும்;
ஏற்ற பார்ப்பார்க்கு ஈர்ங் கை நிறையப்
பூவும் பொன்னும் புனல் படச் சொரிந்து,
பாசிழை மகளிர் பொலங் கலத்து ஏந்திய
நார் அரி தேறல் மாந்தி, மகிழ் சிறந்து,
இரவலர்க்கு அருங் கலம் அருகாது வீசி,
வாழ்தல் வேண்டும், இவண் வரைந்த வைகல்;
வாழச் செய்த நல்வினை அல்லது
ஆழுங் காலைப் புணை பிறிது இல்லை;
ஒன்று புரிந்து அடங்கிய இருபிறப்பாளர்
முத்தீப் புரையக் காண்தக இருந்த
கொற்ற வெண் குடைக் கொடித் தேர் வேந்திர்!
யான் அறி அளவையோ இதுவே; வானத்து
வயங்கித் தோன்றும் மீனினும், இம்மெனப்
பரந்து இயங்கு மா மழை உறையினும்,
உயர்ந்து மேந் தோன்றிப் பொலிக, நும் தாளே!

திணை - பாடாண் திணை; துறை - வாழ்த்தியல்.

சேரமான் மாரிவெண்கோவும், பாண்டியன் கானப்பேர் தந்த உக்கிரப் பெருவழுதியும், சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியும், ஒருங்கு இருந்தாரை ஔவையார் பாடியது.

# 368. சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதன்

களிறு முகக்குவோம் என்றால் அம்புகள் பட்டு அவை அழிந்துவிட்டன.

தேர்கள் அவை சிதைந்து சீர் அழிந்து நிலத்தில் சாய்ந்து கிடக்கின்றன.

குதிரைகள் காற்றுக்குச் சாயும் மரக் கலத்தைப் போல வடுப்பட்டு மடிந்து கிடக்கின்றன.

வாளேர் உழவ! தடாரிப் பறையை அறைந்து கொண்டு உன்னைப் பாடுகின்றேன்.

உன்னிடத்தில் பெறுவதற்கு யாது உளது? அனைத்தும் அழிவு பட்ட நிலையில் துணையின்றித் தனிமனிதனாக உள்ளாய்; உன் கழுத்தில் உள்ள ஆரம்தான் எஞ்சியுள்ளது.

களிறு முகந்து பெயர்குவம் எனினே,
ஒளிறு மழை தவிர்க்கும் குன்றம் போலக்,
கைம்மா எல்லாம் கணை இடத் தொலைந்தன;
கொடுஞ்சி நெடுந் தேர் முகக்குவம் எனினே;
கடும் பரி நல் மான் வாங்குவயின் ஒல்கி,
நெடும் பீடு அழிந்து, நிலம் சேர்ந்தனவே;
கொய் சுவற் புரவி முகக்குவம்எனினே,
மெய் நிறைந்த வழுவொடு பெரும்பிறிதாகி,
வளி வழக்கு அறுத்த வங்கம் போல,
குருதி அம் பெரும் புனல் கூர்ந்தனவே; ஆங்க
முகவை இன்மையின் உகவை இன்றி,
இரப்போர் இரங்கும் இன்னா வியன் களத்து,
ஆள் அழிப்படுத்த வாள் ஏர் உழவ!
கடாஅ யானைக் கால்வழி அன்ன என்
தெடாரித் தெண் கண் தெளிர்ப்ப ஒற்றிப்,
பாடி வந்தது எல்லாம், கோடியர்
முழவு மருள் திரு மணி மிடைந்த நின்
அரவு உறழ் ஆரம் முகக்குவம் எனவே.

திணை - வாகை; துறை - மறக்களவழி

சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதன் சோழன் வேற்பல் தடக்கைப் பெருநற்கிள்ளியொடு போர்ப் புறத்துப் பொருது வீழ்ந்து, ஆரம் கழுத்தன்னதாக உயிர் போகாது கிடந்தானைக் கழாத் தலையார் பாடியது.

# 369. சேரமான் கடல் ஓட்டிய வேல்கெழு குட்டவன்

நீ வாளேர் உழவன்; யானைகள் மேகமாகவும், நீ ஏந்திய வாள் மின்னலாகவும், உன் முரசு முழக்கம் இடி ஒலியாகவும், குதிரைகள் வீசும் காற்றாகவும், அம்புகள் மழையாகவும் பொழிகின்றன.

குருதி படிந்த களத்தில் பேய்கள் பிணங்களைப் பிடித்துத் தின்கின்றன. பூதங்கள் இப்பிணங்களைக் காக்கின்றன.

இது நீ செய்யும் மறக்கள வேள்வி; நீ சந்திக்கும் போர்க்களம் உனக்கு ஏர்க்களம் ஆகிறது; தேர் ஏர் ஆகிறது; இத்தகைய கள வேள்வி செய்யும் உன்னைத் தடாரிப் பறை கொண்டு யாம் பாட வந்துள்ளோம்.

இமயம்போல் தோற்றம் அளிக்கும் பெருங்கை யானை களையும், துடிபோன்ற அடியினையுடைய கன்றுகளோடு கூடிய பிடிகளையும் எமக்கு அளித்துச் சிறப்புச் செய்வாயாக! உன்னை வாழ்த்துகிறோம்.

இருப்பு முகஞ் செறித்த ஏந்து எழில் மருப்பின்,
கருங் கை யானை கொண்மூ ஆக,
நீள்மொழி மறவர் எறிவனர் உயர்த்த
வாள் மின் ஆக, வயங்கு கடிப்பு அமைந்த
குருதிப் பலிய முரசு முழக்கு ஆக,
அரசு அராப் பனிக்கும் அணங்கு உறு பொழுதின்,
வெவ் விசைப் புரவி வீசு வளி ஆக,
விசைப்புறு வல் வில் வீங்கு நாண் உகைத்த
கணைத் துளி பொழிந்த கண் அகன் கிடக்கை,
ஈரச் செறுவயின் தேர் ஏர் ஆக,
விடியல் புக்கு, நெடிய நீட்டி, நின்
செருப் படை மிளிர்ந்த திருத்தறு பைஞ் சால்,
பிடித்து எறி வெள் வேல் கணையமொடு வித்தி,
விழுத் தலை சாய்த்த வெருவரு பைங் கூழ்.
பேய்மகள் பற்றிய பிணம் பிறங்கு பல் போர்ப்பு,
கண நரியோடு கழுது களம் படுப்பப்,
பூதம் காப்பப், பொலிகளம் தழீஇப்,
பாடுநர்க்கு இருந்த பீடுடையாள!

தேய்வை வெண் காழ் புரையும் விசி பிணி
வேய்வை காணா விருந்தின் போர்வை
அரிக் குரல் தடாரி உருப்ப ஒற்றிப்,
பாடி வந்திசின்; பெரும! பாடு ஆன்று
எழிலி தோயும் இமிழ் இசை அருவி,
பொன்னுடை நெடுங் கோட்டு, இமையத்து அன்ன
ஓடை நுதல, ஒல்குதல் அறியாத்,
துடி அடிக் குழவிய பிடி அடி மிடைந்த
வேழ முகவை நல்குமதி—
தாழா ஈகைத் தகை வெய்யோயே!

திணையும் துறையும் அவை; துறை - ஏர்க்கள உருவகமும் ஆம்.
சேரமான் கடல் ஓட்டிய வேல் கெழு குட்டுவனைப் பரணர் பாடியது.

# 370. சோழன் செருப்பாழி எறிந்த இளஞ்சேட்சென்னி

*ஈகைமிக்க வள்ளல்களைக் காணாமல் பசியால் வாடும் சுற்றத்தினரை அழைத்துக் கொண்டு காடும் மேடும் திரிந்து பழுமரம் நாடும் பறவைகளைப் போல உன்னைத் தேடி வந்திருக்கிறோம்.*

*நீ களத்தில் பகைவர்களைக் கொன்று குவித்த பிணங்கள் பெருகிக் குவிந்து விட்டன. பேய்களும், கழுகுகளும், பருந்துகளும் அவற்றைச் சுற்றி வட்டமிடுகின்றன.*

*உன்போர்க் களத்தை ஏர்க்களமாக உருவகித்து யாம் தடாரிப் பறை கொண்டு பாடி நிற்கிறோம்.*

*மலை போன்ற யானைகளைப் பரிசிலாக முகந்து செல்ல யாம் வந்துள்ளோம்.*

வள்ளியோர்க் காணாது உய்திறன் உள்ளி,
நாரும் போழும் செய்து ஊன் பெறா அது
பசி தினத் திரங்கிய இரும் பேர் ஒக்கற்கு
ஆர் பதம் கண்ணென மாதிரம் துழைஇ,
வேர் உழந்து உலறி, மருங்கு செத்து ஒழிய வந்து,
அத்தக் குடிஞைத் துடி மருள் தீம் குரல்,
உழுஞ்சில் அம் கவட்டிடை இருந்த பருந்தின்

பெடை பயிர் குரலோடு, இசைக்கும் ஆங்கண்,
கழை காய்ந்து உலறிய வறம் கூர் நீள் இடை,
வரி மரல் திரங்கிய கானம் பிற்படப்,
பழுமரம் உள்ளிய பறவை போல,
ஒண் படை மாரி வீழ் கனி பெய்தெனத்,
துவைத்து எழு குருதி நிலமிசைப் பரப்ப,
விளைந்த செழுங் குரல் அரிந்து, கால் குவித்துப்,
படு பிணப் பல் போர்பு அழிய வாங்கி,
எருது களிறு ஆக, வாள் மடல் ஓச்சி,
அதரி திரித்த ஆள் உகு கடாவின்,
அகன் கண் தடாரி தெளிர்ப்ப ஒற்றி,
'வெந் திறல் வியன் களம் பொலிக!' என்று ஏத்தி,
இருப்பு முகம் செறித்த ஏந்துஎழில் மருப்பின்
வரை மருள் முகவைக்கு வந்தனென்; பெரும!
வடி வநில் எஃகம் பாய்ந்தென, கிடந்த
தொடியுடைத் தடக் கை ஓச்சி, வெருவார்
இனத் தடி விராய வரிக் குடர் அடைச்சி,
அழு குரற் பேய்மகள் அயர, கழுகொடு
செஞ் செவி எருவை திரிதரும்,
அஞ்சுவரு கிடக்கைய களம் கிழவோயே!

திணையும் துறையும் அவை.

சோழன் செருப்பாழி எறிந்த இளஞ்சேட்சென்னியை ஊன்பொதி பசுங்குடை யார் பாடியது.

# 371. தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்

*எமக்குப் பொருள் அளிக்கும் அருளாளரைக் காணப் பெறாமல் பசியோடு வேப்ப மரத்து நிழலில் தங்கினோம். அதன் பூக்கள் எங்கள் மீது சொரிந்தன; அவற்றால் எமக்கு என்ன பயன்? அந்த நிழல் எம் பசியைப் போக்காது. அரிசி கிடைத்தால் எம் பசியைப் போக்கிக் கொள்ள முடியும். எமக்குப் பொருள் அளித்து வாழ வைக்கும் வள்ளல்களை நாடிப் புறப்பட்டேன்.*

*எம் இசைக் கருவிகளை ஒரு பையில் போட்டுக் கொண்டு மற்றொரு பையில் அடுகலங்களை அடுக்கி வைத்துக் கொண்*

டோம். இரண்டையும் ஒரு காவடியில் வைத்துச் சுமந்து அரிய வழிகள் கடந்து நீ பொரும் போர்க் களத்தை வந்து சேர்ந்துள்ளோம்.

எம் தடாரிப் பறைகொண்டு உம் போர்க்கள வெற்றிகளை ஏர்க்களமாகப் பாடுகிறோம். பேய்கள் பிணம் தின்னப் பல வீரர்களைக் குவித்தாய். அவற்றை அவை தின்ன அளித்தாய். நீ பல்லாண்டு வாழ்க எனப் பேய்களும் வாழ்த்துகின்றன.

குருதி படிந்த களத்தில் பகைவர்களை உழக்கி வெற்றி கொண்ட வேந்தனே! யாம் விரும்பும் பரிசில் நீ தரும் யானைகள். அவற்றைப் பெற்றுச் செல்வோம் யாம்; வாழ்க!.

அகன் தலை வையத்துப் புரவலர்க் காணாது,
மரந்தலைச் சேர்ந்து, பட்டினி வைகிப்,
போது அவிழ் அலரி நாரின் தொடுத்துத்,
தயங்கு இரும் பித்தை பொலியச் சூடிப்,
பறையொடு தகைத்த கலப்பையென், முரவு வாய்
ஆடுறு குழிசி பாடு இன்று தூக்கி,
மன்ற வேம்பின் ஒண் பூ உறைப்பக்,
குறை செயல் வேண்டா நசைய இருக்கையேன்,
அரிசி இன்மையின் ஆர் இடை நீந்திக்,
கூர் வாய் இரும் படை நீரின் மிளிர்ப்ப,
வரு கணை வாளி..... அன்பு இன்று தலைஇ,
இரைமுரசு ஆர்க்கும் உரைசால் பாசறை,
வில் ஏர் உழவின் நின் நல் இசை உள்ளிக்,
குறைத் தலைப் படு பிணன் எதிரப், போர்பு அழித்து.
யானை எருத்தின் வாள் மடல் ஓச்சி
அதரி திரத்த ஆள் உகு கடாவின்,
மதியத்து அன்ன என் விசி உறு தடாரி
அகன் கண் அதிர, ஆகுளி தொடாலின்,
பணை மருள் நெடுந் தாள், பல் பிணர்த் தடக் கை,
புகர்முக முகவைக்கு வந்திசின் - பெரும!
களிற்றுக் கோட்டன்ன வால் எயிறு அழுத்தி,
விழுக்கொடு விரைஇய வெண் நிணச் சுவையினள்,
குடர்த் தலை மாலை சூடி, 'உணத் தின
ஆனாப் பெரு வளம் செய்தோன் வானத்து
வயங்கு பல் மீனினும் வாழியர், பல' என,

உரு கெழு பேய்மகள் அயரக்,
குருதித் துகள் ஆடிய களம் கிழவோயே!

திணையும் துறையும் அவை.
தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழியனைக் கல்லாடனார் பாடியது.

# 372. தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்

*யாம் தடாரிப் பண் ஒற்றிப் பாட வந்தது எதற்காக?*

*நீ செய்த களவேள்வி அதனைச் சிறப்பித்துப் பாடி நீ தரும் ஒளிமிக்க பொன் மாலையைப் பெறுவதற்காகவே.*

*நீ வலம்பட வீசும் வாள் மின்னலாகவும்; அம்புகள் மழை யாகவும் அமைந்த பாசறை; அதில் பிணங்களின் தலைகள் அடுப் பாகக் கூவிளம் விறகு கொண்டு பேய்கள் பற்ற வைக்கும். அதில் வரிக்குடல்கள் மிதக்கும் மண்டை ஓட்டை அகப்பையாகவும், வன்னி மரத்தின் கொம்பு அதில் சொருகப் பட்ட காம்பாக வும் பேய் மகள் துழந்து அட்ட இறைச்சி உணவினைப் பேய் மடையன் கொற்றவைக்குப் படைக்கிறான். இத்தகு களவேள்வி படைக்கக் காரணமாக இருந்தவன் நீ. உன் களப்போரைச் சிறப்பித்து யாம் பாடுகிறோம்.*

*நின் ஒளி பெற்ற மாலையைப் பெற நயந்து யாம் பாமாலை பாடுகிறோம்.*

விசி பிணித் தடாரி விம்மென ஒற்றி,
ஏத்தி வந்தது எல்லாம் - முழுத்த
இலங்கு வாள் அவிர் ஒளி வலம் பட மின்னி,
கணைத் துளி பொழிந்த கண்கூடு பாசறை,
பொருந்தாத் தெவ்வர் அரிந்த தலை அடுப்பின்,
கூவிள விறகின் ஆக்கு வரி துடுப்பின்,
ஆனா மண்டை வன்னிஅம் துடுப்பின்,
ஈனா வேண்மாள் இடம் துழந்து அட்ட
மா மறி பிண்டம் வாலுவன் ஏந்த,
'வதுவை விழவின் புதுவோர்க்கு எல்லாம்
வெவ் வாய்ப் பெய்த பூத நீர் சால்க' எனப்

புலவுக் களம் பொலிய வேட்டோய்! நின்
நிலவுத் திகழ் ஆரம் முகக்குவம் எனவே.

திணை - வாகை; துறை - மறக்கள வேள்வி.

அவனை மாங்குடி கிழார் பாடியது.

## 373. சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன்

முரசுகள் இடி என முழங்கவும் களிறுகள் மேகம் போல் திரளவும், தேரும் குதிரைகளும் மழைத் துளிபோல் சிதறி விழவும், அம்புகள் காற்றெனச் செல்லவும் பெருஞ்சேனையுடன் சென்று கொங்கருடன் பொருதாய்; அவர்கள் புறங்கொடுத்து ஓடினர்.

இவ்வாறே வஞ்சி முற்றம் போர்க் களனாக மாற அதனைக் கைப்பற்றினாய்.

எம் முன்னவர்கள் பேரரசர்கள் செய்யும் போரினை அக்களங் களுக்குச் சென்று பாடினர் என்று கேட்டு இருக்கிறேன். அவ்வாறே தக்க வேந்தரைத் தேட நினக்கு நிகராக யாரும் எனக்கு அகப் படாமையால் உன்னை நாடி வந்துள்ளேன்.

அதனால் கிள்ளி வளவனே! நீ அடையும் வெற்றிகளைக் களத்தில் வந்து உன்னைக் கண்டு யாம் பாடத் தொடங்குகிறோம்.

பகைவர் மதிலை வென்று அவர்பால் கொண்ட பொருள் களைப் பரிசிலாகப் பெற யாம் வந்துள்ளோம்.

உருமிசை முழக்கு என முரசம் இசைப்பச்,
செரு நவில் வேழம் கொண்மூ ஆகத்,
தேர் மா அழி துளி தலைஇ, நாம் உறக்
கணைக் காற்று எடுத்த கண் அகன் பாசறை,
இழிதரு குருதியொடு ஏந்திய ஒள் வாள்
பிழிவது போலப் பிட்டை ஊறு உவப்ப,
மைந்தர் ஆடிய மங்கு பெருந் தானைக்,
கொங்கு புறம்பெற்ற கொற்ற வேந்தே!

.............தண்டா மாப் பொறி.
மடக் கண் மயில் இயல் மறலியாங்கு,
நெடுஞ் சுவர் நல் இல் புலம்பக், கடை கழிந்து,
மென் தோள் மகளிர் மன்றம் பேணார்,
புண்ணுவந்து
உளை அணிப் புரவி வாழ்க எனச்
சொல் நிழல் இன்மையின் நல் நிழல் சேர,
நுண் பூண் மார்பின் புன் தலைச் சிறாஅர்
அம்பு அழி பொழுதில் தமர் முகம் காணா,
...........ற் றொக்கான
வேந்து புறங்கொடுத்த வீய்ந்து உகு பறந்தலை,
மாடம் மயங்கு எரி மண்டிக், கோடு இறுபு,
உரும் எறி மலையின், இரு நிலம் சேரச்,
சென்றோன் மன்ற, கொலைவன் சென்றெரி
வெம்பு ண்ணறிநர் கண்டு கண் அலைப்ப,
வஞ்சி முற்றம் வயக் களன் ஆக,
அஞ்சா மறவர் ஆட் போர்பு அழித்துக்
கொண்டனை, பெரும! குட புலத்து அதரி;
பொலிக அத்தை, நின் பணைதயங்கு வியன்களம்
விளங்கு திணை வேந்தர் களம்தொறும் சென்று,
''புகர்முக முகவை பொலிக!'' என்று ஏத்திக்,
கொண்டனர்' என்ப, பெரியோர்; யானும்
அம் கண் மாக் கிணை அதிர ஒற்ற,
முற்றிலேன்ஆயினும், காதலின் ஏத்தி,
நின்னோர் அன்னோர் பிறர் இவண் இன்மையின்,
மன் எயில் முகவைக்கு வந்திசின், பெரும!
பகைவர் புகழ்ந்த ஆண்மை, நகைவர்க்குத்
தா இன்று உதவும் பண்பின், பேயொடு
கண நரி திரிதரூஉம் ஆங்கண், நிணன் அருந்து
செஞ் செவி எருவை குழீஇ,
அஞ்சுவரு கிடக்கைய களம் கிழவோயே!

திணை - அது; துறை - மறக்களவழி; ஏர்க்கள உருவகமும் ஆம்.

சோழன் குராப்பள்ளித் துஞ்சிய கிள்ளிவளவன் கருவூர் எறிந்தானைக் கோவூர் கிழார் பாடியது.

# 374. ஆய் அண்டிரன்

ஆண் மானின் நெற்றிபோலச் சிதறிக் கிடக்கும் எம் தலை மயிர் படியுமாறு பனி பெய்யும் விடியற்காலையில் மன்றத்தில் இருக்கும் பலா மரத்து அடியில் இருந்து கொண்டு தடாரிப் பறை கொண்டு குறிஞ்சி மலையை யாம் பாடப் பெரிய கலைமான் கூட்டம் செவி சாய்த்துக் கேட்கிறது. அக்குறிஞ்சி நிலத்து வாழும் குறவர், குறவர் சிறுவர்களும், அவர்தம் தாயர்களும் மான் கறியையும், சந்தனக் கட்டையை யும், யானைத் தந்தத்தையும், புலியின் தோலில் பரப்பி எமக்குத் தந்து சிறப்புச் செய்தனர். அத்தகைய வளம்மிக்க மலை நாட்டை உடையவன் ஆய் அண்டிரன்.

ஞாயிறே! நீ விசும்பில் திரிகிறாய்; உன்பால் இவனைப் போல் கொடைத் தன்மை உள்ளதா? நீ இவனுக்கு நிகராக மாட்டாய்.

கானல் மேய்ந்து வியன் புலத்து அல்கும்
புல்வாய் இரலை நெற்றி அன்ன,
பொலம் இலங்கு சென்னிய பாறு மயிர் அவியத்
தண் பனி உறைக்கும் புலரா ஞாங்கர்,
மன்றப் பலவின் மால் அரைப் பொருந்தி, என்
தெண் கண் மாக் கிணை தெளிர்ப்ப ஒற்றி,
இருங் கலை ஓர்ப்ப இசைஇக், காண்வரக்,
கருங் கோற் குறிஞ்சி அடுக்கம் பாடப்,
புலிப் பல் தாலிப் புன் தலைச் சிறாஅர்
மான் கண் மகளிர், கான் தேர் அகன் துறைச்
சிலைப்பாற் பட்ட முளவுமான் கொழுங் குறை,
விடர் முகை அடுக்கத்துச் சினை முதிர் சாந்தம்,
புகர் முக வேழத்து மருப்பொடு, மூன்றும்,
இருங் கேழ் வயப் புலி வரி அதள் குவைஇ,
விருந்து இறை நல்கும் நாடன், எம் கோன்,
கழல் தொடி ஆஅய் அண்டிரன் போல,
வண்மையும் உடையையோ? - ஞாயிறு!-
கொன் விளங்குதியால் விசும்பினானே!

திணை - பாடாண் திணை; துறை - பூவை நிலை.

ஆய் அண்டிரனை உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் பாடியது.

# 375 ஆய் அண்டிரன்

*பாழ்பட்டு நின்ற மன்றத்தில் ஒரு பக்கம் யாம் துயிலும் இடமாகக் கொண்டு வாழ்கிறோம். எங்கள் கிணைகளை பனம் நார் குருத்து இவற்றோடு சேர்த்துக் கிணைப் பறையைச் சுருக்கிட்டுக் கட்டி உழவர் மனைகளில் சென்று பசி போக்கி வருகிறோம். வறுமை தீர வழங்கும் வள்ளல்கள் யார் உளர் என்று தேடி யாரும் எங்களுக்குக் கிடைக்கவில்லை. கடலை நாடி முகக்கச் செல்லும் முகிலைப் போல ஒப்பற்ற உன்னை உள்ளி உன்பால் வந்துள்ளேன்.*

*நீ புலவர்களுக்கு அரணாக இருந்து அவர்களை ஆதரிப் பாயாக! அவர்களுக்கு நீதான் அரண்; காப்பு ஆகின்றாய்.*

*பெருமைபடப் பேசினாலும் அவற்றை மடுத்துக் கேட்க யார் உளர்? செல்வம் படைத்தவர் ஆயினும் அவர்கள் செவி மடுத்துக் கேளார். அவர் மன்னர்களாயினும் அவர்களை எம் போன்ற புலவர்கள் பாட மாட்டார்கள்.*

அலங்கு கதிர் சுமந்த கலங்கற் சூழி,
நிலைதளர்வு தொலைந்த ஒல்கு நிலைப் பல் காற்
பொதியில் ஒரு சிறை பள்ளி ஆக,
முழாஅரைப் போந்தை அர வாய் மா மடல்
நாரும் போழும் கிணையொடு சுருக்கி,
ஏரின் வாழ்நர் குடிமுறை புகாஅ,
'ஊழ் இரந்து உண்ணும் உயவல் வாழ்வைப்
புரவு எதிர்ந்து கொள்ளும் சான்றோர் யார்?'' எனப்
பிரசம் தூங்கும் அறாஅ யாணர்,
வரை அணி படப்பை, நல் நாட்டுப் பொருந!
பொய்யா ஈகைக் கழல் தொடி ஆஅய்!
யாவரும் இன்மையின் கிணைப்ப, தவாது
பெரு மழை கடல் பரந்தாஅங்கு, யானும்
ஒரு நின் உள்ளி வந்தனென்; அதனால்
புலவர் புக்கில் ஆகி, நிலவரை
நிலீஇயர் அத்தை, நீயே! ஒன்றே
நின் இன்று வறுவிது ஆகிய உலகத்து,
நிலவன்மாரோ, புரவலர்! துன்னிப்,
பெரிய ஓதினும் சிறிய உணராப்

பீடு இன்று பெருகிய திருவின்,
பாடுஇல், மன்னரைப் பாடன்மார், எமரே!

திணை - பாடாண் திணை; துறை - வாழ்த்தியல்.

அவனை அவர் பாடியது.

## 376. ஓய்மான் நல்லியாதன்

*அந்தி மாலை அது சற்றுத் தள்ளி இருள் படரும் நேரம். கையில் தடாரிப் பறை; பாணர்கள் உணவு உண்ணும் நேரம். அவன் முற்றத்தில் சற்றுத் தொலைவில் ஒதுங்கி நின்றிருந்தேன்.*

*கிழிந்த ஆடை; நைந்த கோலம்; மெலிந்த தோற்றம் இதனைக் கண்டனன்; நிலவு சற்று அதன் ஒளிபட்டு என்னை அவனுக்குக் காட்டித் தர இமைப்பொழுதில் ஞெரேர் என என்னை விளித்தான். விருந்தினன் வருந்தினன் என்று என்னை அறிந்தான். அருந்திலன் என்பதை அறிந்தவனாகி என் கைத்தாளம் அதனைத் தன் கையில் வாங்கிக் கொண்டு கடுப்பு மிக்க கள்ளைத் தந்தான். ஆட்டு இறைச்சி அதற்குத் துணை ஆகியது. நரகம் போன்று இருந்த என் வறுமையைப் போக்கினான்; வாரித் தந்தான். அன்று இரவே மிக்க செல்வம் தந்து என்னை வளப்படுத்தினான். வறுமை என்னை விட்டு நீங்கியது. செழுமை என்னை அணுகியது.*

*வாழ்வு மறுமலர்ச்சி பெற்றது. வள்ளல்கள் வேறு பிறர் உளர் என்றாலும் அவர்களை அன்று முதல் நினைத்தது கிடையாது. என் கிணைப் பறை சிறுகுரல் எழுப்பியது இல்லை. அதனைத் தட்டியது இல்லை.*

விசும்பு நீத்தம் இறந்த ஞாயிற்றுப்
பசுங் கதிர் மழுகிய சிவந்து வாங்கு அந்தி
சிறு நனி இறந்த பின்றைச், செறி பிணிச்
சிதாஅர் வள்பின் என் தெடாரி தழீஇப்,
பாணர் ஆரும்அளவை, யான் தன்
யாணர் நல் மனைக் கூட்டுமுதல் நின்றனென்;
இமைத்தோர் விழித்த மாத்திரை, ஞெரேரெனக்,
குணக்கு எழு திங்கள் கனை இருள் அகற்றப்,
பண்டு அறிவாரா உருவோடு, என் அரைத்

தொன்று படு துளையொடு பரு இழை போகி,
நைந்து கரை பறைந்த என் உடையும், நோக்கி,
'விருத்தினன் அளியன், இவன்' எனப், பெருந்தகை
நின்ற முரற்கை நீக்கி, நன்றும்
அரவு வெகுண்டன்ன தேறலொடு, சூடு தருபு,
நிரயத்து அன்ன என் வறன் களைந்து, அன்றே,
இரவினானே, ஈத்தோன் எந்தை;
அன்றை ஞான்றினொடு இன்றின் ஊங்கும்,
இரப்பச் சிந்தியேன், நிரப்பு அடு புணையின்;
உளத்தின் அளக்கும் மிளிர்ந்த தகையேன்;
நிறைக் குளப் புதவின் மகிழ்ந்தனென் ஆகி,
ஒரு நாள், இரவலர் வரையா வள்ளியோர் கடைத்தலை,
ஞாங்கர் நெடுமொழி பயிற்றித்,
தோன்றல் செல்லாது, என் சிறு கிணைக் குரலே.

திணை - அது; துறை - இயன்மொழி.

ஓய்மான் நல்லியாதனைப் புறத்திணை நன்னாகனார் பாடியது.

# 377. சோழன் இராச சூயம் வேட்ட பெருநற்கிள்ளி

*கிள்ளி இனிது உறங்கும் மனையை என் தடாரிப் பறையோடு சென்று அணுகினேன்.*

*அங்கு அவனை ''அவி உணவு உண்ணும் அமரர்கள் காக்க! அறநெஞ்சினன் வாழ்க!'' என்று புலவர்கள் பாராட்டினர். மற்றும் ''இவனுக்கு ஏனைய அரசர்கள் ஒப்பு ஆகார்'' என்று செப்பி நின்றனர். அதைக் கேட்டு வியந்து நின்ற என்னைக் கண்டு நாடுகள் பல திரியும் நயம் மிக்க கிணைஞனே! நீயும் என்னால் போற்றத் தக்கவன் என்று கூறி அழைப்பித்து மலை தரு மணியும், காடுகள் தரும் பொன்னும், அலைகள் தரும் முத்தும், பல்வேறுபட்ட உடை வகைகளும் கள்ளும் தந்து என்னைச் சிறப்பித்தான். இது கனவோ என்று வியக்கும்படி வழங்கி உதவினான்.*

*புகழ்மிக்க நாடு என்று சிறப்பித்துக் கூறினால் அது அவன் வள நாடு தான் ஆகும். அரசன் என்றால் அவன்தான் பேரரசன் ஆவான்.*

நால்வகைப் படைகளோடு நானிலத்தில் நல்லாட்சி செய்யும் பேரரசன் வாழ்க என்று வாழ்த்துதல் செய்கிறேன். நெடிது வாழ்க.

பனி பழுநிய பல் யாமத்துப்
பாறு தலை மயிர் நனைய,
இனிது துஞ்சும் திரு நகர் வரைப்பின்,
இனையல் அகற்ற, என் கிணை தொடாக் குறுகி,
அவி உணவினோர் புறங்காப்ப,
அற நெஞ்சத்தோன் வாழ, நாள்' என்று,
அதற் கொண்டு வரல் ஏத்திக்,
'கரவு இல்லாக் கவி வண் கையான்,
வாழ்க!'' எனப் பெயர் பெற்றோர்
பிறர்க்கு உவமம் தான் அல்லது,
தனக்கு உவமம் பிறர் இல்' என,
அது நினைந்து, மதி மழுகி,
ஆங்கு நின்ற எற் காணூஉச்
'சேய் நாட்டுச் செல் கிணைஞனை!
நீ புரவலை, எமக்கு' என்ன,
மலை பயந்த மணியும் கடறு பயந்த பொன்னும்,
கடல் பயந்த கதிர் முத்தமும்,
வேறு பட்ட உடையும், சேறுபட்ட தசும்பும்,
கனவில் கண்டாங்கு, வருந்தாது நிற்ப,
நனவின் நல்கியோன், நசைசால் தோன்றல்;
நாடு என மொழிவோர், 'அவன் நாடு' என மொழிவோர்;
வேந்து என மொழிவோர், 'அவன் வேந்து' என மொழிவோர்;
புகர் நுதல் அவிர் பொற் கோட்டு யானையர்,
கவர் பரிக் கச்சை நல் மான்,
வடி மணி, வாங்கு உருள,
கொடிமிசை நல் தேர்க் குழுவினர்,
கதழ் இசை வன்கணினர்,
வாளின் வாழ்நர், ஆர்வமொடு ஈண்டிக்,
கடல் ஒலி கொண்ட தானை
அடல் வெங் குருசில்! மன்னிய நெடிதே!

திணை - அது; துறை - வாழ்த்தியல்.

சோழன் இராசசூயம் வேட்ட பெரு நற்கிள்ளியை உலோச்சனார் பாடியது.

# 378. சோழன் செருப்பாழி எறிந்த இளஞ்சேட்சென்னி

தென் நாட்டில் பரதவர் சாயவும், வடக்கே வடுகர் வீழவும் வெற்றிகள் கண்ட வேந்தன்; அவன் அழகிய அரண்மனை சென்று தடாரிப் பறை கொண்டு வஞ்சித் துறையில் அவன் வெற்றிச் சிறப்புகளை எடுத்துப் பாடினேன்.

அது கேட்டு என்னால் இதுவரை நினைத்துப் பார்த்திருக்க முடியாத உயர்வகை அணிகலன்களை வாரித் தந்தான். அவன் நாடு பல வென்று அங்குத் தேடித் திரட்டிய நன் கலன்கள் அவை.

வறுமையில் உழன்ற என் பெருஞ் சுற்றத்தினர் அவற்றை எடுத்து அணிந்து கொள்ளத் தெரியாமல் அவதிப்பட்டனர். அது புதுமையாக இருந்தது. நகைப்பும் தந்தது.

விரலில் செறிப்பதைச் செவிக்கு மாட்டினர். செவியில் இடுபவை விரலில் செறித்தனர்.

அரைக்கு அணிபவை கழுத்துக்கு மாட்டினர். கழுத்துக்கு அணிபவை அரைக்கு அணிந்தனர்.

இராமனுடன் சென்ற சீதையை வலிதின் பற்றி வான்வழி இராவணன் கொண்டு சென்ற நாள் அவள் தன் அணிகலன்களை நிலத்தில் இட்டாள். அவற்றைக் கண்டு எடுத்த குரங்கின் கூட்டம் அவற்றைத் தலைகீழாக மாற்றி அணிந்து கொண்டன. அதைத்தான் இந்தச் சுற்றத்தினர் நினைவுபடுத்தினர்.

எம் சுற்றம் அற்றம் நீங்கி அருஞ்செல்வம் படைத்து உயர்வு பெற்றனர். அந்தக் காட்சி நகைப்பு ஊட்டுவதாக உள்ளது. நினைக்கும்தோறும் மகிழ்வு தருகிறது.

தென் பரதவர் மிடல் சாய,
வட வடுகர் வாள் ஓட்டிய,
தொடை அமை கண்ணித், திருந்து வேல் தடக் கைக்,
கடு மா கடைஇய விடு பரி வடிம்பின்,
நல் தார், கள்ளின், சோழன் கோயில்,
புதுப் பிறை அன்ன சுதை செய் மாடத்துப்,
பனிக் கயத்து அன்ன நீள் நகர் நின்று, என்

அரிக் கூடு மாக் கிணை இரிய ஒற்றி,
எஞ்சா மரபின் வஞ்சி பாட,
எமக்கு என வகுத்த அல்ல, மிகப் பல,
மேம்படு சிறப்பின் அருங் கல வெறுக்கை
தாங்காது பொழிதந்தோனே; அது கண்டு,
இலம்பாடு உழந்த என் இரும் பேர் ஒக்கல்,
விரற் செறி மரபின செவித் தொடக்குநரும்,
செவித் தொடர் மரபின விரற் செறிக்குநரும்,
அரைக்கு அமை மரபின மிடற்று யாக்குநரும்,
மிடற்று அமை மரபின அரைக்கு யாக்குநரும்,
கடுந் தெறல் இராமனுடன் புணர் சீதையை
வலித்தகை அரக்கன் வௌவிய ஞான்றை,
நிலம் சேர் மதர் அணி கண்ட குரங்கின்
செம் முகப் பெருங் கிளை இழைப் பொலிந்தாஅங்கு,
அறாஅ அரு நகை இனிது பெற்றிகுமே-
இருங் கிளைத் தலைமை எய்தி,
அரும்படர் எவ்வம் உழந்ததன் தலையே.

திணை - அது; துறை - இயன்மொழி.

சோழன் செருப்பாழி எறிந்த இளஞ்சேட் சென்னியை ஊன்பொதி பசுங்குடையார் பாடியது

## 379. ஓய்மான் வில்லியாதன்

*நெல் அரியும் உழவர் தம் கூர்வாள் மழுங்கி விட அதனை யாமைப் புறத்தில் கல் எனத் தீட்டுவர். அத்தகைய வளம் மிக்க நாடு இலங்கை; அதன் தலைவன் வில்லியாதனைப் பாடும் கிணைவர் யாம். பன்றி இறைச்சியை நெய்யில் வறுத்து நாள் காலையில் சோற்றொடு தந்து பசி தீர்ப்பவன்; அவன் நிழலில் வாழ்பவன் யான்; ''யான் அவன் புகழைப் பாடி வருகிறேன்'' என்று உன் கிணைவன் வந்து என்னிடம் கூறினான்.*

*கேட்டது கொண்டு வேட்கை மீதூரக் குன்றுகள் பல கடந்து உன்னைக் கண்டு பரிசில் கொண்டு செல்ல வந்துள்ளேன். தாய் முலைப்பால் பருகத் தணியா வேட்கையோடு வரும் குழவிபோல் உன் நீள்மதில் உடைய ஊரை வந்து அணுகியுள்ளேன்; யானே*

*அவன் தாள் நிழல் வாழ்க்கை பெறுவேன் ஆக! அவனே பெறுக என் நா இசைக்கும் நல் வாழ்த்துக்கள்!*

யானே பெறுக, அவன் தாள் நிழல் வாழ்க்கை;
அவனே பெறுக, என் நா இசை நுவறல்;
நெல் அரி தொழுவர் கூர் வாள் மழுங்கின்,
பின்னை மறத்தோடு அரியக், கல் செத்து,
அள்ளல் யாமைக் கூன் புறத்து உரிஞ்சும்
நெல் அமல் புரவின் இலங்கை கிழவோன்
வில்லியாதன் கிணையேம்; பெரும!
'குறுந் தாள் ஏற்றைக் கொழுங் கண் அவ் விளர்
நறு நெய் உருக்கி, நாட் சோறு ஈயா,
வல்லன், எந்தை, பசி தீர்த்தல்' எனக்,
கொன் வரல் வாழ்க்கை நின் கிணைவன் கூறக்,
கேட்டதற்கொண்டும் வேட்கை தண்டாது,
விண் தோய் தலைய குன்றம் பின்பட,
........ர வந்தனென், யானே-
தாய் இல் தூவாக் குழவி போல, ஆங்கு அத்
திருவுடைத் திரு மனை, ஐது தோன்று கமழ் புகை
வரு மழை மங்குலின் மறுகுடன் மறைக்கும்
குறும்பு அடு குண்டு அகழ் நீள் மதில் ஊரே.

திணை - அது; துறை - பரிசில் துறை.

ஓய்மான் வில்லியாதனைப் புறத்திணை நன்னாகனார் பாடியது.

## 380. நாஞ்சில் வள்ளுவன்

*நாஞ்சில் வள்ளுவன் தென்னவனுக்குப் படைத் தலைவன் ஆவான்.*

*மழை நீர் கடலில் வீழ்ந்தால் அது முத்து ஆகும். அம் முத்துக்கள் அவன் நாட்டில் மிக்குக் கிடைக்கும். மணம் மிக்க மலை மல்லிகையோடு கூதாளி தழைத்து விளங்கும்; தீஞ்சுளைப் பலாக்கள் மிக்கு விளங்கும். அத்தகைய நாஞ்சில் நாட்டுத் தலைவன் அவன் ஆவான்.*

*தன்னை எதிர்த்து வர நினைக்கும் பகைவர்க்குச் சேண் விளங்குபவன். அவர்கள் அணுக இயலாத வலிமை உடையவன்.*

*தன்னை நாடி வரும் நண்பர்க்கு ஓடி உதவும் உயர் நண்பன். அவர்களுக்கு உள்ளங்கைபோல் உதவும் இயல்பினன்.*

*கந்தனை அனைய புகழ்மிக்கவன். சிறுவர்போல் சிந்தை யுற்றவன். கள்ளம் அறியாதவன்.*

*இவ்வுலகம் வறுமையுற்ற காலத்திலும் அவனை அணுகும் என் சுற்றத்தினர் செழுமை பெற்றனர். அவர்கள் இன்மையைத் தீர்த்தான்.*

தென் பவ்வத்து முத்துப் பூண்டு,
வட குன்றத்துச் சாந்தம் உரீஇ,
............ங் கடல் தானை,
இன் இசைய விறல் வென்றித்,
தென்னவர் வய மறவன்;
மிசைப் பெய்த நீர் கடல் பரந்து முத்து ஆகுந்து,
நாறு இதழ்க் குளவியொடு கூதளம் குழைய,
வேறுபெ........த்துந்து,
தீம் சுளைப் பலவின் நாஞ்சில் பொருநன்;
துப்பு எதிர்ந்தோர்க்கே உள்ளாச் சேய்மையன்;
நட்பு எதிர்ந்தோர்க்கே அங்கை நண்மையன்;
வல் வேற் கந்தன் நல் இசை அல்ல,
.........த்தார்ப் பிள்ளை அம் சிறாஅர்;
அன்னன் ஆகன்மாறே, இந் நிலம்
இலம்படு காலை ஆயினும்,
புலம்பல் போயின்று, பூத்த என் கடும்பே.

திணை - அது; துறை - இயன்மொழி.

நாஞ்சில் வள்ளுவனைக் கருவூர்க் கதப்பிள்ளை பாடியது.

## 381. கரும்பனூர் கிழான்

*ஊனும் உணவும் அவை திகட்டி விட்டால் இனிது எனப் பாலில் பெய்தவற்றையும், பாகில் கொண்ட இனிய பண்டங்களை யும் தந்து பருகச் செய்வான். விருந்து தந்து அருந்தச் செய்தவன்.*

*அந்நாளில் ஒருநாள் ''எம் நாட்டில் விழவு எடுக்கிறார்கள். அதனை விழைந்து காணச் செல்கிறோம்'' என்று கூற அவனுக்கு அது அதிர்ச்சி தந்தது.*

எம்பால் அன்பு மிக்க உடையவன்; பிரிவுக்கு வருந்தினான்; ஒன்று சொன்னான்; பாழ் நிலத்தில் வறிதே பெய்யும் மழைபோல யாருக்கும் பயன்படாத வாழ்க்கையுடையவர் பலர். அவரிடத்துச் சென்று பாடிப் பரிசில் பெற நினைக்காதே; உன் கை வருந்த உன் பறையைக் கொட்டாதே; அவர்கள் உன் இன்மை தீர்க்க நன்மை யாதும் செய்யார்.

''வறன் உற்ற காலத்தில் நீ எங்கிருந்தாலும் என்னை நினைத்துக் கொள். இங்கு வந்து சேர்ந்து விடு; மறக்காமல் வந்து சேர்க'' என்று சொல்லி அனுப்பினான்.

வேங்கட நாட்டவன் ;அவன் அறத்துறை அம்பி போன்றவன். படகுத் துறையிலுள்ள படகு எளியவர் செல்வம் மிக்கவர் என்று பேதம் பார்க்காமல் யாரையும் கரை சேர்க்கும். அதுபோல் உதவுபவன்; நிலைத்த கொள்கை உடையவன். கரும்பன் ஊரன் என்பானின் காதல் மகன் ஆவான்.

ஊனும் ஊணும் முனையின், இனிது எனப்,
பாலின் பெய்தவும், பாகின் கொண்டவும்,
அளவுபு கலந்து, மெல்லிது பருகி,
விருந்துறுத்து, ஆற்ற இருந்தனெமாகச்,
'சென்மோ, பெரும! எம் விழவுடை நாட்டு?' என,
யாம் தன் அறியுநமாகத், தான் பெரிது
அன்பு உடைமையின், எம் பிரிவு அஞ்சித்,
துணரியது கொளாஅவாகிப், பழம் ஊழ்த்துப்,
பயம் பகர்வு அறியா மயங்கு அரில் முது பாழ்ப்,
பெயல் பெய்தன்ன செல்வத்து ஆங்கண்,
ஈயா மன்னர் புறங்கடைத் தோன்றிச்,
சிதாஅர் வள்பின் சிதர்ப் புறத் தடாரி
ஊன் சுகிர் வலந்த தெண் கண் ஒற்றி,
விரல் விசை தவிர்க்கும் அரலை இல் பாணியின்,
இலம்பாடு அகற்றல் யாவது? புலம்பொடு
தெருமரல் உயக்கமும் தீர்க்குவெம்; அதனால்,
இரு நிலம் கூலம் பாறக், கோடை
வரு மழை முழக்கு இசைக்கு ஓடிய பின்றை,
சேயைஆயினும், இவணைஆயினும்,
இதற்கொண்டு அறிநை; வாழியோ, கிணைவ!

சிறு நனி, ஒரு வழிப் படர்க என்றோனே-எந்தை,
ஒலி வெள் அருவி வேங்கட நாடன்,
உறுவரும் சிறுவரும் ஊழ் மாறு உய்க்கும்
அறத்துறை அம்பியின் மான, மறப்பு இன்று,
இருங் கோள் ஈராப் பூட்கைக்,
கரும்பனூரான் காதல் மகனே.

திணையும் துறையும் அவை.
கரும்பனூர் கிழானை நன்னாகனார் பாடியது.

## 382. சோழன் நலங்கிள்ளி

கடலில் படை சென்று பகைவர் மிடல் சாய்த்துக் கொணரும் பொருள் உடையவன்; சோழ நாட்டுத் தலைவன்; நலங்கிள்ளியின் புகழ் பாடும் பொருநர் யாம் என்று தம்மை அறிமுகப்படுத்திக் கொண்டனர்.

அவர்கள் ''பிறரைப் பாடிப் பரிசில் பெற யாம் செல்வது இல்லை. அவனையே யாம் பாடுவோம். அவன் தாள் வாழ்க'' என்று வாழ்த்துரை நல்கி, ''நீயும் அவன்பால் செல்க; சென்றால் உமக்கு நெய்யில் பொரித்த ஊன் கலந்த சோறு தருவான்'' என்று சொல்லி அனுப்பினர்.

அதனால் யானும், உன்பால் பரிசு பெற்றுச் சென்ற பழைமையோரோடும் சேர்ந்து உன்னை அணுகியுள்ளோம். அரவு தன் தோலைக் களைந்து புது வடிவு பெறுவதுபோல யாம் எம் வறுமை நீங்கப் புதுவாழ்வு வாழ்வோம். பரிசில் நல்கி எமக்கு வரிசை செய்க.

இவ்வுலகம் அதன் ஆட்சி உனதே ஆகும். எம் கிணைப் பறை கொண்டு நீ வென்ற தேர்களின் புகழைச் செப்பி ஏர்படப் பாடுவோம்; கிணை ஒலி கேட்டு நின் பகைவர் இனைந்து நடுங்குவர். உன் புகழ் கேட்டு அவர் மாழ்குவர்.

கடற்படை அடல் கொண்டி,
மண்டுற்ற மலிர் நோன் தாள்,
தண் சோழ நாட்டுப் பொருநன்,
அலங்கு உளை அணி இவுளி

நலங்கிள்ளி நசைப் பொருநரேம்;
பிறர்ப் பாடிப் பெறல் வேண்டேம்;
அவற் பாடுதும், 'அவன் தாள் வாழிய!' என;
நெய் குய்ய ஊன் நவின்ற
பல் சோற்றான், இன் சுவைய-
நல்குரவின் பசித் துன்பு அற
என்பநின் பொருநர் பெரும அதற்கொண்டு
முன்னாள் விட்ட மூது அறி சிறாஅரும்,
யானும், ஏழ் மணி, அம் கேழ், அணி உத்திக்,
கண் கேள்விக், கவை நாவின்,
நிறன் உற்ற, அராஅப் போலும்
வறன் ஒரீஇ- வழங்கு வாய்ப்ப,
விடுமதி அத்தை, கடு மான் தோன்றல்!
நினதே, முந்நீர் உடுத்த இவ் வியன் உலகு, அறிய;
எனதே, கிடைக் காழ் அன்ன தெண் கண் மாக் கிணை
கண் அகத்து யாத்த நுண் அரிச் சிறு கோல்
எறிதொறும் நுடங்கியாங்கு, நின் பகைஞர்
கேட்டொறும் நடுங்க, ஏத்துவென்,
வென்ற தேர், பிறர் வேத்தவையானே.

திணை - அது; துறை - கடைநிலை.
சோழன் நலங்கிள்ளியைக் கோவூர் கிழார் பாடியது.

## 383. பரிசில் கடா நிலை

*கோழி கூவி எழுப்பும் விடியற்காலை பனி பெய்த நாள் என் தடாரிப் பறை கொண்டு அவன் எருதுகளை வாழ்த்திப் பாட அவன் நெடுங் கடை வாயிலில் நின்றேன்.*

*அவன் தன் மனைக்கண் என்னை அழைப்பித்து உண்ணத் தெளிவான கள்ளைத் தந்தான். என் பழைய கந்தல் ஆடை கிழியுண்டு இருந்ததால் அதனை மாற்றிப் புத்தாடை தந்தான். பாம்பின் உரித்த தோலையும், மூங்கிலின் உள் சோற்றைப் போலவும் நுண்மையான இழைகளையும் உடைய பூ வேலைப்பாடு மிக்க ஆடையைத் தந்தான்.*

*தன் அன்பு மனையாளின் அரவணைப்பில் துயின்று கொண்டிருந்த அவன் துயில் நீங்கி என்னை அழைப்பித்துச் சிறப்புகள் செய்தான். வறுமையை மறப்புறச் செய்தான். புது வாழ்க்கை அதில் பொலிவு காணச் செய்தான்.*

*அதுமுதல் பிறரைப் பாடுவதைப் புறக்கணித்தேன். அவனையே என் தலைவனாக ஏற்றேன். உயர் வாழ்வு பெற்றேன்.*

*தாய் மடிக்குப் பால் பருக அலைவுறும் ஆட்டுக்குட்டியும், நரை முகம் உடைய குரங்குக் குட்டியும் சேர்ந்து விளையாடும் மலை நாடன் அவியன். அறவழி நீங்காத மறப் பண்பினன். அவன் எமக்கு அரண் ஆவான். வெள்ளி நிலை மாறினாலும், நாடு வறன் உற்றாலும் அவன் எனக்கு அரண் தருவான்.*

ஒண்பொறிச் சேவல் எடுப்ப, ஏற்றெழுந்து,
தண் பனி உறைக்கும் புலரா ஞாங்கர்,
நுண் கோல் சிறு கிணை சிலம்ப ஒற்றி,
நெடுங் கடை நின்று, பகடு பல வாழ்த்தித்,
தன் புகழ் ஏத்தினெனாக, ஊன் புலந்து,
அருங்கடி வியன்நகர்க் குறுகல் வேண்டிக்,
கூம்பு விடு மென் பிணி அவிழ்த்த ஆம்பல்
தேம் பாய் உள்ள தம் கமழ் மடர் உணப்,
பாம்பு உரி அன்ன வடிவின, காம்பின்
கழை படு சொலியின் இழை அணி வாரா,
ஒண் பூங் கலிங்கம் உடீஇ, நுண் பூண்
வசிந்து வாங்கு நுசுப்பின், அவ் வாங்கு உந்திக்,
கற்புடை மடந்தை தன் புறம் புல்ல,
எற் பெயர்ந்த நோக்கி .............
............... அதற் கொண்டு,
அழித்துப் பிறந்தனெனாகி, அவ் வழிப்,
பிறர், பாடு புகழ் பாடிப் படர்பு அறியேனே;
குறு முலைக்கு அலமரும் பால் ஆர் வெண் மறி,
நரை முக ஊகமொடு, உகளும், வரையமல்.....
........குன்று பல கெழீஇய
கான் கெழு நாடன், கடுந் தேர் அவியன், என
ஒருவனை உடையேன்மன்னே, யானே;
அறான்; எவன் பரிகோ, வெள்ளியது நிலையே?

திணையும் துறையும் அவை.

....மாறோக்கத்து நப்பசலையார் (அவியனைப்) பாடியது.

# 384. கரும்பனூர் கிழான்

நன்செய் நிலமாகிய மருத வயற்கண் தன் இனத்துடன் மீன்களை மேய்ந்து வஞ்சி மரத்தின் கிளையில் நாரை உறங்கும்; முற்றிய கரும்பின் பூக்களைக் கடித்துத் தின்னும்.

புன்செய் நிலமாகிய முல்லை நிலத்தில் வரகின் அடிப்பகுதியில் எலிகள் பதுங்கி இருக்க அவற்றைக் குறும்பூழ்ப் பறவை பிடிக்கத் தாவும்; அதனால் முயல் அஞ்சிச் சிதறி ஓட அருகில் உள்ள இருப்பைப் பூ உதிர்கின்றது.

விழாக்கள் எதுவும் இல்லையாயினும் உழவர்தம் உண் கலத்தில் கெடிற்று மீனாகிய உணவும், இனிய கள்ளும் நிறைந்து கிடக்கும். அத்தகைய வளம்மிக்க கரும்பனூரரின் கிணைஞர் யாம்.

நெல் என்ன! பொன் என்ன! பருகும் கள் என்ன! அவை என்னிடம் குறையும்போது அவன் அவை தந்து நிரப்புவான்.

நிணம் மிக்க கொழும் சோற்றினோடு நீர் நாண நெய் வழங்குவான். உலகம் அவனைப் புகழும்படி ஈகை மிக்கவன்.

அவன் என்னைப் போற்றிக் காத்தான். அவன் இருக்கும் வரை யாம் இழப்பது யாதும் இல்லை; குறைவில்லாத வாழ்க்கை எமது.

அன்னோனைப் புரவலனாக யான் பெற்று உள்ளேன். அவன் இருக்கும் வரை வெள்ளி நிலை மாறினாலும் எந்த வறட்சியும் என்னை மருளச் செய்யாது.

உண்ணாது சென்ற நாட்கள் பல; அவை சென்று கழிந்து விட்டன. இன்று கொழுவிய உணவு உண்டு மகிழ்ந்து வாழும் நாட்கள் அமைந்து விட்டன.

> மென்பாலான் உடன் அணைஇ,
> வஞ்சிக் கோட்டு உறங்கு நாரை
> அறைக் கரும்பின் பூ அருந்தும்;
> வன்பாலான் கருங் கால் வரகின்
> அரிகால் கருப்பை அலைக்கும் பூழின்
> அம் கண் குறு முயல் வெருவ, அயல
> கருங் கோட்டு இருப்பைப் பூ உறைக்குந்து;

விழவு இன்றாயினும், உழவர் மண்டை
இருங் கெடிற்று மிசையொடு பூங் கள் வைகுந்து;
கரும்பன் ஊரன் கிணையேம், பெரும!
நெல் என்னா, பொன் என்னா,
கனற்றக் கொண்ட நறவு என்னா,
மனை மன்னா, அவை பலவும்
யான் தண்டவும், தான் தண்டான்,
நிணம் பெருத்த கொழுஞ் சோற்றிடை,
மண் நாணப் புகழ் வேட்டு,
நீர் நாண நெய் வழங்கிப்,
புரந்தோன்; எந்தை; யாம் எவன்தொலைவதை
அன்னோனை உடையேம் என்ப; இனி வறட்கு
யாண்டு நிற்க வெள்ளி, மாண்தக
உண்ட நன் கலம் பெய்து நுடக்கவும்,
தின்ற நண் பல் ஊன் தோண்டவும்,
வந்த வைகல் அல்லது,
சென்ற எல்லைச் செலவு அறியேனே.

திணையும் துறையும் அவை.

கரும்பனூர் கிழானைப் புறத்திணை நன்னாகனார் பாடியது.

## 385. அம்பர் கிழான் அருவந்தை

*வெள்ளி முளைத்தது; பறவைகள் ஆர்த்தன; விடியல் புலர்ந்தது.*

*பாடுவது என் தொழில்; பிறர் கடைவாயில் நாடுவது வழக்கம். எருதினை வாழ்த்தி அவன் கடைவாயில் நின்றது இல்லை. எங்கோ யாரையோ பாடிக் கொண்டிருந்தேன்.*

*அது அறிந்தான்; என்னைத் தெரிந்தான்; என் வறுமையைக் களைந்தான்.*

*என் தடாரிப்பறை கேட்டு யான் இருக்கும் இடம் தேடி வந்து என் கந்தல் ஆடையை மாற்றிக் கவின் மிக்க புதிய ஆடை தந்து உடுத்திக் கொள்ளச் செய்தான். என் பசியைக் களைந்தான்.*

*காவிரி பாயும் நெல் விளையும் கழனிகளை உடைய அம்பர் என்னும் ஊருக்குத் தலைவன். அருவந்தை அவன் வாழ்க! வேங்கட*

மலையில் விழும் மழைத்துளியினும் பல ஆண்டுகள் வாழ்வானாக!

வெள்ளி தோன்றப், புள்ளுக் குரல் இயம்பப்,
புலரி விடியல் பகடு பல வாழ்த்தித்,
தன் கடைத் தோன்றினும் இலனே; பிறன் கடை,
அகன்கண் தடாரிப் பாடக் கேட்டருளி,
வறன் யான் நீங்கல் வேண்டி, என் அரை
நிலம் தினச் சிதைந்த சிதாஅர் களைந்து,
வெளியது உடீஇ, என் பசி களைந்தோனே;
காவிரி அணையும் தாழ் நீர்ப் படப்பை
நெல் விளை கழனி அம்பர் கிழவோன்,
நல் அருவந்தை, வாழியர்!-புல்லிய
வேங்கட விறல் வரைப் பட்ட
ஓங்கல் வானத்து உறையினும் பலவே!

திணை - அது; துறை - வாழ்த்தியல்.
அம்பர் கிழான் அருவந்தையைக் கல்லாடனார் பாடியது.

## 386. சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன்

சுடச்சுட வறுவலையும், சூட்டிறைச்சியையும், பசுவின் பாலையும் உண்ணத் தருவான். சூடாக உண்டதனால் வியர்வை துளிக்குமே அன்றி உழைத்து வியர்வை கண்டது இல்லை. வேண்டிய அளவு உண்ணத் தருவான். இது அவன் ஈகைச் சிறப்பு.

நெல் வயலுக்குக் கரும்பு வேலியாக அமைய எங்கும் நீர்ப் பூக்கள் பூத்துக் கிடக்கும் மருத வளம் மிக்கது.

புல்வெளி உடைய முல்லை நிலம் பசுக்களும் அவற்றை மேய்வாரும் நிரம்பிக் கிடக்கும். மற்றும் அங்கு வில் ஏந்திய வீரரும் காவல் காப்பர்.

கடலில் வரும் கலன்களை எண்ணுவோர் கடற்கரையில் உள்ள புன்னைக் கிளைகளை அசைத்து விளையாடிக் கொண்டிருப்பர்.

உப்பங்கழிகளில் உப்பு வாணிபம் செய்வோர் அவற்றை மலை நாட்டுக்குக் கொண்டு செல்வர். அத்தகைய உமணர் பேரொலி ஒலித்துக் கொண்டிருக்கும். அத்தகைய வளம் மிக்க நல்ல நாட்டுப் பொருநர் யாம்.

போர் செய்பவரையும் பொருநர் என்று கூறுவர்; நாங்கள் போர்க்களம் காணாத பொருநர்கள்.

வெள்ளி திசைகள் மாறலாம்; அது கிழக்கில் இருந்து மேற்கே செல்லலாம்; மேற்கே இருந்து கிழக்கு செல்லலாம்; வடக்கிலிருந்து தெற்கே செல்லலாம்; தெற்கிலேயே நிலைத்து நிற்கலாம். இதனால் நன்மை தீமைகள் உள்ளன என்று கணித்துக் கூறுவோர் உளர். அதைப் பற்றி யான் கவலைப்படத் தேவையில்லை. எனக்கு வாழ்வும் வளமும் அளிக்க என் தலைவன் உளன். அவன் நீடுழி வாழ்வானாக.

நெடு நீர நிறை கயத்துப்
படு மாரித் துளி போல,
நெய் துள்ளிய வறை முகக்கவும்,
சூடு கிழித்து வாடுஊன் மிசையவும்,
ஊன் கொண்ட வெண் மண்டை
ஆன் பயத்தான் முற்று அழிப்பவும்,
வெய்து உண்ட வியர்ப்பு அல்லது,
செய் தொழிலான் வியர்ப்பு அறியாமை
ஈத்தோன், எந்தை, இசை தனது ஆக;
வயலே, நெல்லின் வேலி நீடிய கரும்பின்
பாத்திப் பன் மலர்ப் பூத் ததும்பின;
புறவே, புல் அருந்து பல் ஆயத்தான்,
வில் இருந்த வெங் குறும்பின்று;
கடலே, கால் தந்த கலன் எண்ணுவோர்
கானற் புன்னைச் சினை நிலைக்குந்து;
கழியே, சிறு வெள் உப்பின் கொள்ளை சாற்றிப்,
பெருங் கல் நல் நாட்டு உமண் ஒலிக்குந்து;
அன்ன நல் நாட்டுப் பொருநம், யாமே;
பொரா அப் பொருநரேம்;
குண திசை நின்று குடமுதல் செலினும்,
குட திசை நின்று குணமுதல் செலினும்,

வட திசை நின்று தென்வயின் செலினும்,
தென் திசை நின்று குறுகாது நீடினும்,
யாண்டும் நிற்க, வெள்ளி; யாம்
வேண்டியது உணர்ந்தோன் தாள் வாழியவே!

திணையும் துறையும் அவை.

சோழன் குளமுற்றுத்துத் துஞ்சிய கிள்ளிவளவனைக் கோவூர் கிழார் பாடியது.

# 387. சேரமான் சிக்கற் பள்ளித் துஞ்சிய செல்வக் கடுங்கோ வாழியாதன்

*வயல்ஆமையின் வெண்மையான வயிறு போன்ற மாக்கிணை இயக்கி அவன் வெற்றியையும், அவன் தரும் ஈகையையும் சிறப் பித்துப் பாடுவேன் ஆயின் பாடுகின்ற என் தகுதியை நோக்காமல் தன் தகுதி நோக்கி, யானை, தேர், குதிரை, பசுக்கள், கழனிகள் இவற்றைத் தந்து சிறப்பிக்கின்றான்.*

*இவற்றைக் காணும்போது இவை கனவோ நனவோ என்று வியப்புத் தோன்றுகிறது. செல்வக் கடுங்கோ வாழியாதன் என்று அவன் பெயரைக் கூறினாலே அவன் பகைவரும் எனக்கு வழி விடுகின்றனர்.*

*வஞ்சியின் புறமதில் அலைக்கும் பொருநை மணலினும், அது பாயும் கழனிகளில் விளையும் நெல்லினும் பல ஆண்டுகள் வாழ்வானாக.*

வள் உகிர வயல் ஆமை
வெள் அகடு கண்டன்ன,
வீங்கு விசிப் புதுப் போர்வைத்
தெண் கண் மாக் கிணை இயக்கி, 'என்றும்
மாறு கொண்டோர் மதில் இடறி,
நீறு ஆடிய நறுங் கவுள,
பூம் பொறிப் பணை எருத்தின,
வேறு வேறு பரந்து இயங்கி,
வேந்துடை மிளை அயல் பரக்கும்
ஏந்து கோட்டு இரும் பிணர்த் தடக்கை,
திருந்து தொழில் பல பகடு

பகைப் புல மன்னர் பணிதிறை தந்து, நின்
நகைப் புலவாணர் நல்குரவு அகற்றி,
மிகப் பொலியர், தன் சேவடி அத்தை!' என்று,
யான் இசைப்பின், நனி நன்று எனாப்,
பல பிற வாழ்த்த இருந்தோர் தன்கோன்.....
மருவ இன் நகர் அகன் கடைத் தலைத்
திருந்து கழற் சேவடி குறுகல் வேண்டி,
வென்று இரங்கும் விறல் முரசினோன்,
என் சிறுமையின், இழித்து நோக்கான்,
தன் பெருமையின் தகவு நோக்கிக்,
குன்று உறழ்ந்த களிறு என்கோ?
கொய் உளைய மா என்கோ?
மன்று நிறையும் நிரை என்கோ?
மனைக் களமரொடு களம் என்கோ?
ஆங்கு அவை, கனவு என மருள, வல்லே, நனவின்
நல்கியோனே, நசைசால் தோன்றல்,
ஊழி வாழி, பூழியர் பெரு மகன்!
பிணர் மருப்பு யானைச் செரு மிகு நோன் தாள்
செல்வக் கடுங்கோ வாழியாதன்
ஒன்னாத் தெவ்வர் உயர்குடை பணித்து, இவண்
விடுவர் மாதோ நெடிதே-நில்லாப்
புல் இலை வஞ்சிப் புற மதில் அலைக்கும்
கல்லென் பொருநை மணலினும், ஆங்கண்
பல் ஊர் சுற்றிய கழனி
எல்லாம் விளையும் நெல்லினும் பலவே.

திணையும் துறையும் அவை.

சேரமான் சிக்கற்பள்ளித் துஞ்சிய செல்வக்கடுங்கோவாழியாதனைக் குண்டுகட் பாலியாதனார் பாடியது.

## 388. சிறுகுடி கிழான் பண்ணன்

*வெள்ளியாகிய நட்சத்திரம் தென் புலத்தில் தங்க அதனால் விளைவு குறைந்து வாடிய காலத்தில் சிறுகுடி என்னும் சிற்றூரின் தலைவன் பண்ணனை அடைந்து கிணைமகன் ஒருவன் தன் நிலையை எடுத்துரைத்தனன்! ஆக அந்நிலையே அவன் இடுக் கண்கள் அவனை விட்டு நீங்கத் தன்னிடம் உள்ள பொருள்களைத்*

தந்தவன். புலவர்கள் பாடும் புகழ் உடையவன் அவன். இத்தகைய பண்ணனின் சிறப்புகளை யான் கூற கடமைப்பட்டுள்ளேன்.

பண்ணனுக்கு உடைமையாகிய உழுதொழில் செய்யும் எருதுகளையும் எருமைகளையும் யான் பாடேன் ஆயின் நன்றி கொன்றவன் ஆவேன்; பாண்டியன் நன்மதிப்பை இழக்கும் இழிவினை என் சுற்றத்தினர் பெற்றவர் ஆகட்டும். அவன் அவர்களுக்கு அருள் செய்யாதவன் ஆகுக.

வெள்ளி தென் புலத்து உறைய, விளை வயல்,
பள்ளம், வாடிய பயன் இல் காலை,
இரும் பறைக் கிணைமகன் சென்றவன், பெரும் பெயர்
சிறுகுடி கிழான் பண்ணன் பொருந்தித்,
தன் நிலை அறியுநனாக, அந் நிலை,
இடுக்கண் இரியல் போக, உடைய
கொடுத்தோன் எந்தை, கொடை மேந் தொன்றல்,
நுண்ணூல் தடக்கையின் ஆனாமருப்பாக,
வெல்லும் வாய்மொழிப் புல்லுடை விளை நிலம்
பெயர்க்கும் பண்ணற் கேட்டிரோ, அவன்,
வினைப் பகடு ஏற்ற மேழி கிணைத் தொடா,
நாள்தொறும் பாடேன்ஆயின், ஆனா
மணி கிளர் முன்றில் தென்னவன் மருகன்,
பிணி முரசு இரங்கும் பீடு கெழு தானை
அண்ணல் யானை வழுதி,
கண்மாறிலியர் என் பெருங் கிளைப் புரவே!

திணை - அது; துறை - இயன்மொழி.

சிறுகுடி கிழான் பண்ணனை மதுரை அளக்கர் ஞாழார் மகனார் மள்ளனார் பாடியது.

## 389. நல்லேர் முதியன்

கோடை நீடுகிறது; ஓடை வறன் உறுகிறது. நீரை உடைய நுங்கு கல்லாகிறது; காடுகளில் வேப்பங்காய் உலர்கின்றது; கயங்கள் களியாகச் சேறுபடுகின்றன.

இத்தகைய கோடைக் காலத்திலும், வெள்ளி தெற்கே சென்றாலும் பொருள் நிலை குறையுமாயின் எம்மை நினைக்க; வருக என்று கூறி வேண்டியது அளித்தான் ஆதனுங்கன்.

இன்றே சென்று காண வேண்டும் என்று புறப்பட்டால் அவனை எளிதில் அடைந்து அவனைச் சேர முடியாது; நெடும் பயணம் தேவைப்பட்டது.

சென்று விட்டாலோ குன்று அனைய செல்வம் தந்து சிறப்பிப்பான்; எளிதில் அவனைக் காண இயலும்; எதுவும் பெறலாம்.

பகைவன் நாட்டில் தாய் யானைகள் வருந்தக் கன்றுகளைப் பிடித்து வந்து மன்றுகளில் கட்டி வைக்கும் சிறப்பு உடையவன்; குன்றுகள் மிக்க வேங்கட நாடன் ஆவான்!

அத்தகைய உன் முன்னோன் ஆதனங்கன் போல் நெஞ்சு உரனும் எழில் நலமும் உடைய முதியனே நீ எம் பசி தீர்த்து நின் கலங்கள் தந்து சிறப்பிப்பாயாக; உம் மனைவி, மக்கள் பொலிவுடன் திகழ்வாராக! சாப்பறை உன் வீட்டு அறைமுன் என்றும் கேளாது ஒழிவதாக!

'நீர் நுங்கின் கண் வலிப்பக்,
கான வேம்பின் காய் திரங்கக்,
கயம் களியும் கோடைஆயினும்,
ஏலா வெண்பொன் போகுறு காலை,
எம்மும் உள்ளுமோ பிள்ளைஅம் பொருந!'
என்று ஈத்தனனே, இசைசால் நெடுந்தகை;
இன்று சென்று எய்தும் வழியனும் அல்லன்;
செலினே, காணா வழியனும் அல்லன்;
புன் தலை மடப் பிடி இனைய, கன்று தந்து,
குன்றக நல் ஊர் மன்றத்துப் பிணிக்கும்
கல் இழி அருவி வேங்கடம் கிழவோன்,
செல்வுழி எழாஅ நல் ஏர் முதியன்!
ஆதனுங்கன் போல, நீயும்
பசித்த ஒக்கல் பழங்கண் வீட,
வீறுசால் நன் கலம் நல்குமதி, பெரும!
ஐது 'அகல் அல்குல் மகளிர்
நெய்தல் கேளன்மார், நெடுங் கடையானே!

திணையும் துறையும் அவை.
நல்லேர் முதியனைக் கள்ளில் ஆத்திரையனார் பாடியது.

## 390. அதியமான் நெடுமான் அஞ்சி

அறநெஞ்சினர் ஆகிய ஆயர்களும், மற வாழ்க்கையர் ஆகிய சிறு குடியினரும் செருந்திமிக்க மன்றத்தில் விழவு அயர்வர்.

ஆரவாரம் மிக்க அம்மன்றம் போன்றது அதியமான் நெடுமுற்றம். எப்பொழுதும் கலகலப்பாக உள்ளது. ஆர்வலர் வர இயலுமே அல்லாமல் பிற நாட்டுக் காவலர்கள் அணுகுதற்கு இயலாதது. கனவிலும் அங்கே புகமுடியும் என்று அவர்கள் கருதமுடியாது.

அந்த அரண்மனையின் மாடங்களில் எதிர் ஒலிக்கப் பல நாள் சென்று பாடவில்லை; ஓரே ஒரு நாள் என் தடாரிப்பறை ஒலித்துப் பாடி நின்றேன். உடனே அவன் வந்து என்னை நாடி எனக்குப் புத்தாடை தந்து புதுப்பித்தான். பாசி அன்ன உடையைக் களைந்து பகன்றைப் பூப் போன்ற புதிய வெள்ளிய ஆடை தந்தான்.

மகிழ்ச்சி தரக் கள் தந்தான். பசீ தீர்க்க அமுதமான சுவைமிக்க உணவு தந்தான்; வெள்ளி வெண்கலத்தில் பெய்து தந்தான்; மற்றும் என் சுற்றத்தினருக்குச் செந்நெல் குவியல் தந்து அவர்களை வளமுடையவர்கள் ஆக்கினான்.

மழையைப் போல வாரி வழங்கும் வள்ளல் அதியமான் என்பதைப் பலர் அறியாது இருக்கின்றனர். வறுமையால் வாடுபவர் அவன் பெருமையை அறியாதவராக உள்ளனர். அவ்வாய்ப்பை அவர்கள் பெறாமல் இருக்கின்றனர்.

அறவை நெஞ்சத்து ஆயர், வளரும்
மறவை நெஞ்சத்து ஆயிலாளர்,
அரும்பு அலர் செருந்தி நெடுங் கால் மலர் கமழ்,
விழவுஅணி வியன் களம் அன்ன முற்றத்து,
ஆர்வலர் குறுகின் அல்லது, காவலர்
கனவினும் குறுகாக் கடியுடை வியல் நகர்,
மலைக் கணத்து அன்ன மாடம் சிலம்ப, என்
அரிக் குரல் தடாரி இரிய ஒற்றிப்
பாடி நின்ற பல் நாள் அன்றியும்,
சென்ற ஞான்றைச் சென்று படர் இரவின்
வந்ததற்கொண்டு, 'நெடுங் கடை நின்ற

புன் தலைப் பொருநன் அளியன்தான்' எனத்,
தன்னுழைக் குறுகல் வேண்டி, என் அரை
முது நீர்ப் பாசி அன்ன உடை களைந்து,
திரு மலர் அன்ன புது மடிக் கொளீஇ,
மகிழ் தரல் மரபின் மட்டே அன்றியும்,
அமிழ்து அன மரபின் ஊன் துவை அடிசில்
வெள்ளி வெண் கலத்து ஊட்டல் அன்றி,
முன் ஊர்ப் பொதியில் சேர்ந்த மென் நடை
இரும் பேர் ஒக்கல் பெரும் புலம்பு அகற்ற,
அகடு நனை வேங்கை வீ கண்டன்ன
பகடு தரு செந்நெல் போரொடு நல்கிக்,
'கொண்டி பெறுக!' என்றோனே - உண் துறை
மலை அலர் அணியும் தலை நீர் நாடன்;
கண்டாற்கொண்டு மனை திருந்து அடி வாழ்த்தி,

............................

வான் அறியல என்பர்அடு பசி போக்கல்;
அண்ணல் யானை வேந்தர்
உண்மையோ, அறியலர் காண்பு அறியலரே!

திணையும் துறையும் அவை.

அதியமான் நெடுமான் அஞ்சியை ஔவையார் பாடியது.

# 391. பொறையாற்றுக் கிழான்

நெல் வளம்மிக்குத் திகழ்ந்த நாடு வேங்கடம்; அங்கு ஊனும் சோறும் கலந்த உணவும், கள்ளும் அவ்வூரன் தரப் பெற்று உண்டு மகிழ்ந்தோம். அது வற்கடம் உற்றதால் பிற தடம் தேடும் முயற்சியில் உள்ளோம்.

எம் சுற்றத்தினரோடு உன்னை நாடி இங்கு வந்துள்ளோம். ''முன்னம் வந்தவர்; அளியர்; கிணைப்பொருநர்'' என்று எங்கள்பால் இரக்கம் காட்டி உன்பால் எங்களை அறிமுகம் செய்தனர். அதனால் உன்னைக் காண வந்திருக்கிறேன்.

கழியில் உள்ள மீனை அருந்தப் புதா என்னும் பறவை வந்து தங்கும் வளம்மிக்க ஊர் உனது.

*நீ நின் நேயம் மிக்க காதலியுடன் இன்துயில் பெறுக; இன்புற்று வாழ்க. உன் ஊரிலுள்ள வயல்கள் வேலி ஆயிரம் விளைக! இவையே எம் வாழ்த்துகள்.*

தண் துளி பல பொழிந்து எழிலி இசைக்கும்
விண்டு அனைய விண் தோய் பிறங்கல்
முகடு உயர்ந்த நெல்லின் மகிழ் வரப்
பகடு தரு பெரு வளம் வாழ்த்திப், பெற்ற
திருந்தா மூரி பரந்து படக் கெண்டி,
அரியல் ஆர்கையர் உண்டு இனிது உவக்கும்
வேங்கட வரைப்பின் வட புலம் பசித்தென,
ஈங்கு வந்து இறுத்த என் இரும் பேர் ஒக்கல்
தீர்கை விடுக்கும் பண்பின் முதுகுடி
நனந்தலை மூதூர் வினவலின்,
'முன்னும் வந்தோன் மருங்கிலன், இன்னும்
அளியன் ஆகலின், பொருநன் இவன்' என,
நின் உணர்ந்து அறியுநர் என் உணர்ந்து கூற,
காண்கு வந்திசின், பெரும! மாண்டக
இருநீர் பெருங் சுழி நுழைமீன் அருந்தும்
துதைந்த தூவி அம் புதா அம் சேக்கும்
ததைந்த புனல் நின் வெய்யோளொடு,
இன் துயில் பெறுகதில் நீயே வளஞ்சால்
துளி பதன் அறிந்து பொழிய,
வேலி ஆயிரம் விளைக, நின் வயலே!

திணை - அது; துறை - கடைநிலை.

பொறையாற்று கிழானைக் கல்லாடானார் பாடியது.

## 392. அதியமான் பொகுட்டு எழினி

*அதியர்கோன் மகன் பொகுட்டு எழினி அவன் வீட்டுக் கடைவாயிலில் விடியற்காலையில் நின்று தடாரிப் பறை கொண்டு அவன் வெற்றிச் சிறப்புகளைப் பாடினேன் 'வாளேர் உழவனே வாழ்க' என்று ஏத்திப் பாடினேன்.*

*அங்கு நின்றிருந்த என் வியர்வை நனைந்த பாசி வேர் போன்ற கிழிச்சல் ஆடையை நீக்கி அழகிய கரை இட்ட*

*ஆடையைத் தந்து அணியச் செய்தான். தேள் கடுப்புப் போன்ற நாள்பட்டுப் புளித்த கள்ளையும், பொன் கலத்தில் உணவும் தந்து எம்மைச் சிறப்பித்தான்.*

*கடல் கடந்த நாட்டில் இருந்து தேவர் தம் அமுதலம் போன்று இனிக்கும் கரும்பினைக் கொண்டு தந்த முன்னோர்கள் வழி வந்த தலைவன் அவன் வாழ்க!*

மதி ஏர் வெண் குடை அதியர் கோமான்,
கொடும் பூண் எழினி, நெடுங் கடை நின்று, யான்
பசலை நிலவின் பனி படு விடியல்,
பொரு களிற்று அடி வழி அன்ன, என் கை
ஒரு கண் மாக் கிணை ஒற்றுபு கொடாஅ,
'உரு கெழு மன்னர் ஆர் எயில் கடந்து,
நிணம் படு குருதிப் பெரும் பாட்டு ஈரத்து
அணங்குடை மரபின் இருங் களந்தோறும்,
வெள் வாய்க் கழுதைப் புல் இனம் பூட்டி,
வெள்ளை வரகும் கொள்ளும் வித்தும்
வைகல் உழவ! வாழிய பெரிது!' எனச்
சென்று யான் நின்றனெனாக, அன்றே,
ஊர் உண் கேணிப் பகட்டு இலைப் பாசி
வேர் புரை சிதாஅர் நீக்கி, நேர் கரை
நுண் நூல் கலிங்கம் உடீஇ, 'உண்ம்' எனத்
தேட் கடுப்பு அன்ன நாட்படு தேறல்
கோள்மீன் அன்ன பொலங் கலத்து அளைஇ.
ஊண்முறை ஈத்தல் அன்றியும், கோள்முறை
விருந்து இறை நல்கியோனே—அந்தரத்து
அரும் பெறல் அமிழ்தம் அன்ன
கரும்பு இவண் தந்தோன் பெரும் பிறங்கடையே.

திணையும் துறையும் அவை.

அதியமான் நெடுமான் அஞ்சி மகன் பொகுட்டெழினியை ஔவையார் பாடியது.

## 393. சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன்

*''பசி''என்பது அறியாத வளமான வாழ்க்கையள்; பழகியவள்; இளையள்; என் வாழ்க்கைத் துணைவி. வறுமையால் அவள் அறிவும் மழுங்கி விட்டது.*

*உழவர் தம் வீட்டுப் படிகள் ஏறிப் பல படப் பாடினும் பரிசு ஏதும் பெறாமல் திரும்பி வந்ததுதான் மிச்சம்.*

*உலர்ந்து கிடக்கும் பாத்திரம் மறுபடியும் மலர்ந்து விளங்க வழி யாது? ஈவோர் யார் என்று வினவிப் பல நாடுகளும் சுற்றித் திரிந்து இறுதியில் அது நீதான் என்று அறிந்தேன்.*

*எம் சுற்றத்தவர் உண்டு பலநாள் ஆயின. அவர்கள் கை நனைத்து உண்டது மறந்து விட்டது. அவர்களுக்குப் பஞ்சுபோன்ற நிணங்கலந்த ஊன் சோறு நல்குக.*

*அரவின் குட்டி பிறந்து வெளி வருகிறது; அதன் நாவைப் போலச் சிதர்ந்து கிடக்கும் கிழிச்சல் ஆடை; அதனைக் கழித்து விட்டுப் பகன்றை மலர் போன்ற பட்டு உடை தருக. மிக்க செல்வமும் உன்பால் உள்ளது. எனக்கு உதவுக.*

*மாரி பொய்த்தாலும் வாரி குன்றாத கவின் மிக்க காவரி பாயும் நாடன் நீ. வளவனே நீ வாழ்க எனப் பாடுவோம் யாம்.*

பதிமுதல் பழகாப் பழங்கண் வாழ்க்கைக்
குறு நெடுந் துணையொடு கூர்மை வீதலின்,
குடி முறை பாடி, ஒய்யென வருந்தி,
அடல் நசை மறந்த வெங் குழிசி மலர்க்கும்
கடன் அறியாளர் பிற நாட்டு இன்மையின்,
'வள்ளன்மையின் எம் வரைவோர் யார்?' என,
உள்ளிய உள்ளமொடு உலை நசை துணையா,
உலகம் எல்லாம் ஒருபால் பட்டென,
மலர் தார் அண்ணல் நின் நல் இசை உள்ளி,
ஈர்ங்கை மறந்த என் இரும் பேர் ஒக்கல்
கூர்ந்த எவ்வம் விடக், கொழு நிணம் கிழிப்பக்,
கோடைப் பருத்தி வீடு நிறை பெய்த
மூடைப் பண்டம் மிடை நிறைந்தன்ன,
வெண் நிண மூரி அருள, நாள் உற
ஈன்ற அரவின் நா உருக் கடுக்கும் என்
தொன்று படு சிதாஅர் துவர நீக்கி,
போது விரி பகன்றைப் புது மலர் அன்ன,
அகன்று மடி கலிங்கம் உடீஇச், செல்வமும்,

கேடு இன்று நல்குமதி, பெரும! மாசு இல்
மதி புரை மாக் கிணை தெளிர்ப்ப ஒற்றி,
ஆடுமகள் ஒல்கல் ஒப்ப வாடி,
'கோடை ஆயினும், கோடா ஒழுக்கத்துக்
காவிரி புரக்கும் நல் நாட்டுப் பொருந!
வாய் வாள் வளவன்! வாழ்க!' எனப்
பீடு கெழு நோன் தாள் பாடுகம் பலவே.

திணையும் துறையும் அவை.

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனை நல்லிறையனார் பாடியது.

## 394. சோழிய ஏனாதி திருக்குட்டுவன்

*சேரன் குட்டுவன் அவன் வள்ளியன் என்று வாய்மொழிப் புலவர்கள் புகழ்ந்து கூறுவர். அதைக் கேட்டு அவனை நினைத்துக் கொண்டு அவனிடம் செல்வதைப் பற்றிச் சிறிது சிந்திப்பீராக!*

*யானும் அவன் பேரிசை கேட்டு விடியற்பொழுது என் தடாரிப் பறை கொண்டு இசைத்து அவன் தந்தையின் புகழைப் பாடி நின்றேன். வஞ்சித் துறையில் அவன் விஞ்சிய வெற்றிகளைப் பாடினேன். அது கேட்டு மகிழ்வுடன் என்னை அணுகிச் சிறப்புச் செய்ய வேண்டிப் போர்க் களிறு ஒன்று பரிசிலாகத் தந்தான்.*

*சினமும் களிப்பும் மிக்க அது நமக்குப் பொருந்தாது என்று அதனை மறுக்க அவன் அது சிறிது என்று யான் நினைத்ததாகக் கருதி மேலும் பெருங்களிறு ஒன்றனைக் கொண்டு வந்து நிறுத்தினான்.*

*போதும் இந்த அனுபவம்; இனி என் சுற்றம் வறுமையில் மிக்கு உழன்றாலும் குன்றுகள் மிக்க நாடுடையவனை உள்ளுவது இனி இல்லை என்று உறுதி கொண்டு உள்ளேன்.*

சிலை உலாய் நிமிர்ந்த சாந்து படு மார்பின்,
ஒலி கதிர்க் கழனி வெண்குடைக் கிழவோன்,
வலி துஞ்சு தடக் கை வாய் வாட் குட்டுவன்,
வள்ளியன் ஆதல் வையகம் புகழினும்,
உள்ளல் ஓம்புமின், உயர் மொழிப் புலவீர்!
யானும், இருள் நிலாக் கழிந்த பகல் செய் வைகறை,

ஒரு கண் மாக் கிணை தெளிர்ப்ப ஒற்றி,
பாடு இமிழ் முரசின் இயல் தேர்த் தந்தை
வாடா வஞ்சி பாடினேனாக,
அகம் மலி உவகையொடு அணுகல் வேண்டிக்,
கொன்று சினம் தணியாப் புலவு நாறு மருப்பின்
வெஞ் சின வேழம் நல்கினன்; அஞ்சி
யான் அது பெயர்த்தனெனாகத், தான் அது
சிறிது என உணர்ந்தமை நாணிப், பிறிதும் ஓர்
பெருங் களிறு நல்கியோனே; அதற்கொண்டு,
இரும் பேர் ஒக்கல் பெரும் புலம்புறினும்,
'துன் அரும் பரிசில் தரும்' என,
என்றும் செல்லேன், அவன் குன்று கெழு நாட்டே.

திணையும் துறையும் அவை.

சோழிய ஏனாதி திருக்குட்டுவனைக் கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக் குமரனார் பாடியது.

# 395. சோழ நாட்டுப் பிடவூர் கிழான் மகன் பெருஞ்சாத்தன்

*உழவர்கள் தம் மருத நிலத்தை விட்டு முல்லை நிலத்துக்குச் சென்று தம் எருதுகளை மேய விடுவர். அங்குக் குறுமுயலின் இறைச்சியையும், வாளை மீன் அவியலையும் பழஞ்சோற்றோடு உண்பர்; பின்பு புதரிடை மலர்ந்த தளவமுல்லையைத் தலையில் சூடிக் கொள்வர்; கிணைப் பறை கொண்டு கதிர்களை மேயவரும் பறவைகளை ஓட்டுவர்; சோற்றினின்று வடித்து எடுக்கப்பட்ட கள்ளைக் குடித்து மகிழ்வர்.*

*மனையில் வாழும் கோழி குரல் எழுப்பினால் காட்டுக் கோழியும் நீர்க் கோழியும் குரல் கொடுக்கும். மகளிர் புனத்தில் படியும் கிளிகளை ஓட்டக் குரல் எழுப்பச் சேற்று நிலத்தில் உள்ள பறவைகள் பறந்து ஓடுகின்றன.*

*இத்தகைய நல்வளங்கள் மிக்க ஊர் தித்தனின் உறந்தை சோழ நாட்டில் உள்ளது. அதன் கிழக்கே உள்ள வேண்மான் என்பானுக்கு உரிய பிடவூரில் உள்ள சாத்தன் என்பான் அவனைப் பாடும் கிணைஞர் யாம்.*

தடாரிப் பறை கொண்டு அவன் கடைநிலை நின்ற என்னைக் கண்டதுதான் தாமதம்; சொற்கள் அதிகம் பேசிற்றிலன்; அருங்கலம் தந்தான்; அதோடு நின்றான் இல்லை.

என்னைத் தன் மனைவிபால் அறிமுகம் செய்து என்னையும் தன்னைப்போல் மதிக்க; போற்றுக'' என்று கூறினான்.

என்னையும் அவன் குடும்பத்துள் ஒருவனாக வைத்துப் போற்றினான். அதனை யான் எப்படி மறப்பது? அவன் ஆதரவு எனக்குக் கிடைத்து விட்டது. அவனைத்தான் நினைப்பேன்; மற்றவரை மறப்பேன்.

ஞாலம் வெப்பம் பெரிது அடைந்தாலும், வானத்தில் எரி தோன்றினாலும், குளமீனும் அதில் உள்ள மலர்த் தாள்களும் புகை கொண்டாலும், கொக்கின் நகம் போலும் நெல்லின் சோறும் பொறிக் கறியும் கொழுவிய இறைச்சியும் உண்டு மகிழும்படி ''விளைவு பெருகுக' என்று யான் வாழ்த்துவேன்; மற்றும் எதைத் தருவது? எதைத் தரக் கூடாது என்று பேதம் பாராமல் எதையும் ஈயும் இயல்பினன்; அவன் முயற்சிகள் வெல்க! வாழ்க என்றும் வாழ்த்துவேன்.

மென் புலத்து வயல் உழவர்
வன் புலத்துப் பகடு விட்டுக்,
குறு முயலின் குழைச் சூட்டொடு
நெடு வாளைப் பல் உவியல்,
பழஞ் சோற்றுப் புகவு அருந்திப்
புதல் தளவின் பூச் சூடி,
அரிப் பறையால் புள்ளோப்பி
அவிழ் நெல்லின் அரியலாருந்து;
மனைக் கோழிப் பைம் பயிரின்னே,
கானக் கோழிக் கவர் குரலொடு
நீர்க் கோழிக் கூய்ப் பெயர்க்குந்து;
வேய் அன்ன மென் தோளால்,
மயில் அன்ன மென் சாயலார்,
கிளி கடியின்னே,
அகல் அள்ளல் புள் இரீஇயுந்து;
ஆங்கு அப் பல நல்ல புலன் அணியும்
சீர் சான்ற விழுச் சிறப்பின்,
சிறு கண் யானைப் பெறல் அருந் தித்தன்

செல்லா நல் இசை உறந்தைக் குணாது,
நெடுங் கை வேண்மான் அருங் கடிப் பிடவூர்
அறப் பெயர்ச் சாத்தன் கிளையேம், பெரும!
முன் நாள் நண்பகல் சுரன் உழந்து வருந்திக்,
கதிர் நனி சென்ற கனையிருள் மாலைத்,
தன் கடைத் தோன்றி, என் உறவு இசைத்தலின்,
தீம் குரல் ...................... கின் அரிக்குரல் தடாரியொடு,
ஆங்கு நின்ற எற்கண்டு,
சிறிதும் நில்லான், பெரிதும் கூறான்,,
அருங் கலம் வரவே அருளினன் வேண்டி,
ஐயென உரைத்தன்றி நல்கித், தன் மனைப்
பொன் போல் மடந்தையைக் காட்டி, 'இவனை
என்போல் போற்று' என்றோனே; அதற்கொண்டு,
அவன் மறவலேனே; பிறர் உள்ளலேனே;
அகன் ஞாலம் பெரிதும் வெம்பினும்,
மிக வானுள் எரி தோன்றினும்,
குள மீனொடும் தாள் புகையினும்,
பெருஞ் செய் நெல்லின் கொக்கு உகிர் நிமிரல்
பசுங் கண் கருனைச் சூட்டொடு மாந்தி,
'விளைவு ஒன்றோ வெள்ளம் கொள்க!' என,
உள்ளதும் இல்லதும் அறியாது,
ஆங்கு அமைந்தன்றால்; வாழ்க, அவன் தாளே!

திணையும் துறையும் அவை.

சோழ நாட்டுப் பிடவூர் கிழார் மகன் பெருஞ்சாத்தனை மதுரை நக்கீரர் பாடியது.

## 396. வாட்டாற்று எழினியாதன்

*நீரின் கீழ் மீன்கள் திரிகின்றன; நீரின்மேல் மலர்கள் பூக்கின்றன; கழனிகளில் பறையில் எழுப்பும் ஒலி பறவைகளை ஓட்டுகின்றது; கோசர் குரவை ஆடி மகிழ்வர்; அத்தகைய சிறப்பு உடையது வாட்டாறு எனும் அவனது ஊர்.*

*மெலிந்தவர்க்கு அவன் வலிமை சேர்த்தான். உறவினர் இல்லாதவர்க்கு உற்ற துணைவனாக விளங்கினான். வாட்டாற்றுத் தலைவன் எழினியாதனின் கிணைப் பொருநர் ஆவோம்.*

ஆட்டிறைச்சி, கள், குறுமுயலின் இறைச்சியோடு நெய் கலந்த சோறு இவற்றைத் தந்து உபசரித்துப் பின் வேண்டுமளவு வாரி எடுத்துக் கொள்ளத் திறந்து வைத்துள்ள உணவுப் பொருள்கள் இவற்றுக்கு எல்லையே இல்லை; முகந்து எடுத்துக் கொள்ளத் திறந்து வைத்துள்ளான். எங்களுக்கு அவன் தந்த ஆக்கம் அதற்கு எல்லையே இல்லை; அத்தகைய வள்ளியோன் அவன்.

அவன் மீன்கள் சூழும் வானத்துத் திங்கள் போல ஒளி பெறுவானாக. அவன் புகழ் அமைந்த வளன் எமக்கு ஈயப் பயன்படுவதாக.

கீழ் நீரான் மீன் வழங்குந்து;
மீ நீரான், கண் அன்ன, மலர் பூக்குந்து;
கழி சுற்றிய விளை கழனி,
அரிப் பறையான் புள் ஒப்புந்து;
நெடுநீர் கூஉம் மணல் தண் கான்
மென் பறையான் புள் இரியுந்து;
நனைக் கள்ளின் மனைக் கோசர்
தீம் தேறல் நறவு மகிழ்ந்து,
தீம் குரவைக் கொளைத் தாங்குந்து;
உள் இலோர்க்கு வலி ஆகுவன்,
கேள் இலோர்க்குக் கேள் ஆகுவன்,
கழுமிய வென் வேல் வேளே,
வள நீர் வாட்டாற்று எழினியாதன்;
கிணையேம், பெரும!
கொழுந் தடிய சூடு என்கோ?
வள நனையின் மட்டு என்கோ?
குறு முயலின் நிணம் பெய்தந்த
நறுநெய்ய சோறு என்கோ?
திறந்து மறந்த கூட்டுமுதல்
முகந்து கொள்ளும் உணவு என்கோ?
அன்னவை பல பல....................................
..............................வருந்திய
இரும் பேர் ஒக்கல் அருந்து எஞ்சிய
அளித்து உவப்ப, ஈத்தோன் எந்தை;
எண்மோர் ஆக்கக் கங்குண்டே;
மாரி வானத்த மீன் நாப்பண்,

விரி கதிர வெண் திங்களின்,
விளங்கித் தோன்றுக, அவன் கலங்கா நல் இசை!
யாமும் பிறரும் வாழ்த்த, நாளும்
நிரைசால் நன் கலன் நல்கி,
உரை செலச் சிறக்க, அவன் பாடல்சால் வளனே!

திணையும் துறையும் அவை.
வாட்டாற்று எழினியாதனை மாங்குடி கிழார் பாடியது.

# 397. சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன்

வெள்ளி முளைக்கும் காலைப் பொழுது பறவைகள் காட்டைவிட்டு வெளியேறுகின்றன. பொய்கைகளில் மலர்கள் பூத்துப் பொலிவு தருகின்றன. வானத்தில் சந்திரன் ஒளி குறைகிறது. இத்தகைய விடியற் பொழுதில் 'துயில் எழுக' என்று துயில் எழுச்சி பாடத் தடாரியை ஒலித்து அவன் கடை வாயிலில் நிற்கின்றேன்.

தன்னை நாடி வந்த பரிசிலன் யான் என்று அறிந்து வரவேற்று நெய்யில் வறுத்த இறைச்சியும், மணம் மிக்க கள்ளும், பாம்பு உரித்தது போன்ற உடையும் தந்து மழை போல வாரி வழங்கினான்.

வேனில் அன்ன என் துன்பம் நீக்கி அரிய ஆபரணங்கள் பல தந்துள்ளான். வயலில் பூத்த தாமரை அந்தணர் எழுப்பும் வேள்வித் தீ போல் நிறம் தந்து விளங்கும் நாட்டினை உடையவனாகிய வள வன் எம் துணைவன்; அதனால் ஊழிக் காலத்தில் கடல் கொந்தளித்தாலும் கதிரவன் தெற்கே முளைத்தாலும் யாம் என்ன ஏது என்று கேட்டு அஞ்சுவது இல்லை.

வெள்ளியும் இரு விசும்பு ஏர் தரும்; புள்ளும்
உயர் சினைக் குடம்பைக் குரல் தோற்றினவே;
பொய்கையும் போது கண் விழித்தன; பைபயச்
சுடரும் சுருங்கின்று, ஒளியே; பாடு எழுந்து
இரங்கு குரல் முரசமொடு வலம்புரி ஆர்ப்ப,
இரவுப் புறங்கண்ட காலைத் தோன்றி,

எஃகு இருள் அகற்றும் ஏமப் பாசறை,
வைகறை அரவம் கேளியர்! 'பல கோள்
செய் தார் மார்ப! எழுமதி துயில்' எனத்,
தெண் கண் மாக் கிணை தெளிர்ப்ப ஒற்றி,
நெடுங் கடைத் தோன்றியேனே; அது நயந்து,
'உள்ளி வந்த பரிசிலன் இவன்' என,
நெய்யுறப் பொரித்த குய்யுடை நெடுஞ்சூடு,
மணிக் கலன் நிறைந்த மணம் நாறு தேறல்,
பாம்பு உரித்தன்ன வான் பூங் கலிங்கமொடு,
மாரி அன்ன வண்மையின் சொரிந்து,
வேனில் அன்ன என் வெப்பு நீங்க,
அருங் கலம் நல்கியோனே; என்றும்,
செறுவில் பூத்த சேயிதழ்த் தாமரை,
அறு தொழில் அந்தணர் அறம் புரிந்து எடுத்த
தீயொடு விளங்கும் நாடன், வாய் வாள்
வலம் படு தீவின் பொலம் பூண் வளவன்;
எறி திரைப் பெருங் கடல் இறுதிக் கண் செலினும்,
தெறு கதிர்க் கனலி தென் திசைத் தோன்றினும்,
'என்?' என்று அஞ்சலம், யாமே; வென் வேல்
அருஞ் சமம் கடக்கும் ஆற்றல் அவன்
திருந்து கழல் நோன் தாள் தண் நிழலேமே.

திணை - அது; துறை - பரிசில்விடை; கடைநிலை விடையும் ஆம்.

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனை எருக்காட்டூர்த் தாயங்கண்ணனார் பாடியது.

## 398. சேரமான் வஞ்சன்

*சந்திரன் மறைய வெள்ளி முளைத்தது. பொழுது விடிந்தது; கோழி குரல் கூவியது.*

*பொய்கையில் பூக்கள் மலர்ந்தன. பாணர் தம் யாழ் கொண்டு இசை கூட்டினர். பொழுது புலர்ந்தது.*

*சேர அரசன் வஞ்சன் அவன் இருக்கைக்குத் தருக்கு மிக்க பகைவர் செல்ல இயலாது. நகைக்க வைக்கும் பாணர்களும், பாவலர்களும் எளிதில் செல்ல இயன்றது.*

யானும் என் தடாரிப் பறை கொண்டு அவன் புகழைப் பாடி நின்றனன். ''என் வறுமை தீர நல்குக'' என்று இரந்து கேட்க அவன் நயந்து என்னை வரவேற்று என் அரையில் உடுத்தியிருந்த கிழிந்த ஆடையை மாற்றி அவன் உடுத்தி இருந்த புகை விரித்தது போன்ற ஆடையைத் தந்து பாத்திரத்தில் நிழலைக் காணத் தக்க கள்ளை யான் உண்ண உதவி அருளினான்.

அருவி இசைத்து ஒலிக்கும் பாயல் என்னும் மலைக்குத் தலைவன் அவன்.

அதுவன்றியும் உண்ணத் தன் உண்கலத்தில் வைத்திருந்த மான் இறைச்சியையும், கொக்கின் நகம் போன்ற சோற்றையும் எம் சுற்றத்தினர் உண்ணத் தந்தான். தான் அணிந்திருந்த பொன் மாலையையும், பூந்துகிலையும் எமக்கு அளித்துச் சிறப்புச் செய்தான்.

மதி நிலாக் கரப்ப, வெள்ளி ஏர் தர,
வகை மாண் நல் இல் ........................
பொறி மயிர் வாரணம் பொழுது அறிந்து இயம்பப்,
பொய்கைப் பூ முகை மலரப், பாணர்
கை வல் சீறியாழ் கடன் அறிந்து இயக்க,
இரவுப் புறம் பெற்ற ஏம வைகறை,
பரிசிலர் வரையாவிரைசெய் பந்தர்
வரிசையின் இறுத்த வாய்மொழி வஞ்சன்,
நகைவர் குறுகின் அல்லது, பகைவர்க்குப்
புலியினம் மடிந்த கல் அளைபோலத்,
துன்னல் போகிய பெரும் பெயர் மூதூர்,
மதியத்து அன்ன என் அரிக் குரல் தடாரி,
இரவுரை நெடுவார் அரிப்ப வட்டித்து,
உள்ளி வருநர் கொள்கலம் நிறைப்போய்!
'தள்ளா நிலையை ஆகியர் எமக்கு' என
என் வரவு அறீஇச்,
சிறிதிற்குப் பெரிது உவந்து,
விரும்பிய முகத்தன் ஆகி, என் அரைத்
துரும்பு படு சிதாஅர் நீக்கித், தன் அரைப்
புகை விரிந்தன்ன பொங்கு துகில் உடீஇ,
அழல் கான்றன்ன அரும் பெறல் மண்டை,
நிழல் காண் தேறல் நிறைய வாக்கி,

மண்டைய கண்ட மான் வறைக் கருனை,
கொக்கு உகிர் நிமிரல் ஒக்கல் ஆர,
வரை உறழ் மார்பின், வையகம் விளக்கும்,
விரவு மணி ஒளிர்வரும், அரவு உறழ் ஆரமொடு,
புரையோன் மேனிப் பூந்துகில் கலிங்கம்
உரை செல அருளியோனே
பறை இசை யருவிப் பாயல் கோவே.

திணை - பாடான் திணை; துறை - கடை நிலை.

சேரமான் வஞ்சனைத் திருத்தாமனார் பாடியது.

## 399. தாமான் தோன்றிக் கோன்

*உணவு படைக்கும் மகள் வெண்ணெல்லை உலக்கையில் குற்றி அரிசி ஆக்கினாள்; மாவின் கனி பிசைந்து புளிக்குழம்பு ஆக்கினாள்; வரால் மீனை வறுத்து வைத்தாள்; வயல்களில் படர்ந்த வள்ளைக் கீரையும் பாகற் காயும் தனித்தனியே இவற்றைப் புழுக்க வைத்துத் தந்தாள்; இந்தக் கலவை உணவைக் களமர் மகிழ்ந்து உண்டனர். இவற்றோடு கள்ளையும் குடித்து மயங்கிக் கிடப்பர். காலையில் எழுந்து பழஞ்சோறு உண்பர். இத்தகைய உழவர் வதிக்கும் வயல் வளம் மிக்க காவிரி நாட்டிற்குத் தலைவன் கிள்ளி வளவன். அவன் நற்புகழை நினைத்துக் கொண்டு அவனை நோக்கிச் சென்றோம். பிறர் முகத்தை யாம் பார்ப்பது இல்லை என்ற உறுதியோடு வாழ்கிறோம்.*

*தூண்டிலில் பிடித்துக் கொணர்ந்த மீனை விற்றுப் பாகற்புளிங் கூழ்ச் சோறு வேளை மறுத்து உண்டு வந்தேன். சரியான உணவு இன்றி நெஞ்சு அழிந்து ஒரு மூலையில் ஒடுங்கிக் கிடந்தேன்.*

*அவ்வாறு இருந்த எனக்குக் கிள்ளியின் உயர் புகழை ஒரு சிலர் எடுத்து உரைத்தனர். ''அறவோருள் சிறந்த அறவோன்; மறவோருள் சிறந்தவன்; பழமையோரின் வழித்தோன்றல்; தாமான் தோன்றிக்கோன். புகழ்மிக்கவன்; அவனை நாடிச் செல்க; நயந்து தருவான்'' என்று உரைத்தனர்.*

*அவ்வளவுதான் அறுந்த தடாரியைச் சரி செய்து கொண்டு அதற்குப் புதுப் போர்வை மாட்டிக் கொண்டு, மாலை சூட்டிக் கொண்டு புறப்பட்டேன். தெய்வ வழிபாடு செய்து கொண்டிருந் தால் காலம் தாழ்த்தும் என்பதால் அவனைச் சென்று அடைந்த யான் வண்டியில் பூட்ட வலிய எருது ஒன்று தருக என்றுதான் கேட்டேன்.*

*அவ்வளவுதான் பசுநிரைகள்; அவற்றோடு எருதுகள் பலவற்றைக் கொண்டு செல்லத் தந்தான். அருவிகள் மிக்க மலை நாட்டுக்குத் தலைவன் தோன்றிக்கோ; இது யான் பெற்ற சிறப்பு.*

அடு மகள் முகந்த அளவா வெண்ணெல்
தொடி மாண் உலக்கைப் பருஉக் குற்று அரிசி
காடி வெள் உலைக் கொளீஇ, நீழல்
ஓங்கு சினை மாவின் தீம் கனி நறும் புளி,
மோட்டு இரு வராஅல் கோட்டு மீன் கொழுங் குறை,
செறுவின் வள்ளை, சிறு கொடிப் பாகல்,
பாதிரி ஊழ் முகை அவிழ் விடுத்தன்ன
மெய் களைந்து, இனனொடு விரைஇ,................
மூழ்ப்பப் பெய்த முழு அவிழ்ப் புழுக்கல்,
அழிகளின் படுநர் களி அட வைகின்,
பழஞ்சோறு அயிலும் முழங்கு நீர்ப் படப்பைக்
காவிரிக் கிழவன், மாயா நல்இசைக்
கிள்ளிவளவன் உள்ளி, அவற் படர்தும்;
செல்லேன் செல்லேன், பிறர்முகம் நோக்கேன்;
நெடுங் கழைத் தூண்டில் விடு மீன் நொடுத்து,
கிணைமகள் அட்ட பாவல் புளிங்கூழ்
பொழுது மறுத்து உண்ணும் உண்டியேன், அழிவு கொண்டு,
ஒரு சிறை இருந்தேன்; என்னே! 'இனியே,
அறவர் அறவன், மறவர் மறவன்,
மள்ளர் மள்ளன், தொல்லோர் மருகன்
இசையின் கொண்டான், நசை அமுது உண்க' என,
மீப் படர்ந்து இறந்து, வன்கோல் மண்ணி
வள்பரிந்து கிடந்தஎன் தெண்கண் மாக்கிணை
விசிப்புறத்து அமைந்த புதுக் காழ்ப் போர்வை,
அலகின் மாலை ஆர்ப்ப வட்டித்துக்,
கடியும் உணவு என்னக் கடவுட்கும் தொடேன்,
'கடுந் தேர் அள்ளற்கு அசாவா நோன் சுவற்

பகடே அத்தை யான் வேண்டி வந்தது' என,
ஒன்று யான் பெட்டா அளவை, அன்றே,
ஆன்று விட்டனன் அத்தை, விசும்பின்
மீன் பூத்தன்ன உருவப் பல் நிரை
ஊர்தியொடு நல்கியோனே; சீர் கொள
இழுமென இழிதரும் அருவி,
வான் தோய் உயர் சிமைத் தோன்றிக் கோவே.

திணை - அது; துறை - பரிசில் விடை.
தாமான் தோன்றிக் கோனை ஐயூர் முடவனார் பாடியது.

## 400. சோழன் நலங்கிள்ளி

கடல் நடுவே முழு நிலாவினைக் காண்பது போன்ற என் தடாரிப் பறையை ஒலித்து அவன் புகழைப் பாடினேன்.

விடியற்காலையில் பிறர் துயில தான் மட்டும் துயிலாது இருந்தவன் என் தடாரிப் பறை ஒலி கேட்டுக் கேட்ட அளவில் என்னை வந்து அணுகி என் பழைய கந்தல் ஆடையை மாற்றிப் புதிய ஆடை உடுத்துக் கொள்ள அளித்தான். பொலிவுமிக்க பொன் ஆபரணங்கள் பலவும் தந்தான். வீறு அமைந்த நல்ல கள்ளையும் பருகத் தந்தான்.

அங்குப் பொழுது போனதே தெரியாமல் அவனுடன் பழகினேன்; அவன் ஊரில் தங்கினேன்; அவன் தன் பகைவரை எதிர்த்துப் பகைவரைக் கடிந்தான். அது அவன் வீரத்தின் விளைவு; பசித்தவர் துன்பத்தைக் களைந்தான்; அது அவன் கொடைத் திறனாக விளங்கியது.

அவன் போர்களில் வெற்றி பெற்றுக் கள வேள்விகள் பல கண்டான். நாட்டில் அந்தணர் காட்டிய வழி நின்று அறவேள்வி களை நடத்தித் தூண்களையும் நிறுவினான். கடலில் செல்லும் கலங்கள் துறைகள்தோறும் பிணிக்கும் சிறப்பு உடைய வளம் மிக்க ஊர்களை உடையவனாய் விளங்கினான். வளம் மிக்க நாட்டை உடையவனாகத் திகழ்ந்தான்.

மாக விசும்பின் வெண் திங்கள்
மூஐந்தான் முறை முற்றக்,

கடல் நடுவண் கண்டன்ன என்
இயம் இசையா, மரபு ஏத்தி,
கடைத் தோன்றிய கடைக் கங்குலான்
பலர் துஞ்சவும் தான் துஞ்சான்,
உலகு காக்கும் உயர் கொள்கைக்
கேட்டோன், எந்தை, என் தெண் கிணைக் குரலே;
கேட்டதற்கொண்டும், வேட்கை தண்டாது,
தொன்று படு சிதாஅர் மருங்கு நீக்கி,
மிகப் பெருஞ் சிறப்பின் வீறுசால் நன்கலம்
............................................ லாவன
கலிங்கம் அளித்திட்டு என் அரை நோக்கி,
நார் அரி நறவின் நாள் மகிழ் தூங்குந்து;
போது அறியேன், பதிப் பழகவும்,
தன் பகை கடிதல் அன்றியும், சேர்ந்தோர்
பசிப் பகை கடிதலும் வல்லன்மாதோ;
மறவர் மலிந்த தன்.............................
கேள்வி மலிந்த வேள்வித் தூணத்து,
இருங் கழி இழிதரும் ஆர் கலி வங்கம்
தேறு நீர்ப் பரப்பின் யாறு சீத்து உய்த்து.
துறைதொறும் பிணிக்கும் நல் ஊர்,
உறைவு இன் யாணர் நாடு கிழவோனே!

திணை - அது; துறை - இயன்மொழி.

சோழன் நலங்கிள்ளியைக் கோவூர் கிழார் பாடியது.

★ ★ ★

## செய்யுள் முதற்குறிப்பு எண்கள்

(செய்யுள் எண்)


| | | | |
|---|---|---|---|
| அகன் தலை வையத்து | 371 | இரவலர் புரவலை | 162 |
| அஞ்சுவரு மரபின் | 211 | இருங்கடல் உடுத்த | 363 |
| அடலருந் துப்பின் | 335 | இரும்பு முகம் | 369 |
| அடிபுனை தொடுகழல் | 83 | இரும் பனை | 45 |
| அடுநை யாயினும் | 36 | இரும்பிடித் தொழுதி | 44 |
| அடுமகள் முகந்த | 399 | இரும்பு முகஞ் சிதைய | 309 |
| அணங்கு உடை நெடுங் | 52 | இருமுந்நீர் | 20 |
| அணங்குடை அவுணர் | 174 | இல்லடு கள்ளின் | 329 |
| அணித்தழை நுடங்க | 340 | இல்லாகியரோ | 232 |
| அத்தம் நண்ணிய | 313 | இவ்வே பீலி | 95 |
| அதள் எறிந்தன்ன | 193 | இவர் யார்? | 201 |
| அந்தோ எந்தை | 261 | இவற்கு ஈத்து | 290 |
| அமரர்ப் பேணியும் | 99 | இவன் யார் என்குவை | 13 |
| அரிமயிர்த் திரள் | 11 | இழையணிப் பொலிந்த | 89 |
| அருப்பம் பேணாது | 224 | இளையரும் முதியரும் | 254 |
| அருவி தாழ்ந்த | 198 | இளையோர் சூடார் | 242 |
| அருவி ஆர்க்கும் | 168 | இன்கடுங் கள்ளின் | 80 |
| அருளா யாகலோ | 144 | இன்று செலினுந் | 171 |
| அரைசு தலைவரினும் | 354 | இனி நினைந்து இரக்கம் | 243 |
| அலங்கு கதிர் சுமந்த | 375 | ஈண்டு நின்றோர்க்கும் | 114 |
| அலர்பூந் தும்பை | 96 | ஈஎன இரத்தல் | 204 |
| அழல் புரிந்த | 29 | ஈரச் செவ்வி | 289 |
| அழல் அவிர் | 222 | ஈன்று புறந்தருதல் | 312 |
| அளிதோதானே பாரியது | 109 | உடும்பு உரித்து | 68 |
| அளிதோ தானே பேர் இரும் | 111 | உடையன் ஆயின் | 315 |
| அளிய தாமே | 248 | உடைவளை கடுப்ப | 90 |
| அற்றைத் திங்கள் | 112 | உண்டால் அம்ம | 182 |
| அறவை நெஞ்சத்து | 390 | உண்போன் | 347 |
| அறுகுளத்து உகுத்தும் | 142 | உருகெழு ஞாயிற்று | 160 |
| அறையும் பொறையும் | 118 | உருமிசை | 373 |
| அன்னச் சேவல் | 67 | உவவுமதி உருவின் | 3 |
| அன்ன வாகநின் | 146 | உழுதூர் காளை | 322 |
| ஆசாகு எந்தை | 307 | உள்ளாற்றுக் கவலை | 219 |
| ஆசில் கம்மியன் | 353 | உற்றுழி உதவியும் | 183 |
| ஆடு இயல் | 229 | ஊர்க்குறு மாக்கள் | 94 |
| ஆடுநடைப் புரவி | 240 | ஊர்நனி இறந்த | 265 |
| ஆடுநனி மறந்த | 164 | ஊர்முது வேலிப் | 326 |
| ஆர்கலியினனே | 337 | ஊனும் ஊனும் | 381 |
| ஆர்ப்பு எழு கடலினும் | 81 | எற்கு உளம்கழிய | 282 |
| ஆரம் தாழ்ந்த | 59 | எங்கோன் இருந்த | 54 |
| ஆவும் ஆனியற் | 9 | எந்தை வாழி | 175 |
| ஆன்முலை அறுத்த | 34 | எமக்கே கலங்கல் | 298 |
| ஆனா ஈகை | 42 | எருது கால் | 327 |
| ஆனினங் கலித்த | 138 | எருதே இளைய | 102 |
| இம்மைச் செய்தது | 134 | எருமை யன்ன | 5 |
| இமிழ் கடல் வளைஇய | 19 | எழுஇனி நெஞ்சம் | 207 |
| இரங்கு முரசின் | 137 | எறிபுனக் குறவன் | 231 |

என் திறத்து அவலம் 253
என்னைக்கூரிஃது 85
என்ஐ புற்கை 84
என்னை மார்பில் 280
எனைப்பால் யானையும் 63
ஏர்பரந்த வயல் 183
ஏற்றுக உலையே 172
ஏற்று வலன் உயரிய 56
ஏறுஉடைப் பெருநிறை 259
ஐயோ எனின் 255
ஒண்செங் குரலி 283
ஒண்பொறிச் சேவல் 383
ஒருசார் அருவி 115
ஒருதலைப் பதலை 103
ஒருதிசை ஒருவனை 121
ஒருநாட் செல்லலம் 101
ஒருவனை ஒருவன் 76
ஒல்லுவது ஒல்லும் 196
ஒன்றுவாள் மன்னர் 177
ஒன்றுநன் குடையை 156
ஒன்னார் யானை 126
ஓங்குமலைப் பெருவில் 55
ஓரில் நெய்தல் 194
ஓரை ஆயத்து 176
ஓவத்தன்ன 251
கடந்துஅடு தானை 110
கடல் கிளர்ந் தன்ன 295
கடல் கொளப்படாஅது 122
கடவுள் ஆலத்து 199
கடற்படை யடல் 382
கடுங்கண்ண 14
கடுந்தேர் குழித்த 15
கடும்பின் அடுகலம் 32
கண்ணி கார் நறுங் 1
கதிர்மூக்கு ஆரல் 249
கந்து முனிந்து 178
கலஞ்செய்...அச்சு 256
கலஞ்செய்...இருள் 228
கலைஉணக் கிழிந்த 236
கல்லறுத்து இயற்றிய 331
கவிசெந் தாழிக் 238
கவைக் கதிர் 215
கழிந்தது பொழிந்தென 203
கள்ளின் வாழ்த்திக் 316
களங்கனி யன்ன 127
களம்புகல் ஓம்புமின் 87
களர்ப்படு கூவல் 311
களரி பரந்து 356
களிறணைப்ப 345
களிறுகடைஇய 7
களிறு நீறாடிய 325
களிறு பொரக் 306
களிறு முகந்து 368
கறங்குமிசை அருவிப் 148
கறங்குவெள் அருவி 252
கன்முழை யருவி 147
கன்று அமர் 230
காமரு பழனக் 334
காய்நெல் அறுத்துக் 184
கார்ப்பெயல் தலைஇய 119
கார்எதிர் உருமின் 361
கால்பார் கோத்து 185
காலனுங் காலம் 41
கானக் காக்கை 342
கானல் மேய்ந்து 374
கான்உறை வாழ்க்கை 33
கிண்கிணி களைந்த 77
கீழ்நீரான் 396
குய்குரல் மலிந்த 250
குயில்வாய் அன்ன 269
குழவி இறப்பினும் 74
குறத்தி மாட்டிய 108
குறியிறைக் குரம்பை 129
குன்றுதலை மணந்த 357
குன்றும் மலையும் 208
கூதிர்ப் பருந்தின் 150
கெடுக சிந்தை 279
கேட்டல் மாத்திரை 216
கையது கடன் நிறை 69
கையது வேலே 100
கொடுங்குழை மகளிர் 304
கொடுவரி வழங்கும் 135
கொண்டைக் கூழைத் 61
கொய்யடகு வாடத் 318
கோட்டம் கண்ணி 275
கோதை மார்பிற் 48
சாறுதலைக் கொண்டென 82
சிலையுலாய் நிமிர்ந்த 394
சிற்றில் நற்றூண் 86
சிறப்பில் சிதடும் 28
சிறப்புடை மரபின் 31
சிறாஅர் துடியர் 291
சிறிய கட்பெறினே 235
சுவல் அழுந்தப் பலகாய 139
செஞ்ஞாயிற்றுச் 30
செந்நெல் உண்ட 344
செய்குவம் கொல்லோ 214
செருப்பு இடைச் 257
செற்றன்று ஆயினும் 226
சேயிழை பெறுகுவை 105

| | | | |
|---|---|---|---|
| சேற்றுவளர் தாமரை | 27 | நீயே, தண்புனல் | 58 |
| ஞாயிற்று அன்ன | 362 | நீயே, பிறர்ஓம்புறு | 40 |
| ஞாலம் மீமிசை | 179 | நீயே, புறவின் | 46 |
| தடவுநிலைப் பலவின் | 140 | நீர்நுங்கின் கண்வலிப்ப | 389 |
| தண்டுளி பலபொழிந் | 391 | நீர்மிகின் சிறையும் | 51 |
| தமர்தன் தப்பின் | 157 | நீரறவு அறியா | 271 |
| தலையோர் நுங்கின் | 225 | நீருள்பட்ட | 333 |
| திண்தேர் இரவலர் | 241 | நீலக்கச்சைப் பூவார் | 274 |
| திண்பிணி முரசம் | 93 | நுங்கோ யாரென | 212 |
| திரைபொரு முந்நீர்க் | 154 | நுதிவேல் கொண்டு | 349 |
| தீங்கனி இரவமொடு | 281 | நும்படை செல்லுங் | 169 |
| தீநீர்ப் பெருங்குண்டு | 116 | நெடுநீர நிறையகத்து | 386 |
| துடி எறியும் புலைய! | 287 | நெல் அரியும் | 24 |
| தூங்கு கையான் | 22 | நெல்லும் உயிர் அன்றே | 186 |
| தூர்ந்த கிடங்கின் | 350 | நோகோ யானே | 234 |
| தெண்கடல் வளாகம் | 189 | படுமணி மருங்கின் | 351 |
| தென்குமரி வடபெருங்கல் | 17 | படைப்புப் பல | 188 |
| தென் பரதவர் | 378 | பண்டும் பண்டும் | 151 |
| தென் பல்வத்து | 380 | பதிமுதற் பழகா | 393 |
| தேஎங் கொண்ட | 352 | பயங்கெழு மாமழை | 266 |
| தேஎம் தீந்தொடை | 70 | பரலுடை மருங்கிற் | 264 |
| தொடியுடைய | 239 | பருத்திப் பெண்டின் | 125 |
| தோல்தா தோல்தா | 300 | பருத்தி வேலிச் சீறூர் | 299 |
| நகுதக் கனரே | 72 | பருதி சூழ்ந்த | 358 |
| நஞ்சுடைவால் எயிற்று | 37 | பல்சான்றீரே...கயல்முள் | 195 |
| நரம்பு எழுந்து | 278 | பல்சான்றீரே...குமரி | 301 |
| நல்யாழ் ஆகுளி | 64 | பல்சான்றீரே...செல்கென | 246 |
| நல்லவும் தீயவும் | 106 | பலர்க்கு நிழலாகி | 223 |
| நள்ளி வாழியோ | 149 | பன்மீன் இமைக்கும் | 270 |
| நளிகடல் | 26 | பனி பழுநிய பல | 377 |
| நளியிருமுந்நீர் நாவாய் | 66 | பனிவரை நிவந்த | 200 |
| நளியிருமுந்நீர் ஏணி | 35 | பாசறை யீரே | 285 |
| நறவும் தொடுமின் | 262 | பாடுநர்க்கு ஈத்த | 221 |
| நறுவிரை துறந்த | 276 | பாணர் சென்னியும் | 244 |
| நன்றாய்ந்த நீள்நிமிர் | 166 | பாணர் தாமரை | 12 |
| நனிபேதையே | 227 | பாணன் சூடிய | 141 |
| நாகத்தன்ன பாகார் | 367 | பாரிபாரி | 107 |
| நாட்கள் உண்டு | 123 | பால் கொண்டு | 310 |
| நாடன் எங்கோ | 49 | பாறுபடப் பறைந்த | 359 |
| நாடா கொன்றோ | 187 | பிற...ளபால்என | 346 |
| நாளன்று போகிப் | 124 | பிறர் வேல்போலா | 332 |
| நிரப்பாது கொடு | 180 | புலவரை இறந்த | 21 |
| நிலம்பிறக் கிடுவது | 303 | புலிப்பாற்பட்ட | 323 |
| நிலமிசை வாழ்நர் | 43 | புறவினல்லல் | 39 |
| நிறப்படைக்கு | 293 | பூவற் படுவில் | 319 |
| நின்நயந்து உறைநர் | 163 | பெரிது ஆராச் | 360 |
| நினைக்கும் காலை | 217 | பெருங்களிற்று அடியின் | 263 |
| நீடுவாழ்க என்று யான் | 237 | பெருஞ்சோறு பயந்து | 220 |
| நீண்டொலி அழுவம் | 161 | பெருநீர் மேவல் | 297 |
| நீயே, அமர்காணின் | 167 | பொய்கை நாரை | 209 |

பொய்யாகியரோ 233
பொறிப்புறப் பூழின் 321
பொன் வார்ந்தன்ன 308
பொன்னுந் துகிரும் 218
போர்க்கு உரைஇப் 97
போற்றுமின், மறவீர்! 104
மட்டுவாய் திறப்பவும் 113
மடங்கலிற் சினைஇ 71
மடத்தகை மாமயில் 145
மண்கொள வரிந்த 288
மண்டு அமர் 213
மண்திணிந்த நிலனும் 2
மண்முழா மறப்பப் 65
மணிதுணர்ந் தன்ன 272
மதிநிலாக் கரப்ப 398
மதியேர் வெண்குடை 392
மதிலும் ஞாயில் 355
மயங்கு இருங்கருவிய 365
மரைபிரித்து உண்ட 170
மலைவான் கொள்கென 143
மழைக்கணஞ் சேக்கும் 131
மழையணி குன்றத்து 153
மன்பதை காக்கும் 210
மன்றப் பலவின் 128
மன்ற விளவின் 181
மன்னா உலகத்து 165
மனைக்கு விளக்காகிய 314
மாகவிசும்பின் 400
மாசற விசித்த 50
மாவா ராதே 273
மீன்திகழ் விசும்பின் 25
மீன்உண் கொக்கின் 277
மீன்நொடுத்துநெற் 343
முட்கால் காரை 258
முதிர்வார் இப்பி 53
முந்நீர் நாப்பண் 60
முரசு கடிப்பு 158
முழங்கு முந்நீர் 18
முற்றிய திருவின் 205
முன்றில் முஞ்ஞை 320
முன்னுள்ளு வோனை 132
முனைத் தெவ்வர் 98
மூத்தோர் மூத்தோர் 75
மூதூர் வாயில் 79
மெல்ல வந்து 73
மெல்லியல் விறலி 133
மென்பாலா னுடனணைஇ 384
மென்புலத்து வயலுழவர் 395
மைம்மீன் புகையினும் 117
யாங்குப் பெரிது ஆயினும் 245
யாண்டு பலவாக 191
யாதும் ஊரே 192
யாவிர் ஆயினுங் 88
யாழ்ப்பத்தர்ப் புறம் 136
யாழொடும் கொள்ளா 92
யான் வாழும் நாளும் 173
யானே பெறுக 379
யானை தந்த முளிமர 247
வடாஅது பணிபடு 6
வணங்கு தொடை 78
வணர்கோட்டு 155
வயலைக்கொடியின் 305
வருகதில் வல்லே 284
வருதார் தாங்கி 62
வரை புரையும் 38
வல்லார் ஆயினும் 57
வலம்படு வாய் 91
வழிபடு வோரே 10
வள்ளியோர்ப் படர்ந்து 47
வள்ளுகிரவயல் 387
வளரத் தொடினும் 260
வளிநடந்தன்ன 197
வாடாமாலை 364
வாயிலோயே! 206
வாழும் நாளோடு 159
வாள்வலந்தர 4
விசிபிணித் தடாரி 372
விசும்பு நித்தம் 376
வியன்புலம் 339
விழுக்கடிப்பு 366
விளங்குமணி 130
விளைபதச் சீறிடம் 190
வினைமாட்சிய 16
வெட்சிக் கானத்து 202
வெடிவேய் கொள்வது 302
வெண்குடை மதியம் 294
வெண்ணெல் 348
வெப்புள் விளைந்த 120
வெருக்கு விடை 324
வெள்ளி தென்புலம் 388
வெள்ளி தோன்ற 385
வெள்ளியுமிருவிசும் 397
வெள்ளை வெள்யாட்டு 286
வெளிறில் நோன்காழ் 23
வென்வேல் 317
வேட்ட வேந்தனும் 336
வேந்தற்கு ஏந்திய 292
வேந்து குறையுறவுங் 341
வேந்துடைத் தானை 330
வேம்பு சினை 296
வேழம் வீழ்த்த 152
வையங் காவலர் 8

# வள்ளுவர் வழி

கம்பராமாயணம் : ஆசிரியர் : பேராசிரியர் டாக்டர் ரா. சீனிவாசன், பதிப்பகம் : அணியகம், 5, செல்லம்மாள் தெரு, செனாய் நகர், சென்னை - 30. பக்கம் 320, விலை ரூ. 90/-, மூன்றாம் பதிப்பு - 2000.

'கம்பராமாயணம்'. என்றதொரு உரைநடை நூல் டாக்டர் ரா.சீனிவாசன் அவர்களால் எழுதப்பட்டு மூன்றாம் பதிப்பாகத் தற்போது வெளிவந்துள்ளது. உலக இலக்கியங்களில் ஒன்றெனக் கருதற்குரிய கம்பராமாயணம் தமிழ் மக்களால் பெரிதும் விரும்பப்படும் பேரிலக்கியமாகும். கம்பன் பாடிய இராமா யணத்தைப் படித்துச் சுவைக்க இயலாதவர்களும், கம்பனைச் சுவைத்தவர்களும் படித்து மகிழும் நடையில், உரைநடையாக இந்நூல் ஆசிரியர் படைத்துத் தந்துள்ளார்.

கம்பராமாயணக் கதையைக் கதைத்தொடர்பு சிறிதும் சிதையாமல், எளிய நடையில் எடுத்துரைக்கும் திறமுடையதாக இந்நூல் விளங்குகின்றது. பேராசிரியர் ரா.சீனிவாசன் அவர்கள் தமக்கே உரிய உரை நடை ஆற்றலால் சொல்லாட்சித் திறமும், பழகு தமிழ்ச் சொற்களும், சுவையும், செறிவும் ஒருங்கே திகழ இந்நூலைத் தமிழ் இலக்கிய உலகிற்குத் தமது கொடையாகத் தந்துள்ளார். நூலின் இடையில் இடம்பெறும் நாடகப் பாங்கு நூலிற்கு மேலும் சிறப்புச் சேர்க்கின்றது. கம்பனின் படைப்பைச் சிலர் வெறும் பொழிப் புரையாக எழுதியுள்ள நிலையில், புத்தாக்கமாக இந்நூல் எழுதப்பட்டுள்ளது. கம்பனின் காவியப் போக்கும் இந்நூலில் ஆங்காங்கே இடம் பெற்றிருப்பதால் கம்பனை மீண்டும் படிப்பதால் ஏற்படும் மகிழ்ச்சியையும் உணர்ச்சியையும் இந்நூல் தருகின்றது.

பேராசிரியர் டாக்டர் ரா.சீனிவாசன் அவர்களின் இம் முயற்சி புத்திலக்கியப் படைப்பாக, மீட்டுருவாக்கமாக நினைக்கச் செய்கின்றது. செய்யுள் வடிவ நூல்களைப் படிக்கும் பழக்கம் குறைந்து வரும் இக்கால கட்டத்தில், இதைப் போன்ற நூல்கள் தமிழ் இலக்கிய உணர்வு, பெருமை நீடுவாழத் துணை செய்யும். டாக்டர் ரா.சீ. அவர்களின் இலக்கியப் பணி தொடர வாழ்த்துகள்; வாழ்க அவர்தம் தொண்டு.

முனைவர் **ப.ச. ஏசுதாசன்**